# சங்க இலக்கியத்தில் தோழி



சென்னைப் பல்கலைக்கழகப் பிஎச். டி. பட்டத்திற்காக
அளிக்கப்பட்ட ஆய்வேடு.

இரா. சரளா, எம். ஏ.,
தமிழ்த் துணைப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி, சென்னை - 600 005.

ஏப்ரல் 1980.

டாக்டர் மெ. சுந்தரம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
நெறியாளர், தமிழியல் ஆராய்ச்சி,
தலைமைத் தமிழ்ப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி,
சென்னை-600 005.

## மேற்பார்வையாளரின் சான்றுரை

'சங்க இலக்கியத்தில் தோழி' என்னும் பொருளில் இரா. சரளா, எம்.ஏ. அவர்கள் பிஎச்.டி. பட்டத்திற்குச் செய்துள்ள இவ்வாய்வு தனியலாக எழுதப்பட்டது என்றும், இவ்வாய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்-படவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

சென்னை-600 005
25.4.1980

(மெ. சுந்தரம்)
மேற்பார்வையாளர்

தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்
மாநிலக் கல்லூரி, சென்னை-5.

இரா. சரளா, எம்.ஏ.,
தமிழ்த்துறைப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி,
சென்னை-600 005.

## ஆய்வாளரின் உறுதிமொழி

'சங்க இலக்கியத்தில் தோழி' என்னும் பொருளில் பிஎச்.டி. பட்டத்திற்காக எழுதப்பட்ட இவ்வாய்வேடு என் உழைப்பில் உருவானது. இதற்குமுன் எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என உறுதி அளிக்கின்றேன்.

இரா. சரளா
25.4.90
(இரா. சரளா)
ஆய்வாளர்

மெ. சுந்தரம்
(மெ. சுந்தரம்)
மேற்பார்வையாளரின்
உறுதிக் கையொப்பம்

தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்
மாநிலக் கல்லூரி, சென்னை-5.

# நன்றியுரை

சங்க இலக்கியத்தில் தோழியைப் பற்றி ஆய்வு செய்ய வேண்டும் என்பது என் நீண்டநாள் எண்ணம். நெஞ்சில் நிலைபெற்றிருந்த என் ஆவல் நிறைவேற வாய்ப்பினை அளித்த பல்கலைக்கழகத்தாருக்கு என் நன்றி என்றும் உரியது.

மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர், தமிழியல் ஆராய்ச்சி நெறியாளர் டாக்டர் மெ. சுந்தரம் அவர்கள் என்னை ஆய்வு மாணவராய் ஏற்று வழிகாட்டினார்கள். அன்னார்க்கு என் வாழ்நாள் முழுவதும் நன்றிக்கடன்-பட்டுள்ளேன்.

முதறிஞர் உறுப்பினர்களாக அமைந்து, கருத்துரைகள் வழங்கி, என்னை நெறிப்படுத்திய டாக்டர் வ.சுப. மாணிக்கம், டாக்டர் தமிழண்ணல் அவர்களுக்கும் என் நன்றி என்றும் உரியது.

அவ்வப்போது ஊக்க உரைகளும், கருத்துகளும், நூல்களும் வழங்கிய டாக்டர் இரா. இளவரசு, டாக்டர் இரா. நாகு, டாக்டர் பால் சாமுவேல், டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், டாக்டர் த.வே. வீராசாமி, டாக்டர் க.த. திருநாவுக்கரசு, வடமொழிப் பேராசிரியர் டாக்டர் ஆர்.என். சம்பத் ஆகியோருக்குஎன் நன்றி என்றும் உரியது. என் ஆராய்ச்சிக்கு ஏற்ற வகையில் ஆய்வேடுகள் வழங்கி உதவிய மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் முத்துச் சண்முகன் அவர்களுக்கு என் நன்றி உரியது.

ஏடும் இடமும் தந்து உதவிய சென்னைப் பல்கலைக்கழக நூலகர் திரு பு.அ. மோகவராசன், மறைமலையடிகள் நூலகத்தின் நூலகர் திரு இரா. முத்துக்குமாரசாமி ஆகியோரின் உதவிக்கு என்றும் நன்றி உடையேன்.

***

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | ... | அகநானூறு |
| இ.ப.த.ம. | ... | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் |
| இல.விள. | ... | இலக்கண விளக்கம் |
| இளம். | ... | இளம்பூரணர் |
| இறை. | ... | இறையனாரகப்பொருள் |
| ஐங். | ... | ஐங்குறுநூறு |
| கலி. | ... | கலித்தொகை |
| கழகம். | ... | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| குறுந். | ... | குறுந்தொகை |
| குறி.பா. | ... | குறிஞ்சிப்பாட்டு |
| சிலம்பு. | ... | சிலப்பதிகாரம் |
| சீவக. | ... | சீவக சிந்தாமணி |
| தொல். | ... | தொல்காப்பியம் |
| நச்சி. | ... | நச்சினார்க்கினியர் |
| நம்பி. | ... | நம்பியகப்பொருள் |
| நற். | ... | நற்றிணை |
| பக். | ... | பக்கம் |
| ப-ள். | ... | பக்கங்கள் |
| பரி. | ... | பரிபாடல் |
| புறம். | ... | புறநானூறு |
| பொருள். | ... | பொருளதிகாரம் |
| மணி. | ... | மணிமேகலை |
| மாற.அகப். | ... | மாறனகப்பொருள் |
| மு.நூ. | ... | முன்காட்டிய நூல் |
| முல்லை.பா. | ... | முல்லைப்பாட்டு |
| மொ.பெ. | ... | மொழிபெயர்ப்பு |

***

## அறிஞர் பார்வையில் தோழி

1. "தோழி செவிலிக்கு மகளாய், நன்மையுந் தீமையும் ஆய்தலுடன் தலைமகளுக்கு உசாத்துணையாய், அவளது வருத்தந் தீர்த்தற்குரிய அன்பு பொருந்திய தலைவியாம்".

   — ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, பக்.905.

2. "களவு கற்பு என்னும் இருகைகோள்களிலும் இத்தோழி தொடர்பு இல்லாத இடமில்லை என்று கருதத்தக்க முதன்மை வாய்ந்தவள்".

   — ஆர். வெங்கடாசலம் பிள்ளை, தலைமையுரை, அகநானூற்றுச் சொற்பொழிவுகள், பக்.20.

3. "தோழி பண்புநலன் செறியப்பெற்ற சீரிய மகள். அவளுக்குத் தலைவியிடம் அன்பு நிறைய உண்டு. இழிந்த செயலைச் செய்ய நாணுவாள். பழிபடு செயலினின்றும் ஒதுங்குவாள்".

   — முத்துராசாக் கண்ணனார்

4. "அறிவுசான்ற அக்காலப் பெண்ணுலகிற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றனள் நம் தோழி"

   —புலவர் குழந்தை, தொல்காப்பிய காலத் தமிழர், பக்.140.

5. "தோழி கூலிக்கு அமர்த்தப்படுகின்ற வேலைக்காரி போன்ற பாங்கியல்ல. பெரும்பாலும் எல்லா வகையாலும் தலைவியினையொத்த, அவளுக்குச் சமமான உயிர்த்தோழியாவாள்".

   — சுப. இராமநாதன், குறிஞ்சி ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள், பக்.117.

6. "சதுரப்பாடமைய உரையாடுவதில் இவளுக்கு (தோழிக்கு) நிகரானவர் ஒருவருமில்லை".

   —கா.பொ.இரத்தினம், அகநானூற்றுச் சொற்பொழிவுகள், பக்.54

7. "தோழியானவள், அன்பும் அறிவும் அறமும் முறையே உள்ளம் உரை செயல்களாகத் திரண்டு பெண்ணுருக் கொண்டு வந்தாற்போலும் பெருமையுடையவள் என்றல் சாலும்".

   —ஔவை. துரைசாமிப் பிள்ளை, ஐங்குறுநூறு, பக்.149.

8. "தலைவியும் தோழியும், ஒட்டிப்பிறந்த கவைமகவு போன்ற ஒற்றுமையுள்ளவர்கள் என்பதை உளங்கொளல் வேண்டும்".

   — செ. வெங்கடராமச் செட்டியார், செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 5, பரல் 9, பக்.438.

9. "தலைமகன் தலைமகள், தாயர் முதலானவர்களைத் தன் சொல்வழி ஒழுகச் செய்யுந் திறமை, தோழிபாலுண்டெனக் கொள்ளலாம்."

— மு. அருணாசலம் பிள்ளை, 'நெய்தல்', ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள், பக்.93.

10. "தோழியின்றிக் காதலர்களின் களவொழுக்கம் நிகழாது என்பதும் ஐந்திணை இலக்கியப் படைப்புக்குத் தோழி என்னும் ஆள் இன்றியமையாதவள் என்பதும், தோழியிற் புணர்ச்சிக்குரிய துறைகளே புலவர்களின் நெஞ்சைக் கவர்ந்தன என்பதும் பெறலாம்."

— வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.58.

11. "தலைவன் தலைவி என்னுமிருவர் கூற்றிலும் இவ்விருவர் அன்பினையும் இடையறவின்றி வளர்க்கும் தன்மதி நாட்டம் அமைந்த தோழியின் கூற்றே இக்களவொழுக்கத்தின் இயல்பினை இனிது விளக்குவதாம்."

— வெள்ளைவாரணர், குறிஞ்சிப்பாட்டு, பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள், பக்.252.

12. "அறிவே உருவாய் வந்து அறமே வழங்கும் உள்ளம் கொண்டு விளங்கும் தோழிபால், சொல்லாற்றல் அளவின்றி அமைந்திருந்தது."

— கா. கோவிந்தன், நற்றிணை, பக்.221.

13. "தலைவன் தலைவியரிடையே அரும்பும் காதல் மலர்ந்து காய்த்துக் கனிதற்குத் தோழி உறுதுணையாகிறாள்."

— ந. சுப்புரெட்டியார், 'அகப்பொருளில் தோழி', அடிசிற்கினியாள், பக்.62.

14. "வெற்றியன்றித் தோல்வியே அறியாத விந்தைப்பிறவி அத்தோழி."

— தி. முத்து கண்ணப்பன், கடற்கரைக் காதலர், அறிமுகம், பக். ix

15. "தலைவிக்குத் தோழியாகவும் நற்றாயாகவும் அவளை முழுமையாக உணர்ந்து அறிந்தவளாகவும், அவளுக்காகவே வாழ்ந்து சொல்லாடிச் செயற்படுபவளாகவும் காட்டப்படும் தோழி சொல்வன்மை மிக்கவளாக அமைந்ததைத் தோழி கூற்றுப் பாடலில் அமையும் உள்ளுறை மிகுதி உணர்த்துகிறது."

— ச.வே. சுப்பிரமணியன், குறுந்தொகையில் உள்ளுறை, ஒன்று நன்று, பக்.95.

16. "அகத்துறைப் புலவர் கண்ட 'புலனெறி வழக்கம்' என்னும் கோபுரத்தின் கலசமே' தோழி என்னும் பாத்திரம் எனலாம்."

— ஈ.கோ. பாஸ்கரதாஸ், அகப்பொருள் பாடல்களில் தோழி, பக்.5

17. "உயர்த்திக் கூறவேண்டிய நேரத்தில் உயர்த்திக் கூறி இடித்துக் காட்ட வேண்டிய நேரத்தில் இடித்துக் காட்டி, அறிவுரை நல்க வேண்டிய நேரத்தில் அறிவுரை நல்கி, அகவுலக ஆட்சியின் மதிநலம் சான்ற அமைச்சராகத் தி தோழி விளங்குகிறாள்".

— இரா. தண்டாயுதம், சங்க இலக்கியம், பக்.106.

18. "காதலர்கள் உணர்ச்சி மாந்தர்கள். உணர்ச்சியில் விளையும் அகப் போராட்டங்களையும் மோதல்களையும் உள்ளவாறு அறியும் அறிவுப் பாத்திரம் தோழி. காதலர்தம் உணர்ச்சி உள்ளங்களைப் பதப்படுத்தும் பண்புப் பாத்திரம். வரம்பு கடந்து செல்லும் தலைவனை இடித்துரைத்தும், தனிமை தாங்காத தலைவியை ஆற்றியிருக்க அறிவுரை கூறியும் ஒளிவீசும் ஆசான் பாத்திரம். தலைவியின் உடல் வேறுபாட்டிற்குக் கடவுட் காரணம் கற்பித்துக் கட்டுக்காணினும் வெறியெடுப்பினும் இம்மூடநம்பிக்கையை முறியடித்துக் காதற் காரணத்தை நிலைநாட்டி உண்மையைப் புலப்படுத்தும் புரட்சிப் பாத்திரம்; மனக்கசப்பு தோன்றும் வேளையில் ஏற்ற அறிவுரையாகிய ஊட்டச் சத்தளித்து மனநோய் களைந்திடும் மருத்துவப் பாத்திரமாகவும் தோழி தொண்டாற்றுகிறாள்.

—சோ.ந. கந்தசாமி, குறுந்தொகைத் திறனாய்வு, ப-வி.1-2.

19. "தலைவியின் சொல்லிலோ, செயலிலோ சிறிது பிழை கண்டாலும் அதைத் தவற விடாது இடித்துக் கூறித் திருத்தமுறச் செய்பவள் தோழி".

—புலவர் செந்துறை முத்து, ஐந்திணை அழகியர், பக்.56.

20. "அரிய நட்புடையவராய், அன்னையாய், அமைச்சராய், விளங்கும் தோழி தலைவியின் வாழ்வு வளம் பெறச் செய்யும் சேவை பெரிது பெரிது".

—நா. செயராமன், ஈன்ற தாய், பக்.25.

21. "களவுக்குக் கைகொடுத்துக் கற்புக்குத் துணை நின்று தலைவியின் வாழ்வுச் சகடத்தின் அச்சாணியென தோழி நிற்கிறாள்".

—புலவர் வேதா, வாராய் தோழி, பக்.132.

22. "அக இலக்கியத்தில் இன்றியமையா இடம் பெறுபவள் தோழி".

—இந்திரா மனுவேல், பாலை பாடிய பெருங்கடுங்கோ, பக்.40.

23. "தனக்கென வாழாப் பிறர்க்கென வாழும் சான்றோர் போன்று தலைவிக்காக வாழ்கின்றவள்".

—அ. சீநிவாசன், கலித்தொகை ஆய்வு, மதுரைப் பல்கலைக்கழகம், வெளியிடப்படாத ஆய்வேடு, பக்.139.

24. "பண்பின் நிலைக்களமாக விளங்கும் தோழியின் திறம் பெரிது".

—த. சாம்பசிவம், தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை, பக்.108.

25. "During the period of courtship, the Toli of the girl figures prominently. The toli or companion plays the role of a faithful comrade, a genuine friend and guide".

- Dr. K.K. Pillai, A Social History of the Tami, p.346.

26. "The maid is portrayed as the friend, guide and philosopher to the lover in their secret love".

- Rm. Periakaruppan, The tradition and talent in Cankam poetry, p.122.

27. "In short, the Toli in Akapporul may be compared to Lord Krishna in Maha Bharatham. Lord Krishna is the driving force throughout the story and it is his plan that is being executed unwilingly. Bharatham is the story of the Pandavas or the Gauravas but in face Lord Krishna dominates the whole story. It is the same case with the Toli. Without Toli, perhaps the Love story will neither be interesting nor impressive. It is she that makes the story lively and purposeful".

- M.R. Pothilinga Gurusami, A critical study of Inkurunuru, Unpublished M.Litt. Thesis, p.162.

28. "The Lady companion in the idealistic love lyrics of Cankam poetry plays a very significant role, both during the courtship and the wedded life of the heroine".

- R. Leelavathy, The critical study of Kurunthokai - An advanced study, unpublished Ph.D. thesis, p.449.

29. "She (Tozhi) thinks only of the welfare of the heroine, she undergoes difficulties to protect the lovers and she sacrifices her joys to the sake of the lovers welfare".

- R.K. Nagu, A critical study of Palaittinai in Cankam Literature, p.132.

30. "She is like the little candle that spreads its light all round and dispells drakness. The candle wastes itself away and the maid wears herself out and fills the life of her master and mistress with light, love and sweetness".

- V.T. Manickkam, Study of Marutham in Tamil Literature, Unpublished Ph.D. thesis, p.199.

***

## உள்ளுறை

*************

## ஆய்வியல் அறிமுகம்

சங்க இலக்கியம் தமிழின் முதல் இலக்கியம் மட்டுமன்று, முதன்மை இலக்கியமுமாகும். இதிலுள்ள அகப்பொருள் இலக்கியங்கள் பண்டைத் தமிழரின் குடும்பப் பாங்கைக் காட்டும் தகையன.

அகப்பொருளில் தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் முதலானோர் இடம் பெறுகின்றனர். தலைவனும் தலைவியும் செல்வநிலைத் தலைமையில் ஓங்க, தோழி சொல், செயல் துறைகளில் தலைமை தாங்குகிறாள். அதனால்தான் அவள் துணைப் பாத்திரமாயினும் இணையிலா நிலைமையில் இயங்குகிறாள்.

தலைவியின் திருமணம் நடப்பதற்கு முன்பு அவள் மணம் ஆகாதவளே. ஆயினும் அவளே தலைவியின் திருமணத்தை முடித்து வைக்கிறாள். அவள் நாற்றமும் தோற்றமும் முதலியவற்றால் தலைவியின் நிலைமை உணர்ந்து கொள்கிறாள். ஆனால் எந்த இடத்திலும் அவள் தன் மனநிலையை வெளிப்படுத்தவில்லை. ஏறத்தாழ தலைவியின் வயதுடையளாயினும் அவள் முதிர்ந்த அறிவினள். தலைவியுடன் இளமை முதல் ஒன்றாக உறைந்து மனம் கலந்து வளர்ந்தவளாயினும், தலைவியின் கற்பு நலம் கருதி அவள் தன் பெற்றோர், உற்றாரை விட்டுப் பிரிவதற்கும் துணை நிற்கிறாள். அவள் அளவற்ற உரிமை படைத்தவள். ஆகவே, தலைவியை வற்புறுத்தியும், தலைவனைக் கடிந்தும், தாயிடம் வாதாடியும் தான் நினைத்ததை முடிக்கிறாள். தலைவியின் காதலுக்கு வெற்றிப்பாதை காட்டும் அவள் யாரையுமே காதலிக்கவில்லை. தலைவியைக் குறியிடத்துய்த்து அவர்களின் மகிழ்ச்சிக்கு வழியமைத்து ஒதுங்கிக் கொள்ளும் மனப்பக்குவம் பெற்ற அவள் தன் மகிழ்ச்சிக்கு வழி தேடவில்லை. தன் நலம் சிறிதுமின்றித் தலைவியின் நலனையே நாடும் தோழி தமிழிலக்கியத்தில் மட்டுமன்றி உலக இலக்கியத்திலேயே ஒப்புயர்வற்ற படைப்பாகிறாள்.

தோழி தன்னை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவில்லை. அவள் தலைவி, தலைவன், செவிலி, பாணன் ஆகியோரின் பண்பு விளக்கும் பளிங்குக் கண்ணாடியாகவே நிலவுகிறாள். இத்தகைய அரிய இயல்புக்கு அவள் ஒருத்தியே

உரியவளாய் மத்திப தீபக அணியாய் அகப்பொருள் இலக்கியத்திற்கு உயிர் ஊட்டுகின்றாள்.

தலைவனும் தலைவியும் காதலுணர்வு வயப்பட்டுத் தடுமாறும் தன்மையர்; செவிலியும் நற்றாயும் குடும்ப மதிப்புணர்வுக்குக் கட்டுப்பட்டவர்; பரத்தை வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளும் தரத்தினள்; தோழி ஒருத்தியே எந்த உணர்வுக்கும் சிறைப்படாமல் அறிவு நிலையிலே தானும் இயங்கித் தன்னைச் சார்ந்தவரையும் இயக்குகிறாள்.

துணைப்பாத்திரம் இன்றேல் தலைமைப் பாத்திரம் சிறப்புறாது. சங்க இலக்கியத்தில் வரும் துணைப்பாத்திரங்களில் தோழியே தலைமை தாங்கும் தகுதியுடையவள். அவள் இன்றேல் தலைவியும் தலைவனும் கூட ஒளி பெற முடியாது. இவளுடைய வெறுப்புக்கு உள்ளாகும் பரத்தையும் கூட இவள் கூற்றால் சிறப்பே பெறுகிறாள்.

சொல்லும் செயலும் எப்போதும் ஒன்றியிருப்பதில்லை. ஆனால் தோழி சொல்லின் செல்வியாகவும் இருக்கிறாள். செயலில் வல்லவளாகவும் விளங்குகிறாள். இருநிலையிலும் பெருமை வாய்ந்த ஒரே பாத்திரம் தோழியே.

வாய்மொழிக் கபிலன் என்ற ஆய்வுரைப் புகழுக்குரிய கவிஞனுக்கும் மற்ற 246 புலவர்களுக்கும் மிகப்பிடித்தமான பாத்திரம்[1] தோழியேயாகும். அவளை ஒலிபெருக்கியாகக் கொண்டு, தாங்கள் அவள் பின்நின்று அவர்கள் தங்கள் கருத்துகளை அறிவிக்கின்றனர்.

மாந்தரில் பெரும்பாலோரின் அன்பு, நிலவைப்போல் கூடிக்குறையும் தன்மையது. எனவேதான் தலைவன் தலைவியை விட்டுப் பரத்தமை மேற்கொள்கிறான்; பாணன் கலை மேல் கொண்ட பற்றை மறந்து பரத்தை தரும் பொருள் மேல் பாசம் கொள்கிறான். ஆனால் தோழி ஒருத்தியே, தலைவி தலைவன் மீது மாறா அன்புடன் திகழ்கிறாள். பிறரின் போக்கு வேறானாலும் அவளது அன்புநிலை மட்டும் காந்தமுள்போல் என்றும் மாறாமல் உள்ளது.

சங்க இலக்கியத்தில் பெருஞ்செல்வாக்கு கொண்டவர் பெண்டிர். 2379 சங்கப் பாடல்களில் 1864 அகம் பற்றியன. இவற்றில் முழுமையாய்க் கிடைப்பன 1859. அவற்றுள் தலைவி, தோழி, நற்றாய், செவிலித்தாய், பரத்தை ஆகியோர் கூற்றாக அமைந்தவை 1458 பாடல்கள். இதில்[1A] 784 பாக்கள் அதாவது 51 விழுக்காடு தோழி கூற்றுப் பாடல்கள். சங்க இலக்கியத்தில் 882 களவுப் பாடல்கள் உள. இவற்றுள் 40 பாடல்கள் இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்ற மூன்று வகைக்கும் உரியன. எஞ்சிய 842 பாடல்கள்–95 விழுக்காடு–தோழியிற் புணர்ச்சி என்னும் ஒரு வகைக்கே உரியன.' இதனால் தோழியின்றிக் களவொழுக்கம் நிகழாது என்பதும், ஐந்திணை இலக்கியப் படைப்புக்குத் தோழி என்பவள் இன்றியமையாதவள் என்பதும், தோழியிற் புணர்ச்சிக்குரிய துறைகளே புலவர்களின் நெஞ்சைக் கவர்ந்தன என்பதும் பெறலாம்," என்னும் டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்களின் கூற்றும் தோழியின் சிறப்பைப் புலப்படுத்தும்.[1B]

களவை வெற்றியாக்குதலே தோழியின் செயல்திறலில் முதன்மையிடம் பெறுவதால் மிகுதியான பாடல்கள் களவுப்பாடல்களாகவே அமைகின்றன.[2] வரைவு கடாதல் துறையில்தான் பாடல்களின் எண்ணிக்கையும் மிகுதியாக உள்ளன.[2A] கற்பு நிலையில் ஆற்றுவித்தல் துறை, எண்ணளவில் முதலிடம் பெறுகின்றது.[3] தோழி கூற்றுப் பாடல்களில், நூல்களில் நற்றிணையும், திணைகளில் குறிஞ்சியும் முதலிடம் பெறுகின்றன.[4]

சங்கப் பாடல்களில் 68 பாடல்களில் மட்டுமே தலைவி தலைவனிடம் பேசுகிறாள். ஆனால் 489 பாடல்களில் அவள் தோழியிடம் பேசுகிறாள்.[5] இதனால் தோழி சங்கப்பாடல்களில் பெரிதும் செல்வாக்குள்ள பாத்திரம் என்பது புலனாகும்.

தோழி மட்டும் தலைவியிடம் கூறும் கூற்றாக 383 பாடல்களும் தலைவனிடம் கூறும் கூற்றாக 295 பாடல்களும் செவிலி போன்ற பிறருடன் கூறும் கூற்றாக 91 பாடல்களும் இடம் பெறுகின்றன.[5A]

தோழி கூற்றுப் பாடல்களைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை 247.[6] அவருள் தோழியை மட்டுமே பாடியவர்கள் 107.[7] தோழியைப் பாடிய பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கை 16.[8] கபிலர் மட்டுமே 126 பாடல்களைப் பாடியுள்ளார்.[9]

தோழியின் செயல் திறன் முறையில் 274 துறைகள்[10] அமைகின்றன. சங்க இலக்கியத்தைத் திறனும் அவைவரின் உள்ளங்கவர் பாத்திரமாகத் தோழி விளங்குகிறாள்.[11] இன்னோன்ன காரணங்களால் தோழி பாத்திரம் இவ்வாய்-வேட்டின் பொருளாக அமைந்துள்ளது.

சங்க இலக்கியத்தில் தலைவி கூற்றினும் துணைப்பாத்திரமாகிய தோழி கூற்றே மிகுதியாக உள்ளமைக்குச் சில காரணங்களைக் கூறலாம். (1) அகத் திணையில் தலைவியின் பண்புகளாக அச்சமும் நாணமும் காட்டப்படுகின்றன.[12] எனவே அவள் தன் களவொழுக்கச் செய்திகளையும், மெல்லிய காதலுணர்வுகளையும் சொல்லால் வெளியிடுதல் நாகரிகமன்று. ஆதலால் அவை தோழியின் கூற்றாக வெளியாதலே நன்று. (2) தலைவியின் கூற்றுகளையும் தன் கூற்றாக மொழியும் இயல்பும் உரிமையும் காரணமாகத்தோழிக் கூற்று அதிகமாகிறது.[13] (3) தலைவன், தலைவி, செவிலி, பாணன், விறலி முதலான பலரிடம் பேசும் வாய்ப்பு தோழிக்கே அமைவதால் அவளது கூற்று மிகுகிறது. (4) செயல் முறையில் தலைவியின் செயல் காதலிப்பதோடு அமைகிறது. அவள் காதலை வெற்றிபெறச் செய்து, கற்பாக்கும் முயற்சியில் மதியுடம்படுத்தல் முதலாக வாயில் நேர்தல் இறுதியாகத் தோழி செயலாற்றுவதினால் அவள் கூற்று மிகுகிறது. உரிமையும் உறவும் மிகுதியாகக் கொண்டிருந்தமையால் தோழியின் கூற்றாக அமைந்த பாடல்கள் மிகுதியாக உள்ள போலும் என்னும் அறிஞரின் கூற்றும் ஏற்ற காரணமாகும்.[14]

தோழியின் கூற்று, எண்ணிக்கையளவில், அறிஞரிடையே கருத்து மாறு படுகின்றது. டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் தோழி தொடர்பாக 842

பாடல்களைக் குறிப்பிடுவர்.[15] டாக்டர் பெரியகருப்பன் அவர்கள் தோழியின் கூற்று எண்ணிக்கையை 785 ஆகக் கூறுவர்.[16] திரு ச.கோ. பாஸ்கரதாஸ் அவர்களுக்கும் இவ்வெண்ணிக்கை உடன்பாடே.[17] திரு க. இரத்தினம் அவர்கள் 780 ஆகக் கூறுவர்.[18] இவ்வாய்வேட்டில் தோழியின் கூற்று 784 ஆகக் கொள்ளப்படுகிறது.[19]

தலைவி கூற்று தோழி கூற்று என்று ஐயுறத் தக்க நிலையில் சில பாடல்கள் அமைகின்றன. தலைவி அல்லது தோழியின் கூற்று என்னும் நிலையில் சில பாடல்களும்,[20] தோழி அல்லது தலைவியின் கூற்று என்னும் நிலையில் சில பாடல்களும்[21] தோழி அல்லது பரத்தையின் கூற்று என்னும் நிலையில் ஒரு பாடலும்[22] நூலில் காணப்படுகின்றன. இரு கூற்றாகக் காணப்படுவதில் முதல் கூற்றே பொருத்தமாக இருப்பது நோக்கி அவ்வக் கூற்றில் சேர்க்கப்பட்டுள்ளன.

திணைமுறையிலும் பாடல்கள் இடர்ப்பாடுடையனவாகவே அமைகின்றன. களவுத்துறைகளில் கற்புத் திணைகளும் பாடல்களும், கற்புத் துறைகளில் களவுத் திணைப் பாடல்களும் இடம் பெறுகின்றன.[23] கபிலர் போன்ற புலவர்கள் கூட திணைகளுக்குச் சிறப்பு கொடுத்ததாகத் தெரியவில்லை. அவர் குறிஞ்சித் திணையிலேயே கற்புத் துறைகளையும் பாடியுள்ளார். ஆற்றுவித்தல் துறையில் களவு, கற்புப் பிரிவுகள் இடர்ப்பாடு தருவனவாக அமைகின்றன. அதனால் இவ்வாய்வுக் கட்டுரை துறை முறையிலேயே ஆயப்படுகிறது. ஆங்காங்கு திணை வேறுபாடுகள் காட்டப்படுகின்றன.

தோழி துணைப் பாத்திரமாக விளங்குவதால் ஆய்வு நிலையில் யாரும் இப்பாத்திரத்தைக் காணவில்லை. வ.சுப. மாணிக்கம் அவர்களின் 'தமிழ்க் காதல்' நூலில் தோழியைப் பற்றி ஆங்காங்கு குறிப்புகள் தரப்படுகின்றன. புலவர் வேதா அவர்களின் 'வாராய் தோழி' என்னும் நூலில் சில பாடல்கள் நலம் பாராட்டப்படுகின்றன. அண்மையில் வெளிவந்த திரு பாஸ்கரதாஸ் அவர்களின் 'அகப்பொருள் பாடல்களில் தோழி' என்னும் நூலில் சில ஆய்வுக்

கருத்துகள் கொடுக்கப்படிமும், பொதுவாகத் துறைதோறும் தோழியின் சிறப்புகளை அறிமுகம் படுத்தும் நிலையே உள்ளது. டாக்டர் ம.ரா.போ. குருசாமி, டாக்டர் வீ.டி. மாணிக்கம், டாக்டர் நாகு, டாக்டர் லீலாவதி ஆகியவர்களின் ஆய்வேடுகளில் பாத்திர அமைப்பில் குறிப்புகள் கிடைக்கின்றன.

பொதுவாகத் தோழி பாத்திரப் படைப்பில் தோயும் அறிஞர்கள் அவளுக்குப் புகழ் மாலைகள் சூட்டியுள்ளனர். தோழியைப் பற்றிய வரலாறு ஆயும் நிலையில் செவிலியின் மகள் என்னும் குறிப்பு தவிர வேறெந்த குறிப்பும் கிடைக்கவில்லை. அதனால் இவ்வாய்வேடு அவள் கூற்றுகளைக் கொண்டே ஆயப்படுகின்றது. இயல்களும் விளக்கப்படுகின்றன.

'தோழி ஓர் அறிமுகம்' என்னும் முதலியலில் தோழி என்ற சொல் ஆயப்படுகிறது. அவள் அழகுச் செல்வியாகப் படைக்கப்படவில்லை என்பதற்கு விளக்கம் தரப்படுகிறது. அவள் அடிமையல்லள் என நிறுவப்படுகிறது. தலைவன் தலைவியின் பண்பு நலன்களை விளக்கும் கண்ணாடியாக அவள் திகழ்கிறாள் என்பது விளக்கப்படுகிறது. தோழி பாத்திரப் படைப்பு, உண்மையும் கற்பனையும் கலந்த நாடகப் பாத்திரம் என நிறுவப்படுகிறது. பரத்தையின் தோழியைப் பற்றி விளக்கப்படுகிறது. தோழி அவற்றுப் பாடல்கள் சிறப்புப் பெருமை குறிக்கப்படுகிறது. சங்கப் புலவர்கள் தோழி பாத்திரப் படைப்பிலேயே தங்கள் திறனையும் கருத்துகளையும் வெளிப்படுத்துகின்றனர் எனக் காட்டப்படுகிறது.

'இலக்கணத்தில் தோழி' என்னும் இரண்டாம் இயலில் தொல்காப்பியம் முதலான அகப்பொருள் இலக்கணங்களின் துணைக்கொண்டு ஒப்பீட்டாய்வு செய்யப் படுகிறது.

'தோழி தலைவி உறவுநிலை' என்னும் மூன்றும் இயலில் தோழிக்கும் தலைவிக்கும் இடையே உள்ள அன்பு உறவுநிலை புலப்படுத்தப்படுகிறது. தலைவியின் இன்பத்திலும் துன்பத்திலும் தோழி பங்கு பெறும் நிலையும் உணர்த்தப்படுகிறது. குறை நயத்தல், வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, வரைவு மலிதல், ஆற்றுவித்தல், பரத்தையர் பிரிவு ஆகிய துறைகளில் தோழியும் தலைவியும் பெறும் பங்கு ஆயப்படுகிறது. தோழி தன்னைத் தலைவியாகக்

'தோழி தலைவன் உறவுநிலை' என்னும் நான்காம் இயலில் தோழிக்கும் தலைவனுக்கும் இடையே உள்ள உறவுநிலை துறைதோறும் விளக்கப்படுகிறது. விளிநிலையில் தலைவனின் சிறப்புநிலை புலப்படுத்தப்படுகிறது.

'தோழி பிறர் உறவுநிலை' என்னும் ஐந்தாம் இயலில் தோழிக்கும் செவிலி, பாணன், விறலி, வாயிலார், பாங்காயினர், முருகன், அகவன்மகள், வேலன், அறிவர் போன்ற பிற அக இலக்கிய மாந்தர்களுக்குமிடையே உள்ள உறவு நிலை புலப்படுத்தப்படுகிறது.

'தோழியின் அறிவுத்திறன்' என்னும் ஆறாம் இயலில் தோழியின் சொல்லாற்றல் விளக்கப்படுகிறது; அவள் உவமைகளையும் உறிப்புப் பொருளையும் ஆளுந் திறன் வெளிப்படுத்தப்படுகிறது; வரைவு கடாவ அவள் ஆளும் உத்தியான சிறைப்புறக் கூற்றின் சிறப்பு விளக்கப்படுகிறது; துறைதோறும் தோழி வரலாற்று நிகழ்ச்சிகளைப் பயன்படுத்தும் பாங்கு கூறப்படுகிறது. உளவியல் கூறுகள் தோழியின் கூற்றில் அமையும் நிலை விளக்கப்படுகிறது.

'தோழியின் செயல் திறன் – களவு' என்னும் ஏழாம் இயலில் தோழியிற் புணர்ச்சி முதலாகத் தலைவியைப் பள்ளியிடத் துய்த்தல் வரை தலைவியின் களவைக் கற்பாக்க அவள் மேற்கொள்ளும் செயல் திறன் விளக்கப்படுகிறது.

'தோழியின் செயல் திறன் – கற்பு' என்னும் எட்டாம் இயலில் செலவழுங்குவித்தல், ஆற்றுவித்தல், தலைவன் பரத்தையிற் பிரிவு ஆகிய துறைகளில் அவள் செயலாற்றல் புலப்படுத்தப்படுகிறது.

'சங்க இலக்கியத் தோழியும் பிறமொழி இலக்கியத் தோழியும்' என்னும் ஒன்பதாம் இயலில் சங்கத் தோழியுடன் வடமொழி, தெலுங்கு, ஆங்கிலமொழி இலக்கியத் தோழிகளை ஒப்பிட்டு ஆயப்படுகிறது.

'புலவர்கள் கண்ட தோழி' என்னும் பத்தாம் இயலில், விரிவு அஞ்சி, பாடிய பாடல்களின் எண்ணிக்கை முறையில் கபிலர், ஓரம்போகியார், அம்மூவனார்,

பாலைபாடிய பெருங்கடுங்கோ, பேயனார், உலோச்சனார், ஒதலாந்தையார், பரணர், மருதனிளநாகனார், நல்லந்துவனார், நக்கீரர், மாமூலனார், சோழன் நல்லுருத்திரனார் ஆகிய 13 ஆண்பாற் புலவர்களும் வெள்ளிவீதியார், நல்வெள்ளியார், ஔவையார் ஆகிய மூன்று பெண்பாற் புலவர்களும் மட்டுமே ஆயப்படுகின்றனர். ஒவ்வொரு புலவரும் தோழியின் கூற்றில் அமைத்த சிறப்பு அம்சங்கள் விளக்கப் படுகின்றன. பெண்பாற் புலவர்கள் அதிகமாக ஆற்றுவித்தல் துறையில் பாடியமைக்குக் காரணம் காட்டப்படுகிறது.

'வழிவழித் தோழி' என்னும் இறுதி இயலில் 'தோழி இல்லையெனில்' என்ற வினாவிற்கு விடையளிக்கப்படுகிறது. சங்கத்தோழி பின்னால் காப்பியக் காலம், நீதி இலக்கியக் காலம், சமயக்காலம், பிரபந்தக் காலம், தற்காலம் எனக்கால அடிப்படையில் பெறும் மாற்றம் விளக்கப்படுகிறது.

***

# இயல் ஒன்று

## தோழி - ஓர் அறிமுகம்

"தன்னலம் சிறிதுமின்றித் தலைவன் தலைவியர் இருவரது நலத்தை மட்டும் கருதிப் பலவகை இடுக்கண்களுக்கிடையும் சளர்படச் செயல் புரிந்து வாழும் தோழியினது வரலாறு மிக்க வியப்பைத் தருவது"

- உ.வே. சாமிநாத ஐயர், குறுந்தொகை,
நூலாராய்ச்சி, பக். 73.

"அகப்பொருட் பகுதியில் தோழி இல்லையானால் ஒன்றும் இல்லை. தோழியின் திறமே குறிஞ்சித்திணையின் உயிர் எனலாம்".

-மு. வரதராசனார், பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள்,
முன்னுரை, பக். 24.

## தோழி – ஓர் அறிமுகம்

0. தோழி அக இலக்கிய முக்கோண வடிவத்தின், மேல் முனையாக விளங்குகிறாள். அவள் தலைவன், தலைவி என்ற இரு மேவிடங்களை இணைக்கும் பாலமாகச் செயல்படுகிறாள். களவுலகக் கடலில் தலைவியின் நெஞ்ச மரக்கலம் இடையூறு பாறைகளின் இடையில் தடுமாறும்போது வடதுருவ விண்மீனாக விளங்கி வழிகாட்டுகிறாள். தலைவனின் நெஞ்சம் மயக்க இருளிலும், தளர்ச்சி முடுபனியிலும் சிக்கித் தவிக்கும்போது, அறிவுத் தீச்சுடராக அவள் உதவுகிறாள். செவிலி, சடங்குச் சேற்றில் நழுவும்போது திடப்படுத்தும் ஊன்று கோலாகத் தோன்றுகிறாள்.

0.1. 'தோழிதானே செவிலி மகளே' என்பது தொல்காப்பியம் தரும் குறிப்பு.[1] இதைத்தவிர தோழியின் பிறப்பு, திருமணம், வாழ்க்கை குறித்த வேறெந்தச் செய்தியும் அறியமுடியவில்லை. அவள் தலைவிக்காகவே – தலைவியின் காதல் வெற்றிக்காகவே – படைக்கப்பட்ட பாத்திரமாகக் காணப் படுகிறாள். தலைவியின் விளையாட்டுப் பருவத்திலிருந்து, தலைவி மகப்பேறு பெற்ற நிலையில் செவிலியாக மாறும் வரை தன் தலைவிக்காகவே அவள் வாழ்கிறாள். செவிலியின் மகள் என்பதால் இவளுக்கும்திருமணம்உண்டு என்பதை உய்த்துணரலாம். ஆனால் தோழியின் கணவனைப் பற்றியும் அவள் நடத்திய குடும்பத்தைப் பற்றியும் இலக்கியம் கூறவில்லை.

0.2. வினைவலர், அடியோர் என்ற ஏவலர்கள் புறத்துறையில் குறிப்பிடப்படுகின்றனர். அகத்துறையில் தோழியர், ஆயத்தார் என்பவர்கள் தலைவிக்குத் துணையாக இருக்கின்றனர். 'தோழியரே' பின்னால் 'செவிலியர்' என்ற நிலையை அடைகின்றனர். 'தோழி என்றது காதற்றோழியை, தலைமகளின் தோழியர் பலருள்ளும்இவளே களவிற்குச் சிறந்தாளாகையால் தாதேீ எனப் பிரித்தார்' என்பர் புலவர் குழந்தை.[2] இளம்பூரணர் உரையும்இதற்கு அரண் செய்யும்.[3] 'ஒன்றிய தோழி',[4] 'ஒன்றித் தோன்றும் தோழி'[5] 'ஒருமைக் கேண்மையின் உறுகுறை தெளிந்தோள்'[6] என்பன தலைவிக்கும் தோழிக்கும் இருந்த

உறவுநிலையைப் புலப்படுத்தும். தோழியை 'நன்னர் மாக்கள்' என்று அகம் கூறும்.[7]

0.3. தோழியர் பலர் இருந்ததை இலக்கியம் பகர்கிறது.[8] அவர்களில் உயிர்த் தோழியே 'தோழி' எனப்படுவாள். விளி நிலையிலும் 'தோழி' என்றே அண்மை சுட்டாகக் கூறப்படுகிறது.[9] சிலப்பதிகாரத்தில் தோழீ, தோழிமீர் என்று சேய்மைச் சுட்டாகவும் விளிக்கப்படுகிறது.[10]

0.4. தலைவியின் விளையாட்டும் நிலையில், அகப்பாடல்களில், 'ஆயத்தார்' குறிக்கப்படுகின்றனர். ஓரை என்னும் விளையாட்டும்[11] பந்தும்[12] விளையாடும் மகளிர் கூட்டமாக இவர்கள், தலைவியுடன் நெடுஞ்சுனையில் ஆடுகின்றனர்.[13] தலைவியின் உடல்நலனைப் பாதுகாக்கின்றனர்.[14] தலைவியைப் பிரியாமலிருக்கின்றனர்.[15] சிலப்பதிகாரத்தில் 'ஆயச் செவிலியர்'[16] என்பார் குறிக்கப்படுகின்றனர். ஆயம் என்பதற்குச் சிலப்பதிகார உரையாசிரியர் 'முதுபெண்டிர்' என்று இயம்புவர். செவிலியர் நிலையில் காவற்பெண்டு என்பாரும் குறிக்கப்படுகின்றனர்.[17]

0.5. இவ்வியலில் 'தோழி' என்ற சொல்லின் ஆய்வு, அவளது அழகு, அவளுடைய உரிமை வாழ்வு ஆகியவை விளக்கப்படுகின்றன. அவள் ஒரு உண்மையும், கற்பனையும் கலந்த நாடகப் பாத்திரமாகப் புலவர்களால் அமைக்கப்பட்டமை விளக்கப்படுகிறது. தலைவன் தலைவி வாழ்வில் பாங்களும் தோழியும் இடம்பெற்ற நிலை விளக்கப்படுகிறது. பரத்தைக்கும் தோழி இருந்ததும் புலப்படுத்தப்படுகிறது. தோழியே புலவர்களின் எண்ணங்களுக்கு வடிவம் கொடுப்பதும் விளக்கப்படுகிறது.

## 1.0. 'தோழி' — சொல்லாராய்ச்சி

செல்லாப் பெரும்புகழ் தொல்காப்பியனார், 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே', 'மொழிப்பொருள் காரணம் விழிப்பத் தோன்று'[18] என்று கூறுகிறார். அடிநாளில் அடிப்படைக் காரணம் கொண்டு சொற்கள் தோன்றின என்ற உண்மையையும் பழகப்பழகக் காரணத்தை நாடிப் பார்க்கும் தன்மை

குறைந்து விட்டமையினால் சில சொற்களின் மூலகாரணம் புலப்படாமல் போகும் என்ற மற்றுமோர் உண்மையையும் அந்தத் தலைநாள் மொழிநூலறிஞர் எழுதி வைத்தார்.

1.1. ஒரே பொருளைச் சுட்டப் பல சொற்கள் பிறந்தாலும், அடிப்படையில் அவற்றினுள், சிறிதளவேனும் வேற்றுமை உண்டு என்பதை அறிவுடையோர் உணர்வார். தலைவியுடன் சிறப்போடு இருந்த துணைப்பாத்திரத்தைச் சுட்ட தோழி, இளை, பாங்கி, சிலதி, இளங்கி, துணைவி, சேடி, சகி என்ற சொற்கள் பல்வேறு காலநிலையில் தோன்றி வழக்காற்றிலிருந்தன.

1.1.1. இவற்றில் தோழி என்ற சொல்லே பழமைச் சிறப்புடையது. தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், வீரசோழியம் முதலிய இலக்கண நூல்களிலும், சங்க இலக்கியங்களிலும் பயின்று வந்த பெருமையுடையது. ஆனால் இச்சொல் காலப்போக்கில் தன் தலைமையையும் ஆட்சிப் பண்பையும்இழந்து கைம்மை நோன்பேற்ற சொல்லாகி விட்டது.

1.2. தோழி என்ற சொல் தோன்றப் பல காரணங்கள் கூறப்படுகின்றன.

(க) கலித்தொகையில் தொழீஇ[19] என்று அளபெடுத்து வருமிடங்களில் உரையாசிரியர் காண்டற்றொழிலை உடையவள் என்று கூறுகிறார்.

(ங) தொழுது நிற்றலையுடையவள் தோழி,[20] என்று சுன்னாகம் குமாரசாமிப் புலவர் கூறுகிறார்.

(ச) தோளை வீசி ஆடும் தோளி[21] என்ற வரிக்கூத்துக்குரிய பெண்டிருள் சிறந்தோள் தோழி ஆவாள் என்ற கருத்துக்கும் இடமுண்டு.[22]

(ஞ) தலைவியைச் சுற்றியுள்ள தொழுதியாம் ஆயக்கூட்டத்தின் முதல்வியைத் தோழி எனலும் ஒன்று.[23]

(ட) தொழில் செய்வோர் தொழுவர் எனப்படுவர். தலைவியின் ஏவல் தொழிலைச் செய்வோருள் முதன்மை பெற்றவள் தோழி எனப்படுவாள்.[24]

(ண) தோள் போன்றவள் தோளி. இது பின்னர் தோழி என்று மருவியது.

1.2.1. சங்க இலக்கியத்துத் தோழி, காண்டற்றொழிலை மட்டும் செய்பவள் அல்லள். குறை நயப்பித்தல், வரைவு கடாதல் முதலிய சொல்லாடலும், குறிக்கண் கூட்டுதல், தூது மறுத்தல் முதலிய செயலாட்சியும் உடையவள். ஆதலின் காண்டற்றொழிலை மட்டும் உடையவள் தோழி என்பது பொருந்தாது. சங்க இலக்கியப் பாக்கள் பலவற்றில் தலைவி, அணுக்கத் தொண்டாற்றும் பெண்ணைத் 'தோழி' என்று கூறுவதுபோல, தோழியே தலைவியைத் 'தோழி' என்று விளித்துக் கூறும் இடங்கள் பல உண்டு.[25] எனவே தோழி என்பது தொழுது நிற்றலையுடையவள், ஆயக் கூட்டத்தின் தலைவி, ஏவல் செய்வோருள் தலைமையானவள் போன்ற கருத்துகளுக்குஇடம் அளிக்காமற் போகிறது. தோளிக் கூத்திற்கும் தோழி நிலைக்களுக்குமையின், அந்தக் கருத்துக்கும் இடமில்லாமற் போகிறது. எஞ்சியுள்ள தோள் போன்றவள் தோழி என்ற கருத்து கருதற்பாலது. தோள் துணை நிற்கும் செயலின் நலனைத் 'தோள் புரை புணை'[26] என்ற உவமை எடுத்துரைக்கும். 'தோள்துணையாக வந்தனர்'[27] என்ற பாடல் சான்ற புலனெறி வழக்கம்இவ்வுண்மையை வலியுறுத்தும். உடல் உறுப்புகளில் 'கை' என்பது முயற்சியைச் சுட்டுவதுபோல, தோள் என்பது, உடனிருந்து உதவும் தன்மையை 'தோளோடு தோள் கொடுத்தல்' என்ற உலக வழக்கு தெளிவுபடுத்துகிறது. எனவே தோள்போன்றவன் தோழன் என்பதும், தோள்போன்றவள் தோழி என்பதும் கொள்ளத் தக்கன. தமிழில் ளகரமும் ழகரமும் சொற்களில் இடம் மாறும் இயல்புடையன.[28] எனவே தோளன், தோளி என்பன முறையே தோழன் தோழி என்று திரிந்தன. உறுப்பின் பெயரால் மக்கள் முறைப்பெயர் பெறுதல் தமிழ்மொழியில் உண்டு. கண்போன்றவ கணவன் (கண் அவன்) தலை போன்றவன் தலைவன். இவ்வாறே தோள் என்ற உறுப்பின் பெயரால் தோழன் தோழி என்ற பெயர்கள் தோன்றின.

1.2.2. மலையாள மொழியில் தோழன், தோழி, தோழம், தோழமா என்னும் சொற்கள் வழங்குகின்றன. தோழன் என்பது நண்பன், துணைவன் என்ற பொருளையும் தோழம், தோழமா என்பன நட்பு என்ற பொருளையும்

தந்து நிற்கிறது. தெலுங்குமொழியில் 'தோழா' என்பது ஒருங்கு சேர்தல் என்ற பொருளைத் தந்து நிற்கும்போது 'தோடு' 'தோடுபடு' என்பன, உதவி, உதவிபுரி என்ற பொருள்களிலும், 'தோடுவாரு' என்பது துணைவன் என்ற பொருளிலும் அமைகிறது. எனவே தெலுங்கில் 'தோடு' என்பது அடியாக அமைகிறது. கோண்டு மொழியில் 'தோர்', தொல் என்ற சொற்கள் 'உதவி' என்னும் பொருளைப் பயந்து நிற்கிறது. கூய் மொழியில் 'தொமு' என்பதே நட்பு என்ற பொருளில் வழங்குகிறது. எனவே, உதவி அல்லது நட்பு என்ற பொருளின் அடிப்படையை இச்சொல் பிற திராவிட மொழிகளில் பெற்றிருக்கிறது.[29]

## 1.3. இகுளை

தோழி என்ற பெயருக்கு அடுத்தபடியாகச் சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற சொல் இகுளை என்பதாகும். இது 'இகு' என்ற அடிச்சொல்லிலிருந்து பிறந்தது. இகு என்பதற்குச் சொரிதல் என்னும் பொருள் கண்டு[30] அன்பைச் சொரிபவள் தோழி என்ற கருத்தின் அடிப்படையில் தோழி 'இகுளை' எனப் பட்டாள் போலும். தோழி தலைவியைத் 'தோழி' என்றழைத்தது போலவே, அயல் தோழி தலைவியையும் 'இகுளை' என்று அழைப்பதும் சங்ககால மரபு ஆகும்.[31] இகுளை என்பது சேர நாட்டுச் சொல் என நன்னூல் உரை கூறும்.[32]

## 1.4. பாங்கி

பாங்கு என்பதற்கு உரிமை, பக்கம், இணக்கம், முறைமை என்ற பொருள்கள் உண்டு. எனவே தலைவியோடு ஒன்றுக வாழும் உரிமை பெற்றவள்; தலைவியின் பக்கத்தில் எப்போதும் இருப்பவள்; தலைவியின் கருத்துகளுக்கு என்றென்றும் இணங்கி இருப்பவள்; தலைவியைப்பேணும் முறைமை பெற்றவள் என்றவாறு பாங்கி என்னும் சொல் தோற்றம் பெற்றிருக்கிறது. பாங்கி என்ற சொல்லை நம்பியகப் பொருள், மாறன் அகப்பொருள், இலக்கண விளக்கம் ஆகிய பிற்கால நூல்கள் எடுத்தாளுகின்றன. உரையாசிரியர்களும் இச்சொல்லாட்சியையே போற்றியுள்ளனர். பாங்கி என்ற சொல்லை விளியாகப் பயன்படுத்தவில்லை.

பாங்கு என்ற சொல்லுக்கு நன்மை, நல்லொழுக்கம் என்னும் பொருள்களும் உள்ளமையால் அப்பொருள் பற்றியும் அச்சொல் தோன்றியதாகக் கருதலாம்.[33] 'தலைவியின் வாழ்க்கையில் சிறப்புமிக்க பங்கு பெறுபவள் தோழி. எனவே, தோழி 'பாங்கி' எனப்பட்டாள்' என்பார் கூற்றும் பொருத்தமுடையதே.[34]

1.5. சிலதி

பிற்காலத்தில் உரிமைச் சமவாழ்வு நிலையிலிருந்து தோழி தாழ்ந்து விட்டாள். அருமை நண்பர் போலிருந்தவள் வேலைக்காரி நிலைக்கு இறக்கப்பட்டாள். அச்சமயம், அவள்சிலதி என்று சுட்டப்பட்டாள். சிலதர் என்பதற்குத் தொழில் செய்வோர் என்பர் நச்சினார்க்கினியர். 'சிலதி' குற்றேவலுக்கு உரியவள் என்றும் கூறுவர்.[35] சிலதி எனும் சொல் சிலம்பிலும் பெருங்கதையிலும் வருகிறது.[36]

1.6. இளங்கி

தலைவியின் கருத்துக்கு இணங்கி நடப்பாள் என்பதால் இப்பெயர் வந்தது. இது இலக்கியத்தில் பயின்று வந்ததாகத் தெரியவில்லை. பிங்கல நிகண்டில் மட்டுமே காணப்படுகிறது.[37]

1.7. துணைவி

தலைவியின் செயல்கள் யாவிலுக்கும் துணையாக இருப்பவள். இக்காலத்துக் கணவன் மனைவியை முறையே துணைவன், துணைவி என்று நீங்கு இருப்பது போல், ஒருவருக்கொருவர் துணையாக இருந்து அக்காலத்தில் தோழி தலைவிக்குத் துணைவியாக இருந்திருக்கிறாள். தோழிக்கு இணங்கி, துணைவி என்ற ஒரு பொருட் பன்மொழியைப் பிங்கல நிகண்டு எடுத்துரைக்கின்றது.[38]

1.8. சேடி, சகி

வடமொழித் தாக்கத்தின் விளைவாக வழக்கில் வந்தவை சேடி, சகி என்ற சொல்லாட்சிகள். 'சகி' என்பது கூட நிற்பவள்' என்ற பொருளும் 'சேடி'

என்பது அனுப்பப்படுபவள் என்ற பொருளும் தரும். இச்சொற்களைப் பிங்கல நிகண்டும் நம்பியகப்பொருளும் சுட்டுகிறது.[39] 'பாலும் கசந்ததடி சகியே' என்று பாரதியாரும் பாடியுள்ளார்.[40]

2. தோழியின் அழகு

2.0. சங்க இலக்கியத்தில் தோழியின் அறிவுச்சிறப்பும், செயல் திறனும் காட்டப்படும் அளவிற்கு அவளுடைய அழகுச் சிறப்பு அதிகமாகக் காட்டப் பெறவில்லை. அவளைப் பற்றிய வருணனைப் பகுதிகளும் இடம் பெறவில்லை. தலைவனும் தலைவியும் விளிக்கின்ற நிலையிலேயே அவளழகு ~~அதிகமாகக்~~ காட்டப் பெறுகிறது. தலைவி விளிக்கும் நிலையில், ஆயிழை,[41] ஆயிழாய்,[42] சேயிழை,[43] வயங்கிழை,[44] வயங்கிழாய்,[45] புனையிழை,[46] புனையிழாய்,[47] விளங்கிழாய்,[48] ஒளியிழாய்,[49] சுடரிழாய்,[50] சுடர்த்தொடீ[51] என அணிகலன்களணிந்த தோழியின் உருவச் சிறப்பு விளக்கப்படுகிறது.

2.1. கொடி மின்னல்களிடையே பிறந்தோடும் மேகங்கள் போல வகிரும், ஐந்து பகுதியாக உடைய நெறித்த மயிரில் தாழம்பூ இடையிட்டு முடித்து பூமாலையணிந்த கூந்தலழகும் சிறப்பாகப் புனையப்படுகிறது.[52] பிறைபுரை ஏர்நுதல்,[53] நன்னுதல்,[54] என அவள் நுதலழகும், நெடுஞ்சுனையிடத்துள்ள நீலம்போல் கண்ணழகும்[55] இன்னகை இலங்கெயிற்றுத் துவர் வாயழகும்[56] சிறப்புற விளக்கப்பட்டுள்ளது. தோழியின் சிறப்புக்கே அடிப்படையான பேச்சழகு, சின்மொழி,[57] வடுநீங்கு கிளவி[58] இன்தீங்கிளவி[59] தேமொழி[60] எனவும், மென்மைத் தன்மை, மெல்லியல்[61] எனவும் விளிநிலையிலேயே புலப்படுத்தப்படுகிறது. தலைவியின் கூற்று நிலையில்தான் அவளுடைய அழகு காட்டப்படுகிறது. தோழியின் அழகு புனையிழை,[62] அவிர்முலை ஆயிழை,[63] ஒண்குழை[64] ஒண்டொடி[65] என விளிநிலையிலும் பணைத்தோள் நன்னுதல் அரிவை[66] எனத் தோழியைச் சுட்டித் தலைவன் தலைவியிடம் கூறும் நிலையிலும்தோழியின் அழகு சிறப்பிக்கப்படுகிறது. மற்ற நூல்களையும் (விட) கலித்தொகையிலேயேதான் அவள் அழகு அதிகமாகச் சுட்டப்படுவது நோக்கற்குரியது.

## 2.2. பண்பு விளக்கக் கண்ணாடி

2.2.1. தலைவன் தலைவியைக் கட்டுவிக்கும் பாலமாக அன்றித் தலைவன் தலைவியின் பண்பு விளக்கக் கண்ணாடியாகவும் தோழி விளங்குகிறாள். தலைவனின் பண்பு, அழகு, செயல், வீரம், அன்பு ஆகியவற்றையெல்லாம் அவள் பெருமிதத்துடன் தலைவிக்குக் கூறுகிறாள். தலைவியின் அழகு, பண்பு, சிறப்பு, வேதனை ஆகியவற்றைத் தலைவனுக்குத் தெரிவிப்பவளும் அவளே. இவ்வாறு நடுநிலையில் இருந்து தலைவன் தலைவி ஆகிய இருவரின் பண்பு நலனை அனைவருக்கும் அறிவிக்கும் அறிவிப்பாளராகத் தோழி விளங்குகிறாள்.

2.2.2. தோழி, தலைவியின் அழகையும், பண்பையும் வாய்ப்பு நேரும்போதெல்லாம் (அறிவிக்கிறாள்,) தலைவனிடம் தலைவியின் அழகும் சிறப்பும் கூறிச் செயல்படுத்துகிறாள். அழகும் சிறப்பும் மிக்க இத்தகையாளை வரைக என வரைவு தூண்டுகிறாள். தலைவியின் அழகு கூறி அதை அழியவிடலாமா எனத் தாயின் உள்ளத்தில் இரக்க உணர்வை உடன் ஏற்படுத்தவும் தலைவியை அழைத்துச் செல்லத் தலைவனைத் தூண்டவும், தலைவியின் அழகும் சிறப்பும் அவளால் கூறப்படுகிறது. வரைவு மலிதலில் தலைவியின் அன்பம் கூறி இனி இன்புறுக என வாழ்த்தும் நிலை காணப்படுகிறது.

செலவுழுங்குவித்தலில் இத்தகையாளை நீங்கலாமா எனத் தலைவனை வினவவும், ஆற்றுவித்தலில் இத்தகைய நலன் அழியும்படி நீ அழலாமா எனத் தலைவியை ஆற்றுவிக்கவும், வாயின் மறுத்தலில் தலைவியின் அழகு அழியப் பரத்தமை மேற்கொண்ட தலைவன் கொடுமை சுட்டவும், வாயில் நேர்தலில் தலைவி அழகும் சிறப்பும் கூறி இவை அழியாமை பொருட்டே தலைவனை ஏற்றுக் கொள்வதைக் குறிக்கவும், வினை முடித்து வந்தவிடத்து இத்தகையாள் மகிழ வந்தவனே என வாழ்த்தவும், தலைவியின் அழகைத் தோழி விரித்துரைக்கிறாள்.

தலைவியின் கற்புடைமை, தலைவனைச் சார்ந்திருக்கும் தன்மை, விருந்தோம்பற் சிறப்பு ஆகிய பண்பு நலன்களும் அவனால் சுட்டப்படுகின்றன.

2.2.4. தலைவியின் துன்ப உணர்வையும் அனைவருக்கும் புலப்படுத்துபவள் தோழியே. தலைவியின் துன்பம் கூறித் தலைவனின் உள்ளத்தில் இரக்க உணர்வைத் தூண்டல், வரைவு கடாதலில் மிகுதியாக அமைகிறது. தாயின் உள்ளத்தில் இரக்க-வுணர்வைத் தூண்டும் முறையில் அறத்தொடு நிற்றலில் துன்ப உணர்வு காட்டப்படுகிறது. தலைவியின் துன்பம் நீங்க உடன்போக்கு தூண்டப்படுகிறது. வரைவு மலிதலில் தலைவியின் துன்பம் கூறி இனி இன்புறுக என வாழ்த்தும் நிலை அமைகிறது. தலைவனைச் செலவழுங்குவிக்கத் தலைவியின் துன்பம் துணையாகிறது. ஆற்றுவித்தலில் தலைவியின் துன்பம் நீங்கி நெஞ்சம் ஆற வழிவகுக்கப்படுகிறது. தலைவியின் துன்பம் கூறி வாயில் மறுக்கப்படுகிறது. வாயில் நேர்தலுக்கும் துன்பம் காரணமாக்கப்படுகிறது. தலைவன் வினைமுடித்து வந்தவிடத்து நின்னால் தலைவியின் துன்பம் நீங்கும் என மகிழ்ந்து கூறவும் தலைவி உற்ற அகப்புற நலனழிவைத் தோழி விரிவாகவே கூறுகிறாள்.

2.2.5. தலைவனின் அன்பு, சிறப்பு, அழகு, செயல், வேதனை, பணிவு ஆகிய பண்பு நலன்களைக் கூறித் தோழி, தலைவியிடம் குறை நயக்கிறாள். அவனுடைய அன்பும், வாய்மையும் கூறி வரைவு வேண்டுகிறாள். அஞ்சாமை கூறிவரவு விலக்கித் தலைவனை வரைவு தூண்டுகிறாள். தலைவனின் பேரழகு, செயல், பெருமை, அன்புடைமை ஆகியவற்றைத் தாய்க்குக் கூறிஅறத்தொடு நிற்கிறாள். உடன்போக்கில் தலைவனின் அன்பு, வாய்மை, தலைவி தலைவனையேசார்ந்துள்ள தன்மை, ஆகியவற்றை எடுத்துக்கூறித்தலைவியை ஓம்படுத்துகிறாள். வரைவு மலிதலில் தலைவன் சிறப்பும், பண்பும், அன்பும் கூறித் தலைவியை மகிழ்விக்கிறாள். தலைவனின் அன்பு, உயர்ந்த கொள்கை, ஆள்வினை உடைமை ஆகிய பண்புகளைக் கூறிச் செலவழுங்குவிக்க முனைகிறாள். தலைவனின் அன்பு, உயர்ந்த நோக்கம், பண்புடைமை ஆகியவற்றைக் கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள். தலைவன் வினைமுடித்து வந்த விடத்து அவன் பண்புடைமை கூறி மகிழ்கிறாள்; தலைவியை மகிழ்விக்கிறாள். வாயில் மறுத்தலிலும் நேர்தலிலும் தலைவனின் பரத்தமைக் கொடுமையை வன்மையாகவும் மென்மையாகவும் கடிந்து தலைவியின் பரத்தமை நீங்க வழி வகுக்கிறாள்.

3. தோழி அடிமையல்லள்

3.0. தொல்காப்பியர் காலத்தில் தலைமக்கள், வினைவலர், அடியோர் என்ற முப்பிரிவு சமுதாயத்தில் நிலவி வந்தது.[67] இந்நிலை சிலப்பதிகாரக் காலத்திலும் நடைமுறையில் இருந்தது.[68]

3.1. அடியோர் மிகத் தாழ்ந்த நிலையில், உரிமை அற்ற நிலையில், புலவரால் பாடப்படும் சிறப்பு இல்லா நிலையில் உறைந்தனர். வினைவலர் என்போர் அவரினும் சிறிது உயர் நிலை பெற்று குற்றேவல் செய்வோராய் இருந்தனர். இவ்விருவருக்கும் அன்பின் ஐந்திணை உரியதாகக் கூறப்படவில்லை.

3.2. தலைவி தலைவன் களவையும் கற்பையும் பாடிய புலவர்கள் தோழியின் மணவாழ்வைப் பற்றிப் பாடாதிருக்கவே, அவள் அடிமையாயிருக்கக் கூடும் என்ற ஐயம் ஏற்படலாம். அன்றியும் பிறமொழிச் சமுதாயத்தில் அடிமைகளே தோழி நிலையில் காணப்படுவதால், தமிழிலக்கியத் தோழியும் அடிமையோ என்ற ஐயம் எழலாம்.

3.3. அகப்பொருட் புலவர்கள் தலைவியின் வாழ்வைப் பற்றிப் பாடியது போலத் தோழியின் களவையும் கற்பையும் உடன் அமைத்துப் பாடியிருந்தால் அது ஒரு நாடக மேடையில் ஒரே சமயத்தில் இரு நாடகங்களை நடத்துவது போன்றதாக அமையும். அவளைப் பற்றி விரித்துரைக்கப்புகின் அது அளவிறந்து செல்லும். அன்றியும்மற்றது விரித்தல் என்ற குற்றத்தின்பாற்படும். மேலும் புலவரின் நோக்கம், தலைவியின் வாழ்முறையை விளக்குவதேயன்றித் தோழியின் வாழ்வை விளக்குவதன்று. எனவே, பாவலர்கள் தலைவி ஒருத்தியின் மன்றலைப்பற்றி மட்டும் பாடினர். அதைச்செம்மைப்படுத்தும் துணை உறுப்பாகத் தோழியை அமைத்தனர். பிறமொழிக் கண்ணோட்டத்தில் தமிழ்த் தோழியை அடிமையாகப் பார்ப்பது மரபு வழுவாக அமையும்.

3.4. தோழி எல்லா வகையிலும், தலைவிக்குச் சமமாகவே விளங்குகிறள். ~~சொல்லப் போனால்~~, தலைவியினும் சிறப்புடையவளாய், அறிவும்

ஆற்றலும் கொண்டிலங்குகிறாள். அவளைத் 'தாங்கருஞ் சிறப்பின் தோழி'[69] என்று தொல்காப்பியரே உயர்த்திக் கூறுகிறார். அவள் தலைவியின் உயிர்த்தோழியாக விளங்குகிறாள். தலைவனுக்கும் வழிகாட்டியாகத் திகழ்கிறாள். தலைவனும் பெரும்பாலும் தோழியிடமே பேசுகிறான். தலைவனின் பாங்கனைவிட அவள் உயர்நிலையிலிருக்கிறாள். எனவே அவளை அடிமையெனல் பொருந்தாது.

3.5. தோழி தலைவனுக்கு இரவுக்குறியையும் பகற்குறியையும் மறுக்கிறாள். அவனை வரைவு கடாவுகிறாள். அவனுடன் சரிநிகர் சமானமாகப் பல இடத்தும் பேசுகிறாள். தலைவனை ஏற்கத் தலைவி மறுத்தபோது அவள் தலைவியையே கடிந்துரைக்கிறாள்.[70] ஏவும் பணியை அடிதொழுது செய்யும் அடிமையாகத் தோழி இருந்திருந்தால் உரிமைமிக்க இத்தகு செயல்களை அவளால் செய்யவே இயலாது. தலைவியின் இசைவைப் பெற்ற பின்பே தோழி அறத்தொடு நிற்பாள் என்பதால் மட்டுமே அவள் தாழ்ந்தவள் ஆகிவிடமாட்டாள். அது தலைவியின் வாழ்வுச் சிக்கல் என்பதால் அவளை முழுமையாகக் கலந்து கொண்டு பின்பழிக்கு இடமில்லாதபடி அறத்தொடு நிற்க வேண்டியது தோழியின் உலகியல் கடமையாகிறது.

3.6. அடிமையாக இருப்பவள் தோழமை கொண்டு பேச முடியாது. தோழி என்ற சொல்லின் பொருளே அவள் அடிமையல்லள் என்பதைத் தெளிவாகப் புலப்படுத்துகிறது.[71]

3.7. தோழி அடியோர் என்ற நிலைக்கு உரியவள் அல்லள். ஏனெனில் அவள் தானே ஆய்பவள். தலைவிக்கு உசாத் துணையாகும் உயர்நிலையும் இருப்பவள்.[72] அன்னையென்று போற்றப்படும் நன்னிலை உடையவள்.[73] அவள் தலைவியுடன் தன்னையும் உளப்படுத்தி 'எம்' என்று கூறும் அளவுக்கு உரிமை உடையவள்[74] தலைவியின் வாழ்வில் துயரம் உறுங்கால் தானும் வருந்துபவள்[75] அவளுடைய 'பேச்சைப் புரைதீர் கிளவி'[76] என்று தொல்காப்பியரே பெருமையுடன் கூறுகிறார்.

3.8. தோழியின் உரிமையே அவள் அடிமையல்லள் என்பதற்குப் போதிய சான்றும்.

(க) தலைவிதோழி இருவருமே தோழி, அன்னை, அன்னாய் என ஒருவரை ஒருவர் அழைத்துக் கொள்ளுதல்.[77]

(ங) அவர்கள் இருவருமே தலைவனை 'நம் காதலர்' எனவும் 'நம் களவு' எனவும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மையில் பேசிக் கொள்ளுதல்.[78]

(ச) தலைவியின் செயல்களைத் தன் செயல்களாகத் தலைவியிடம் கூறுதல்.[79]

(ஞ) குறியிடம் கூறுதல், உடன்போக்கு, செலவழுங்குவித்தல், வாயில்மறுத்தல் முதலிய இடங்களில் தோழி தானுகவே செயலாற்றும் உரிமை;

(ட) தலைவியிடம் கேளாமலே தலைவனுக்குக் குறை நேர்தல்.[80]

(ண) தலைவியிடத்தும் தலைவனைக் கொடியன்,[81] வஞ்சகன்[82] அறனிலாளன்[83] என நேராகவே பழித்தல்.

(த) தலைவனை நேருக்கு நேராக 'மகனல்லை'[84] 'நாணிலை'[85] 'கொடியை'[86] 'மாதுல் மகன்'[87] 'மடவை மன்ற'[88] எனக் கடிதல்.

(ந) தலைவியையும் 'நல்ல மடவைமன்ற'[89] எனக் கடிதல்.

(ப) தலைவனையே அவன் இல்லத்திற்குள்ளும் சேரிக்குள்ளும் தெருவிற்குள்ளும் வரவிடாமல் தடுத்தல்.

(ம) தலைவனையே செட்படுத்தும் நிலையிலும், பகல் இரவுக் குறிகளிலும் தோழி விரும்பியவண்ணம் தலைக்கழித்தல்.

(ய) தாயை அறனில் அன்னை எனப் பழித்தல்.[90]

(ர) தலைவனின் நண்பரான பாணனையும் விறலியையும் வாயில் மறுப்பதோடு கடியவும் செய்தல்.[91]

இதிலிருந்து தோழியின் வரம்பற்ற உரிமையும் அடிமையற்ற நிலையும் தெரிய வருகிறது.

## 4. தோழி ஒரு நாடகப் பாத்திரம்

4.0. அக இலக்கியம் நாடகப் போக்கினது. புறப்பொருள் பாடல் நடந்ததை நடந்தவாறே கூறுவது. எனவே அது வரலாற்றுக்குப் பெரிதும் துணை நிற்கிறது. அறமும் பொருளும் பற்றிய உலகியல் நிகழ்ச்சிகளை வரலாற்றுப் போக்கில் தொடர்பாகக் கூற முடியும். ஆனால் நெஞ்சம் கலந்து இன்புறும் அகவொழுக்கத்தை அவ்வாறு கூற இயலாது. பொதுவாக நடந்த ஒன்றை அப்படியே எடுத்துரைப்பது சுவை பயக்காது. எனவேஅப்படிக் கூறப்படுவன இலக்கியம் ஆகா.

4.1. சங்கப்பாடல்களில் அகப்பொருள் பற்றியன, சுவைபட வருவனவற்றை எல்லாம் கூறுகின்றன.[92] அதனால் அவை உலகியல் வழக்கைத் தழுவியும் குறிக்கோள் தன்மை இணைந்தும் இருக்கின்றன.

4.2. அகப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள் கூறப்படுதலின் அவை நாடக வழக்கைக்காட்டிப், பாட்டின் கருத்தும் பொருளும் வாழ்க்கையினின்றும் கொள்ளப்படுதலின், உலக வழக்கையும் சேர்த்து வழங்குகிறது.[93] இவ்வாறு அவை தொல்காப்பியர் கூறிய நாடக வழக்கையும் உலக வழக்கையும் போற்றிக் கொள்கின்றன.

4.3. சங்கஇலக்கிய அகப்பாடல்கள் பெரும்பாலும் தலைவியின் களவு வாழ்வைப் படம்பிடித்துக் காட்டுவதற்காகவே பாடப்பட்டதாகத் தெரிகிறது. அதனால்தான் தலைவன் தலைவி பிறப்பிலிருந்து நிகழ்ச்சி ஆரம்பமாகாமல் தலைவியின் காதல் வாழ்விலிருந்து தொடங்குகிறது. காதல் வாழ்வில் இடையூறாக இருக்கும் செவிலியே மாறுபட்ட பாத்திரமாகிறாள். பகல் இரவுக் குறியிடையீடுகள் தலைவியின் பிரிவு, தாய்க்காப்பு, நொதுமலர் வரைவு ஆகியவை திருப்பு முனைகளா-யமைந்து களவு நாடகத்தை விறுவிறுப்புடையதாக்குகிறது. தலைவன் தலைவியின் களவு வாழ்விற்காகவே தோழி செவிலி நற்றாய் பாங்கன் ஆகியோர் படைக்கப் படுகின்றனர்.

4.4. சங்கப் புலவர்கள் தலைவன் தலைவியின் காதல் வாழ்வையே மையப் முக்கியப் பொருளாகக் கொண்டதால் தலைவியின் நற்றாய், தந்தை, தமர், தலைவனின் தாய் தந்தையர் முதலியோரைப் பற்றிய குறிப்புகளைத் தேவையில்லை என நினைத்தனர். தோழியும் செவிலியும் தலைவன் தலைவியரின் காதலுக்கு முறையே துணையாகவும், தடையாகவும் இருக்கும் குறிப்பே நமக்குக் கிடைக்கிறது அவர்களைப் பற்றியும் அதிகமான செய்திகள் கிடைக்கவில்லை.

4.5. அகத்திணைச் சங்கப்பாடல்கள் ஒற்றைக் காட்சி நாடகமாக ( One scene Play ) அல்லது ஒரு கூற்று நாடகமாக (Dramatic monologue) அமைந்திருக்கின்றன.[94] ஆனால் கலித்தொகையில் பல பாடல்கள் ஓரங்க நாடகமாக ( One act play ) விளங்குகின்றன. முல்லைக்கலியில் ஏறு தழுவல் பாடல்கள் நாடகப் போக்கில் அமைந்துள்ளன.[95]

4.6. அகத்திணையில் வருபவர்கள் கற்பனை மாந்தர்களே. அவர்களின் பெயர்கள் குறிக்கப்படுவதில்லை. பெயர் சுட்டப்படின் அது அக இலக்கியமாகாமல் வாழ்க்கை வரலாறாக அமைந்து விடும். அன்றியும் அந்நிகழ்ச்சிகளின் அடிப்படையில் பெயர் குறிப்பிடப்பட்டவருக்கும் சமுதாயத்தில் சிக்கல்கள் தோன்றக் கூடும். மேலும் அகப்பொருள் இலக்கியம், குடும்ப இலக்கியமாகும். குடும்பத்தில் முறை சொல்லிக் குறிப்பிடுவார்களே தவிர பெயர் சுட்டிக் கூறுவதில்லை.

4.7. நாடகத்தில் ஐந்து அங்கங்கள் உண்டு. அகத்திணை இலக்கியத்தில் இயற்கைப் புணர்ச்சியே தோற்றம். பாங்கி மதி உடன்பாடு, வளர்ச்சி; ~~வரைவு கடாதல்.~~ பகற்குறியும்இரவுக்குறியும்முதிர்வு; அவற்றின் இடையீடு, வரைவு கடாதல் அறத்தொடு நிற்றல், உடன்போக்குமுதலியன திருப்பம்; வரைதல் முடிவாகும். இதில் முதல் அங்கம் முடிந்த பிறகே தோழி வருகிறாள். வளர்ச்சி என்றும் அங்கத்திலிருந்து, ~~வளர்ச்சி~~ முடிவு அங்கம் வரை அவளே பெரியும் நாடகப் பாங்கு ஏற்கிறாள்.

4.8. நாடகத்தின் முத்திறமாக, இடம், காலம், தொழில் பொருத்தம் கூறப்படுகிறது. அகப்பாடல்களில் இவை உரியவாறு இடம் பெற்றிருக்கின்றன. திணையமைதி நாடக மேடையின் பின்னணியாக அமைகின்றது.

4.9. நாடகத்தின் தலைமக்களாகத் தலைவனும் தலைவியும் வர, முக்கியத் துணைப் பாத்திரமாகத் தோழி, உலவுகிறாள்.

4.10. உரையாடல், நாடகத்தின் இன்றியமையாத கூறாகும். ஆனால் அகப்பாடல்கள் யாவும் நாடகப் பாத்திரங்களின் தனிக் கூற்றுகளாக அமைந்தவை. ஆயினும் கலித்தொகையில் தனிக்கூற்று மட்டுமன்றி, உரையாடல்களும் கலந்துள்ளன. தோழியின் கூற்றுகள், உணர்ச்சி நிலைகளை நாடகத்திற்கு வேண்டிய மெய்ப்பாட்டு நிலைகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அந்தக் கூற்றுகள் உலக வாழ்க்கையில் உள்ளவர்கள்பேசுவது போலவே அமைந்துள்ளன. அகப்பாட்டில் பெரும்பாலும் ஒருவர் கூற்று மட்டுமே நிகழ்வதாக உள்ளது. அந்தக் கூற்று படிப்பவரையும் முன்நிறுத்திக் கூறுவதுபோல நாடகப் பாங்கில் உள்ளது. பெண்டிர் நயமாகப் பேசுவதில் வல்லவர்கள். எனவே தோழியின் கூற்றுகளில் உள்ளுறையும் இறைச்சியும் ஆங்காங்கே காணப்படுகின்றன. இந்த நாடக வகைக் கூற்றுக்குச் சிறப்பளித்திருப்ப-தால், சங்ககால அக இலக்கியத்தில் பாட்டின் முடிவில் துறையைக் கூறாமல் இன்னாருக்கு இன்னார் கூறியது என்றே சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.[96] கூற்று முறையில் குறளில் காமத்துப்பால் அமைந்திருப்பதும் அதன் இன்றியமையாமையையும் தமிழ்மரபின் சிறப்பையும் காட்டுவதாம்.[97]

4.11. சிறைப்புறமாகத் தோழி தலைவியிடம் பேசுவது நாடகப் பாங்கைத் தெளிவாகப் புலப்படுத்துகிறது. இருவர் ஓரிடத்தில் பேசுவதை மற்றொருவன் அப்பாலிருந்து கேட்பது நாடக உத்தியேயாகும். சிறைப்புறக் கூற்றுகள் தலைவிக்குத் தராமல் தோழிக்கே பெரும்பாலும் தந்திருப்பது, அவளது நடிப்பாற்றலைக் காட்டுவதாக உள்ளது. நாடகத்தில் வரும் தனிமொழியும் தோழியிடத்தில் அமைந்திருக்கிறது.

4.12. கூற்றை வெளியிட்டு அக்கூற்று தோன்றிய சூழலை உய்த்துணர வைக்கும் பாங்காகிய திறம்தான் நாடக மறைபொருளையும் (Suspense) வேட்கை வளர்த்தலையும் (Tempo) அளிக்கிறது.[98]

4.13. தோழி முக்கியப் பங்கேற்ற குறிஞ்சிப்பாட்டை ஒரு நாடகமாகவே, மாற்றி அமைக்கலாம்.[99] அதில் வரும் தோழியின் கூற்றில் நாடகத்திற்குரிய பாங்குகள் அழகாகப் பொருந்தியுள்ளன. தோழியின் கூற்றில் காணப்படும் பல்வேறு சுவைகளும் அவள் நாடகப் பாத்திரமே என்பதைத் தெரிவிக்கின்றன.

4.14. அக்காலப் புலவர்கள் தலைவியின் காதல் வெற்றியையே விரும்பினர். அமைக்கால நாடகங்கள் போன்று இன்பியலைத் தவிர துன்பியலை விரும்பவில்லை. காதல் வாழ்வில், தலைவிக்கு இரவுக்குறி எத்தனையும் தலைவனின் வரைவிடை வைத்த பிரிவிலும், திருமணம் நிகழ்ந்திருக்கலாம். தலைவன் தலைவியைக் காதலித்துப் பின் துறந்திருக்கலாம். தலைவிக்கு வேற்று வரைவு நிகழ்ந்திருக்கலாம். உடன்போக்கில் யாரேனும் ஒருவர் இறந்திருக்கலாம். கற்பிலும் பொருள்வயிற் பிரிவில் தலைவனின் சாக்காடு இடம் பெற்றிருக்கலாம். பரத்தையிடத்துத் தலைவன் நிரந்தரமாகத் தங்கியிருக்கலாம். ஆயினும் புலவர்கள் அதை விடுத்துக் காதல் வெற்றியையே நாடகப் போக்கில் பாடியுள்ளனர்.

4.15. ஆண் பெண் மாந்தர் காதலிப்பது இன்றும் நடைபெறும் நிகழ்ச்சியே. பெண் ஒருத்தி அக்காதலுக்குத் துணை நிற்பதும் இயல்பானதே. எனவே சங்ககாலப் புலவர்கள், காதல் உணர்வெனும் அடித்தளத்தில், கற்பனை மாந்தர், நிகழ்ச்சிகளை வைத்து நாடகப் போக்கில் பாடல்கள் பாடினர்.

## 5. புலவர் நெஞ்சின் வாயே தோழி

5.0. ஓர் ஆசிரியர் தன் கருத்தைக் கட்டுரையில் நேரடியாகக் கூறுவார். ஆனால் அவரே கதையிலும் காப்பியத்திலும், நாடகத்திலும் அவ்வாறு நேர்முகமாகப் பேசுவதில்லை. அவர்தன் கருத்தை ஒரு பாத்திரத்தின் மூலமாகவே அறிவித்தல் வேண்டும். எனவேதான், சார்லஸ் டிக்கன்ஸ், டேவிட் காப்பர்பீல்டு என்ற புதினத்தில் தன் வாழ்வையே பிரதிபலித்தார் என்று கூறப்படுகிறது. டாக்டர் மு.வ. அவர்களும் தன் கருத்துகளை அறவாழி என்ற பாத்திரத்தின் மூலமாகப்

புதினங்களில் வெளிப்படுத்தினர். இக்காலத் திறனாய்வாளர்களும் இக்கருத்தை ஒப்புக் கொள்கின்றனர்.[100]

5.1. புலவர்கள்புறத்தில் தாங்கள் விரும்பிய அரசர்களையும் புலவர்களையும் போற்றினர். அதோடு அவர்களுடைய அவா அடங்கவில்லை. அதனால் அகத்திலும் புரவலர்களின் புகழ்பாட விரும்பினர். அகத்தில் புறம் இடம்பெறக் காரணங்கள். (1) தம்மைப் போற்றியபுரவலர்களின் புகழைத் தகுந்த இடத்தில் நிலைநாட்ட வேண்டும் என்ற நன்றி உள்ளம்.[101] (2) தாங்கள் பிறந்த மண்ணின் பெருமையையும் வளப்பத்தையும் கூற விரும்பும் விருப்பம்.[102] (3) சங்கம் வைத்துத் தமிழ் வளர்க்கும் மதுரைமா நகரின் சிறப்பையும் பாண்டியர் பெருமையையும் நினைவு கூர்தல்.[103] (4) தங்கள் காலத்தில் நடந்த உள்ளம் கவர்ந்த வரலாற்று நிகழ்ச்சிகளைப் பதிவு செய்தல்[104] என இவ்வாறு புலவர்கள் வரலாற்றுக் கருகளையெல்லாம் தகுந்த இடங்களில் தக்க உறுப்பினர்மூலம் பாடியமை பொருத்தமுடைத்தே.

5.2. சங்ககாலப் புலவர்கள், புறப்பொருள் இலக்கியத்தில் தாமே வெளிப்படையாகப் பேசினும், அகப்பொருள் இலக்கியத்தில் ஒரு பாத்திரத்தின் மூலமாகவே தம் கருத்துகளை வெளிப்படுத்தினர். அதற்கு அவர்கள் தோழிப் படைப்பையே தகுந்த பாத்திரமாகக் கொண்டனர்.[105] அதற்குக் காரணங்கள் பின் வருவன.

(க) அகப்பொருள் இலக்கியப் பாத்திரங்களில் சிறுவயதிலேயே முதறிவு பெற்றவள் தோழி.

(ங) அவள் தலைவியோடு இரண்டறக் கலந்து அவள் உணர்ந்தவாறே, தானும் உணர்ந்து 'எம் காதலர்' என்று தலைவனைச் சுட்டும் அளவிற்குப் பெரும் உரிமை கொண்டவள்.

(ச) ஆயினும் தலைவந்தலைவி இருவரிடமிருந்தும் வேறுபட்டு நின்று இருவரையும் வேண்டியபோது கடிந்துரைக்கும் நடுநிலை நெஞ்சம் கொண்டவள்.

(ஞ) பாணன், அறிவர், கண்டோர் ஆகியோருடன் பழகி உலகியல் அறிவும் கைவரப் பெற்றவள்.

(ட) செவிலிக்கும் அவள் மூலமாக நற்றாய் முதலானோருக்கும் உண்மை உணர்த்தும் கடமை உணர்ச்சி மிக்கவள்.

(ண) தலைவி தலைவனின் களவு குறித்து ஊரவர் பேசும் புறஞ்சொற்களைச் செவிமடுத்து வரைவு முடுக்கும் திறமை கொண்டவள்.

(த) களவில் தலைவிக்குத் துணை நின்றது போலவே கற்பிலும் உடனிருந்து உதவி செய்து அவர்தம் வாழ்வின் நீங்காத் துணையாக விளங்குபவள்.

(ந) அவள் தன் நலனை நினைக்காமல், தன் இன்பத்திற்கு ஏங்காமல் தலைவி தலைவனின் ஆக்கத்திற்காகவே வாழ்நாள் முழுதும் பாடுபடும் தியாக உள்ளம் கொண்டவள்.

5.3. எனவே பரத்தையிடம் நட்பு கொண்ட தலைவனை நீக்கி, தோழியின் நலனைச் சிறிதும் நாடாது தன்னையே கவனித்துக் கொள்ளும் தலைவியை விலக்கி, ஓய்வு நிலையுற்ற செவிலியைத் தவிர்த்து, அதிக அக்கறை கொள்ளாத நற்றாயை அகற்றி, எப்போதோ எட்டிப்பார்க்கும் கண்டோரைத் தவிர்த்து நன்மைக்குத் துணை போகாத பாணனைக் கடந்து, புலவரின் நெஞ்சம் தோழிப் படைப்பையே தன்வாயாகக் கொள்வதில் மகிழ்ச்சி பெறுகிறது. எனவே தோழி பேசும்போது அதனூடே பாடும் புலவரின்குரலும் தெளிவாகக் கேட்கிறது. அதனால்தான் தலைவன் தலைவி கூற்றுப் பாடல்களை விடத் தோழியின் கூற்றுப் பாடல்களே அதிகமாக இருக்கின்றன. அகத்திணை மரபின் அணிவேராகத் திகழும் தோழியின் கூற்றாகக் குறிஞ்சிப் பாட்டை இயற்றி, அதன்மூலம் வேற்று மொழி அரசனுக்குத் தன் கருத்தைத் தெளிவாக விளக்கினார் கபிலர்.

5.4. புலவர்கள் அகத்துறையில் வரலாற்றுக் கூறுகளைத் தோழி வாயிலாகவே சுட்டிக் காட்டினர். தாங்கள் சொல்லவந்த நீதிக் கருத்துகளையும், வாழ்க்கை உண்மைகளையும், தங்கள் வாழ்வில் தாங்கள் பெற்ற படிப்பினைகளையும் தோழி கூற்றின் வழியாகவே பொறித்துள்ளனர். கவிதையிலும் கலையிலும் தோய்ந்த புலவர் உள்ளம் பொருளைப் புன்மையாக மதித்தல் இயல்பே. அதனால் அதைப் பிணியாக உருவகித்து 'காமர் பொருட்பிணி'[106] என்னும்

பொருட்பிணி[107] எனப் பொருளின் புன்மை கூறினர். இப்பொருளால் பிணிப்புண்ட தலைவனைச் செலவழுங்கக் கூறுகிறாள் தோழி. பொருளின் புன்மை கூறியவள் அதன் தன்மைகளையும் விரிவாகவே கூறுகிறாள். பழவினை காரணமாகக் கிழவர், இன்னோர் என்னாது பெயரும் தன்மையையும்[108] இம்மையும் மறுமையும் பகையாகும் தன்மையையும், இன்னுயிர் தராத அதன் தன்மையையும்[109] நரம்பறாஉம் யாழினும் திருவினும் நிலையில்லாத் தன்மையையும்[110] கூறுகிறாள். பொருளின் நிலையற்ற தன்மையை உணர்த்தியவர்கள் இளமையும் காமமும் வாழ்நாளும் எங்கனை நிழலிற் கழியும் இவ்வுலகத்தின் தன்மையையும் அதனால் உரிய காலத்தில் அதைத் துய்க்க வேண்டும் என்ற தங்கள் கருத்தையும் தோழியின் வாயிலாகவே செலவழுங்குவித்தல் துறையில் உணர்த்துகின்றனர்.[111] வறுமையில் வாடினும் உள்ளம் ஒன்றிய வாழ்வைப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதையும், மகளிர்க்கு ஆடவர் உயிராதல் வேண்டும் என்பதையும் உணர்த்தியுள்ளனர்.[112] உயர்ந்த உள்ளத்தினராகிய புலவர்கள் தம் உயர்ந்த உள்ளத்தையும் தோழியின் வாயிலாகவே படம் பிடித்துக் காட்டுகின்றனர். இவ்வுயர்ந்த உள்ளம் காரணமாகவே தலைவன் பொருள்வயிற் பிரிந்ததாகக் கூறித் தோழி தலைவியை ஆற்றுவிக்கச் செய்கின்றனர்.[113] வரைவு கடாதல் துறையிலும் சான்றோர் தன்மை கூறித் தலைவனிடம் வரைவு வேண்டுகிறாள் தோழி.[114] உலகத்து இயற்கை கூறிக் களவு வாழ்வையே விரும்பும் தலைவனை இடித்துரைக்கிறாள்.[115]

> "உண்கடன் வழிமொழிந் திரந்துங்கால் முகனும்
> கொண்டது கொடுக்குங்கால் முகனும் வேறாதல்
> பண்டுமிவ் வுலகத் தியற்கை"

என என்றும் நிலைமாறு உலகத் தன்மையைப் படம் பிடித்துக் காட்டுகிறாள்.[118] தன்னிடம் களவை மறைக்கும் தலைவியையும், ஆராய்ந்து நட்பு கொள்ள வேண்டுமே தவிர நட்பு கொண்ட பிறகு ஆராயக் கூடாது எனக் கடிந்து கூறுகிறாள்.[117] வரைவு கடாதல் துறையில் தோழி தலைவனுக்கு அறிவுறுத்தும் நிலையில் புலவர்கள் தங்கள் அறிவுரைகளையே உலகுக்கு வழங்குகின்றனர்.

5.5. அறத்தொடு நிற்றலில், தலைவி தன் களவொழுக்கத்திற்காக வருந்தியதாகக் கூறும் தோழி கூற்று அடிகள்மிகச் சிறப்புடையன.

"முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை
நேர்வரும் குரைய கலங்கெடிற் புணரும்
சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்
மாசறக் கழீஇய வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார் தொன்மருங் கறிஞர்"

என்னும் குறிஞ்சிப்பாட்டு அடிகளில்[118] பெண்மையின் கற்பொழுக்கத்திற்கு அழியாத இலக்கணமே கூறப்படுகிறது. கபிலர் பெருமான் தமிழர்களின் தனிச்சிறப்பான விருந்தோம்பற் பண்பையும் தோழி கூற்றின் வாயிலாகவே பிரகத்தனுக்கும் மட்டுமன்றி அனைவருக்கும் உணர்த்துகிறார்.[119]

கலித்தொகையில்தான் புலவர்களின் அறிவுரைக் கருத்துகள் அதிகமாக இடம்பெறுகின்றன.

## 6. தோழியும் பாங்கனும்

6.0. தொல்காப்பியத்திலும், அகப்பொருள் பாடல்களிலும் 'தோழி' என்னும் சொல்லே இடம் பெறுகிறது. ஆனால் 'பாங்கி' என்னும் சொல் இடம் பெறவில்லை. தொல்காப்பியம், புறம், கலி ஆகிய நூல்களில் மட்டும் 'பாங்கன்' என்னும் சொல் இடம் பெறுகிறது. தோழன் என்னும் சொல் அருகி வழங்குகிறது.[120] அகப்பாடல்களில் குறுந்தொகையில் மட்டும் 'தோழன்' என்னும் சொல் ஆளப் பெறுகிறது.[121]

6.1. தோழியைவிற்குப் பாங்கன், தலைவன் தலைவி வாழ்வில் இடம் பெறவில்லை. தலைவியிடத்துப் பாங்கன் நேர்நின்று காணலும், முன்னின்று மொழிதலும் அகத்திணைக்கு ஒவ்வா. அவன் தலைவன் குறித்த இடத்திற்குச் சென்று தலைவியைக் காண்கிறான். ஆனால் அவளால் காணப்படான். பாங்கன்

தன்னைக் கண்டான் என்பதைக் கூட தலைவி அறியாள். நச்சினார்க்கினியரும்,[122] பேராசிரியரும்[123] பாங்கன் செயலை வரையறுக்கின்றனர்.

6.2. பாங்கற்கூட்டம் என்ற இலக்கணம் கூறும் நிலையில் தோழியைப் போன்ற பாங்கன் தலைவனுடன் தலைவியை இணைக்கவில்லை. தலைவன் தன் துயரத்தைப் பாங்கனிடம் கூறுவதாகவும் அவன் தலைவனைத் தேற்றுவதாகவும் காட்டப்படுகிறான்,[124] என்று அறிஞர் கூறுவர். 'ஐந்திணை இலக்கியத்துத் தலைவன் குறித்த இடத்துத் தலைவி வந்து நிற்கின்றாளா என்பதைப் பார்த்துச் சொல்லும் அறிவிப்பாளனாக அமைகிறான்.[125] தலைவனது புலம்பலைக் காது கொடுத்துக் கேட்கும் செவியனாய், மேலும் சிறிதும் இடையூறு செய்யாத தோழனாய்க் களவின் தொடக்கத்தே வந்து போய் விடுகிறான்.[126] இவன் தலைவியைக் கண்டு அவள் பேரழகிற்குச் சான்றிதழ் கொடுப்பவனாகவும் அமைகிறான்.

"பாங்கற் கூட்டம் பற்றி 27 பாடல்கள் உள. இவற்றுள் பாங்கன் கூற்றுப் வருவன இரண்டே. எஞ்சிய 25 பாடல்கள் தலைவன் கூற்றுவன என்பர் அறிஞர்.[127]

6.3. அகத்திணையில் வரும் பாங்கனும் தோழியும் தலைவன் தலைவி வாழ்வில் துணையாயிருந்தனர் என்பதில் மட்டுமே ஒற்றுமை உண்டு. தலைவன் தலைவி இருவருமே தன் அன்பு உணர்வை முறையே பாங்கனிடமும் தோழியிடமும் கூறுகின்றனர். ஆனால் அவர்களின் செயலாண்மையில் பல வேறுபாடுகள் காணப் படுகின்றன.

(க) பாங்கன் இல்லாமல் களவு வாழ்வு நடைபெறும். தோழி இல்லாமல் அது நிகழாது.

(ஙா) களவு வாழ்வில் தோழி வரும் வரை பாங்கன் இருக்கிறான். அவள் வந்தவுடன் பாங்கன் விடைபெறுகிறான்.

(ச) தலைவன் கூறிய பிறகே களவைப் பாங்கன் அறிகிறான். நாணமுடைய தலைவி கூறுநிலையில் நுண்ணறிவு வாய்ந்த தோழியே உய்த்துணர்கிறாள். தலைவி ஒத்துக் கொள்ளவும் வழி வகுக்கிறாள்.

(ஞ) தலைவன் தன் காதலைக் குறிப்புடன் பாங்கன் இடித்துரைக்கிறான். ஆனால் தோழி களவு அறிந்த நிலையில், மேற்கொண்டு தலைவனைச் சோதித்துக் களவு வாழ்வை வெற்றியில் முடிக்கிறாள்.

(ட) பாங்கன் இடையில் வந்து உடனே சென்று விடுகிறான். இடையில் வந்த தோழி இறுதி வரை இருக்கிறாள். தலைவன் தனியாகச் செல்லலாம் என்பதால் களவு வாழ்வில், தலைவன் தலைவி கூட்டத்தில், பாங்கன் இடைநிற்கும் நிலை இல்லை.

(ண) பாங்கன் தலைவன்இடையே உள்ள உறவு நெருக்கத்தைப் பற்றிய குறிப்புகள் இல்லை. தோழி, செவிலியின் மகளாக அறிவிக்கப்படுகிறாள். எனவே அவள் தலைவியினுடைய குடும்பத்தின் உறுப்பினராகவே ஏற்றுக் கொள்ளப் பட்டிருக்கிறாள்.

(த) பாங்கன் பக்கத்தில் நிற்கும் பார்வையாளனாகவே இருக்கிறான். தோழி தலைவியின் மகிழ்ச்சியிலும் வேதனையிலும் பெரும் பங்கு கொண்டவளாகவே செயல்படுகிறாள்.

(ந) தோழி எல்லோரிடமும் பேசுகிறாள். ஆனால் பாங்கனிடம் பேசுவதாக ஒரு பாடலும் கிடைக்கவில்லை. தோழியிற் கூட்டத்திற்கு முன் பாங்கன் நின்று விடுவதால் அவனைக் காணவும், பேசவும் தோழிக்கு வாய்ப்பு நேரிடவில்லை என்று ஓரளவு அமைதி காண முடிகிறது. ~~ஆனால்~~ திருமணத்திற்குப் பின் தோழி பாங்கனைப் பார்க்கும் நிலை வாய்த்திருக்கலாம். ஆனால் கற்பிலும் தோழி பாங்கனிடம்பேசாமை வியத்தற்குரியதே.

7. பரத்தையின் தோழி

7.0. சீர்சால் தலைவிக்குப் பேரறிவுத் தோழி வாய்த்திருக்கிறாள். அவளைப் பற்றியே இலக்கியம் போற்றிப் புகழ்கிறது. கலைத்திறமை சான்ற பரத்தைக்கு ஆடல்வல்ல விறலியும் தோழியாக அமைந்திருக்கிறாள்,[128] என்பதைத் தனிக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. ஐங்குறுநூற்றுத் தொகை ஆசிரியர் பரத்தைக்கும்

தோழி உண்டு என்று பொதுவாகக் குறிப்பிடுகிறார்.[129] ஆனால் தலைவியின் தோழி அளவுக்குப் பரத்தையின் தோழி இலக்கியத்தில் அதிக இடம் பெறவில்லை. அவளுடைய செயல்களில் அறப்பொலிவு இல்லாமலிருந்ததே அதற்குக் காரணமாகும். பரத்தையின் தோழி அருவரவினளாயினும் கேட்டற்கும் கூற்றிற்கும் உரியவள் என்று புலவரிச்சியை ஓரம்போகியார் தோற்றுவிக்கிறார் என்பார் வ.சுப. மாணிக்கம் அவர்கள்.[130]

7.1. சங்கப் பாடல்களில் விறலியாகிய தோழியின் கூற்றுப் பாடல் இல்லை. ஆயின் கூற்றினைக் கேட்பவளாக விறலி கூறப்படுகிறாள்.[131] ஆனால் பரத்தையது தோழியின் கூற்றாக ஐங்குறுநூற்றில் பாடல்கள் வருகின்றன.[132] இத்தோழி விறலியின் வேறானவள் போலும்.

7.2. தலைவி தன் தோழியுடன் தலைவனைப் பற்றிக் கலந்துரையாடுவதைப் போல, பரத்தையும் தன் தோழியுடன் உரையாடுகிறாள். தலைவன் அவளது வளையைப் பறிக்க, அதை அவனது மனைவிக்குஅறிவிப்பேன் என்று அவள் சொன்ன போது, அவன் நடுங்கிய நிலையைக் கண்டு நகுகிறாள்.[133] அவ்வாறே தலைவியின் ஊடலைத் தீர்த்தற் பொருட்டு, பரத்தையுடன், தான் நீர் விளையாடவில்லை என்று தலைவன் சூள் கூறித் தலைவியைத் தேற்றியதைக் கேள்விப்பட்ட பரத்தை, 'நேற்று நம்மொடு நீர்விளையாடியவர் யாரோ' என்றுதோழியையும் 'நம்' என்ற சொல்லில் உளப்படுத்தி எள்ளுகிறாள்.[134] தலைவி, தோழியுடன் 'நம்' என்று உரிமையில் பேசுவது போலவே, பரத்தையும் தன் தோழியிடம் பேசுகிறாள்.[135]

7.3. தலைவி தன் தோழியைத் 'தோழி' என விளித்தல் போலவே பரத்தையும் 'தோழி' எனத் தன் தோழியை விளிக்கிறாள்.[136] தோழி தலைவனிடம் அஞ்சாமல் பேசுவதைப் போல, பரத்தையின் தோழியும் 'நீ யார் மகளை' என அஞ்சாமல் பேசுகிறாள்.[137] தலைவியின் தோழி தன்னைத் தலைவியாகக் கூறிக் கொள்வது போலவே, பரத்தையின் தோழியும் 'எம்பற்றியோயே' எனத் தன்மைப் பன்மை நடையில் கூறுகிறாள்.[138]

7.4. தலைவியையும் தலைவனையும் தோழி சேர்த்து வைப்பதைப் போலக் கலைவல்ல பரத்தையையும் கலையுணர்வு மிக்க தலைவனையும் விறல்பட ஆடவல்ல விறலியாகிய தோழி இணைத்து வைக்கிறாள். அவள் தலைவனின் நலனில் அக்கறை கொண்டு அவனுக்காகத் தலைவியிடம் வாயில் வேண்டும்போது அவள் தோழியின் சீற்றத்திற்கு ஆட்படுகிறாள்.[139]

7.5. பரத்தையின் தோழிக்கும் தலைவியின் தோழிக்கும் தம் தலைவியின் நலம் நாடும் செயல்முறையில் ஒற்றுமை இருப்பினும், தலைவியின் தோழி போல, விறலிக்கு ஒருமைநிலை இன்மையாலும், அவளது நெறி அறச்சார்பு இன்மையாலும், அவள் புலவர் பாடும் புகழினைப் பெறவில்லை.

8. <u>ஆய்வு முடிவுகள்</u>

(அ) தலைவிக்குத் தோழியர் பலர் இருந்தனர். அவருள் உயிர்த் தோழியே 'தோழி' எனப் படுவாள்.

(ஆ) தோள் போன்றவள் தோழி எனப்பட்டாள்.

(இ) தோழியின் அறிவுச்சிறப்பு காட்டப்படும் அளவிற்கு அழகுச் சிறப்பு இடம் பெறவில்லை. அவள் அழகு தலைவியால் விளிநிலையிலேயே உணர்த்தப் படுகிறது. தோழியின் அழகு கலித்தொகையில் தான் மிகுதியாக உள்ளது.

(ஈ) சங்கப் பாடல்கள் பல ஓர்றைக் காட்சி நாடகமாக அமைந்துள்ளன. கலித்தொகையில் பல பாடல்கள் ஓரங்க நாடகமாக விளங்குகின்றன. இந்நூலில் தனிக்கூற்று மட்டுமன்றி உரையாடல்களும் கலந்துள்ளன. முல்லைக்கலியில் ஏறுதழுவல் பாடல்கள் நாடகப் போக்கில் உள்ளன. சிறைப்புறக் கூற்று நாடகப் பாங்கைப் புலப்படுத்துகிறது.

(உ) அகத்தில் புறம் இடம் பெறக் காரணங்கள் விளக்கப்படுகின்றன.

(ஊ) சங்க இலக்கியத்தில் புலவர்கள் தோழியின் கூற்றிலேயே தங்கள் எண்ணங்களைக் கூறுகின்றனர். கலித்தொகையில் தான் புலவர்களின் அறிவுரைக் கருத்துகள் அதிகமாக இடம் பெறுகின்றன.

(எ) பாங்கன் தலைவன் இடையே உள்ள உறவு நெருக்கத்தைப் பற்றிய குறிப்புகள் இல்லை. ஆனால் தோழி தலைவியின் குடும்பத்தில் ஒருத்தியாகவே உள்ளாள்.

(ஏ) விறலி பரத்தைக்குத் தோழியாக அமைந்திருக்கிறாள். தலைவியின் தோழி அளவிற்குப் பரத்தையின் தோழி புலவர், பாடும் புகழ் பெறவில்லை.

***

# இயல் இரண்டு

## இலக்கணத்தில் தோழி

"தோழி தானே செவிலி மகளே"
— தொல்.களவியல் 123.

"பயின்றாரெல்லாருந் தோழியராகாமை அருமறை கிளக்கப்படுதலான் உடன்முலையுண்டு வளர்ந்த செவிலிமகளே தோழி எனப்படுவாள்"
— தொல்.களவியல் 123 இளம்பூரணர், பக்.242.

"தாய்த்தாய்க் கொண்டு வருகின்றமையின் உழுவலன்பு போல்வதோர் அன்பு உடையர் இருவருமென்று கொள்க. இதனானே களவிற்குத் தோழியே சிறந்தாளாயிற்று".
— தொல்.களவியல் 126, நச்சினார்க்கினியர், பக்.151.

## இலக்கணத்தில் தோழி

0. இன்றைய நிலையில் தமிழகத்திற்குக் கிடைத்துள்ள முதல் இலக்கண ஆசிரியராக இலங்குபவர் தொல்காப்பியர். எனவே அவரது பார்வையில் தோழியைக் காணல் பொருத்தமாகும். அன்றியும் அவளைப் பிற்கால இலக்கண ஆசான்களின் பார்வையில் பார்த்தலும் நலம் பயக்கும். இவ்வகையில் தொல்காப்பியம், இறையனார் களவியல் உரை, நம்பியகப் பொருள், வீரசோழியம், இலக்கண விளக்கம், மாறனகப் பொருள் ஆகிய இலக்கண நூல்களின் துணைக்கொண்டு இக்கட்டுரை ஆயப்படுகிறது.

### 1. தோழி யார் என்பதும் அவள் பெருமையும்

அகப்பொருள் நாடகத்தில் தோழியே மிக முக்கியத் துணைப்பாத்திரமாகும். தோழி என்பவள் செவிலியின் மகள் என்கிறார் தொல்காப்பியர்.[1] அவள் செறிவும், நிறைவும், செம்மையும், செப்பும் அறிவும் அருமையும் உடையவள்.[2] தலைவியின் உறுவன் ஓம்பலைத் தன்னியல்பாகப் பெற்ற உரனும் கொண்டிருப்பவள்.[3] களவியலில் மற்ற எல்லோரையும் விடச் செயல் திறமை பெற்றிருப்பதால் தொல்காப்பியர் அவளைத் 'தாங்கரும் சிறப்பின் தோழி'[4] என்று போற்றுவதில் நிறைவு காண்கிறார்.

### 2. அடிமை அல்லள்

அடியோருக்கும் வினைவலருக்கும் அன்பின் ஐந்திணை பொருந்துவதில்லை.[5] என்பர். தோழி என்பவள் அடியோர் என்ற நிலைக்கு உரியவள் அல்லள். ஏனெனில் அவள் தானே ஆய்பவள்; தலைவிக்கு உசாத்துணையாகும் உயர் நிலையிலும் இருப்பவள்.[6] அவள் அன்னை என்று போற்றப்படும் நன்னிலை உடையவள்.[7] அவள் தலைவியுடன் தன்னையும் உளப்படுத்தி 'எம்' என்று கூறும் அளவுக்கு உரிமை கொண்டவள்.[8] தலைவியின் வாழ்வில் துயரம்

புகுங்கால் அதற்காகத் தான் வருந்தும் அரிய பண்பு வாய்ந்தவள்.[9] இக்கருத்தைப் பிற்கால இலக்கணப் புலவர்களும் அப்படியே ஏற்றுக் கொள்கின்றனர். அவளைத் தலைவியின் தாயாகக் கூறுகின்றனர்.[10]

2.1. தோழி என்ற பாத்திரத்திற்குப் பெருமதிப்பு தந்த ஆசிரியர், அவளை பேச்சைப் 'புரைதீர் கிளவி' என்று தானே சுட்டிப் பெருமிதம் கொள்கிறார்.[11] ஆனால் அவரே பிறகு, 'மடம்பட வந்த தோழிக்கண்ணும்' என்று தலைவனின் பார்வையிலும் அவளைக் காட்டத் தவறவில்லை.[12] தலைமகன், தலைமகள், செவிலி, பாணன், ஆகியோருடன் பேசும் தகுதியும் திறமையும் பெற்றவள் தோழி ஒருத்தியே.

3. <u>கூற்று முறை</u>

3.1. தொல்காப்பியர் பெரும்பான்மையாக, அகத்திணையியல் களவியல், கற்பியல், பொருளியல் ஆகிய இயல்களில் கூற்று முறையிலேயே அகவாழ்க்கையை எடுத்துரைக்கிறார். ஆனால் பொருளியலில் அவர் சில இடங்களில் இம்முறையை மேற்கொள்ளவில்லை. பிற்கால இலக்கண நூல்களில்[13] இக்கூற்று முறை மாறிச் செயல் முறையே அமைந்து கிடக்கிறது. ஆனால் வீரசோழியத்தில் திணைமுறையில் தோழியின் செயல் கூறப்படுகிறது.[14] தொல்காப்பியர் காட்டும் கூற்று முறை மூலமாக, காதல் மாந்தர்களின் உள்ளோட்டங்கள் உணர்வுகள், உணர்ச்சிகள், வேட்கைகள் ஆகியன விளங்குகின்றன.[15] 'பல நிலைகளில் விளங்கும் இன்ப அன்பின் சிறப்பு நிலையைக் காண்பதே இதன் நோக்கமாகும்'.[16] இது உள நூல் முறைப்படி படிப்பவர் மனத்துள், கதையில் வருபவர்களை உறவாட வைக்கிறது.[17] நாடகத்திற்குப் பின்னணி போலக் கூற்றை நிகழ்த்தும் பாத்திரங்களும் அவைஇடம் பெறும் களமும் மிகவும் அடிப்படையாயின.[18] இக்கூற்றுமுறை மேகுட்டாரின் நாடகத் தனிமொழி அல்லது நாடகத் தன்னுணர்ச்சிப் பாடல் என்ற நாடகப் பகுப்பு முறைக்கு ஒத்ததாகும்.[19]

3.2. இக்கற்றுமுறை காலத்திற்கேற்பச் சிறிது வளர்ச்சி பெற்று ஒரு நிலைப்பட்டதும், சடங்கு நிகழ்ச்சி போலச் செயல் வடிவம் பெற்று விட்டது. சங்க இலக்கியத்திலே எளிமைக்காகத் துறைகள் வகுக்கப்பட்டுள்ளன. ஆனால் கற்று முறையே அக்காலத்தில் சிறப்புடன் இருந்திருக்கும். ஆகவேதான், தொல்காப்பியர் 12 நூற்பாக்களில் கற்றுகளுக்கு விதி வகுத்துள்ளார்.[20]

3.3. தோழி கற்று

தோழி என்ற சொல்லைத் தொல்காப்பியர் 26 இடங்களில் கையாண்டுள்ளார். தோழியின் கற்றுக 75 கற்றுகள் இடம் பெற்றுள்ளன.[21]

3.3.1. தோழி கற்றுக வரும் இடங்களில்தான் சங்கச் சான்றோர்கள் உவப்பினராக நின்று தம் கருத்தை மறைமுகமாக அறிவுறுத்துவது எளிதாகிறது. தோழி அனைவருடனும் உள்ளங்கலந்து உரிமையுடன் பழகுவாள். ஆதலினால் அவள் வாயிலாகப் புலவர்தம் கருத்தை வெளிப்படுத்துவதே பெருவழக்காகிறது. இதனால் இலக்கியத்தில் தோழி என்ற பாத்திரமே, அறிவுநிலை, அமைப்புநிலை, தகுதிநிலை போன்றவற்றால் புலவர் நிலைக்கு உயர்ந்து விளங்குகிறது.[22]

3.3.2. தோழி என்ற சொல்லாட்சி இறையனார் அகப்பொருளில் மாறாமல் உள்ளது.[23] ஆனால் நம்பியகப் பொருளில் 'தோழி' மறைந்து 'பாங்கி' என்ற ஆட்சி பெரும்பான்மையாக இருக்கிறது.[24] சிறுபான்மை 'சேடி'[25] என்ற சொல்லும் 'இகுளை'[26] என்ற சொல்லும் ஆளப்படுகிறது. தோழியின் செயல்திறன் பிற்காலத்தில் விரிவாக்கப்பட்டதால், அவளது கற்று 148 ஆக நம்பி அகப்பொருளில் அமைந்திருக்கிறது.

தோழியின் செயல் முறையில் கற்றுகள் ஆளப்படுகின்றன.

4.1. மதியுடம்படுதல்

இயற்கைப் புணர்ச்சியில் இன்புற்ற தலைவன், தோழியின் துணைக் கொண்டு, தலைமகளை அணுக முயல்கிறான். தோழி தலைமகன் தலைமகள்

நட்புறவை மூன்று முறையினால் உணர்ந்து கொள்கிறாள். அவை குறையுற உணர்தல், முன்னுற உணர்தல், இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல் என்பன.[27] இம்முறை மாற்றி இறையனார் அகப்பொருளும், நம்பியகப்பொருளும் முன்னுற உணர்தலை முதற்கண் கூறும்.[28] தோழி, தலைமக்களின் நட்புறவினை உணர்ந்து கொள்ளும் முறையை மதியுடம்படுதல் என்று தொல்காப்பியம் கூறக் களவியலுரை தோழிக்-குணர்ச்சி என்றும் நம்பியகப்பொருள், பாங்கிமதிஉடன்பாடு என்றும் உரைக்கும்.

4.1.1. முன்னுற உணர்தல்

தொல்காப்பியர் நாற்றம் தோற்றம் ஆகிய முறைகளையே முதற்கண் கூறுகிறார்.[29] இம்முறைகள் களவியல் உரையில் மட்டும் இடம் பெறுகின்றன.[30] நம்பி ஆசிரியர் குறையுற உணர்தலை மெலிந்ஐயமுற்று ஓர்தல், ஐயந்தீர்தல், சொல்லின் நாடல் என மூன்றாக விரித்துரைக்கின்றார்.[31] இலக்கண விளக்க ஆசிரியரும்[32] மாறன் அகப்பொருளாசிரியரும்[33] நம்பி ஆசிரியருடன் உடன்படுவர்.

4.1.1.1. பல்வேறு கவர்பொருள் நாட்டம் என்பதற்கு நச்சினார்க்கினியர் 'பிறைதொழுவா மெனவும், களிறுவித்த புண்கூர் யானை கண்டேன் எனவும்'[34] உரை கூறி இஃது இறந்துபாடு பயத்தலின் கூறுதற்குரியதன்றென்பர். களவியல் உரைகாரர் இதை மறுத்து அகப்பொருள் வழுவென்பார்.[35] இது பெருந்திணை போல் தோற்றமளித்தாலும்அன்பின் ஐந்திணைக்கே உரியதென்பர் திருக்கோவை உரைகாரர்.[36]

4.1.2. குறையுற உணர்தல்

"ஊரும் பேரும்கெடுதியும் பிறவும்
நீரிற் குறிப்பிற் நிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியும்"

எனத் தலைவன் கூற்றில் வைத்துக் கூறுவர்.[37] ~~களவியலுரைகாரர்~~ தொல்காப்பியர் எதற்காகக் குறையிரக்கிறான் என்று தோழி எண்ணுவதாக மட்டும் களவியலுரைகாரர் விளக்கம்

தருகிறார்.[38] நம்பியகப்பொருள் களவியலாரின் உரையை அப்படியே ஏற்று, தலைவனின் எண்ணம் தேர்தல், எண்ணம் தெளிதல் என்று இரண்டாக விரித்துரைக்கிறது.[39]

4.1.3. <u>இருவழி முன்வழி அவன் வரவுணர்தல்</u>

இதனைத் தொல்காப்பியர் 'மாயம் சொல்லிவந்த கிழவனைத் தலைவி பொறுத்த காரணம் குறித்த காலையும்' தோழி கூற்று நிகழும்[40] என்பார். கிழவன் சொல்லிவந்த மாயம் என்ன எனக் களவியலுரை விளக்கம் கூறும்.[41] கையுறை ஏந்தி ஊர் பெயர் வினவின தலைவனிடத்துத் தோழி எதிர்மொழி கொடுத்தல், இறைவனை நகுதல், தன் நெஞ்சில் அவரவர் மனக்கருத்துணர்தல் என மூன்றாக நம்பியகப்பொருள் காட்டும்.[42] வினவிய தலைவனை நோக்கித் தோழியின் எதிர் செயலையும் நம்பியகப்பொருள் விளக்குகிறது. நம்பியகப் பொருளை இலக்கண விளக்கமும்[43] மாறன் அகப்பொருளும்[44] அப்படியே போற்றும்.

4.1.3.1. களவியலின் முதல் கட்டத்திலேயே தோழியின் நுண்ணறிவு செயல்படுவதை இப்பகுதி காட்டுகிறது. தோழியின் செயல் துவங்கவில்லை. இருவரின் உள்ளமும் பொருந்தியுள்ளதா, இருவரும் பொருத்தமானவரா, தலைவியின் அன்பு நிலையானதா, எனத் தோழி முடிவெடுத்த பிறகுதான் களவு நாடகம் தொடரும். உணர்வு மயமான தலைவன்தலைவியரை அறிவுமயமான தோழி ஆராயும் ஆய்வே இத்தொடக்கம். ஆனால் தலைவன் குறையுடையவனாகவோ, களவு நாடகம் தொடராமல் நிற்பதாகவோ இலக்கணமும் இலக்கியமும் கூறவில்லை.

4.2. <u>சேட்படை</u>

தலைவியைத் தலைவனோடு சேர்த்து வைக்கும் தன் முயற்சியினருமை, தலைவியினருமையை அறிவிக்க, தலைவனின் காதல் உறுதியை நிலைபெறுத்த, விரைவில் மணமுடிக்க, தலைவன் தலைவியால் அன்பு முதிர, பொறுப்பும் கடமையுணர்வும் கொண்ட தோழி தலைவனைச் சேட்படுத்துகிறாள். ~~சேட்படுத்தல் என்பது அணுக்கமாய் நின்ற அவனது நெஞ்ச நிலையைச் சேட்படுத்தல்.~~

களவியலில், குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப் பெருமையிற் பெயர்த்தல் முதலாக, அஞ்சியச்சுறுத்துதல் இறுதியாகச் சேட்படுத்தலைத் தொல்காப்பியர் காட்டுவர்.[45] மேலும் தலைவன் கூற்றில், தலைவன் தோழியைக் குறையிரக்கும் பகுதிகளிலும்,[46] பொருளியலில் பொதுநிலையிலும்[47] தொல்காப்பியர் சேட்-படுத்தலை விளக்குகிறார். நம்பியாசிரியர் அவளறிவுறுத்துப் பின்வா வென்றல், உரைத்துழிக் கூட்டம் என்ற இரண்டையும் விடுத்துள்ளார்.[48] இலக்கண விளக்கமும், மாறன் அகப்பொருளும் இவர்வழியே செல்லுகின்றன.[49] வீரசோழியம் விரிவாகவே தோழி சேட்படுத்தும் நிலையைக் குறிக்கும்.[50] தலைவியின் காதலை அறிந்தும், தலைவியைக் கேளாமலேயே தலைவனை அலைக்கழிக்கும் தோழியின் உரிமையையும், துணிவுடைமையையும் சேட்படையில் காண முடிகிறது.

4.3. <u>மடற்றிறம்</u>

தொல்காப்பியர் மடல்மா ஏறுவதற்குக் காரணமாகிய சேட்படையை முதலில் கூறி அதன்பின்பே மடல்மா பகுதியைக் கூறுவர்.[51] நம்பியாசிரியர் தொல்காப்பியர்வழிச் செல்வர். இறையனாரகப் பொருளுரையாசிரியர் மடற்றிறப் பகுதியை முன்னும் சேட்படைப் பகுதியைப் பின்னும் நிறுத்துவர்.[52] தோழியை இணங்குவிக்கத் தலைவனின் கடைசி உத்தியாக மடலேற்றம் அமைகிறது.[53] இதைக் களவியலுரையும் உடன்படுகிறது.[54]

4.3.1. தோழி தலைவியைக் குறை நயப்பித்தபோது உடன்படாத தலைவியிடம் அத்தோழி தலைவன்குறை மறுக்கப்படின் அவன் மடலேறுவான் என்றும் வரைபாய்வான் என்றும் கூறித் தலைவியை வற்புறுத்துவாள், என்பர் தொல்-காப்பியர்.[55] 'தலைவன் குறிப்பு வேறாக நெறிபடக் கூறல்' என்ற துறையில் அவன் மடல் ஏறுவான் என்பதைத் தலைவியிடம் தெரிவிப்பாள் தோழி என்று நம்பியகப் பொருள் கூறும்.[56] இதை வீரசோழியமும் உடன்படுகிறது.[57]

4.3.2. தோழி தலைவனிடம் அவனுக்கு மடல் ஏறுவது இயலாது என்றும் தடுக்கிறாள்.[58] மடலேறுவல் என்ற தலைவன் கூற்றும், தலைமகள் அவயத்து

அருமை சாற்றல், அருளியல் கிளத்தல், கொண்டு நிலை கூறல் என்ற தோழியின் மடல் விலக்குக் கூற்றையும் குறிப்பர் நம்பியாசிரியர்.[59] தொல்காப்பியர் தலைவன் கூற்றாக மடல் கூற்றையும், தோழியின் கூற்றாக மடல்விலக்குக் கூற்றையும் அமைக்கவில்லை. எனவே மடலேற்றம் இருநிலைகளில் பயன்படுத்தப்படுகிறது. (1) தலைவன் தோழியையும், தோழி தலைவியையும் அச்சுறுத்தும் கருவியாதல் (2) தலைவனின் மடலேற்றம் முயற்சியைத் தோழி தடை செய்யும்முயற்சியாக அமைதல்.

## 4.4. குறை நயத்தல்

தோழி தலைவியிடம் குறைநயத்தலை 'குறைந்து அவட்படரினும்' என்று பொதுவாகத் தொல்காப்பியம் கூறும்.[60] களவியலுரையும்,[61] நம்பி அகப்பொருளும்[62] தோழி குறை நயத்தலையும், தலைவிகுறை நேர்தலையும் விரிவாகக் கூறும். இலக்கண விளக்கமும்[63] மாறன் அகப்பொருளும் உடன்[64] உடன் செல்லும். வீரசோழியமும் விளக்கிச் செல்லும்.[65]

## 4.5. ஓம்படை சாற்றல்

தோழியால் முதற்கூட்டம் பெற்ற தலைவனிடம் தலைவியை மறவாமல் பாதுகாத்தல் வேண்டும் என்று உறுதி வேண்டுகிறாள் தோழி.[66] நம்பியகப் பொருள் தோழியிற் கூட்டத்து, 'வேட்டல்' என்னும் பகுதியில் ஓம்படை சாற்றல் என்று தெரிவிக்கும்.[67] வீரசோழியமும் "கயற்கண்ணேழையைக் கவற்சி தீர்த்தலும்" என்றியம்பும்.

## 4.6. பகல் இரவுக்குறிகள்

தலைமகளின் இணக்கம் பெற்ற தோழி தலைமகளுக்குப் பகற்குறியும் இரவுக்குறியும் அமைத்துக்கொடுப்பாள் என்பதை நுட்பமாகக் கூறுவர் தொல்காப்பியர்.[68] இறையனாரகப்பொருள் இதனைத் தெளிவாகச் சொல்லும்.[69] நம்பியகப்பொருள் மிக விரிவாக 27 துறையாக்கிக் கூறும்.[70] இலக்கண

விளக்கமும்,[71] மாறனகப்பொருளும்[72] நம்பியுடன் ஒத்துச் செல்லும். இதை வீரசோழியமும்[73] குறித்துக் காட்டும்.

4.6.1. குறியிழைத்த லையும் தொல்காப்பியம் பகரும்.[74] இத்துறையை அல்ல குறிப்படுதல் என்று இறையனாரகப்பொருள் கூறும்.[75] நம்பியகப் பொருளும்[76] இலக்கண விளக்கமும்,[77] மாறன் அகப்பொருளும்[78] இரவுக் குறியிடையீட்டில் ஒரு கூறாக்கி 12 துறையாக விளக்கிச் செல்லும்.

4.7. வரைவு கடாதல்

தோழியின் செயல்களில் மிக இன்றியமையாத செயலாதலால் அனைத்து இலக்கண நூல்களும் இதனைப்பற்றி விரிவாகவே ஆய்கின்றன. தொல்காப்பியம் பல நூற்பாக்களால் இதை விரித்துக் கூறும்.[79] தலைவனிடம் தோழி வரைவும் கடாவும் சொற்களைத் தொல்காப்பியம் 'புரைதீர் கிளவி'[80] என்றே பகரும். வழிஎதம் காட்டி வரைவு கடாவும் நிலையைத் தொல்காப்பியம் 'ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்'[81] என்றும் இறையனார் அகப்பொருள் 'ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி'[82] என்றும் கூறும். நம்பியாசிரியர் வரைவு கடாதலின் விரிவாக 20 துறைகளைப் பெருக்கி இதனை ஆறுபார்த்துற்ற அச்சம் கூறல் என்று குறிப்பிடுவர்.[83] இலக்கண விளக்ககாரரும்,[84] மாறனகப்பொருளாசிரியரும்[85] இதையே கூறுவர்.

4.7.2. காப்பின் கடுமை உரைத்து வரைவு கடாவுகிறாள் தோழி. இதைக் 'காப்பின் கடுமை கையற வரினும்' என்றுதொல்காப்பியமும்,[86] 'காப்புச் சிறை மிக்க கையறு கிளவி' என்று இறையனாரகப்பொருளும்,[87] 'காவல் மிகவுரைத்தல்'[88] என்று நம்பியகப்பொருளும் கூறும்.

4.7.3. குறி பெயர்த்தல், குறி மாற்றுதல் முறையிலும் தொல்காப்பியத் தோழி வரைவு கடாவுகிறாள்.[89] குறிபெயர்த்திடுதல், பகல் வருவானை இரவு வருகெனல், இரவு வருவானைப் பகல் வருகெனல், பகலினும் இரவினும் பயின்று வருகவெனல் எனப் பெருக்கிக் காட்டும் நம்பியகப்பொருள்.[90] இலக்கணம் விளக்கமும், மாறனகப் பொருளும் நம்பியகப் பொருள் வழிச் செல்லும்.[91]

4.7.4. காமமிகுதி உரைத்தும், தோழி வரைவு கடாவுகிறாள்.[92] இதைக் காம மிக்க கழிபடர் கிளவி என்று களவியலுரை கூறும்.[93] ஆற்றுத் தன்மை ஆற்றக்கூறல், காமம் மிகவுரைத்தல், கனவு நலிவுரைத்தல் என்று நம்பியகப்பொருளும், இலக்கண விளக்கமும் விவரிக்கும்.[94] மேலும் பொழுதினைய குற்றம் காட்டல், தன்னை அழிதல் என்ற இரண்டையும் கூறும்.[95] தோழிக்குரிய 'தன்னையழிதலை' தன்னுள் கையாறெய்திடு கிளவியாக்கித் தலைவிக்கு உரியதாக்கும் இறையனாரகப் பொருளும்[96] நம்பி,[97] மாறன் அகப்பொருள்களும் இலக்கண விளக்கமும், தலைவன் வரையாமையால் தலைவிதான் வருந்துதல் தகும். தோழி வருந்துதல் தகாது எனப் பிற்கால இலக்கண நூலாசிரியர்களின் நிலையைக் காட்டுகிறது.

4.7.5. தலைவனது நாடு, ஊர், இல், குடி, பிறப்பு, சிறப்பு ஆகியன பற்றியும் சொல்லித் தோழி வரைவு கடாவுகிறாள். 'நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்' என்பர் தொல்காப்பியர்.[98] இத்துடன் வாய்மையையும் சேர்த்துக் கொள்வர் நம்பியாசிரியர்.[99]

4.7.6. தலைவிக்குப் பிறன் ஒருவனுடன் கூட்டம் உண்டென்று தாய் ஐயுற்றபோது, அதை மறுத்துப் பொய்யெனச் சொல்லிப் பிறிதொரு வழியால் மெய்வழிக்கண் படுத்தும்போதும் தோழி கூற்று நிகழும்.[100] இதைச் சிறைப்புறமாகக் கூறி வரைவு கடாதலாக நச்சினார்க்கினியர் கருதுகிறார்.[101] தாயறிவுரைத்தல் என்று வரைவு கடாதலின் விரிவில் அடக்கிக் காட்டும்[102] களவியலுரையும், நம்பியகப் பொருளும்.

4.7.7. அலர்கூறி வரைவு கடாதல் நிலையில் 'என்னும் பன்னகை கண்ணிய வகையில்' என்பதனுள் அடக்குவர் தொல்காப்பியர்.[103] அம்பல் என்றும் அலர் என்றும் வகைப்படுத்துவர் களவியலுரைக்காரர்.[104] 'அலர் அறிவுறுத்தல்' என்று நம்பியும்[105] மாறனும்[106] இலக்கண விளக்கமும்[107] கூறும்.

4.7.8. தோழி தலைவனிடம் உபகாரமாகிய பெருநெறி வேண்டுவதாகத் தொல்காப்பியர் கூறுவர்.[108] விருந்தினைத் தங்குக என்று வேண்டி வரைவு கடாவும் இம்முறை அக்காலச் சமுதாய நிலையினைக் காட்டுகிறது. இரவில் வந்த விருந்தினரை ஓம்பும் சமுதாயப் பண்பாடு, இவை தலைமுறையினருக்குத் தலைவனைக் காணும் வாய்ப்பினைத் தருகிறது. இது வரைவு கடாவும் உத்தியாகவும் உரு மாறுகிறது. இம்முறையைக் களவியல் கூறவில்லை. நம்பியகப்பொருள் உலகியல் மேம்பட, விருந்து விலக்கலாகக் காட்டிப் பாங்கியற் கூட்டத்தின் இறுதிப் பகுதியில் அமைக்கிறது.[109]

4.7.9. தொல்காப்பியம் வழியே வீரசோழியம் வரைவு கடாதல் துறைகளைத் தொகுத்துக் கூறுகிறது.[110] இலக்கண நூல்கள் அனைத்திலுமே வெறியாட்டும், நொதுமலர் வரைவும் கூறும் தோழி வரைவு வேண்டியதாகக் குறிப்பில்லை. ஆனால் அறத்தொடு நிற்றல் அமைகிறது. நாணுடைய நங்கையர், வெறியெடுத்தலும், நொதுமலர் வரைவும் கூறல் கற்புக்கு இழுக்கு என இலக்கண நூலார் நினைத்திருக்கலாம். ஆனால் பாடல்கள் இத்துறையில் அமைந்திருத்தல் குறிப்பிடத் தக்கன.

4.8. ஆற்றுவித்தல்

களவில் தலைவன் வரைவிடை வைத்த பிரிவின்கண்ணும், கற்பில் பொருள் வயிற் பிரிவின்கண்ணும் தலைவி ஆற்றாதபோது தோழி, செவ்விய கடிய சொல்லால், தலைவனை இயற்பழிப்பாள்; ஆயினும் அன்பு நெகப்பிரிந்தோளாகிய தலைவியிடம் தலைவன் அளிப்பான் என்று வற்புறுத்திக்கூறுவாள் என்பர் தொல்காப்பியர்.[111] தோழியை அறிவுடையவளாகப் படைத்ததின் நோக்கமே தலைவியின் துயரைப் போக்குவதற்குத்தான் என்பர் தொல்காப்பியர்.[112] தொல்காப்பியரே கிழவோன் கொடுமையைத் தலைவியிடம் கூறும் உரிமை வாயில்கட்கு கிடையாது என்பர்.[113] ஆனால் அவர் அவ்வுரிமையின்மையைத் தோழிக்குக் கூறவில்லை. அதற்கும் மேலாக அவள் தலைவனையே நேராக இடித்துரைத்தலைக் கூறுகிறார் தொல்காப்பியர்.

ஆற்றுவித்தல் என்னும் இத்துறை களவு, கற்பு என்னும் இரு கைக்கோளுக்கும் பொருந்துமாயினும் அவர் இதைக் களவிலேயே வைக்கிறார். கற்பில் தோழியைத் தவிர செவிலி போன்றோரும் ஆற்றுவிக்கலாம்.[114] ஆனால் தலைவியின் களவைப் பிறர் அறியாத நிலையில் தோழி மட்டும் ஆற்றுவித்தல் சிறப்புடைமை கருதி அதைக் களவியலில் கூறுகிறார். தலைவன் பரத்தமை மேற்கொள்ளும்போது ஆற்றுவித்தலைக் கற்பியலில் கூறுவார்.[115]

4.8.1. தொல்காப்பியர் வழியே இறையனாரும் இயற்பழித்தலும் வன்புறைத்தலும் ஏற்றுக் கொள்கிறார்.[116] இயற்பழித்தலை வரைதல் வேட்கையின் விரியாகப் பாங்கி இறைவனைப் பழித்தல் என்னும் துறையாக நம்பியும் மாறனகப்பொருளும், இலக்கண விளக்கமும் கூறும்.[117] வன்புறைப் பகுதியை ஒரு சார் பகற்குறியில் 'தலைவியைப் பாங்கி கழறல்' என்றும்[118] வரைவிடை வைத்த பிரிவில் 'வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல்' என்றும் வகைப்படுத்துவர்.[119]

4.9. அறத்தொடு நிற்றல்

4.9.1. தொல்காப்பியர் அறத்தொடு நிற்றலை ஏன் களவில் அதிகமாகக் கூறாது பொருளியலில் கூறுகிறார் என்ற வினா எழுவது இயல்பே. டாக்டர் தமிழண்ணல் கூறுவது போல களவு கற்பு என்னும் பெருங்கடல்களுக்கு நடுவில் பாலமாக இத்துறை அமைவதால் களவில் அதிகமாகக் கூறாமல் வழுவமைதி-யாகப் பொருளியலில் கூறுகிறார். அகத்திணையியல், களவியல், கற்பியலில் கற்றுமுறையில் கூறிச்செல்லும் தொல்காப்பியர் பொருளியலில் செயல்முறைகளைக் கூறுவதை நுணுகிக் காண்போர் அறிவர். களவியலில் தோழி செவிலி கூற்றுகளில் அறத்தொடு நிலையை விளக்கிய ஆசிரியர் வாழ்வியலைச் செயல் முறையில் பொருளியலில் விளக்குகிறார் எனலாம்.

4.9.2. அகத்திணையிலக்கியத்துத் தோழி மிகுந்த உரிமையுடையவள். தலைவியின் உரிமையையும் செயலையும் தன் உரிமையும் செயலுமாகக் கொள்ளும் இறப்பு உரிமையுடையவள். என்றும் தலைவியின் இசைவின்றி அறத்தொடு நிற்கும் உரிமை

மட்டும் தோழிக்கு இல்லை என்பர் தொல்காப்பியர்.[120] மேலும் அவர் தோழி அறத்தொடு நிற்கும் முறையையும் விளக்குவார்.[121]

4.9.3. தலைவி வேறுபட்டவழி அதற்குக் காரணம் என்ன என்றறிய செவிலி குறிபார்க்கும் இடத்திலும், வெறியாட்டிடத்திலும் பிறர் வரைவு வந்த போதும் தலைமகன் வரைவு மறுத்தபோதும் முன்னிலை வகையாகவோ அறத்தொடு நிலை வகையாகவோ தலைவனுக்கும் தலைவிக்கும் தனக்கும் குலத்திற்கும் குற்றம் தீர்ந்த சொற்களைத் தோழி தாயிடம் கூறுதலைத் தொல்காப்பியர் இயம்புவார்.[122] அவன் விலங்குறினும் என்று இளம்பூரணர் கொள்ள அவள் விலங்குறினும் என்று நச்சினார்க்கினியர் கொண்டு தலைவனால் கட்டத்திற்கு இடையூறு நேர்ந்தபோது அறத்தொடு நிற்பதாக அறிவிப்பார்.[123] வெறியாட்டை நீக்கிக் காப்பு கைமிகுதலையும், அவன் ஊறு அஞ்சுதலையும் அறத்தொடு நிற்றலுக்குக் காரணங்களாக்கும், இறையனார் களவியலுரை. காதல் நேர்ந்த சூழ்நிலையும் விளக்குவர், மாறன், இலக்கண விளக்க அகப்பொருள் ஆசிரியர்கள்.[124]

4.9.4. தொல்காப்பியரின் கூற்றிலிருந்து வெறியாட்டு, நொதுமலர் வரைவு நேரும் வரை மகளிர் தலைவனிடம் வரைவு கடாவுகின்றனர். களவு நாடகத்தின் இறுதிக் கட்டமான வெறியாட்டும், நொதுமலர் வரைவும் நெருங்கால் தாய்க்கு உண்மை அறிவிக்கின்றனர் என்பது தெரியவருகிறது. நாணுடைய மகளிர் வெறியாட்டு, நொதுமலர் வரைவு ஆகியவற்றைத் தலைவனுக்கு நேராகக் கூறுவதில்லை. கூறினும் சிறைப்புறக் கூற்றாகவும், உள்ளுறை மூலமாகவுமே தங்கள் கருத்தை வெளிப்படுத்துகின்றனர். அதனால்தான் இவ்விரு நிலைகளையும் தொல்காப்பியர் வரைவு கடாதலில் கூறாமல் அறத்தொடு நிற்றலில் கூறினர் போலும். ~~திருக்கோவையாரில் இத்துறை கூறப்பெறவில்லை. சிவபெருமான், 'பிறவா யாக்கைப் பெரியோனாதலால்', தாயிலியாதலால் இத்துறை அமையவில்லை போலும்.~~

4.9.5. ஆடவர்களின் மனநிலைக்கேற்ப, பழைமையில் ஊறிய முதியவர்களாகிய தாய் போன்றோரின் மனநிலை ஒட்டி, அறத்தொடு நிற்றலின் படிநிலைகள், உளவியலின்

அடியொற்றியே அமைந்திருப்பது வியத்தற்குரியது.[125] வீரசோழியம் இதை விலக்கிச் செல்கிறது.

4.10. உடன்போக்கு

இப்பகுதியைத் தொல்காப்பியர் களவு, கற்பியலில் அமைக்காமல் அகத்திணையியலில் பாலைத்திணைப் பற்றிப் பேசும்போது அமைக்கிறார். பிரிவு பாலைத்திணைக்கு உரியது. பாலைத்திணைக்கு நிலம் பகுக்கப்படாமையின் தலைவன் பிரிவையும், அவன் தலைவியுடன் செல்லும் உடன்போக்கையும் அகத்திணையில் தொல்காப்பியர் கூறுகிறார் எனலாம். இவர் ஆறு நிலையாக உடன்போக்கைக் கூறுகிறார்.[126] தோழி தலைவன் கூற்றிலும் இதைக் கூறுவர்.[127] களவியலில் தோழி கூற்றுக 'ஓம்படைக் கிளவிப்பாங்கின் கண்ணும்' என்று கூறுவர்.[128] இயற்கைப்புணர்ச்சியின் பின் தலைவனிடத்துத் தலைவியைப் பாதுகாக்க வேண்டு- மிடத்தும்,[129] உடன்போக்கில் தலைவியைக் கொண்டு செல்லும் தலைவனிடத்து வேண்டும் முறையிலும்[130] ஓம்படைக் கிளவி அமையும். 'ஓம்படுத்தல் - பாது காத்தல்' என்று பொருள் படும். இவ்வோம்படைக் கிளவியில் தோழியின் பொறுப்புணர்ச்சியும் தாய்மையுணர்வும் புலனாகும். இக்கிளவியைக் களவியலுரை, நம்பி அகப்பொருள் இலக்கண விளக்கம், மாறன் அகப்பொருள் ஆசிரியர்களும் கூறுவர்.[131] வீரசோழியத்தில் உடன்போக்கு பற்றிய குறிப்பு இல்லை. இக்காலத்து உடன் போக்கு மறக்கப்பட்டமையையே இது காட்டுகிறது.

4.11. வரைவு மலிதல்

தம் வரைவுடன்பட்டமையைத் தோழி தலைவனுக்குத் தெரிவிக்கும் நிலையிலும், தலைவிக்குக் கூறி ஆற்றுவிக்கும்நிலையிலும் இக்கூற்று அமைகிறது.[132] மற்ற இலக்கண ஆசிரியர்களும் இதில் வேறுபடவில்லை.[133]

4.12. கற்பியல்

தலைவன் வினைவயிற் பிரிந்து மீண்டவிடத்து[134] தோழி - தலைவி புகழ்கிறாள். இதை நம்பியாசிரியர் 'தலைவனைப் பாங்கி வாழ்த்தல்'[135] என்பர். களவு

வாழ்வில் உற்ற துன்பம் கற்பில் நீங்கினமை குறித்து மகிழ்ந்தவிடத்தும்[136] கூற்று நிகழ்கிறது. இதைப் பாங்கி மகிழ்ச்சியில் அடக்குவர் நம்பியாசிரியர்.[137] தலைவன் திருமணம் செய்ததற்குக் காரணமாக நிலைத்த தெய்வங்களுக்குக் கொடுத்தற்கண்ணும்[138] எனத் தொல்காப்பியர் கூறுவர். இவ்வமைப்பு பிற்கால இலக்கண நூல்களில் இல்லை.

4.12.1. செலவுமுன்னுவித்தல்

தலைவன் பொருள், வினை, வேந்து ஆகிய காரணங்களுக்காகப் பிரிய நினைக்கும்போது தலைவி நிலை நோக்கி தோழி செலவுமுன்னுவிக்கிறாள்.[139] இது பிற்கால இலக்கண நூல்களில் கையாளப்படவில்லை.

4.12.2. தலைவனின் பிரிவில் தலைவி துன்புற்றபோது தோழி ஆற்றுவிக்கிறாள்.[140] தொல்காப்பியர் இத்துறையை விரிவாகக் கூறவில்லை. ஆனால் வீரசோழியம் விரிவாக விளக்கிக் கூறுகிறது.[141]

4.12.3. வினைவயிற் சென்ற தலைவன் மீண்டு வந்த பின்னர் அவனைச் சிறப்பித்துக் கூறுகிறாள்.[142] தாங்கள் முற்காலத்தில் உற்ற வருத்தத்தின் நீங்கியமையைக் கூறுகிறாள். இதை நம்பி 'இல்வாழ்க்கையின் விரிவில் பாங்கி மகிழ்ச்சியில்' அடக்கும்.[143]

4.12.4. தலைவன் புறத்தொழுக்கம் மேற்கொண்ட நிலையில், தலைவியைத் கழறுகிறாள் தோழி.[144] இதை நம்பியாசிரியர் தலைவியைப் பாங்கி கழறல் என்பர்.[145] தலைவன் பரத்தமை மேற்கொண்டபோது தலைவியின் கவர்ந்து சென்ற மானலந்தருக என்றும்,[146] தலைவனின் பேறு ஒழுக்கத்திற்குத் தலைவி நாணுவதைக் குறித்தும்[147] தலைவன் செய்த சூள் கருதியும்[148] தலைவனின் பெருந்தகைமை கூறியிடத்தும்[149] களவுக்காலத்து அரியராக இருந்த நிலைமையைச் சுட்டியும்[150] தலைவனைத் தோழி வாயில் மறுக்கிறாள். இந்நிலையில் அவள் தலைவனை அன்பிலை கொடியை எனக் கடிதலும் உண்டு.[151] தலைவனுக்கு வாயிலாகப் பாணன், விறலி ஆகியோர் வந்தவிடத்தும் வாயில் மறுக்கப்படுகின்றனர்.[152] வாயில் மறுத்தல் நிலை

பிற்கால இலக்கண நூல்களில் காணப்படாமை நோக்குதற்குரியது. தோழி உயர்ந்த தலைவனை வாயில் மறுப்பதா என்ற எண்ணம் எழுந்தமையும், பெண்ணுரிமை மறக்கப்பட்டமையுமே காரணமாகலாம். பரத்தமை இயல்பானதாக,— தவறாகக் கருதப்படா நிலையில்,— மரபாக மாறிய காலக் கட்டத்தையேஇது நிலைநாட்டுகிறது.

4.16.3. பரத்தமை மேற்கொண்ட தலைவனை இடித்துரைத்து மீண்டும் இல்லில் சேர்த்துக் கொள்ளும் நிலையே வாயில் நேர்தலாகிறது. தலைவியின் புலவியை நீக்குதல் இங்கு அமைகிறது.[153] பிற்கால இலக்கண நூல்கள் இத்துறையைக் கூறுகின்றன.[154] தலைவனின் பரத்தமை குறை கூறப்படா நிலையில் அவன் நினைத்த நேரத்தில் வருகின்ற நிலைமையையே பிற்கால இலக்கண நூல்கள் தெரிவிக்கின்றன.

4.17. ஆய்வு முடிவுகள்

(அ) தொல்காப்பியர் தோழியை அடைமொழி தந்து சிறப்பிக்கிறார். அவர் பெரும்பாலும் கூற்றுமுறையில் கூறப் பிற்காலத்தவர் செயல் முறையில் களவியலைக் குறிப்பர். வீரசோழியம் திணைமுறையில் இதைக் காட்டும்.

(ஆ) கூற்றுமுறை நாடகப் பகுப்பு முறைக்கு ஒத்தது. இது பழங் காலத்தில் சிறப்புடன் இருந்தது.

(இ) தோழி என்ற பாத்திரம், புலவர் நிலைக்கு உயர்ந்து விளங்குகிறது.

(ஈ) தோழியின் செயல்திறன் காலப் போக்கில் விரிவாக்கப்பட்டன.

(உ) களவியலின் முதல் கட்டத்தில், தோழியின் செயல் துவங்கவில்லை. நுண்ணறிவே தன் பணியை ஆரம்பிக்கிறது.

(ஊ) தலைவன் குறையுடையவனாகவோ, களவியல் முறிந்ததாகவோ இலக்கணமும் இலக்கியமும் கூறவில்லை.

(எ) விருந்தினைத் தனிக்கச் சொல்லி வரைவு வேண்டுமுறை அக்காலச் சமுதாயப் போக்கையே காட்டும்.

(எ) இலக்கண நூல்கள் வெறியாட்டும் நொதுமலர் வரைவும் கூறியுந் தோழி வரைவு கடாவியதாகக் கூறவில்லை. வீரசோழியத்தில் உடன்போக்கு பற்றிய குறிப்பு இல்லை.

(ஐ) வாயில் மறுத்தல் நிலை பிற்கால இலக்கண நூல்களில் இல்லை. தடுக்க முடியாத தலைவனின் உயர்வும் பெண்ணுரிமை மறப்பும் இதற்குக் காரணமாகும்.

(ஒ) தொல்காப்பியர் கூறிய துறைப் பெயர்கள் பின்னுளில் விடப் பட்டும் மாற்றப்பட்டும் விரிவாக்கவும் பட்டன.

***

## இயல் மூன்று

## தோழி தலைவி உறவுநிலை

"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகின்
ஆண்டும் வருகுவள் போலும்" – குறுந்தொகை 22
–சிறைக்குடியாந்தையார்

"விண்டோய்கல் நாடனும் நீயும் வதுவையுட்
பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ;
பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ
மைதவழ் வெற்பன் மணவணி காணமற்
கையாற் புதைபெறூஉங் கண்களுங் கண்களோ;
என்னைமன், நின்கண்ணாற் காண்பென்மன் யான்;
நெய்த லிதழுண்கண், நின்கண்ணா கென்கண்மன்"
– கபிலர், குறிஞ்சிக்கலி 39.

## தோழி_தலைவி_உறவுநிலை

0. தோழி தலைவியிடம் உரையாடுவதாக 399 கூற்றுகள் உள்ளன.[1] குறிஞ்சி, நெய்தல், பாலை, மருதம், முல்லை என்னும் வைப்பு முறையில் பாடல்களின் எண்ணிக்கைகள் அமைகின்றன.[2] தலைவியின் கூற்றுக உள்ள 573 பாடல்களில், தோழியிடம் கூறுவதாக 489 பாடல்களைக் குறிப்பதிலிருந்து தலைவி தோழி நெருக்கம் புலப்படுத்தப்படுகிறது.[3] தலைவனுடன் தலைவியை இணைப்பதும், தலைவனின் பிரிவில் தலைவியை ஆற்றுவிப்பதும் தோழியின் இன்றியமையாத பொறுப்புகளாதலால், அத்துறைகளில் கூற்றுகள் அதிகமாயுள்ளன.[4]

1. துறைதோறும் தோழி தலைவி உறவு நிலையைப் புலப்படுத்தும் பாங்கில் சிறப்பு நிலையில் ஆயப்படுகிறது. தோழிக்கும் தலைவிக்கும் இடையே உள்ள அன்பு நிலை, ஒருவரை ஒருவர் அழைக்கும் நிலையில் அவர்கள் உறவு நிலை தோழி தன்னைத் தலைவியாகவே பாவிக்கும் நிலை, இன்ப துன்பங்களில் இருவரும் பங்கு பெறும் நிலை எனப் பொது நிலைகளிலும் இக்கட்டுரையின் போக்கு அமைகிறது.

### 1.1. குறை_நயத்தல்

தோழி தலைவியிடம் கூறும் கூற்றுக இத்துறையில் 29 பாடல்கள் இடம் பெறுகின்றன.[5] தலைவன் தலைவி களவு வாழ்வில் தோழியின் செயல்திறன் இத்துறையில்தான் தொடங்குகிறது. களவுமேற்கொண்ட தலைவி தன் களவை நேராகக் கூறித் தோழியின் உதவியைவேண்டவில்லை. மாறாக மறைக்கிறாள். நாற்றம், தோற்றம் முதலானவற்றால் தலைவியின் நிலை உணர்ந்த தோழி தலைவியிடம் நேராகக் களவை வினவாமல், தான் அறிந்ததையும் கூறாமல் மறைக்கிறாள். கூறினும் உள்ளுறை வாயிலாகவே உணர்த்துகிறாள்.[6] கலித்தொகை தோழி ஒருத்திதான் கூட்டுணர்ந்ததை இறுதிக் கணையாக ஏவுகிறாள்.[7] தலைவன்

தோழியைத் தொழுதல்,[8] மடல்மா ஏற விரும்புதல்[9] ஆகிய செயல்களைக் கூறுகிறாள். தலைவன் தந்த தழையாடையை ஏற்க வேண்டுகிறாள்.[10] அவனுடைய துன்பம், பண்புடைமை, அன்புடைமை, ஆகியவற்றைக் கூறித்[11] தலைவியின் மனத்தை மாற்ற முயல்கிறாள் தோழி. உரிமையுடன் கடிந்தும்[12] உறழ்ந்தும்[13] குறை நயக்கிறாள். தலைவியின் களவுச் செயலைத் தன் மேலிட்டும் கூறுகிறாள்.[14] ஏற்கெனவே ஏற்பட்ட உறவைத் தொடர்வது போன்றில்லாமல், புதிதாகத் தலைவன் தலைவி உறவை ஏற்படுத்துவது போன்றும், பல உத்திகளைமேற்கொள்வது போன்றும் இத்துறை அமைகிறது. கெஞ்ச வேண்டிய தலைவி மிஞ்சுவதும், மிஞ்ச வேண்டிய தோழி கெஞ்சுவதும் இப்பகுதியில் அமைகிறது.

1.2. குறியிடம் கூறல்

இத்துறையில் தோழி தலைவியிடம் கூறும் கூற்றாக 8 பாடல்கள் இடம் பெறுகின்றன.[15] தோழி தலைவியிடம் குறியிடம் அமைப்பது பற்றிக் கருத்துரை கேட்பதாகவோ, விவாதிப்பதாகவோ பாடல்கள் இல்லை. அடிக்கடி வர வேண்டுதல்,[16] தலைவன் அல்ல குறிப்பட்டவிடத்து தங்கள் நிலையை அறிவித்தல்,[17] தலைவனை இரவிலும் வர வேண்டுதல்,[18] பகற்குறி வந்த தலைவன் இரவுக்குறியும் வேண்டுதல் அறிவித்தல்,[19] தலைவன் இரவுக்குறி வந்ததைக்கூறல்,[20] தலைவன் வாராநிலையில் அவன் அறியுமாறு கற்பனையால் படைத்து மொழிதல்[21] என இவ்வாறு தலைவனுக்குத் தங்கள் கருத்தைத் தெரிவிக்கத் தலைவி கருவியாகவே மாற்றப்படுகிறாள்.

1.3. வரைவு கடாதல்

இத்துறையில் தோழியின் கூற்றாக109 பாடல்கள் உள்ளன.[22] தலைவியின் களவைக் கற்பாக்குவதே தோழியின் குறிக்கோளாதலால் இப்பிரிவில்தான் அதிகமானச் பாடல்கள் இடம் பெறுகின்றன. இதில்தான் அதிகமாகச் சிறைப்புறக் கூற்றுகளும் அமைகின்றன. அதனால் தலைவன் சிறைப்புறமாகத்

தலைவியிடம் ஊடாடும் முறையில் கூற்றுகள் அமைகின்றன. தலைவியின் ஆற்றாமை, இற்செறிப்பு, வெறியாட்டு, அலர், வழிஏதம் ஆகியவற்றால் தாங்கள் வருந்துவது தலைவனுக்கு உணர்த்தப்படுகிறது. தலைவனில்லா நேரங்களில் தலைவியின் நிலை, தலைவனைப் பற்றிய தங்கள் விருப்பு வெறுப்பு, ஆகியவற்றைத் தெரிவிக்கச் சிறைப்புறக்கூற்று பயன்படுகிறது.

1.3.1. தலைவியின் ஆற்றாமையை நாணுடைய மகளிர் தலைவனுக்கு நேராக உணர்த்த விரும்பாததால் சிறைப்புறக் கூற்று பயன்படுத்தப்படுகிறது. இரவும் பகலும் தலைவனைக் காணவிரும்பும் தலைவியின் ஆற்றாமையைத் தெரிவித்தல்,[23] நலனழிவுக்குக் காரணமான தலைவனை நோதல்,[24] பழித்தல்[25] மணப்பான் என்ற தங்கள் நம்பிக்கையைப் புலப்படுத்துதல்,[26] தாங்கள் நம்பிக்கையிழந்தமையைத் தெரிவித்தல்,[27] வரைவால் தாங்கள் பெறும் மகிழ்ச்சியை அறிவித்தல்,[28] தலைவியின் இறப்பைக் குறிப்பாகவும்[29] வெளிப்படையாகவும்[30] அறிவுறுத்தல் என்னும் முறையில் தோழி தலைவி கூற்றுகள் அமைகின்றன.

1.3.2. இற்செறிப்பு உணர்த்தவும் சிறைப்புறக் கூற்று பயன்படுகிறது. தலைவியின் செயல் அன்னை அறிய வாய்ப்பு தருதலைச்சுட்டும் முறையிலும்[31] தாயின் செயல் கூறி அவள் அறிந்தனளோ எனஐயத்துடன் வினவும் முறையிலும் இற்செறிப்பு நிகழலாம் எனத் தலைவனுக்கு அறிவுறுத்துதல்[32] தாய் அறிந்ததைக் கூறிச் செறிப்பு அறிவுறுத்தல்,[33] தாயின் காப்பு மிகுதி கூறித் தாங்கள் அதை வெறுப்பதைத் தலைவனுக்கு உணர்த்துதல்[34] ஆகிய முறைகளில் வரைவு கடாதல் அமைகிறது.

1.3.3. வெறியாட்டு என்னும் குறிஞ்சி நிலத்திற்கே உரிய சடங்கு முறையைத் தோழி வரைவு கடாவும் உத்தியாக மேற்கொள்கிறாள். இவ்வமைப்பு கலித்தொகையில் மட்டும் ~~பாடல்கள்~~ இல்லை. தலைவனுக்கு நேராக வெறியாட்டை அறிவுறுத்த நாணுடைய மகளிர் உள்ளம் தயங்கியதால் அதனைப்

பாடல்களும் சிறைப்புறக் கூற்றுகளே உள்ளன. மகளிர் வெறியாட்டை விரும்பாமையும் அதை அவமானமாகக் கருதியமையுமே இக்கூற்றுகள் தெளிவாக்கு-கின்றன. வெறியாட்டுக்குக் காரணமே தலைவனுடைய தொடர்புதான் என நொந்துரைத்தல்,[35] வெறியெடுப்பினும் தாங்கள் தலைவன் கூட்டத்தையே விரும்புதலை அவனுக்கு அறிவுறுத்துதல்,[36] அதை எள்ளும் தங்கள் மனநிலையைப் புலப்படுத்தல்,[37] வினையும் தீங்கு குறித்து அஞ்சுதல்[38] என இவ்வாறு வெறியாட்டின் மூலம் தலைவனை வரைவு கடாவுகிறாள் தோழி.

1.3.4. ஊரவர் அலர் தூற்றலைத் தோழி தலைவியிடம் உரையாடும் முறையில் தலைவனுக்கு அறிவுறுத்துகிறாள். தலைவன் வருகை அம்பலாகிறது எனத் தலைவனுக்கு அறிவுறுத்துதல்,[39] ஊரார் அலர் தூற்றலைக் கூறல்,[40] அலர் தூற்றுங்கால் தங்கள் வருத்தம் கூறல்,[41] அவரின் கொடுமை,[42] வேகம்,[43] மிகுதி,[44] ஆகியவற்றைக் கூறுதல், அலரால் தாயறிந்ததைக் கூறி இற்செறிப்பு நிகழலாம் எனத் தலைவனுக்கு உணர்த்துதல்,[45] தாய் தலைவியின் களவை அறிய இற்செறிப்பு நிகழ்ந்ததெனல்,[46] இற்செறிப்பால் தலைவி வருந்துதலை அறிவுறுத்தல்[47] என்னும் போக்கில் வரைவு கடாவுகிறாள் தோழி.

1.3.5. தலைவன் வந்துபோகும் வழிஏதத்தைப் பற்றித் தாங்கள் படும் வேதனையை நேராகக் கூறுவதை விட, தோழி தலைவி உரையாடலின் மூலம் அறிவுறுத்துவது மிகுந்த பயனைத் தருகிறது. தலைவனின் அஞ்சாமை, வீரம் ஆகிய பண்புகளையே வரைவு கடாவும் கருவியாகக் கொள்ளுகிறாள் தோழி. அருவழியில் வருவதைத் தாங்கள் விரும்பாமை,[48] அவன் வருவதால் தாங்கள் அடையும்அச்சம்,[49] ஏதம் ஏற்படின் தலைவி உயிர் வாழா நிலை,[50] தலைவனைப் பழிக்காமல் தங்களையே நோதல்[51] என இவ்வாறு வழிஏதம் பற்றி இருவரும் உரையாடும் முறையில் வரைவு கடாவுகிறாள் தோழி.

1.3.6. நொதுமலர் வரைவை உள்ளுறையால் குறிப்பாகப் புலப்படுத்தி, அவன் இனித் தலைவியை மணக்க முடியாது. அவன் தன் மலையை விடப் பெரிதாகப் புலந்தாலும் பரவாயில்லை என்று இயம்பிச் சினம் கொண்ட தோழி தலைவனின் வரவைத் தடுக்கிறாள்.[52]

1.4. அறத்தொடு நிற்றல்

தோழி தலைவியிடம் கூறும் கூற்றாக 11 பாடல்கள் அமைகின்றன.[53] இத்துறை களவு கற்பாகத் தோழி மேற்கொள்ளும் முயற்சியாக அமைகிறது. தோழி தலைவியுடன் உரையாடிச் செவிலிக்கு அறத்தொடு நிற்றல் குறிஞ்சித் திணையில் மட்டுமே அமைகிறது. வெறியென மயங்கி அன்னை அருந்துயருழப்பதால் அன்னைக்குத் தம் நிலையை அறிவிக்கத் தலைவியின் அனுமதி வேண்டுகிறாள் தோழி.[54] தலைவியின் உடன்பாடின்றி அறத்தொடு நின்றதைத் தலைவியிடம் கூறி நன்மை விளையும்[55] என்றும் நன்மையே விளைந்தது[56] என்றும் அவள் கூறுகிறாள். அன்னை வெறியெடுக்கத் துணிந்தவழி அவள் அறிய வேண்டித் தலைவி தோழி இருவரும் உரையாடுகின்றனர்.[57] நொதுமலர் வரவில் செவிலி கேட்பத் தலைவியுடன் உரையாடுவது போன்று உண்மையையும் அறிவிக்கிறாள்.[58] அறத்தொடு நிற்றலிலும் தாய்க்குக் களவை அறிவுறுத்தத் தலைவியைக் கருவியாக்குகிறாள் தோழி.

1.5. உடன்போக்கு

இத்துறையில் தோழி தலைவியிடம் கூறும் கூற்றாக 15 பாடல்கள் உள்ளன.[59] இதில் தோழி தலைவிக்கு நேராகவே உடன்போக்கு அறிவுறுத்தும் நிலை அமைகிறது. உடன்போக்கு மேற்கொள்ள வேண்டியதின் அவசியத்தையும் அவள் விளக்கமாகக் கூறுகிறாள். பகல் இரவுக் குறிகளில் சந்திக்க முடியாமை,[60] நொதுமலர் வரைவு,[61] அன்னை அலைத்தல்,[62] கடுஞ்சொற்களைக் கூறல்,[63] ஊரவரின் அலர்[64] என்ற இன்னோரன்ன காரணங்களால் தலைவி உடன்போக்கு மேற்கொள்ளத் தலைவியை வற்புறுத்துகிறாள் தோழி. செல்லும் வழி அருவழி

என நினைக்காதே என ஆறுதலும் கூறுகிறாள்.[65] தலைவன் உடன்பட்டதையும் உணர்த்துகிறாள். தலைவியை அழைத்துச் செல்லத் தலைவன் வந்தபோதும் கண்ணீரைக் கண்ணில் நிறுத்தி, ~~செந்நீரை நெஞ்சில் நிறுத்தி,~~ வாயில் முறுவல் நிறுத்தித் தலைவியை முயங்க அழைக்கிறாள்.[66] உடன்போய் மீண்டவிடத்துத் தன் நிலையும் ஊரவர் நிலையும் உரைக்கிறாள்.[67] இத்துறையில் தோழியின் பொறுப்பு, தாய்மையுணர்வு தலைவிபால் கொண்ட அன்புடைமை ஆகியவை நன்கு புலனாகிறது.

1.6. வரைவு மலிதல்

இதில் தோழி தலைவியிடம் கூறும் கூற்றாக 40 பாடல்கள் இடம் பெறுகின்றன.[68] தலைவியும் தோழியும் மகிழும் ஒரே துறை இதுதான். இத்துறையில் தலைவியின் மகிழ்ச்சியைவிட தோழியின் மகிழ்ச்சி மிகுதியாகக் காட்டப்படுகிறது. தலைவியையும்,[69] களவுக்குத் துணைநின்றவர்களையும்[70] வாழ்த்துகிறாள் தோழி. தலைவியிடத்துத் தன் மகிழ்ச்சியைத் தோழி கூறுதல் குறிஞ்சித் திணையில் மட்டுமே காணப்படுகிறது.[71] தலைவன் வரைவு மேற்கொண்டதற்குக் காரணம் தன் முயற்சியே என்றும் கூறுகிறாள்.[72] வரைவின் பின் நல்ல கணவனைத் தந்த தோழியிடம் 'நல்லை காணில் காதலந்தோழி' என்று தலைவி நன்றியுடன் புகழ்வாள்.[73]

1.7. ஆற்றுவித்தல்

தோழி தலைவியிடம் கூறும் கூற்றாக இத்துறையில் 196 பாடல்கள் இடம் பெறுகின்றன. பாலைத்திணையில்தான் அதிகமாக ஆற்றுவிக்கிறாள். களவை விடக் கற்பில் ஆற்றுவித்தல் பாடல்கள் அதிகம்.[74]

1.7.1. தலைவி கூற்றாக கூறும் 559 பாடல்களில் ஏறத்தாழ 380 பாடல்கள் தலைவி தோழியிடம் ஆற்றாமை கூறும் பாடல்களாகவே அமைகின்றன.[75] இதனால் தோழிக்கும் தலைவிக்கும் உள்ள உறவு நெருக்கம் புலப்படும்.

தலைவி தன் துன்பத்தைக் கூறும் ஒரே பாத்திரமாக, அவள் துன்பத்தை நீக்கும் ஒரே பாத்திரமாகத் தோழி செயலாற்றுகிறாள். தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியை ஆற்றுவித்தல் அவளுடன் சிறுவயதிலிருந்தே பழகி வந்து உள்கலந்த தோழியைத் தவிர வேறு யாராலும் இயலாது. களவு வாழ்வில் ஊக்குவித்து வளர்த்து கற்பாக்க விரும்பும் தோழியைத் தவிர வேறு யாராலும் தலைவியின் உள்ளத் துன்பத்தை அறிய முடியாது. அதனால் களவு, கற்பு வாழ்வில் ஒன்றித் தோன்றும் தோழியே ஆற்றுவிக்கும் பொறுப்பினை முழுதும் ஏற்க வேண்டியதாயிற்று. தோழி தன் அறிவு முழுவதையும் தலைவியை ஆற்றுவித்தலுக்குப் பயன்படுத்துகிறாள்.[76]

1.7.2. குறிஞ்சி நிலத்தில் தோழி, களவில் தலைவன் குறி நீட்டித்த விடத்தும்,[77] அலர் மிக்க விடத்தும்,[78] இற்செறிப்பரென உணரும் போதும்,[79] தலைவன் ஒருவழித் தணந்த விடத்தும்[80] இற்செறிப்பரென அஞ்சுமிடத்தும்[81] பகற்குறியில் ஆற்றாதவிடத்தும்,[82] வரைவிடை வைத்த பிரிவில் தலைவன் பிரிந்த விடத்தும்,[83] தமர் மறுப்பரோ என அஞ்சுமிடத்தும்,[84] தமர் மறுத்தவிடத்தும்,[85] தலைவி ஆற்றாதபோது ஆற்றுவிக்கிறாள் தோழி.

1.7.3. முல்லைத்திணையில் ஆற்றுவித்தல் துறை பெரும்பாலும் கற்புப் பிரிவில் அமைகிறது. முல்லைக்கலியில் மட்டும் இதற்கு மாறான நிலை அமைகிறது. தலைவன் ஏறு தழுவானோ என்ற அச்சமும், தான் விரும்பும் தலைவனுக்கே மணமுடிப்பாரோ என்ற அச்சமும் முல்லைத்தலைவியை அலைக்கழிக்க, தலைவன் ஏறு தழுவினமையையும் தமர் கொடை நேர்ந்தமையையும் கூறி ஆற்றுவிக்கிறாள்.[86] தலைவன் ஏறுதழுவி மணம் முடிப்பதாகத் தோழி கூறும் இம்முறை தமிழிலக்கியத்தில் முல்லைக்கலியில் மட்டுமே காணப்படுகிறது. குரவையாடி வழுதி வாழ்க என்று தெய்வம் பரவும் முறை அக்காலச் சமுதாய நிலையைக் காட்டுகிறது. களவு வெளிப்பட்டதென்று தலைவி அஞ்சியபோது தோழி ஆற்றுவிக்கிறாள்.[87] கற்பு நிலையில் தலைவன் வேந்தன் பொருட்டுப் பிரிந்தவிடத்தும்[88] சுரம் போதற்கரிது

என்று வருந்தியவிடத்தும் ஆற்றுவிக்கிறள் தோழி.[89] பருவம் வந்தவிடத்து ஆற்றாத தலைவியைக் கார்ப்பருவம் வந்ததால் தலைவன் வருவார் என்றும்,[90] இது பருவமன்று[91] எனவும் பட்டது வம்பு என்றும்[92] தலைவனின் வரவு கூறியும்[93] ஆற்றுவிக்கிறள். முல்லைத்திணையில், உரிப்பொருள் 'ஆற்றுதல்' ஆயினும் தலைவி தலைவன் குறித்துச் சென்ற பருவம் வருந்தலையும் ஆற்றுவதும் அதன் பின் ஆற்றுமையுமே குறிக்கப்படுகிறது.

1.7.4. மருதத்திணையில், தலைவன் பரத்தனுன் எனத் தலைவி ஆற்றுதபோது, அவன் பரத்தமையுடையவல்லன் என ஆற்றுவிக்கிறள் தோழி. இங்குத் தலைவனின் ஒழுக்கத்தில் தலைவியை விடத் தோழி கொண்ட நம்பிக்கை புலனுகிறது.[94]

1.7.5. நெய்தல் தலைவி, வரைவு நீட்டித்த விடத்தும்,[95] தலைவன் ஒருவழித் தணந்தழியும்,[96] தலைவி அலருக்கு அஞ்சியவிடத்தும்,[97] காப்பு மிகுதிக்கண் ஆற்றுதவிடத்தும்,[98] பொருளுக்காகத் தலைவன் பிரிந்த விடத்தும்[99] ஆற்றுவிக்கிறள்.

1.7.6. பாலையில் ஆற்றுவித்தல் துறையில் கற்புப் பாடல்களே அதிகமாயினும் களவுப்பாடல்களும் காணப்படுகின்றன. களவில் வரைவு நீட ஆற்றுத விடத்தும்,[100] அலர் மிகுதியான விடத்தும்,[101] தாய் காப்பிடத்தும்,[102] தோழி ஆற்றுவிக்கிறள். கற்பில், தலைவி தலைவனின் செலவுக் குறிப்பறிந்து ஆற்றுதவிடத்தும்,[103] பொருள்வயிற் பிரிவிடத்தும்,[104] சுரத்து வெம்மை கண்டு ஆற்றுதவிடத்தும்,[105] இடைநின்று மீள்வரோ எனத் தலைவி கவன்ற விடத்தும்,[106] நீட்டித்தான் என வருந்தியபோதும்,[107] கார்ப்பருவம் கண்டு ஆற்றுதவிடத்தும்,[108] இளவேனில் பருவம் கண்டு ஆற்றுதவிடத்தும்,[109] தூது விடக் கருதியவிடத்தும்,[110] காட்டது அருமை கூறித் தெய்வம் பரவ நினைத்தழியும்[111] தோழி ஆற்றுவிக்கிறள்.

1.8. வாயில் மறுத்தல்

இந்நிலையில் தோழி தலைவியிடம் கூறும் கூற்றாக 4 பாடல்கள் அமைகின்றன.[112] வாயிலாரும்[113] பாணனும்[114] கேட்கும் நிலையில், தலைவன் பரத்தைமையைத் தலைவிக்குக் கூறி, வாயில் மறுக்கிறாள் தோழி. இங்கும் வாயில் மறுக்கத் தலைவியைக் கருவியாக்குகிறாள் தோழி. வாயில் நேர்தல் நிலையில் தோழி தலைவியிடம் கூறும் கூற்றாக 3 பாடல்கள் அமைகின்றன.[115]

1.8.1. குறிஞ்சி, நெய்தல் திணைகளில் தலைவனுக்கு வாயில்நேர்ந்த தோழி, களவுக்கால நிகழ்ச்சிகளை நினைப்பூட்டித் தலைவியின் சினம் தணிக்கிறாள்.[116] அளவுகடந்த புலவியால் தலைவனை நீங்க விரும்பும் தலைவியை உலகியலறிவு கூறித் தெருட்டுகிறாள் தோழி.[117] தலைவன் தலைவிக்கு நடுவே திதியனின் காவல் மரமாகிய புன்னை போன்ற தான் அழிய வேண்டும் என்று தோழி தன் ஆற்றுமை கூறித் தலைவியை இணங்குவிக்கிறாள்.[118]

1.8.2. தோழி தலைவியை 'நல்ல மடவை மன்ற'[119] என்று கடியும் போக்கும், தலைவியின் எதிரிலேயே தலைவனைக் கொடியோர்[120] அறனிலாளன் என்றும் அஞ்சாது கூறும் தன்மை[121]யும் இங்குண்டு. தலைவியோ தோழியைக் கடியாது,

"எஞ்சா தெல்லா கொடுமை நுவலாதி
அஞ்சுவ தஞ்சா அறனிலி யல்லனென்
நெஞ்சம் பிணிக்கொண் டவன்"[122]

என்று தோழி தலைவனை 'அறனிலி' என்று கூற வேண்டாம் என்று வேண்டுகிறாள். இதிலிருந்து தோழி தலைவியின் உறவுநிலை நன்கு புலப்படுகிறது.

2. அன்பு நிலை

2.1. தலைவியும் தோழியும் 'உயிர்பகுத்தன்ன மாண்பினர்'[123] ஓர் உயிர் போன்ற நட்பினர்;[124] இன்னுயிரன்னர்;[125] சிறுவயதிலிருந்தே உடன் விளையாடும் நட்புச் சிறப்பினர்.[126]

"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகின்
ஆண்டும் வருகுவள் போலும்"

எனத் தலைவன் கண்டுணர்ந்த நட்புச் சிறப்பினள்;[127] தலைவி செல்லு-மிடமெல்லாம் நிழலெனத் தொடர்பவள்.[128]

2.2. தலைவன் வரவு நோக்கித் தலைவியும்தோழியும் குறியிடத்து காத்திருக்கும்போது, அவள் ஆற்றுது அவனது கொடுமை கூற வாயெடுக்கிறாள்; அந்நிலையில் அவளையறிந்த தோழி மெல்ல 'வருந்தாதே தோழி; தலைவர் காலந்தாழ்த்தாது உடனே வருவார்' என்று தலைவியைத்தேற்றிய அளவில் அவன் வரத் தோழி மகிழ்கிறாள். இம்மகிழ்ச்சியானது, தலைவன் அருவழியில் வெள்வேலை துணையாகி நடுஇரவில் வந்ததை விட இனிதாயிது என்று தலைவி தலைவனிடம் கூறுமளவிற்குத் தோழியின் அன்பு முதிர்ந்துள்ளது.[129] தலைவியை மகள் என்றும் உரிமை பாராட்டுமளவிற்குத் தாய்மைப் பாசம் கொண்டவள் தோழி.[130]

2.3. அவள் தலைவன் வருகைக்காகத் தலைவியுடன் தூங்காமல் காத்திருக்கிறாள்.[131] தலைவி நோய் மிகுந்து தூங்கும்போதும் தூங்காள்.[132] தனக்காக எதையும் இரக்காத தோழி, தலைவன் கவர்ந்த தலைவியின் பெண்மை நலத்தைக் கொடுத்து விட்டுப் போகும்படி அவனிடம் தலைவிக்காக இரக்கிறாள்;[133] பெற்றோர் தலைவியின் களவு அறிவதற்கு முன்பு வரைய வேண்டுகிறாள் தோழி. புதியவன் போன்று தலைவன் வரைய வரும்படி விரும்புகிறாள். தலைவியின் வளையை நான் ஒடுக்கமும் காண்பதற்காகவாவது வரைதல் வேண்டும் என்று தன் அவாவைத் தலைவனிடம் கூறி வரைவு வேண்டுகிறாள்.[134]



2.4. தலைவன் வராவிட்டால் தாங்கள் உயிர் வாழாமையைக் குறிப்பிடுகிறாள்.[135] தலைவன் வழிஏதம் கருதாமல் வருவதால் தீங்கு நேருமாயின் 'தலைவி வாழாள்; அவளல்லாமல் நானும் வாழேன்' எனக் கூறும் அளவிற்கு அவர்களின் அன்பு சிறந்திருந்தது.[136] தலைவன் வராமையால்

தலைவி இறந்தால் அவளுக்கும் முன் தான் இறக்க விரும்புகிறாள்.[137] தலைவி துன்பம் ஆற்றுதவிடத்து, 'நடுங்கும் என் உடம்பைத் துறந்து என் உயிர் போகும் காலம் இதுவேபோலும். யான் உயிர் வாழ வேண்டுமாயின் தலைவி ஆற்ற வேண்டும்' என்று கூறி அவளை ஆற்றுவிக்கிறாள்.[138] இன்றே வருவான் என ஆற்று-விக்கும் தோழியின் இன்சொல்லைப் பற்றுக்கோடாகக் கொண்டுதான் தலைவியும் ஆற்றுகிறாள்.[139]

2.5. தலைவன் வரைவு மலியும்போது மணநாள் காட்சியைக் கண்டு மகிழும் நிலையில் இவர்கள் நட்பு சிறக்கிறது.

> "வின்டோய்கல் நாடனும் நீயும் வதுவையுட்
> பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
> கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ;
> மைதவழ் வெற்பன் மணவணி காணுமற்
> கையாற் புதைபொறா உம் கண்களும் கண்களோ;
> என்னைமன், நின்கண்ணாற் காண்பென்மன் யான்;
> நெய்த லிதழுண்கண், நின்கண்ணா கென்கண்மன்"[140]

என்னும் கலித்தொகைப் பாடலின் அடிகள் தலைவிதோழி நிலையைவிளக்குகிறது.

2.6. தலைவி உடன்போக்கை விரும்பவில்லையென்றாலும் தோழியின் துன்பத்திற்காகவே ஏற்கிறாள்.[141] உடன்போக்கினை மேற்கொள்ளக் காரணமாக இருந்தாலும் தலைவியின் பிரிவைத் தாங்கமுடியாமல் வருந்துகிறாள் தோழி.[142] தலைவி தலைவனுடன் போகும்வழி பசுமையாகத் திகழ வேண்டும் என்று அவாவுகிறாள்.[143]

2.7. தலைவன் விரைவில் வரைய வேண்டும் எனத் தெய்வம் வழுத்துகிறாள் தோழி. அவன் சூள் பொய்க்காமல், களவு ஊரவர் அறியா நிலையில், தமர் கொடுக்க வரைய வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறாள் தோழி.[144] அதற்குத் தலைவியும் உடன் அழைக்கிறாள்.[145]

2.8. தலைவன் பரத்தமை மேற்கொண்டபோதும், அவன் பரத்தமை நீங்கவும் தலைவியின் வாழ்வு சிறக்கவும் இறைவனை வேண்டுகிறாள்.[146] தலைவியும் தோழியைக் கேளாமல் எதையும் செய்வதில்லை.[147] பரத்தையொருத்தி தலைவியின் இல்லம் புகுந்து உரிமை கொண்டாடிய செயலை நினைந்து, தோழி நாணமும் வேதனையும் அடைகிறாள்.[148]

3. தலைவியின் கண்ணில் கண்ணீர், தோழியின் நெஞ்சில் செந்நீர்

3.1. தலைவியின் துன்பமே தன் துன்பமாக நினைக்கும் தோழியின் உள்ளமும், தோழி துன்பத்தைத் தன் துன்பமாக நினைக்கும் தலைவியின் உள்ளமும் புலப்படுத்தும் முறையில் இருவரின் நட்புச் சிறப்பு அமைந்துள்ளது.

3.2. தலைவி நிலைகண்டு 'கவன்ற தோழி' என்று துறைக் குறிப்புகளும் தோழி நிலையைத் தெரிவிக்கின்றன.[149] தலைவன் வரைவு மேற்கொள்ளா நிலையில் தலைவியின் துயரம் கண்டு தோழி துடிக்கிறாள்.[150] தலைவியின் மேனி மாற்றம் கண்டு தோழி ஆற்றுதவளாகிறாள்.[151] தலைவியுடன் சேர்ந்து இவளும் அழுகிறாள்.[152] தலைவியின் நோய்க்கு மருந்தாக முடியவில்லையே என்று பேதுறுகிறாள்.[153] தலைவன் வரும் வழி கண்டு துன்புறுகிறாள்.[154] தலைவனின் அஞ்சாமையையும் தலைவியின் ஆற்றாமையையும் கண்டு கலவமகவு நஞ்சுண்டதுபோல அஞ்சுகிறாள்.[155] உறங்காத தலைவிக்கு கங்குலில் 'உயவுத் துணையாக, அஞ்சாதிருந்து ஆறுதல் தருகிறாள்.[156] தலைவியைச் சிறுகோல் கொண்டு தாய் அலைக்கும்போது இவள் மனம் அலைகிறது.[157] 'பேய்க் கொண்டனள் தலைவி'யென்று தாய் வெறியெடுப்பது கண்டு வருந்துகிறாள்.[158] ஆற்றுது துடிக்கும் தலைவி நிலைகண்டு,

"கேள்வி யந்தணர் கடவும்
வேள்வி ஆவியின்"[159]

உயிர்க்கிறது தோழியின் நெஞ்சம். தோழி வருந்தும்படி நோய் செய்த தானே தவறுடையேன் என்று தலைவி நோகுமளவிற்குத் தோழி துயருறுகிறாள்.[160] தலைவியின் துயர் கண்டு வருந்தும் தோழியைத் தலைவியே ஆற்றுவிப்பதும் நிகழ்கிறது.[16

3.3. தோழியின் துன்பம் கண்டே தலைவி உடன்போக்கிற்கு இணங்குகிறாள்.[162] உடன்போக்கில் அனைத்து ஏற்பாடுகளையும் செய்த பின்பும் போக விரும்பாத தலைவியின் நிலை கண்டு தோழி கையும் காலும் ஓய்ந்து 'தீயுறு தளிரின்' வருந்துகிறாள்.[163] இதிலிருந்து தோழியின் கடமை, பொறுப்புணர்வு தெரிய வருகிறது. தலைவியை அனுப்பிய தோழியே, தலைவி சென்ற சுரம் இனிதாக வேண்டும் என்று நினைந்தொறும் கலுழ்கிறாள்.[164] தலைவி உடன்போனதை நினைந்து அழும் நற்றாயும் தலைவனுடன் சென்ற தன் மகளான தலைவிக்காக வருந்துவதினும், துணையில்லாமல் அழும் இவருக்காகவே நோகிறேன் என்று வருந்துகிறாள்.[165]

3.4. தலைவன் பிரிவுமென்ற அளவில் துயருறும் தலைவி நிலை கண்டு தோழி வருந்துகிறாள்.[166] தலைவியை விடத் தோழி அதிகமாகக் கவல்கிறாள் என்று கூறுமளவிற்குத் தோழியின் துன்பம் பெருகுகிறது.[167]

3.5. தலைவி தோழி துன்ப நிலையில் அவர்களுக்கிடையேயுள்ள உறவு நெருக்கம் புலப்படுத்தப்படுகிறது. அறிவுடைய தந்தையொருவர் மகள் துன்பம் கண்டு துடிப்பது போன்று தோழியும் தலைவியின் துன்பம் கண்டு வருந்துகிறாள்.

4. தலைவியின் முகமலர்ச்சியில் தோழியின் முகமலர்ச்சி

4.1. தலைவியின் முகம்மலரும்போதுதான் தோழியின் இதயமும் மலரும். தலைவன் வினைமுடித்து வரும்போதும், வரைவு மேற்கொள்ளும்போதும், வரைந்த பிறகும் அவள் மகிழ்ச்சியில் திளைக்கிறாள்.

4.2. கிளி கடிக எனத் தாய் கூறும்போது தலைவி தலைவனைக் காண இயலும் என மகிழ்கிறாள் தோழி.[168] தலைவன் வரைவு மேற்கொண்ட நிலையில் தேர்மணிக்குரலும், மாவும் தோழிக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.[169] தலைவன், தலைவியின் நுதல் பொன்னிறம் சிவக்கவும், மாமை கவினவும், கண்கள் இழந்த அழகைப் பெறவும், தோள்துணையாகவும், இன்று முயங்கவும் தலைவியை நினைந்து

வருவதைக் கூறி மகிழ்கிறாள் தோழி.[170] தலைவனையும் மகிழ்வுடன் வாழ்த்து-கிறாள்.[171] தலைவியின் பசலை நீங்கத் தலைவன் வரைவு மேற்கொண்டபோது வாடிய நெல்லிற்கு யாமத்தில் மழைபொழிய, நாட்டில் உள்ளோர் உவந்த உவகையெல்லாம் ஒரு சேரத் தன் உள்ளத்தில் வைத்தது போன்று தோழி மகிழ்கிறாள்.[172] தலைவன் வரைவு மேற்கொண்டாலும் தமர் மறுப்பரோ எனத் தலைவி அஞ்சும்போது தமர் வரைவு உடன்பட்டமை கூறி மகிழ்கிறாள். மகிழ்விக்கிறாள்.[173] இவ்வமைப்பு முறை கலித்தொகையில்தான் அதிகமாயுள்ளது. தலைவியையும் "சிறப்பொடு பொலிக; உங்கள் பொலிக; துணைபுணர்ந்த இன்ப உலகில் உறைக" என மகிழ்ந்து வாழ்த்துகிறாள்.[174]

4.3. களவுச் செய்தியைநற்றாய்க்குக் கூறிய செவிலியிடம், தலைவனின் தேர் வரவை 'நின்மகளின் நோய்க்கு மருந்தாகிய கொண்கன் தேர் வருகின்றது' எனப் பெருமிதத்துடன் சுட்டுகிறாள்.[175] தலைவனின் ஊரையும் காட்டுகிறாள்.[176] திருமணம் நிகழும்போதும், "தண்ணந் துறைவன் இவளுக்கமைந்தான்; மாணமக்களின் இவளுக்கமைந்தது என மகிழ்கிறாள்.[177]

4.4. தலைவியை மணம் கொண்டு கூந்தலில் மலரணிந்ததால் தலைவனின் தந்தை வாழ்க[178] என வாழ்த்துகிறாள் தோழி. தலைவியைப் பள்ளியிடத் திருக்கும்போதும் 'நீஇனி முயங்குமதி' என முறுநகையோடு மகிழ்ந்து கூறுகிறாள்.[179] இந்நிலை நீடிக்க வேண்டும் என்னும் பேரவாவுடன் தலைவனிடம் 'அணங்கு உணர்த்து அகலாதே என வேண்டுகிறாள் தோழி.[180]

4.5. இவ்வாறு தனக்கெனத் தனி இன்பம் இல்லாமல் தலைவியின் இன்பமே தன் இன்பமாகக் கருதும் தோழி தலைவியின் உறவுநிலை வியத்தற்குரியது.

5. தோழி தலைவி தொடர்பு நெருக்கம்

5.1. ஈருடலும் ஓர் உயிருமாகத் தோழியும் தலைவியும் இளமை தொட்டே பழகி வருகின்றனர். அதனால் தனிநிலைக் காதலையும் தமக்குள் பொது நிலையாகப் பேசிக் கொள்கின்றனர். அவர்கள் தலைவனுடன் கொண்டிருக்கும் உறவைப் பிறர் ஐயமுறுமளவுக்கு அவர்களிடையே தொடர்பின்

நெருக்கம் அமைந்திருக்கிறது. தோழி தலைவிக்கே உரிய தலைவனைத் தனக்கும் உரிமையாக்கி 'நம் காதலர்' என்று குறிப்பிடுகிறாள்.[181] அவள் தலைவியின் நலனைத் தனக்கும் உரியதாக்கிப் பேசுகிறாள்.[182] தலைவியின் உயிரையும் நம் உயிர் என்று புகல்கிறாள்.[183] தலைவியின் உறுப்பையும் அவ்வாறே சுட்டுகிறாள்.[184] இடங்களைக் குறிப்பிடும்போதும், 'நம்' என்ற தொடர்பின் நெருக்கம் வெளிப்படுத்தப்படுகிறது.[185] இருவரின் தொழில், பண்பு முதலியவற்றிலும் இந்த நெருக்கம் சிறப்பாகக் காணப்படுகிறது.[186] தோழி தலைவியிடம் நம், நம்மினும், நம்மை, நம்மொடு, நமக்கு எனத் தொடங்கிக் கூறும் செயல்முறைகளிலும் அவர்களின் தொடர்பு நெருக்கம் தெளிவாகத் தெரிகிறது.[187] தோழி, 'நம்' என்ற சொல்லாலும் இருவரின் உள்ளப் பிரிவின்மையைச் சுட்டுதலும் உண்டு.[188] எனவே, பாடல்கள் தோழி கூற்று தலைவி கூற்று என்ற ஐயுறும் நிலை பெறுகிறது.

5.2. தலைவியும் தோழியை உளப்படுத்தித் தமக்கிடையே கிடக்கும் தொடர்பு நெருக்கத்தை வெளிப்படுத்துகிறாள். அவளும் தனக்கே உரிய தலைவனைத் தோழிக்கும் உரியவனாக்கி நம் காதலர் என்று பல இடங்களில் கூறுகிறாள்.[189] தோழியை உளப்படுத்தி 'நம் உயிர்' என்றுரைக்கிறாள்.[190] உறுப்புகளிலும் இந்த நெருக்கம் புலப்படுத்தப்படுகிறது.[191] இடத்தைக் குறிப்பிடும்போது இந்நிலை அமைந்திருக்கிறது.[192] தொழில், பண்பு முதலிய-வற்றிலும் இந்நெருக்கம் இடம் பெறுகிறது.[193] தலைவி தோழியின் நலனை உட்படுத்தி இவ்வாறே இயம்புகிறாள்.[194] தலைவியும் தோழியிடம் நம், நம்மினும், நம்மொடு, நமக்கு என்று தொடங்கிக் கூறும் செயல்களிலும் அவர்களின் தொடர்பு நெருக்கம் தோன்றுகிறது.[195] 'நாம்' என்ற சொல்-லாலும் அவர்களிடையே நிலவிய நெருங்கிய தொடர்பு காட்டப்படுகிறது.[196]

5.3. இத்தகைய உளப்பாட்டுத் தன்மைப் பன்மை தோழி தலைவி இடையேமட்டுமன்றி, பிற அகப்பொருள் உறுப்பினர்கள் மத்தியிலும் அக்காலத்தில்

வழக்கத்திலிருந்தது. பரத்தை தன் தோழியிடம் 'நம்' என்று உரிமையோடு கூறுகிறாள்.[197] நற்றாய் செவிலியிடம் இவ்வாறே இயம்புகிறாள்.[198] தலைவன் தேர்ப்பாகனிடம் தலைவியைப் பற்றிக் கூறும்போது "நம் இன்னுயிர்த்துணை"[199] என்றே மொழிகிறான். எனவே தோழி தலைவனிடம் பேசும்போதும் தன்னோடு தலைவியை உளப்படுத்திக் கூறுவது மரபாகவே அமைந்திருக்கிறது.[200]

5.4. தோழி, தலைவி இருவருமே 'தோழி' என்று அழைத்துக் கொள்கின்றனர்.[201] தோழி செவிலியிடமும்,[202] செவிலி தோழியிடமும்[203] 'தோழி' என்றே குறிக்கின்றனர். காதற்பரத்தையும்,[204] பரத்தையும்,[205] 'தோழி' என்றே அழைப்பர். செவிலியும் நற்றாயைத் 'தோழி' என்கிறாள்.[206] தோழி தலைவனிடம் பேசும்போதும் தலைவியைக் குறிக்க 'என்தோழி' என்பாள்.[207] தலைவனின் தேர்ப்பாகனிடமும் 'தோழி' என்றே கூறுகிறான்.[208] தலைவி தலைவனிடம் பேசும்போதும் அவளைத் 'தோழி' என்றே குறிக்கிறாள்.[209] தோழி தன்னுள் பேசும்போதும்[210] தலைவியைத் 'தோழி' என்று குறிக்கிறாள். தலைவன் தோழியிடம் பேசும்போதும் தலைவியைக் குறிக்க 'நின்தோழி'[211] என்கிறான்.

5.5. தலைவி தோழி இருவரும் ஒருவரையொருவர் தோழீஇ[212] என்றும் இகுளை[213] என்றும், எல்லா[214] என்றும், அன்னை,[215] அன்னாய்[216] என்று அழைத்துக் கொள்கின்றனர். இதனால் தலைவி தோழியிடத்தில் வேறுபாடில்லா தன்மையையும் அன்புடைமையும் புலனாகிறது.

6. <u>தோழி தன்னைத் தலைவியாகக் கூறல்</u>

6.1. ஒருயிர் பகுத்தன்ன மாண்பினளாகிய தோழி தன்னைத் தலைவியாகவே பாவித்து மற்றவர்களிடம் பேசுகிறாள். இந்நிலையில் மூன்று கூறுகள் காணப்படுகின்றன. (1) தலைவி உறுப்பு நலனைத் தன்னுடையதாக்கிக் கூறுதல் (2) தலைவியுடன் தன்னையும் 'எம்' என உடன்படுத்திக் கூறுதல் (3) தலைவியின் செயலைத் தன் செயலாகக் கூறுதல்.

6.2. தலைவியின் உறுப்பு நலனைத் தனதாக்கல்

தலைவியின் வருத்தம்,[217] மெலிநலன்,[218] காமம்,[219] பசலை[220] ஆகியவற்றைத் தனதாக்கிக் கூறுகிறாள் தோழி. இவ்வமைப்பு குறிஞ்சித் திணையில் தலைவனிடம் இற்செறிப்புணர்த்தி வரைவு கடாவும் நிலையில் அதிகமாக ஆளப்படுகிறது. தாய் முதலிய பிறர் தம் களவை அறியாமலிருக்கும் உத்தி தலைவியின் உள்ளத்தை அறியக் கையாளும் சூழ்ச்சி ஆகியவற்றைக் காரணமாகக் கொள்ளலாம். வரைவு கடாதல்,[221] அறத்தொடு நிற்றல்,[222] செலவழுங்குவித்தல்,[223] வாயின்மறுத்தல்,[224] வாயில் நேர்தல்[225] ஆகிய நிலைகளில் தலைவன்,[226] தலைவி,[227] செவிலி,[228] ஆகியோரிடம் தோழி இம்முறையில் கூறுவதால் இவ்வமைப்பு மரபாகவே அமைந்திருக்கலாம். இதைத் தவறல்ல என்று இலக்கணமும் கூறுகிறது.[229] வழுவமைதியாகவும் ஏற்கிறது.[230]

6.3. 'எம்' எனத் தலைவியையும் உளப்படுத்திக் கூறல்

தோழிக்கும் தலைவிக்கும் உள்ள உறவு நெருக்கத்தின் காரணமாக இருவரும் தமக்குள் 'நம்' எனக் கூறிக் கொள்வது போல தோழி மற்றையோருடன் பேசும்போது உரிமையோடு தலைவியையும் உடன்படுத்தி 'எம்' எனக் கூறுகிறாள்.[231] தலைவியின் நிலையைக் கூறித் தலைவியாகவே மாறும் தோழி இங்குத் தலைவியுடன் தன்னை ஒன்றுபடுத்திக்கூறுகிறாள். இதையும் இலக்கணமாக்கியுள்ளார் தொல்-காப்பியர்.[232]

6.4. தலைவியின் செயலைத் தன் செயலாகக் கூறல்

தலைவன் தலைவியிடம் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைத் தன்னிடத்து நிகழ்ந்ததாகப் படைத்துக் கூறுதல் இப்பகுப்பில் அமைகிறது. பண்பே கொள்கலமான தோழி 'பண்பில் செய்தி' கூறுவது வியப்பிற்குரியது. 'புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின் பொய்ம்மையும் வாய்மையிடத்த' என்ற குறள்வழி நடப்பவள் அவள். பண்பில்லாத பொய் கூறலைத் தோழி அறமெனக் கொள்கிறாள். பெரும்பாலும் குறை நயத்தலில், தோழி தலைவியிடம் கூறும் கூற்றில்தான் இப்பண்பில் செய்தி இடம் பெறுகிறது. தலைவி உள்ளத்தை அறிய இக்கூற்றைக் கருவியாக்குகிறாள்.

மேலும் தலைவி கூற்றாகக் கூறியவழி அன்னை முதலானோர் ஐயமுற்று ஏதம் இழைப்பாராதலின் அவள் கூற்றையொழித்துத் தோழி தன் கூற்றாகக் கூறினாள்.[233] தலைவியின் உள்ளத்தை அறிய தோழி கையாளும் உத்தியாதலால் இதையும் கொள்ளலாம் என்பர்.[234] இக்கருத்திற்கு நச்சினார்க்கினியர் உரையும் அரண் செய்கிறது. ஆனால் இவ்வறக்கழிவுடையன தலைவியின் நாணத்திற்கு இழிவு வாராமல் கூற வேண்டும் என்பார் தொல்காப்பியர்.[235]

6.4.1. தோழியே தன் செயலைப் பெரும்பழி[236] பண்பில் செய்தி[237] என்று கருதுகிறாள். தலைவியின் உள்ளக்கருத்தறிய தோழி செய்யும் சூழ்ச்சியே இப்பண்பில் செய்தி[238] தலைவியிடத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் ஏற்பட்ட உணர்வுகளையும் தன் மேலிட்டுத் தலைவியின் கருத்தை அறிய முயல்கிறாள் அறிவுடைத் தோழி. இப்பண்பில் செய்தியால் தோழிக்கும் தலைவிக்கும் உள்ள உறவுமுறை, தோழியின் பொறுப்பு, கடமையுணர்வு, உளவியலறிவு, நடிப்புத்திறன் முதலியவற்றையும் அறியலாம்.

7. ஆய்வு முடிவுகள்

(அ) தலைவியை மகள் என்றும் உரிமை பாராட்டுமளவிற்குத் தாய்மைப் பாசம் கொண்டவள் தோழி.

(ஆ) தலைவியின் துயர்கண்டு வருந்தும் தோழியைத் தலைவியே ஆற்றுவிப்பதும் நிகழ்கிறது.

(இ) நற்றாய், தலைவனுடன்சென்ற தன் சொந்த மகளான தலைவிக்காக வருந்துவதை விட, துணையின்றி அழும் தோழிக்காக வருந்துவதும்உண்டு.

(ஈ) தமர் வரைவு கூறித் தோழி மகிழ்தல் கலித்தொகையில் மிகுதியாய் உள்ளது.

(உ) நம் என்று தோழியும் தலைவியும் தமக்குள் வேறுபாடின்றிக் கூறுவதால், தோழி கூற்று தலைவி கூற்று என ஐயுறும் நிலையில் பாடல்கள் அமைகின்றன. நம் எனும் உளப்பாட்டுத் தன்மை நிலை தோழி தலைவி இடையே மட்டுமன்றி, நற்றாய், செவிலி, பரத்தை அவளது தோழி, தலைவன், தேர்ப்பாகன் ஆகியோரிடமும் காணப்பட்டன. இது அக்காலத்தில் மரபாக அமைந்திருக்கிறது.

(ஊ) தோழியும் தலைவியும் செவிலியும் நற்றாயும் ஒருவரை ஒருவர் தோழி என்றே விளிக்கின்றனர். தலைவியும் தோழியும் இகுளை, அன்னை, அன்னாய், எல்லா எனத் தமக்குள் வேறுபாடின்றி அழைத்துக் கொள்கின்றனர்.

***

****************
*                *
*   இயல் நான்கு   *
*                *
****************

*************************
*                         *
*   தோழி தலைவன் உறவுநிலை   *
*                         *
*************************

"இனமீன் இருங்கழி நீந்தி நீநின்
நயனுடை மையின் வருதி இவடன்
மடனுடை மையின் உயங்கும் யானது
கவைமக நஞ்சுண் டாஅங்
கஞ்சுவல் பெருமநின் னெஞ்சத் தானே" - குறுந்தொகை 324.

- கவைமகனார்

"விலங்கோரார் மெய்யோர்ப்பின் இவள்வாழாள் இவளின்றிப்
புலம்புகழ் ஒருவ யானும் வாழேன்
அதனால், பொதியவிழ் வைகறை வந்துநீ குறைகூறி
வதுவை அயர்தல் வேண்டுவல் ஆங்குப்
புதுவை போலுநின் வரவுமிவள்
வதுவைநாண் ஒடுக்கமுங் காண்குவல் யானே" - கலி 52

- கபிலர்

## தோழி தலைவன் உறவு நிலை

0. களவொழுக்கத்தில், தலைவன் நெருஞ்சிமலர் போன்று இருக்கிறான். அவன் தலைவி, தோழியுடன் மென்மையாகப் பழகுகிறான். பிறர் பார்வையில் படாமல் உறவு கொள்கிறான். அவன் எப்போதும் தலைவியையே நோக்குகிறான். அவனே கற்பொழுக்கத்தில் நெருஞ்சி முள்ளாக மாறுகிறான். அவனிடம் பழைய அன்பும் மென்மையும் இல்லை. தன்புறத்தொழுக்கக் கூர்முனையால் தலைவி, தோழி ஆகியோர் நெஞ்சில் குத்துகிறான். தனக்குரிய இடம் விட்டும் பெயர்கிறான். அழகான நெருஞ்சி மலர்தான், அடி தைக்கும் முள்ளாகிறது. அன்பான தலைவன் தான் நெஞ்சை நொறுக்கும் வன்கணாளன் ஆகிறான். தலைவன் நெருஞ்சி மலராக இருக்கும்போது தோழியும் அவனுக்குக் ~~கைவிளக்காக~~ தேவையாக இருக்கிறாள். அவன் இல்லறம் ஏற்று இசையும் பொருளும் ஈட்டப்பிரியும்போது, அடியிடும் அவனது கால்களைப் பிணிக்கும் அன்புச் சங்கிலியாக மாறுகிறாள். அவன் பரத்தமை பூண்டு நெருஞ்சி முள்ளாக மாறும்போது அவன் முள்முனை ஒறுக்கும் கைவாளாக வடிவெடுக்கிறாள். அவனை மீண்டும் மென்மை கொண்ட நெருஞ்சி மலராக மாற்றத் துடிக்கிறாள்.

0.1. தோழியும் தலைவனும் களவிலும், கற்பிலும் பெறும் பங்கினைத் துறைதோறும் விளக்க முனைகிறது இக்கட்டுரை.

0.2. தோழி தலைவனிடம் கூறும் கூற்றுக 295 பாடல்கள் காணப் படுகின்றன.[1] அவள் குறிஞ்சித்திணையில்தான் அதிகமாக உரையாடுகிறாள். முல்லையில் தலைவனிடம் கூறும் கூற்று மிகமிகக் குறைவாகவே அமைகிறது.[2] கற்பை விடக்களவில்தான் அவள் கூற்று அதிகமாக வருகிறது. வரைவு கடாதல் துறையில்தான் தோழி தலைவனிடம் அதிகமாக உரையாடுகிறாள்.[3]

1. குறை நயக்கும் நிலையில் தோழி தலைவனிடம் கூறும் கூற்றுக 6 பாடல்கள் காணப்படுகின்றன.[4] குறை நயக்கும் தோழி, தலைவியின் உள்ளம் அறியா

நிலையில் தலைவன் கொடுக்கும் கையுறையை ஏற்க மறுத்தும்[5] நகையாடியும்[6] வரைந்து செல்க என முடிவாகக் கூறியும்[7] இயங்குகிறாள். தலைவி அவன் வரவை விரும்பினாலும் அவனைப் பிறகு வருக என ஏவுகிறாள்.[8] தோழி உடன்படும் வரைக்கும் வருந்தாதே நெஞ்சே எனத் தலைவன் நெஞ்சிடம் கூறி ஆற்றிக் கொள்ளும் வகையில் தோழி தலைவனை அலைக்கழிக்கிறாள்.[9]

1.1. பெரும்பாலும் தலைவனுக்குக் குறைநேர்ந்த பிறகு தோழி தலைவியைக் குறை நயப்பாள். தலைமகள் குறிப்பறிந்து தலைமகற்குக் குறை நயக்கும் நிலையில் "எம்பதி வந்தனை செல்மோ" என வேண்டுவதாக ஒரே ஒரு பாடல் அமைகிறது.[10] உயர்ந்த தலைவன், தலைவிபால் கட்டுண்ட காதலால், தோழியின் பின் சென்று கெஞ்சுவதும், அவள் மிஞ்சுவதும் இத்துறையில் காணப்படுகிறது.

2. சேட்படுத்தலில் தோழி தலைவனிடம் கூறும் கூற்றாக 3 பாடல்கள் காணப்படுகின்றன.[11] சேட்படுத்தலில் தலைவியின் அருமையைத் தலைவனுக்குத் தெரிவிக்கவும், அவன் அவள்பால் கொண்ட காதலின் தன்மை அறியவும் தலைவனை அகற்றுகிறாள். தோழி, தலைவியின் குடிச்சிறுமை,[12] இளமை,[13] பேதைமை[14] ஆகியவற்றைக் கூறித் தலைவனைச் சேட்படுத்துகிறாள். தலைவியின் குடிச்சிறுமையைத் தோழி குறிப்பிடும் ஒரே இடம் இத்துறைதான். தலைவனின் உளம் அறியவே அவள் இவ்வாறு கூறுகிறாள்.

3. பகல் இரவுக்குறியில் தோழி தலைவனிடம் கூறும் கூற்றாக 4 பாடல்கள் காணப்படுகின்றன.[15] பகல் இரவுக் குறி கூறும் முறையில் தலைவியை இடத்துய்த்து நீங்கும் தோழி, தலைவனிடம் செல்ல அனுமதி வேண்டுகிறாள்.[16] தோழியிற் கூட்டம் கூடிப் பிரியும்தலைமகனிடத்து, தலைவியின் நிலை கூறி அடிக்கடி வந்து அவளைக் காண வேண்டுகிறாள்.[17] தோழி தலைவனுக்கு அமைக்கும் குறியிடம் திணைக்குத் திணை வேறுபடுகிறது. குறிஞ்சித் தோழி தினைப்புனத்தையும்,[18] மருதத் தோழி வழக்கற்ற பொழிலையும்,[19] நெய்தல் தோழி சிறுகுடிப்பாக்கத்-தையும்[20] குறியிடமாக அமைக்கின்றனர். தினைப்புனத்துக் கிளி கடிய வருவோம்,

கந்தலுக்கு எருமன் கொணர வருவோம் எனக் காரணமும் காட்டுகிறாள் தோழி. குறியிடம் கூறுவதில் தோழியின் அறிவு சிறக்கிறது. இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் பணிந்த தலைவனைத் தோழி பணிந்து வேண்டுவதாக ஒரு பாடலை அமைகிறது.[21] வரைவு கடாவுதலே தோழியின் நோக்கமாதலால் இத்துறையில்தான் தோழி தலைவனிடம் கூறும் கூற்றும் அதிகமாகயுள்ளது. 295 பாடல்களில் 135 பாடல்கள் வரைவு கடாவும் துறையின.[22]

4. வரைவு கடாதல் நிலையில் தோழியின் கூற்று பெரும்பாலும் தலைவியின் அருளை வேண்டும் நிலையில் இருந்தாலும்[23] அதில் கடியும் நிலையும் அமைகிறது. தலைவியை அருளாமையால் தலைவன் கொடுமையன்,[24] வன் வன்கணாளன்,[25] கொடியன்,[26] நாணுதோன்,[27] நாணிலி,[28] வன்டிற்றுறப்பான்,[29] மாதுல் மகன்,[30] அன்பிலாளன்[31] எனப் பழிக்கப்படுகிறான். அவன் மலையும் தான்ற சூள் பேணுச் பொய்த்தான் மலையாகிறது.[32] அவன் அஞ்சுவரு சிறநெறி வருதலால் வான்றோய் வெற்பனுயினும் சான்றோன் அல்லனுகிறாள்.[33] வரைவதில் காலம் தாழ்த்தும்போது, "வல்லை மன்ற பொய்த்தல், வல்லாய் மன்றநீ யல்லது செயலே[34]" எனத் தோழி நேராகவே கடிகிறாள். "யாரை எலுவ யாரேநீ யெமக்கு, யாரையும் அல்லை நொதுமலாளனை" எனச் சாடுகிறாள்.[35] "மாமலை நாடனைச் சான்றோய் அல்லை" எனக் (கேட்பதற்கு) செல்வோமா எனத் தலைவன் காதில் விழும்படியாகத் தலைவியை வினவுகிறாள்.[36] தலைவன் நீட்டித்து வந்துழி தலைவியிடம் "அன்பிலாளன் வந்தனன்" எனக் கூறுகிறாள்.[37] "தலைவனுடன் கொண்ட நட்பு முன்பு இனிதாகிப் பின்பு பகையாகியது" என இடித்துரைக்கிறாள்.[38] இதிலிருந்து தோழி, தலைவனிடம் கொண்ட வெறுப்பும் சினமும் தெரிகிறது. தலைவனைக் கடியும் தோழியின் உரிமையும் தெரிய வருகிறது.

4.1. நெய்தலை விடக் குறிஞ்சியில் தலைவியின் ஆற்றுமை கூறித் தலைவனை வரைவு கடாதல் மிக அதிகமாகக் காணப்படுகிறது. தலைவன் விரும்பும் தலைவியின் அகப்புற அழகின் சிறப்பும், அவை தலைவன் வரையாமையால்

பிரிவாற்றாது மாறுபட்ட நிலையுமே இத்திணையில் இடம் பெறுகின்றன. அகநானூற்றின்கண் நெய்தல் திணையில் தலைவியின் நலனழிவு கூறும் பாடல்கள் இல்லை. முல்லைத்திணையில் உள்ள ஒரே பாடல் அகநானூற்றைச் சேர்ந்தது.[39]

4.2. குறிஞ்சியை விட நெய்தல் திணையில் வரைவு கடாவும் நிலையில் தோழியின் கூற்று, தலைவனிடம் பணிவாகவும் அவன் அருளை வேண்டும் நிலையிலும் அமைகிறது.

4.3. குறிஞ்சித் திணையில் அதிகமாக இரவுக்குறியில்தான் தலைவனின் வருகை நிகழ்வதால், தோழி இரவுக்குறி ஏதத்தை விரிவாகவே கூறுகிருள். இரவுக்குறியில் அவன் வருவதால் தாங்கள் உறும் துன்பத்தையும் எடுத்துக்கூறி, அவனை 'வாரல்' எனத் தடுக்கும் போக்கு காணப்படுகிறது.[40]

4.4. குறிஞ்சித்திணையில் இரவில் வரும் தலைவனிடம் வெளிப்படையாக இரவுக்குறி மறுத்தும், குறிப்பாகப் பகற்குறி மறுத்தும், இருகுறி மறுப்பின் மூலம் தோழி வரைவு கடாவுகிருள். இப்போக்கு அகநானூற்றில் மட்டும் காணப் படுகிறது.[41] பகலில் வருபவனிடம் பல நிலைகளில் குறிமாற்றம் செய்தலும் அமைகிறது.[42] முல்லைத்தோழி இரவுக்குறி வரும் தலைவனிடம், தந்தை காப்பு கூறி அச்சுறுத்துகிருள்.[43] நெய்தல் திணையில் தோழி பகற்குறி மறுத்தும்[44] இரவுக்குறி நேர்ந்தும் வரைவு கடாவுதல் மிகுதியாக அமைகிறது. இரவுக் குறியை விடப்பகற்குறியிலேயே களவொழுக்கம் அதிகமாயுள்ளது. அதனுல் குறி மறுத்து வரைவு கடாவ விரும்புந்தோழி, 'தலைவனை இரவு தங்குக' என வேண்டும் முறையில் குறிப்பாக மறுப்புத்தெரிவிக்கிருள். நெய்தலில் இம்முறை விரிவாகச் சிறப்பாக அமைகிறது. முல்லைத் திணையிலும் தலைவன் இரவுக்குறியில் விருந்தினனைத் தங்கும்படி வேண்டும் முறை அமைகிறது.[45] பகற்குறியிடத்தும்[46] இரவுக்குறியிடத்தும்[47] வாயில் மறுத்தலும் அமைகிறது.

4.5. குறிஞ்சித்திணையில் பகற்குறிக்கண் வந்த தலைவனிடம், செறிப்பறி-வுறுத்தி மறுத்தல் பெரும்பான்மையாகவும், இரவுக்குறியில் சிறுபான்மையாகவும் அமைகிறது. இதில் தாய்அறிந்தமையாலும்[48] திணை முதிர்ச்சியாலும்[49]

அமையும் இற்செறிப்பு என வகைப்படுத்தப்பட்டு, வரைவு கடாதலுக்குரியதாகிறது. திணை முதிர்ச்சி கூறல் குறிஞ்சித் திணைக்கே உரியது.

4.6. நெய்தல் திணையில் அலர் காரணமாகத் தாய் அறிந்தமையும் அதன் விளைவாக இற்செறிப்பு நேர்ந்தமையும் உணர்த்துகிறாள் தோழி.[50] நெய்தல் நிலத்தில் தலைவனின் தேர் வருகை அலருக்குக் காரணமாகக்[51] கூறப்படுகிறது.

4.7. குறிஞ்சித் திணையில் அலர் கூறி வரைவு கடாவும் முறை சிறுபான்மையாகக் கலித்தொகையில் மட்டுமே காணப்படுகிறது.[52] நெய்தலில் குறிஞ்சியை விட அலர் அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது.[53] தலைவன் பகலில் பலருங்காண வருதலே அலருக்குக் காரணமாக அமைகிறது. அலர் மிகுதி வரலாற்று உணர்வுடன் காட்டப்படுகிறது.[54] அலர் மிகுதியால் தங்கள் நலனழிவும் வேதனையும்[55] கூறி, அவன் அருளை வேண்டும் முறை அமைகிறது.

5. உடன்போக்குத் துறையில் தோழியின் தலைவனிடம் கூறும் கூற்றுக 8 பாடல்கள் காணப்படுகின்றன.[56] தோழி, தலைவியின் விருப்பம் கூறி உடன்போக்கில் அழைத்துச் செல்ல வேண்டுவதே பெருவரவினதாக அமைகிறது.[57] தலைவி விரும்பியும், ஆற்றாமையால் தலைவனுடன் வர இயலாமையையும் கூறுகிறாள்.[58]

5.1. தலைவியும் தோழியும் உடன்போக்கு நயந்தும் தலைவன் அதைத் தவிர்ப்போடுதலே பெரும்பான்மையாக அமைகிறது. தலைவன் நயந்து தோழி பொறுக்குமாறு வேண்டுதலாக ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாடலொன்றே மாறுபடுகிறது.[59]

5.2. உடன்போக வந்த தலைவனிடம் தலைவியைச் சேர்த்து அவளைப் பாதுகாக்கக் கூறும் ஓம்படைக் கிளவி தோழியின் அன்பு, பொறுப்பு, உலகியலறிவு ஆகியவற்றைக் காட்டுவதாய் அமைகிறது.[60]

6. செலவுழுங்குவித்தல் துறையில் அமைகின்ற 57 பாடல்களும் தோழி தலைவனிடம் கூறும் கூற்றுகளே உள்ளன.[61] இத்துறையில் குறிஞ்சித் திணையில்

வரைவிடை வைத்துப் பிரியுங்கால் தலைவன் மீள்வானோ என்ற அச்சம் தோழியின் நெஞ்சில் நிழலாடுவதால், அவன் வரவில்லை என்றால் வினையும் பயனையும்,[62] நன்றி மறவாமையையும்,[63] நட்புச் சிறப்பையும்[64] எடுத்துக் கூறிச் செலவழுங்கு-விக்கிறாள். இத்துறையில் தலைவனின் பிரிவைத் தடுக்கிறாள் என்பதை விடச் செல்லும் தலைவனுக்கு நிலைமை கூறி மீண்டும் விரைவில் வரவேண்டும் என்ற குறிப்பையே காட்டுகிறாள் எனலாம்.

6.1. முல்லைத்திணையில் வினைமேற்சென்ற தலைவன் மழைக்காலத்திலும், ~~மறைபொருக்குத் தாம்~~ பொருள் வயின் பிரிந்த தலைவன் இளவேனிலிலும் வருவான்.[65] அவன் கார்ப்பருவத்தே பிரியக் கருதும்போது தோழி செலவை மறுக்கிறாள்.[66] தோழி அவனுக்குச் செலவுடன்பட்டதாக முல்லைத்திணையில் மட்டும் ஒரே ஒரு பாடல் அமைகிறது.[67]

6.2. மருதத் திணையில் தலைவியின் உயர்வு கூறிப் பொய்யொடு மிடைந்தவை தோன்றின், 'மெய்யாண்டுள்ளதோ' என அவன் வாய்மை கூறுகிறாள்.[68] நெய்தல் திணையில் தாயுடன்று அலைக்கும் காலையும் 'அன்னை' என்று அழும் குழவிபோலத் தலைவி தலைவனைச் சார்ந்துள்ளமையைக் கூறுகிறாள்.[69] தலைவியின் ஆற்றாமை கூறிக் கதிர்ப்பருவத்தில் ஊதைக் காற்றுடன் கூடிய மாலைப் போதில் பிரிய விரும்பும் தலைவனைத் தோழி 'நல்ல மடவை மன்ற' எனக் கடிகின்றாள்.[70]

6.3. பாலைத் திணையில் களவு, கற்பு என்னும் இரு நிலைகளிலும் தலைவனைச் செலவழுங்குவிக்கிறாள் தோழி. வரைவிடை வைத்துத் தலைவன் பிரிய நினைக்கும்போது உடன்படாது தலைவியை உடனழைத்துச் செல்ல வேண்டுகிறாள் தோழி.[71] கற்பு வாழ்வில் தோழி தலைவியின் பிரிவாற்றாமை[72] சாக்காடு,[73] இளமை, காம இன்பம் நிலையாமை,[74] சுரத்தருமை,[75] பொருளிழிவு,[76] குழந்தை இன்பம் பெற முடியாமை[77] ஆகியவற்றை எடுத்துக் கூறும் போக்கு அமைகிறது. தலைவியை உடனழைத்துச் செல்வதனும்வேண்டப்

படுகிறது.[78] பாலைத்திணையில் உடனழைத்துச் செல்ல வேண்டும் இப்போக்கு மற்ற திணைகளில் இல்லை. தலைவனில்லாப் போதில் தலைவியைச் சாரும் துன்பம் கூறி அவளையும் உடனழைத்துச் செல்க என வேண்டுகிறாள் தோழி.

6.4. 'பொருள்வயிற் பிரிவில்' என்ற அருவில் சொல் கூறிய தலைவனை 'நல்ல மடவை மன்ற கொண்க'[79] 'நீ மகனல்லை'[80] எனவும் நேராகக் கடியும் போக்கு தோழியின் வரம்பற்ற உரிமையையே காட்டுகிறது.

6.5. இத்துறையில் தோழியின் குரல் பணிவாகவும், அவன் அருளை வேண்டும் நிலையிலும் ஒலிக்கிறது.[80A]

7. பரத்தையிற் பிரிவு என்னும் இத்துறையில் தோழி தலைவனிடம் கூறும் கூற்றுக 35 பாடல்கள் காணப்படுகின்றன.[81] தலைவன் புறத்தொழுகிய நிலையில் தலைவி தோழி ஆகியோர் அன்பையும், மனைபுகும் உரிமையும் இழக்கிறான். வாயில் மறுத்தல் என்னும் துறையில் தோழியின் வரம்பற்ற உரிமையே காணப் படுகிறது. தோழி விரும்பினால் தலைவியே விரும்பாவிடினும் எப்படியாவது ஒப்புதல் பெற்றுத் தலைவியுடன் தலைவனை இணைத்து விடுவாள். பரத்தை மனைக்குச் செல்லும் தலைவன்தலைவியிடம் அஞ்சித் தோழியிடம் தஞ்சம் புகுகிறான். தோழியும் தஞ்சம் என்று கெஞ்சி வந்தவனை ஏற்றுக் கொள்கிறாள் இன்றேல் வாயில் மறுத்தும் விடுகிறாள்.

7.1. ஊரில் அலர் எழும்படியாகப் பரத்தையுடன் தலைவன் நீராடியதால் 'அவனை நாணிலை'[82] எனப் பழிக்கிறாள். அவனைப் பேசவும் விடாமல் 'உரையில நின் மாயம்'[83] எனத் தடுக்கிறாள். அவன் சொற்களைப் பொய்வலை என உருவகிக்கிறாள்.[84] அவன் வாயில் வேண்டும்போது 'சென்றீ பெரும சிறக்கநின் பரத்தமை'[85] 'சென்றீ பெரும, நின் றகைக்குநர் யாரே?'[86] என்று அவனை மறுபடியும் பரத்தையிடமே செல்லும்படி எள்ளி நகையாடி வாயில் மறுக்கிறாள். தலைவன் பரத்தமையால் இகழப்படுதலைக் கேட்டுத் துடிக்கும் தோழி, இதுவோ மற்றுநின் செம்மல் என வினவி, 'பெரும் பெயர் மகிழ்ந,

பெறு தகவோ'[87] என வெகுள்கிறாள். இன்றிரைக்கும் அம்பலொடு எங்கள் தெருவிற்கு வாராதே.[88] எம் சேரிக்கு வாராதே[89] எனத் தடை விதிக்கிறாள். பழமையை நினைவூட்டி அவன் கொடுமையைச் சாடுகிறாள்.[90] பாணனிடமும் தலைவன் கொடுமை கூறப்படுகிறது.[91]

7.2. குறிஞ்சித் திணையில் புறத்தொழுக்கம் மறைக்கும் தலைவனுக்குச் சாந்தம் நாறும் மார்பில் பரத்தையின் கூந்தல் நாற்றம் நாறுவதைக் கூறி வெளிப் படுத்துகிறாள்.[92] தோழியால் வாயில் மறுக்கப்பட்ட தலைவனின் ஆற்றாமை கண்டு தலைவி வாயிலோரத் தலைவன் பள்ளியிடத்திருக்கும்போது, தலைவனின் பொய்ம்மையையும் தலைவியின் அறியாமையையும் இடித்துரைக்கிறாள்.[93]

7.3. மருதத் திணையில் தலைவன் வாயில் வேண்டி வந்தபோது அவன் பரத்தையை வதுவை அயர்ந்தமை,[94] நயந்தமை,[95] புனலாடியமை,[96] பரத்தை தலைவனைக் காணத் தெருவில் சென்றமை,[97] பரத்தையின் மகிழ்ச்சி,[98] புன்செயல்[99] பரத்தையால் தலைவன் உற்ற புன்மை[100] தலைவன் பரத்தையர்க்குக் கொடுத்த சூள்,[101] பரத்தமையால் நேர்ந்த ஊரவர் அலர்,[102] தலைவியின் சிறப்பும் பரத்தையின் புன்மையும்[103] தலைவனின் அன்பின்மை,[104] பாணன் பொய்ம்மை[105], தலைவியின் கோபம்,[106] துன்பம்[107] ஆகியவற்றைக் கூறி வாயில் மறுக்கப்படுகிறது. நெய்தல் திணையில் தலைவியின் துயர், நலனிழத்தல் கூறி வாயில் மறுக்கப்படுகிறது.[108] வாயில் மறுத்தலில் தோழியின் குரலில் எள்ளலும் கடுமையும் தொனிக்கிறது.[108-A]

வாயில் நேர்தலில் தோழி கடிதோச்சி மெல்ல எறியும் நிலை காணப்படுகிறது. தோழியின் சினம் ஓரளவு தணிந்த நிலையில் உள்ளது. தலைவனுக்கு அறிவுரை கூறப்படுகிறது.[109] தலைவனின் பரத்தமைக்குத் தலைவி நாணுதல்,[110] தலைவியை மணப்பதற்கு முன்னிருந்த நிலை, தலைவி வந்தபின் மாறிய நிலை இவற்றை முரண்நிலையில் காட்டுதல்,[111] தலைவி தலைவனைச் சார்ந்திருத்தல்[112] தலைவியின் துயர் மிகுதி,[113] அன்பு

மாறியமை[114] ஆகியவற்றைக் கூறித் தலைவனை வாயில் நேர்கிறாள் தோழி. கலித்தொகையில் வாயில் நேரும் முறை சிறப்பாக அமைகிறது. தலைவியின் துயர், தலைவனின் கொடுஞ்செயல், பாணனிடம் தாங்கள் கொண்ட வெறுப்பு ஆகியவற்றைத் தெளிவாக்குகிறாள் தோழி.[115] நெய்தல் திணையில் தலைவன் தலைவிக்கு இழைத்த கொடுமை, கூந்தல் முரற்சியின் கொடிதாயுள்ளது என இடித்துரைத்தும் கொடுமைக்காகத் தலைவி நாணுதலும் கூறப்படுகிறது.[116]

புறத்தொழுகி மீண்ட தலைவன் யான் அவ்வாறொழுக நீர் நினைத்த திறம் யாது என வினவியபோது தோழி தங்கள் ஆற்றாமை, தலைவன்பாலும் பாணன் மீதும் கொண்ட சினம் ஆகியவற்றை மறைமுகமாகப் புலப்படுத்துகிறாள்.[117]

7.4. தலைவன் வாயில் பெற்றுக் கூடியிருந்தபோது நின் தேர் எங்கு நின்றது என்று நகையாடுதல்.[118] தலைவி நீராடுங்கால் தோழியின் முகத்தில் தோன்றிய குறிகண்டு தலைவன் வினவத்தோழி தலைவனின் சூள்பொய்த்த ஒழுக்கம் கண்டு மாறுபட்டாள் எனல்[119] உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகள் புலந்தபோது பரத்தையரிடமும் இவ்வாறுதான் புலப்பாயோ என எள்ளுதல்[120] ஆகிய நிலைகளில் செயலாற்றுகிறாள் தோழி. வாயில்நேராத தலைமகளின் கொடுமையைத் தலைவன் கூற, நின்தாய் தந்தையருடன் இவளும் கடியும் உரிமை பெற்றவள் என்று கூறுகிறாள்.[121]

8. <u>பொதுநிலை</u>

முல்லைத்திணையில் மட்டும்தான் வினைமுற்றி மீளும் தலைவனிடம் தோழி பேசுகிறாள். அதில் தலைவனின் வருகையால் தலைவியும் தோழியும் அடைந்த மகிழ்ச்சி கூறப்படுகிறது.[122] தலைவன் வாழ்த்தவும் பெறுகிறான்.[123] தலைவன் நன்காற்றுவித்தாய் என்று நன்றி கூறும்போது, அதை ஏற்காமல் காக்கைக்குக் கூறும்படி கூறுகிறாள்.[124] வதுவைநடக்கும் காலத்தும்[125] தலைவன் பள்ளியிடத்திருந்தழியும்[126] தலைவனை வாயார, நெஞ்சம் குளிர வாழ்த்துகிறாள் தோழி.

8.1. உடன்போக்கு மேற்கொண்ட தலைவன் தோழியிடம் 'தமர்க்கு உணர்த்த வேண்டும்' என்றபோது முன்னமே உணர்த்தியமையும் கூறுகிறான்.[127]

8.2. கடிநகர் புக்க தோழியிடத்துத் தலைவன் நன்காற்றுவித்தாய் என்று நன்றி பாராட்டும்போது அடக்கத்தோடு மறுத்துத் தலைவியைப் புகழ்கிறாள்.[128] தலைவியின் அன்பு கண்டும் வியக்கிறான்.[129]

8.3. தோழியிடம் தலைவன் யான் வரையாது ஒழுகுகின்ற நாள் "நீர் என் செய்தீர்?" என்று கேட்கத் தோழி தலைவியின் வேண்டுதலையும், தன் வேண்டுதலையும் அழகுறக் கூறுகிறாள்.[130] இங்குத் தலைவியின் அருளுணர்வும், தலைவிக்காகவே வாழும் தோழியின் அன்புணர்வும் சிறப்பாக விளங்குகின்றன.

8.4. <u>தலைவன் கூற்று</u>

எட்டுத்தொகையில் கலித்தொகையில் மட்டும் தலைவன் தோழியிடம் கூறுவதாகப் பாடல்கள் இல்லை.[131] குறிஞ்சி, நெய்தல் திணைகளில் தலைவன் தோழியால் குறை மறுக்கப்பட்ட நிலையில் தோழியை இரப்பதாகப் பாடல்கள் அமைகின்றன.[132] இப்பாடல்களில் தலைவி தன் உள்ளம் கலந்தமையையும், தன் அன்பையும் தலைவன் காட்டிக்கொள்கிறான்.

8.5. முல்லையிலும்[133] பாலையிலும்[134] தான் பிரிந்திருந்த காலத்துத் தலைவியின் நிலையே ஓங்கியிருந்ததை அன்பு புலப்படக் கூறுகிறான்.

8.6. மருதத்தில் வாயில் மறுக்கும் தோழிக்குத் தன் முதலிரவு நிகழ்ச்சியைக் கூறுகிறான்.[135] தமிழர்களின் திருமண முறையை அறிவிக்கும் வகையாக இப்பாடல் உள்ளது. கற்பு வாழ்வில் தன்னுடன் புதுப்புனலாட விரும்பும் தலைவன் தோழியிடம், களவுக் காலத்தில் தலைவியுடன் ஆடிய நீராட்டைக் கூறிப் புலவி நீக்க முனைகிறான்.[13] தலைவனுக்குக் களவுக்காலத்தில் துணைநின்றவளும், களவை அறிந்தவளும் தோழி ஒருத்தியே. அதனால் அவளிடத்துக் களவுக்கால நிகழ்ச்சியைக் கூறுதல் நயமாகவும் பொருத்தமாகவும் அமைகிறது.

8.7. விளிநிலையில் தலைவன்

வரைவு கடாதல் நிலையில் குறிஞ்சித் திணையில் நாட, சிலம்ப, வெற்ப என்ற திணைநிலைப் பெயர்களாலும்[137] ஐய, பெரும, மார்ப[138] என்ற பொதுப் பெயர்களாலும்தலைவன் விளிக்கப்படுகிறான். நெய்தல் திணையில் துறைவ, சேர்ப்ப, கொண்க, புலம்ப, பரப்பஎன்னும் திணைநிலைப் பெயர்களாலும்[139] பெரும, செல்வ, மார்ப, எனவ, ஐய என்ற பொதுப் பெயர்களாலும்[140] விளிக்கப்படுகிறான். திணைநிலைப்பெயர்கள் உள்ளுறைக்-காகவே விளியாக அமைகிறது. பொதுப் பெயர்களில் உள்ளுறை இல்லை. தான் கூறவந்த கருத்தைச்சொல்லாற்றல் வல்ல தோழி நேராகக் கூறாமல் பொடி வைத்துப் பேசும் போக்கில் மறைமுகமாகத் தலைவனுக்குப் புலப்படுத்தும் முறையில் இவ்வுவமம் அமையப் பெறுகிறது. மேற்போக்காகப் பார்க்கும்போது தலைவனை விளித்தலைப்போன்று தோன்றும். அதே நேரத்தில் தன் கருத்தையும் நுணுகிப் பார்ப்போருக்கு மறைமுகமாகக் கூறுகிறாள். வரைவு கடாவுவதில் மகளிர் உள்ளம் நாணுடைமையால் வரைவு நிலையை நேராகக் கூறவில்லை. அதனால் தங்கள் மனநிலையை உள்ளுறை வாயிலாகவே வைத்து, வரைவு கடாவுகிறாள் தோழி.

8.8. முல்லைத்திணையில் வினைமுற்றி மீண்ட தலைவனிடம் மகிழ்ந்த நிலையில் தோழி பேசுகிறாள். அதனால் திணைநிலைப் பெயராக இல்லாமல் எந்தை, குரிசில், பெரும, தோன்றல் என இவ்வாறு தலைவனின் தலைமையைக் குறிக்கும் சொற்களாலேயே அமைக்கிறாள்.[141] தலைவனை மறைமுகமாகக் கடியும் நிலை இத்திணையில் அமையவில்லை.

8.9. மருதத் திணையில் வாயில் மறுத்தல் நிலையில் தோழி ஊர, மகிழ்ந என்ற திணைநிலைப்பெயர்களாலும்,[142] ஐய, பெரும முதலிய பொதுப் பெயர்-களாலும்[143] விளிக்கிறாள். தலைவனின் பரத்தமையை நேராக எள்ளவும், இடித்துரைக்கவும், கடியவும் முடியாநிலையில் அறிவு சான்ற தோழி திணைநிலைப் பெயர்களின் மூலமாக விளித்து உள்ளுறை அமைக்கிறாள். இங்கு வரலாற்றுக் குறிப்புகளும் அதிகமாக இடம் பெறுகின்றன.

8.10. பாலைத்திணையில் விடலை, ஐய, பெரும, நெடுந்தகை எனப் பெரும்பாலும் தலைமைப் பெயராலேயே விளிக்கிறள்.[144] செலவழுங்குவிக்கும் நிலையில் தோழி நேராகவே தன் கருத்தைக் கூறுவதால் உள்ளுறை தேவையில்லை.

8.11. அவ்வத் திணைகளுக்கேற்பத் தலைவனைத் தோழி விளிப்பது போலவே, தலைவியிடத்து உரையாடும் போதும் அவ்வத் திணைகளுக்கேற்பவே சுட்டுகிறள்.

8.12. தோழி தலைவனை விளிக்காமல் தன் கருத்தை மிகக் குறைவாகவே கூறுகிறள்.[145]

9. ஆய்வு முடிவுகள்

(அ) தோழி தலைவனிடம் குறிஞ்சித்திணையில் வரைவு கடாதல் துறையில்தான் அதிகமாக உரையாடுகிறள்.

(ஆ) தலைவியின் ஆற்றுமை கூறி வரைவு கடாதல் நெய்தலை விடக் குறிஞ்சியில் அதிகமாக உள்ளது.

(இ) நெய்தல் திணையில் இரவுக்குறியை விடப் பகற்குறியில் தலைவன் அதிகமாக வருவதால், பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்தல் அமைகிறது.

(ஈ) தலைவியும் தோழியும் உடன்போக்கை நயப்பதும் தலைவன் அதைத் தவிர்ப்பதும் இயற்கை. தலைவன் உடன்போக்கை நயந்தும் தோழி அதைப் பொறுக்குமாறு வேண்டுதலும் ஒரு பாடலில் மட்டுமே அமைகிறது.

(உ) தோழி தலைவனுக்குச் செலவுடன்பட்டதாகமுல்லைத்திணையில் ஒரே ஒரு பாடல் வருகிறது.

(ஊ) வாயில் மறுத்தல் துறையில் தோழியின் வரம்பற்ற உரிமை தெரிகிறது.

(எ) கலித்தொகையில் வாயில் நேரும் முறை சிறப்பாக அமைந்திருக்கிறது.

(ஏ) முல்லைத்திணையில் மட்டும்தான் வினைமுற்றி மீளும் தலைவனிடம் தோழி பேசுகிறள். மற்ற திணைகளில் வினைமுற்றிய நிலையில் தலைவனிடம் பேசுவதில்லை.

(ஐ) தோழி தலைவனை விளிப்பது திணைக்கேற்றவாறு மாறுபடுகிறது. அந்த விளியில்தான் அவள் குறிப்புப் பொருளை வைக்கிறள்.

## இயல் ஐந்து

### தோழி பிறர் உறவுநிலை

"பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை
ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே" - குறுந்தொகை 292

— பரணர்

"வேலன் வேண்டா வெறிமனை வந்தோய்
கடவு ளாயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே" - நற்றிணை 34

— பிரமசாரி

## தோழி பிறர் உறவு நிலை

0. தோழி பிறரிடம் கூறும் கூற்றுக 90 பாடல்கள் இடம் பெறுகின்றன. செவிலியிடம் மட்டும் 38 கூற்றுகள் காணப்படுகின்றன.[1] அதனால் இக்கட்டுரையில் செவிலியைப் பற்றி விரிவாகவே ஆயப்படுகிறது. செவிலியின் பண்புநலனை அறியும்போது தோழியின் பண்பு நலனும் நன்கு விளங்குமாதலின், செவிலியைக் குறித்து ஈண்டு விளக்குதல் பொருத்தமுடையது. ஒரு குடும்பத்தில் பிறந்த இரு தலைமுறையினராகிய செவிலியும் தோழியும் தலைமக்களின் வாழ்வில் பெரும்பங்கு கொண்டு, அவர்களுக்காகத் தொண்டாற்றும் சிறப்பைப் பெறுகின்றனர். தலைவியின் குழந்தைப் பருவத்தில் அவள் உடலைப் போற்றி வளர்ப்பவள் செவிலி; தலைவியின் இளமைப் பருவத்தில் அவள் உள்ளத்தைப் போற்றிக் காப்பவள் தோழி.[2]

1. செவிலி

நற்றாயின் உடல்நலம், பாலூட்டும் காலத்தில் தாய்ப்பாலைத் தவிர்க்க வேண்டிய தனிக் காரணம், குழந்தையைத் தாயிடமிருந்து பிரிக்க வேண்டிய சூழ்நிலை – இவற்றில் ஒன்றின் காரணமாய் வளர்ப்புத்தாய் முறை ஏற்பட்டது.[3] மிகப் பழங்காலத்தில், வளர்ப்புத் தாய், தாதி என்ற இருவரையும் செவிலி என்ற ஒரு சொல்லால் சுட்டினர்.[4] ஆனால் காலப் போக்கில் குழந்தைக்கும் வளர்ப்புத் தாய்க்கும் இடையில் இயற்கையான பாசம், வேரூன்றி உறுதிப்பட்டதனால் இலக்கண நூலோர் 'செவிலி' என்ற சொல்லுடன் தாய் என்பதை இணைத்துக் குடும்ப உறவுத்தொடரில் மற்றுமோர் சொல்லை உருவாக்கினர்.[5] அவள் 'ஈன்ற தாயர்' என்று சிறப்பிக்கப் படுகிறாள்.[6]

1.0. செவி இயலி என்ற பொருள் கொண்டு, செவி வழியாகப் பெற்ற அறிவினைக் கொண்டு தலைவியைக் குழந்தையிலிருந்து வளர்த்துப் பாதுகாத்துக்

கொண்டு வருபவள் என்பர்.[7] தலைவியோ, தோழியோ, நற்றாயோ அவளைச் செவிலி என்று கூறியதாகவோ, விளித்ததாகவோ சான்றில்லை. அவள் தலைவியின் குடும்பத்துடன் மிக நெருங்கியத் தொடர்பு கொண்டவள்.[8] அவள் பணத்திற்காக வேலை செய்யும் தாழ்ந்த பணிமகள் போலன்றிக் குடும்பத்தில் மேம்பாடான நிலையிலிருந்தாள். தலைவியை வளர்ப்பதில் அன்புணர்வும் சிறந்த கடமையுணர்ச்சியும் காட்டினாள்.[9]

1.1. தோழி செவிலியின் மகள்[10] என்ற ஒரே குறிப்புத்தான் தோழி வரலாறாக அமைகிறது. தலைவி தோழி என்றுமிருவருக்கும் நற்றாயை விட செவிலியிடமே உறவு நெருக்கம் உள்ளது. தலைவிக்குள்ள சிறப்புகள் தோழிக்குத் தரப்படுவதைப் போல நற்றாய்க்குரிய சிறப்புகள் செவிலிக்குவழங்கப்படுகின்றன.[11]

1.2. தலைவியின் தோழியர், கற்பு வாழ்வில் செவிலியர் ஆயினர். அவர்கள் எண்ணிக்கையில் பலராக இருந்தனர்.[12] தலைவியின் உயிர்த் தோழியே பிற்காலத்தில் செவிலித் தாயாகிறாள். தோழி தலைவியைத் தோழி என விளிப்பது போன்றே செவிலித் தாயும் நற்றாயைத் தோழி என்கிறாள்.[13] தலைவிக்குத் தோழி எவ்வளவு நட்புரிமை உடையவளோ, அதே வகையில் நற்றாய்க்குச் செவிலி தோழமை உடையவள்.[14]

1.3. நற்றாய் தலைவியைத் தழுவியதாகவோ, உடன் உறங்கியதாகவோ சான்றில்லை. செவிலித்தாய், தன் மகளான தோழியைத் தழுவியதாகவோ, உடன் தூங்கியதாகவோ கூறவில்லை. ஆனால், அவள் தலைவியின் பக்கத்தில் உறங்குகிறாள்.[15] அவளைத் தழுவுகிறாள்.[16] அவளை மகளாகவே தலைவி கூறப்படுகிறாள்.[17] தலைவியைப் பெற்ற நற்றாய், தன் மகள் நடத்தை பற்றி ஊர் மகளிர் அலரை அறியினும் அது பற்றி அவள் கூறுவதாகப் பாடல் இல்லை. அவள் தலைவியை அலைப்பதாகவோ இற்செறிப்பதாகவோ குறிப்புஇல்லை.

1.4. குழந்தையை ஊட்டி வளர்த்தல், ஓம்புதல், குடும்பத்தாரின் ஒப்புதலுடன் அவள்விரும்பும் தலைவனை மணந்து கொள்ளும் வரை அவளுக்குக்

கற்பித்தல், ஆகியன செவிலித்தாயின் கடமைகள் ஆகின்றன.[18] அவள் பாலூட்டி வளர்க்கும் நிலைக்குப் பிறகும் உணவூட்டும் செயலைத் தன் கடமைகளில் ஒன்றாகப் பெற்றிருக்கிறாள்.[19] தலைவியைப் பிரம்பால் அடிக்கும் உரிமையும் அவளுக்கு உண்டு. தேவைப்படும்போது, அவளை அலைக்கிறாள்.[20] இற்செறிக்கிறாள்.[21] அவள் நற்றாய்க்குச் சமமான நிலையைப் பெற்றிருக்கிறாள்.[22] தலைவி மணப் பருவம் உற்றபோது செவிலித்தாயின் பொறுப்பு பன்மடங்காகி விடுகிறது. தலைவியின் ஒழுகலாறு, தோழியின் நடக்கை, இவர்கள் தலைவனுடன் பழகுதல் முதலியன குடும்ப நிலையைப் பாதிப்பதால், அவற்றைச் செவிலித் தாய் கூர்ந்து கவனிக்கிறாள்.[23] தலைவியின் உடல் வளர்ப்பு நிலையில் மட்டுமன்றி, அவளது புதிய குடும்ப அமைப்பிலும் செவிலித்தாயும் அவளது மகளான தோழியும் முக்கிய பங்கேற்கின்றனர்.[24] ~~தலைவி கருவுயிர்த்தபோதும் செவிலித்தாய் அம்மகவின் அருகில் உறங்குகிறாள்.~~ அதனால்தான் தொல்காப்பியர்,

"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப் படுவள் செவிலி யாகும்"[25]

என்று களவில் செவிலியையே சிறப்பாகக் குறிக்கிறார். தலைவி கருவுயிர்த்தபோதும் செவிலித்தாய் அம்மகவின் அருகில் உறங்குகிறாள்.[26]

தலைவி தலைவனுடன் போன போது அதை நினைந்து புலம்புவதாக நற்றாயின் கூற்று[27] அகத்திணையிலும் செவிலியின் கூற்று களவியலிலும் தொல்காப்பியத்தில் வருகிறது.[28] அந்நிலையில் செவிலியின் அவலம் கல்நெஞ்சையும் கசிவிக்கும்.[29]

1.5. சங்க இலக்கியத்தில், யாய் என்பது நற்றாயையும் அன்னை என்பது செவிலியையும் குறிக்கும் என்பர்.[30] ஆனால் தோழி செவிலியையே யாய் என்றும் அன்னை என்றும் குறிப்பதை நோக்கும்போது இக்கூற்று பொருந்தாததாகிறது.[31]

1.6. அறிவரைப் போன்றே செவிலியும் அறிவுடையவளாக இருப்பதால்[32] தோழி அறிவுடையவளாக இருப்பதில் வியப்பில்லை. இவளுடைய சிறப்பை விளக்கும் முகத்தான் ஐங்குறுநூற்றில் 5 பத்துப் பாடல்கள் ஒதுக்கப்பட்டுள்ளன.[33]

~~1.7. தோழி~~

1.7. தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவியிடம் உரையாடும்போது தன் தாயின் செயல்களையும் சொற்களையும் அவள் அறிந்த நிலைமையையும் கூறித் தலைவி இற்செறிக்கப்படுவாள்; இனிக் காண இயலாது; ஆதலால் விரைந்து வரைக என வரைவு கடாவும் நிலையில் தாயைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. ~~தோழி~~ தலைவியின் களவிற்குத் தடையாக இருப்பதால் அவளை இளைய நெஞ்சினள் வெறுக்கும் நிலையே காணப்படுகிறது.[34] பெண்கொலை புரிந்த நன்னன் போல நிரயம் புகச்சபிக்கவும் படுகிறாள்.[35] தோழி நேராகச் செவிலியிடம் கூறும் முறையில் இரு பாடல்களே இத்துறையில் உள்ளன.[36]

1.7.1. குறிஞ்சி,[37] முல்லைத் தாயர்[38] தலைவியின் களவை நேராக அறிந்த நிலையில் தலைவியைக் காக்காமைக்காக நாணித் தலையிறைஞ்சுகின்றனர். நெய்தல் அன்னையோ அலர் கேட்டவுடனேயே தலைவியைக் கண்காணிக்க ஆரம்பித்து விடுகிறாள்.[39]

1.7.2. தலைவியின் காதலறிந்த தாயரின் செயல் கூறி இற்செறிப்பு நிகழலாம் எனக் குறிப்பாக உணர்த்தித் தலைவனை வரைவு கடாதலே தோழியின் நோக்கமாக அமைகிறது. அலைக்கும் அன்னையைத் தாங்கள் வெறுப்பதையும் அவள் பிடியிலிருந்து விடுபட விரும்புவதையும், தாய் அலைப்பதால் தலைவியின் துன்பத்தையும் தலைவனுக்கு மறைமுகமாக உணர்த்துவதே தோழியின் நோக்கமாக உள்ளது.

1.7.3. தாய் காரணம் அறியாமல் அலமந்து வெறியெடுக்கும் போது தாயின் அன்பும்அறியாமையும் கண்டு மகளின் உள்ளம் இரங்குகிறது. அதைக் கருவியாக்கித் தலைவனின் உள்ளத்தையும் உருக்கி வரைவு மேற்கொள்ளத் தூண்டுகிறாள். தலைவனையே முருகென நினைந்து முகமன் கூறிப்பரவும் தாயின் அறியாமையும்[40] தலைவியின் நோய் அறியாமல் வெறியெடுத்த வருந்தும் ~~வெறியெடுத்த~~ தாயுள்ளத்தின் அன்பையும்[41] கருவியாக்கி, வெறியெடுப்பதைக் கூறுமுகத்தான் இனித் தலைவியைக் காண இயலாது எனத் தலைவனுக்கு உணர்த்தி வரைவு கடாவுகிறாள் தோழி.

1.7.4. களவொழுக்கத்தில் செவிலி அதிகமாக இடம் பெறும் பகுதி அறத்தொடு நிற்றல்தான். இத்துறையில்தான் தோழி செவிலியிடம் அதிகமாகப் பேசுகிறாள்.[42] தலைவனுக்கு வரைவு கடாவிய தோழி தலைவி நிலையைச் செவிலிக்கு அறிவுறுத்த வேண்டியவளாகிறாள். தலைவியின் களவைச் சினமிக்க செவிலியிடம் அறிவுறுத்துவது என்பது எளிய செயலன்று. குற்றம் செய்தவர்கள் தாங்கள் செய்தது குற்றமல்ல என்று எடுத்துக்காட்டி அது அறமே என்று நிலை நாட்டி வரைவு முடிக்க வேண்டுகின்ற நிலையில் தோழியின் சொல்லாற்றல் சிறப்பாக இத்துறையில் அமைகிறது. இதனால்தான் குறிஞ்சிக் கபிலர் ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்த வேண்டி அறத்தொடு நிற்றல் என்னும் இத்துறையைக் கருவியாகக் கொண்டார். செவிலியின் எண்ணத்தைத் தன்முகமாகத் திருப்பும் நிலையில் அன்னாய் வாழி வேண்டு அன்னை என்று பணிவாகத் தாயை அழைக்கும் நிலை இங்குக் காணப்படுகிறது.

1.7.4.1. தலைவி ஆற்றுமையால் மெலிய, செவிலி கண்டு காரணம் வினவும்போது தோழி காதல் உண்டாகிய சூழ்நிலையை விவரித்து, தலைவனின் சிறப்பைக் கூறி, வருந்தும் தலைவியின் வேதனையையும் எடுத்துக் கூறி அறத்தொடு நிற்கிறாள்.[43] தலைவியின் நோய்க்குக் காரணம் அறியாது முருகனால் அணங்குற்றாள் என்று வெறியெடுக்கும் அன்னைக்கு வெறிவிலக்கி அறத்தொடு நிற்கிறாள் தோழி.[44] தமர் மறுத்தவிடத்து தலைவன் பெருமை கூறியும்,[45] நொதுமலர் வரைவின்போது முடிவாகத் தங்கள் கருத்துரைத்தும்[46] அறத்தொடு நிற்கிறாள் தோழி. அறத்தொடு நின்ற பிறகும் ஐயுற்ற செவிலிக்குத் தலைவனின் அன்பையும் தங்கள் நம்பிக்கையையும் புலப்படுத்துகிறாள்.[47]

1.7.5. உடன்போக்கு

தோழி தலைவியிடம் உடன்போக்கு மேற்கொள்ளத் தூண்டும் நிலையில் தாயைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன. அன்னையின் கடுஞ்சொல்லிலிருந்து உய்யவும்,[48] அலைத்தலிலிருந்து உய்யவும்,[49] உடன்போக்கு நிகழ்வதாகக் காரணம் காட்டப்படுகிறது. 'ஆறு தலைக்கும் அறவில் அன்னை தானே இருக்கத் தன்மனையானே'[50] என வெறுக்கப்படுகிறாள்.

1.7.5.1. அன்னையின் இற்செறிப்பிலிருந்தும், துன்புறுத்தலிலிருந்தும் தப்பித்துச் செல்வதற்காகவே உடன்போக்கு மேற்கொள்ளப்படுவதாகக் காட்டப்படுகிறது. இத்துறையில் தோழிக்குத் தன் தாயின் மீதுள்ள சினம், வெறுப்பு, பகையுணர்ச்சி தெரிய வருகிறது. தலைவிக்காகத் தன் தாயையே வெறுக்கும் தோழியின் உள்ளத்தைக் காண முடிகிறது.

1.7.6. வரைவு மலிதல்

வரைவு மலிதலில் மட்டும்தான் தோழி செவிலியைப் பற்றி மகிழ்ச்சியோடு நினைக்கிறாள். ஓங்குமலை நாடனை வரும் என்று கூறியதால் "அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதமாகப் பெரும்பெயர் உலகம் பெறுக" என்று தோழியின் வாயால் வாழ்த்துப் பெறுகிறாள் செவிலி.[51]

1.7.6.1. தலைவன் வரைவுடன் புகும்போதும்,[52] வதுவை நிகழும் போதும்[53] வரைவு மாட்சிமைப்பட்ட பின்பும்[54] புதல்வன் பெற்றுழி வந்த செவிலியிடத்தும்[55] தோழி மகிழ்ந்து கூறுகிறாள். தலைவியின் துன்பம், தலைவனின் பெருமை, செவிலியின்பால் கொண்ட நன்றியுணர்வு, தோழியின் பெருமித உணர்வு ஆகியவை இத்தோழியின் கூற்றில் புலனாகிறது.

1.8. வரைவு கடாதல் துறையில் தலைவன் சிறைப்புறமாக நிற்கும் நிலையில் தலைவனின் உள்ளத்தில் தலைவியின்பால் இரக்கவுணர்வு தோன்றவும், இற்செறிப்பை உணர்த்தவும் வரைவு மேற்கொள்ளவும் தோழி செவிலியைக் கருவியாகவே கொள்கிறாள். அவள் கழறியும் அலைத்தும் தலைவிக்குக் கொடுமை செய்கின்ற 'அறவில் அன்னை'யாகவே காட்டப்படுகிறாள். தலைவனுக்கு வரைவு கடாவும் தோழி அன்னை எடுக்கும் வெறியாட்டைக் கூறும்போது செவிலியைக் கருவியாகவே மாற்றுகிறாள்.

1.8.1. அறத்தொடு நிற்றலில் செவிலியின் உதவி வேண்டியதால் அறிவு சான்ற தோழி அவளைக் கெஞ்சுகிறாள்; கொஞ்சுகிறாள்; மற்ற நேரங்களில்

அன்னை என்று சுட்டப்படும் செவிலி "அன்னாய் வாழிவேண்டு அன்னை" என்று இருமுறை விளிக்கப்படுவதுமல்லாமல் வாழ்த்தவும் பெறுகிறாள். அவளுடைய உள்ளம் கொள்ளும் வண்ணம் காரண காரியங்களோடு தலைவன் தலைவியின் களவைக் கூறி அவள் உதவியையே நாடுகிறாள். களவைக் கற்பாக்குவதையே உயர்ந்த குறிக்கோளாகக் கொண்ட தோழிக்கு, நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும் செவிலியின் உதவி தேவைப்படுவதால் அவ்வுதவி வேண்டும் நிலையிலேயே இத்துறையில் தோழி செவிலி உறவு படைக்கப்படுகிறது.

1.8.2. உடன்போக்கில், தலைவி உடன்போக்கு மேற்கொள்ளத் தோழியை உடன்படுத்த, செவிலி சிறுகோலால் அடிக்கும் அறமற்ற அன்னை-யாகவே காட்டப்படுகிறாள்.

1.8.3. வரைவு மலிதலில் விரும்பியது நிறைவேறியதால் மகிழ்ந்த தோழி, வரைவை அறத்தொடு நின்று நிறைவேற்றிய செவிலியிடம் மகிழ்ச்சியும் நன்றியும் இழையோட வாழ்த்துகிறாள்.

பரிபாடலில் தோழியிடம் புனலணியின்பம் கூறக் கேட்கும் செவிலி பிற இலக்கியம் தரும் செவிலியினின்றும் மாறுபடுகிறாள். புனல் புனலாட்டு என்னும் கருத்தை விளக்க ஒரு உத்தியாகவே இப்பரிபாடல் கொள்கிறது எனலாம்.[56]

## 2. பாணன்

புறத்திணையில் கலைவல்ல பாணர்கள் போற்றப்படுகின்றனர்; மதிக்கப்படுகின்றனர். ஆனால் அகத்துறையில் அதிலும் குறிப்பாக வாயில் மறுக்கும் துறையில் பாணர்கள் பழிக்கப்படும் நிலையிலேயே உள்ளனர். கலைவல்ல பாணரும் விறலியரும் தலைவனைப் பரத்தையர்களிடம் கொண்டு சேர்க்கும் இழிநிலைக்குத் தாழ்ந்ததனாலே, போற்றும் நிலையிலிருந்த அவர்கள் தூற்றும் நிலைக்கு ஆளாயினர். ஏற்றம் பெற்றிருந்தவர்கள் மாற்றம் பெற்றதால்

தூற்றப் பெற்றனர். தோழியும் தலைவியும் பாணனை வெறுக்கும் நிலையிலேயே அதிகமான பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் மேல் உள்ள வெறுப்பெல்லாம் பாணன் தூதாக வந்தபோது அவனை நேரில் கண்டவுடன் எரிமலையாக வெடிக்கிறது. பிள்ளையையும் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டுபவனாக உள்ளான் பாணன். தலைவனைப் பரத்தையர்-களிடம் சேர்த்துத் தலைவியை அழவைத்த பாணன் இப்போது அழுகையைத் தீர்க்க வாயிலாக வருகிறான். இவ்வாய்ப்பைத் தோழி பயன்படுத்திக் கொள்கிறாள்.

2.2. யாழ் தழுவி வரும் 'கல்லாவாய்ப் பாணன்' எனத் தோழி-யால் பழிக்கப்படுகிறான் பாணன்.[57] தலைவனைப் பிரிந்திருப்பவர்களுக்கு அவனுடைய பாணன் பொய் பேசுவதால், உலகில் உள்ள பாணர்களெல்லாம் கள்வர் போல்வர் என்று பாணனைக் கள்வனாக்கி விடுகிறாள் தோழி.[58]

2.3. மருதத் திணையில் தலைவனிடம் வாயில் நேரும் தோழி, தலைவியின் துன்பத்தை விட பாணன் யாழ் தழுவி வருவதுதான் நோதலுக்குரிய-தாகிறது,[59] என்றமையிற்குப் பாணன் வெறுக்கப்படுகிறான். அவன் தலைவனை நல்லவன் என்றாலும் "பொய்கூறும் பாணன், வாயில்தான் நல்லவன்" என்று அவன் காரணமாகத் தலைவனும் தூற்றப்படுகிறான்.[60] "தொழுதாலும் பயனில்லை. இடத்தைவிட்டு உடனே எழு" என்று கடுமையாகவே பாணன் தாக்கப்படுகிறான். அவன் வாயிலாக வரும்போது, அவனது பொய்ம்மையும், தலைவனின் செயலும் கூறி வாயில் மறுக்கப்படும் நிலைதான் காணப்படுகிறது.[61] குயவனிடம் கூறுமுகமாகப் பாணனின் பொய்ம்மை பழிக்கப்படுகிறது.[62] பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் வாயில் வேண்டிப் பெறாது தானே புக்குக் கூடியது கண்டு தோழி பிறகு பாணனிடம் மகிழ்ந்தும் கூறுகிறாள்.[63]

2.4. நெய்தல் திணையில் தலைவி துன்பம் கூறியே பாணனை வாயில் மறுத்தும்[64] நேர்ந்தும்[65] அவனை வேண்டுகிறாள்.

2.5. மருதத்தில் தலைவன் பரத்தமை மேற்கொள்ளக் காரணமான பாணன் தலைவன் பொருட்டுத் தூதாகவந்தபோது, பெரும்பாலும் ஏசலுக்கும் வெறுப்புக்கும் ஆளாகிறான். வாயிலும் மறுக்கப்படுகிறான். நெய்தலில் தலைவி நிலையைத் தலைவனுக்குக் கூறமாட்டாயா எனத் தோழி வேண்டும் நிலையில் அமைகிறான். முல்லையில் தலைவன் பாணனைத் தூதாக விட்டவழி பாணன் பழிக்கப்படவில்லை. குறித்த பருவம் வந்தும் வாராத தலைவனைத் தான் பாணனிடம் பழித்துக் கூறுகிறாள் தோழி.[66]

3. விறலி

3.1. பாணனைப்போன்றே விறலியும் தோழியால் பழிக்கப்படுகிறாள். விறலி பெண்ணானதால் தோழியால் பாணனை விடக் கடுமையாகவே தாக்கப் படுகிறாள். பகையாகவும் கருதப்படுகிறாள். அளவுகடந்த வெறுப்புக்குள்ளாகிறாள். விறலி வந்தவுடன் எல்லோருமஅவரவர் தலைவனைக் காத்துக் கொள்ள எச்சரிக்கை விடுகிறாள் தோழி.[67] அவளை 'மடங்கெழு பெண்டே' என விளிக்கிறாள்.[68] விறலி பற்றிய இரு பாடல்களும் வாயில் மறுப்பாகவே அமைகின்றன.

4. வாயிலார்

4.1. தோழியும் ஒரு வாயிலாதலால் தலைவன் இவளை வாயிலாகக் கொண்டு வாயில் நேர்கிறான். தோழி தானே நேர்ந்த வாயிலாகவும், பிறர் ஏவிய வாயிலாகவும்இருதொழில் புரிகிறாள். பாணன் முதலியோர் பிறர் ஏவலை ஏற்ற வாயிலாகச் செல்வார். தோழி தன்னியல்பாகவே தலைவனுக்குக் குறை நயத்தல் முறையில் வாயில் நேர்வாள். பிறர் கற்பில் தலைவியிடமும் தோழி-யிடமும் வாயிலாகச் செல்வர். தோழி களவில் மட்டும் இந்நிலையில் தலைவியிடம் செயல்படுவாள். கற்பில் பாணன் தலைவியின் வாயிலாகத் ~~தலைவி~~ அமைகிறான் ஆனால் தலைவனால் பாணன் போன்றோர் வாயிலாக அனுப்பப்படுவது போல் இவள் தலைவியால் அனுப்பப்படவில்லை. தானே தலைவியின் வாயிலாக

அமைந்து மற்ற வாயில்களை மறுக்கிறாள். பிறர் பொருளுக்காகக் கடனுற்றவர். தோழி கைம்மாறு கருதாமல் கடமை செய்வாள். பிறர் தோழியால் பெரும்பாலும் மறுக்கப்படுவார்கள். தோழி தன் செயலில் தோல்வியே கண்டதில்லை. தன்னிலையில் தாழ்வுற்ற தோழி பிற்காலத்தில் தலைவி தலைவனிடம் தூதாகவும் நிலைமையைப் பெறுகிறாள். இந்நிலையில் அவள் வடமொழி இலக்கியத்தில் வரும் 'தூதி' நிலைமையை எய்துகிறாள்.

4.2. தொல்காப்பியம் வாயிலாரைக் குறிப்பிடுகிறது.[69] சங்க இலக்கியங்கள் தோழி, பாணன், விறலி ஒழிந்த பிறரை வாயில் என்ற பொதுச் சொல்லால் குறிக்கின்றன. பாணனிடமும் விறலியிடமும் தன் சினத்தைக் காட்டுவது போல் தோழி பிற வாயில்களிடம் தன் சினத்தைக் காட்டுவதில்லை. ஆனால் வாயில்கள் தலைவனின் வாயிலாக வரும்போது தோழி மறுக்கவே செய்கிறாள்.

4.3. முல்லைத் திணையில் தலைவன் வந்தமையால் தலைவி ஊடல் நீங்கியதைத் தோழி வாயில்களுக்கு வாயில் நேரும் முறையில் கூறுகிறாள்.[70] ~~மருதத்திணையில் தலைவி துன்பம் கூறி வாயில் மறுக்கப்படுகிறது.[71]~~ மருதத் திணையில் தலைவியின் கண்கள் பசந்தமை கூறி வாயில் மறுக்கப்படுகிறது.[71] நெய்தல் திணையில் துறைவன் கேண்மையைத் தலைவி நாடமாட்டாள் என உறுதியாகவே கூறி வாயில் மறுக்கப்படுகிறது.[72]

5. <u>பாங்காயினர்</u>

இவர்கள் யார் என்ற குறிப்பு இல்லை. தலைமகளுக்குப் பாங்காயினர் வாயில் வேண்டியவழித் தோழி இக்குடிப் பிறந்ததால் தலைவன் பரத்தனாயினும் ஏற்றுத் தான் ஆக வேண்டும் என்று கூறி வாயில் நேர்கிறாள்.[73]

6. <u>முருகன், அகவன் மகள்</u>, வேலன், கழங்கு.

6.1. முருகன் குறிஞ்சி நிலத்துக்குரிய தெய்வமாக வணங்கப்பட்டாலும், தோழி வெறி விலக்குவதற்கு முருகனைக் கருவியாகக் கொள்கிறாள்.[74] தாய்

தலைவனையே முருகென ஏத்துவதாகக் கூறி வரைவு கடாவுகிறாள் தோழி.[75] 'மடவை மன்ற வாழிய முருகு' எனத் தலைவிக்காகத் தாங்கள் வணங்கும் வழிபடு தெய்வத்தையே எள்ளுகிறாள், அன்புத் தோழி.[76]

6.2. முருகனையும் வேலனையும் எள்ளும் நிலை சிலப்பதிகாரத்திலும் இடம் பெறுகின்றது.[77] வெறியாட்டுச்சடங்கு நிகழ்த்துபவனாகிய வேலனையும் அறத்தொடு நிற்கக் கருவியாக்குகிறாள் தோழி. தலைவியின் மார்பு பசலை உண்ணுமா என வினவும் முகத்தான் செவிலிக்கு உண்மை உணர்த்துகிறாள் தோழி.[78] அகவன் மகளிடம் தலைவனின் நன்னெடுங்குன்றம் பாடுமாறு வேண்டுகிறாள்.[79] பொய்யறியாத கழங்கினிடமும் தலைவியை வருத்துபவன் கானங்கிழவோன்; விறல்வேள்[80] அல்லன் என்கிறாள்.

7. <u>அறிவர்</u>

இவர்கள் அக்காலத்தில் சிறந்த சான்றோர்களாகத் திகழ்ந்திருந்தனர் என்பது தொல்காப்பியத்திலிருந்து அறியலாம்.[81] தலைவி, தலைவனின் பிரிவை ஆற்றாதபோது, முக்காலமும் உணர்ந்திருந்த அறிவரைத்தோழி 'வாடை எக்காலத்து வரும்' என்று வினவுகிறாள். அவரை, "நாயில்லாத ஊரில் பிச்சை ஆர மாந்தி சேமச் செப்பில் உள்ள வெந்நீரைப் பெறுக" என வேண்டுகிறாள் தோழி.[82]

8. இற்செறிப்பு உணர்த்தவும்[83] தலைவனை அடிக்கடி வரக் கூறவும்[84] தினைப்புனக் காவலைத் தலைவனுக்கு அறிவுறுத்தவும்[85] கிளியையும், இற்செறிப்புணர்த்தி வரைவு கடாவத் தினை,[86] தும்பி,[87] ஆகியவற்றுடன் உழவனையும்[88] கருவியாக்குகிறாள். இரவுக்குறி இடையீடு கூறி வரைவு கடாவக் கூகையையும்[89] நிலவையும்[90] பயன்படுத்துகிறாள். முதியிடம் உரையாடு முகத்தான் தலைவனைக் கடிந்து வரைவு கடாவுகிறாள்.[91]

8.1. நெய்தல் நிலத்தில் தலைவனை வரைவு கடாவ மாவினைக் கருவியாக்குகிறாள்.[92] தலைவன் சிறைப்புறமாகயிருந்ததை அறிந்து தானே பேசுவது போன்றும் வரைவு கடாவுகிறாள் தோழி.[93]

8.2. தோழி நற்றாயிடம் உரையாடுவதாகப் பாடல்கள் இல்லை. ஆனால் நற்றாய் தோழியிடம் உடன்போன நிலையில் தன் துன்பம் உரைப்பதாகப் பாடல்கள் அமைகின்றன.[94] செவிலியும் தன் மகளாகிய தோழியிடம் தலைவி உடன்போனதற்கு இரங்கி ஆற்றாது கூறுகிறாள்.[95] உடன்போக்கிற்குத் தோழியே முழுப் பொறுப்பாவதால் உடன் போகிய தலைவியின் துயரத்தைத் தோழியிடம் கூறுதல் பொருத்தமாகிறது.

9. ஆய்வு முடிவுகள்

(அ) தலைவியைப் பற்றிய அலரை அறியினும், நற்றாய் அது பற்றிக் கூறுவதாகப்பாடல் இல்லை. அவள் தலைவியை அலைப்பதோ இற்செறிப்பதோ இல்

(ஆ) செவிலி, தலைவியின் புதிய குடும்பஅமைப்பிலும் முக்கிய பங்கேற்கிறாள். தலைவி மகவீன்றபோது, அக்குழவியின் அருகில் உறங்குவாள்.

(இ) சங்கஇலக்கியத்தில் யாய் என்பது நற்றாயையும் அன்னை என்பது செவிலித்தாயையும் சுட்டும் என்பது பொருந்தாது.

(ஈ) அலர் கேட்ட குறிஞ்சித்திணை செவிலித்தாயும், நெய்தல் திணை அன்னையும் வேறுபாடான முறைகளில் நடக்கின்றனர்.

(உ) களவொழுக்கத்தில் செவிலி அறத்தொடு நிற்றல் துறையில் அதிகமாக இடம் பெறுகிறாள்.

(ஊ) உடன்போக்கு மேற்கொள்ளும்போது, தலைவிக்காகத் தோழி தன் சொந்த அன்னையையே வெறுக்கிறாள்.

(எ) பரிபாடலில் தோழியிடம் புனலாடின்பம் கூறும் செவிலி பிற இலக்கியச் செவிலியிலிருந்து மாறுபடுகிறாள்.

(ஏ) கலைவல்ல பாணரும் விறலியரும் தலைவனைப் பரத்தையரிடம் கொண்டு சேர்க்கும் இழிநிலைக்குத் தாழ்ந்ததனால் தூற்றப்படும் நிலை எய்தினர்.

***

# இயல் ஆறு

## தோழியின் அறிவுத்திறன்

"உறுகண் ஓம்பல் தன்னியல் பாகலின்
உரிய தாகும் தோழிகண் உரனே"
-தொல். பொருள். இளம். 235.

"அறிவே அவளது வடிவு; அன்பே அவளது உள்ளம்
அறமே அவளது செய்கை"
-ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை,
செந்தமிழ்ச் செல்வி, பகுதி 8,
பக். 46.

## தோழியின் அறிவுத்திறன்

0. தோழியின் அறிவுத்திறன் என்னும் இக்கட்டுரையில் தோழியின் சொல்லாற்றல், உவமை, குறிப்புப் பொருளை ஆளும் சிறப்பு, சிறைப்புறக் கூற்றாகப் பேசும் திறம், வரலாற்றறிவு, உளவியல் அறிவு ஆகியன விளக்கப்படுகின்றன.

### 1. தோழியின் சொல்லாற்றல்

தலைவியின் காதல் வாழ்வு வெற்றி பெறவும் அதை நிலை நிறுத்தவும் தன் அறிவையும் சொல்லாற்றலையும் கருவியாகக் கொள்கிறாள் தோழி. அதனால் தொல்காப்பியரும் அவளை அறிவுடையவளாகக் காட்டுகிறார்.[1] அவளது சொல்லாற்றலையும் 'புரைதீர் கிளவி'[2] எனப் போற்றுகிறார். தோழி தன் சொல்லாற்றலால் தலைவன், தலைவி, தாயர் முதலானவர்களைத் தன் சொல்வழி ஒழுகச் செய்யும் திறன் பெற்றவளாகிறாள். அவள் பேசும் சொற்களில் கேட்டாரைப் பிணிக்கும் தகைமையும், நிரந்தினிது சொல்லும் திறமும், வருந்தாமல் திருத்தும் பண்பும், குறிப்பாகப் புலப்படுத்தும்அறிவுக் கூர்மையும் தேவைப்படின் அஞ்சாது பேசும் நெஞ்சுரமும் அமைந்துள்ளன.

1.1. தோழியின் சொல்லாற்றலுக்குக் கபிலரின் ஒரே ஒரு பாடலை எடுத்துக்காட்டாகக் காணலாம்.[3] இரவுக்குறியிடத்துத் தோட்டத்தில், தலைவனைச் சந்தித்த தலைவி மீண்டு வருகையில், அவளைப்பார்த்த செவிலியால் அலைக்கப் படுகிறாள். அப்போது காரண காரியங்களோடு தலைவி குற்றவாளியல்லள் என நிறுவுகிறாள் தோழி. ஒக்குற்றம் நிகழ்ந்த இடத்தின் இயல்பு, குற்றம் சார்த்தியவரின் இயல்பு, குற்றம் சார்த்தப்பெற்றவரின் இயல்பு, அவர் இருந்த சூழ்நிலை ஆகிய நான்கினையும் நன்கு ஆராய்ந்து பார்த்த பின்னரே ஒரு குற்றத்தை உறுதியாக நிறுவ முடியும். அம்முறையில் தோழி, குற்றம் நிகழ்ந்த-தாகக் கூறப்படும் தோட்டம் பேய்கள் நடமாடும்இடமாதலின், செவிலி கண்டது பேயின் உருவமாகவும் இருக்கலாம் எனத் தோட்டத்தின் இயல்பு கூறுகிறாள்.

செவிலியின் கனவு இக்குற்றத்திற்குக் காரணமாயின் அவள் கனவில் கண்ட நிகழ்ச்சிக்கும், தலைவிக்கும் யாதோர் தொடர்புமில்லை என்று செவிலியின் குற்றச்சாட்டை மறுக்கிறாள். தலைவி தனியாக இருந்தாலே அஞ்சுபவள், கூகை குழறினும் நடுங்குபவள் எனக் குற்றம் சார்த்தப் பெற்றவளின் இயல்பு கூறுகிறாள். தந்தை வீட்டிலிருக்கும் நிலை காட்டி வீட்டின் சூழலை விளக்குகிறாள். இவ்வாறு நல்ல வழக்கறிஞரின் சொல்வன்மையுடன் மெய்யைப் பொய்யாகக் காட்டுகிறாள் தோழி. தலைவன் சிறைப்புறத்தானாக இருக்கும்போது அலைக்கும் தாய்க்குக் கூறும்முறையில் தலைவனுக்குத் தலைவி நிலையை உணர்த்தி வரைவு கடாவவும் செய்கிறாள்.

2. தோழியின் உவமைகள்

2.0. தோழி காட்டும் உவமைகள் எளிமையானவை; கூடா உவமை, அற்புத உவமை, தற்குறிப்பேற்ற உவமை முதலியன போலின்றி இயற்கையானவை. தேடி அமைக்கப்படாமல் தன் இயல்பாக வரும் உவமைகளே பொருத்தமானவை-யாகும் என்ற உண்மைக்கு உரிமையானவை.[4] ஏற்புடைய உவமை பொருளை விளக்குவதோடு, அதற்கு உயர்வும் தர வேண்டும் என்ற கூற்றுக்குச் சான்றாக நிற்பவை.[5] இந்த உவமைகள் நன்மையும் இன்பமும் நெஞ்சில் என்றும் நிலை நிறுத்தும் நலம் வாய்ந்தவை.

2.1. தலைவியின் நலன் பொதுவாக ஊர்களுடன் ஒப்பிடப்படுகிறது. தலைவியின் அழகு, சிறப்பு, முக்கியத்துவம், வளப்பம் ஆகியவற்றைக் குறிக்கக் கடற்கரைப் பகுதிகளும், வளப்பமான நகரங்களுமே ஒப்பிடப்படுகிறது.[6] தலைவியின் வனப்பு கொல்லிப்பாவையுடனும் ஒப்பு காட்டப்படுகிறது.[7] சங்ககால மகளிரின் நலம் அழகிய ஒளி பொருந்திய மணிநிறத்திற்கும்,[8] மென்மையான, அழகிய, ஒளி பொருந்திய மா,[9] அசோகம்[10] தளிர்களுக்கும் ஒப்பிடப்படுகிறது; தலைவியின் மேனி பொதுவாகப் பூவிற்கும்,[11] குறிஞ்சி

மலருக்கும்[12] சிவபெருமாவின் செம்மேனிக்கும்[13] பொன்னிற்கும்[14] ஒப்பிடப் படுவது அரிதாகவேஅமைகிறது. தலைவியின் மேனியில் படர்ந்த பசலை பொன்,[15] பீர்க்கமலர்,[16] ஆகியவற்றிற்கு ஒப்பிடப்படுகிறது. தலைவனின் பரத்தமையால் அழிந்த தலைவியின் நலன் சூடாத செப்பில் வைத்த பூவிற்கும்,[17] பொழுது கழி மலருக்கும்[18] திருமுடிக்காரி இளைஞர கவர்ந்த செயலுக்கும்[19] ஒப்பீடுதல் நயமாக உள்ளது.

2.2. தலைவியின் நலன் போலவே கூந்தலும் ஊர்களுடன் ஒப்பிடப் படுகிறது.[20] தலைவன் துயின்ற கூந்தலழகும் கூறப்படுகிறது. கரிய ஒளி பொருந்திய கூந்தலுக்கு மணி நிறமும்,[21] இருளும்[22] உவமிக்கப்படுகிறது. ஐவகை, ஐம்பால் என்று ஐந்தாக முடிக்கப்பட்ட அலங்காரமும் உடன் கூறப்படுகிறது. விரிந்த கூந்தல் வேலுடன் உவமித்தல் புதுமையானது.[23] அழகிய மென்மையான கூந்தல் மயில் தோகைக்கும்,[24] நெடிய கூந்தல் மழை வீழ்ச்சிக்கும்,[25] சுருண்ட கூந்தல் வண்டின் ஒழுகைக்கும்,[26] நெறித்த நெளி கூந்தல் காவிரியின் அறல் மணலுக்கும்[27] உவமிக்கப்படுகிறது. அகவன் மகளின் நரைத்த கூந்தல் சங்கு மணியின் கோப்புடன் ஒப்பிடப்படுகிறது.[28]

2.3. தலைவியின் அழகிய முகம் ஒளி, குளிர்ச்சி, இன்பம் நல்கும் வட்ட வடிவ மதியுடன் உவமிக்கப் பெறுகிறது.[29] நக்கீரரின் பாடல் திலகம் பதித்த மதியை உவமிக்கிறது.[30]

2.3.1. முகத்தில் அழகொழுக வீற்றிருக்கும் பிறை நுதல் நிறமமைந்த பொன்னுடனும்,[31] களங்கமற்ற, ஒளி பொருந்திய வளைந்த வடிவுடைய பிறையுடனும்[32] ஒப்பிடப்படுகிறது. நுதல் தொண்டியுடனும் உவமிக்கப்படுகிறது.[33] நறுநுதல் காந்தளின் மணத்திற்கும்[34] பாரியின் பைஞ்சுனைப் பூத்த தேங்கமழ் புதுமலருக்கும்[35] உவமிக்கப்படுகிறது. தலைவனின் பிரிவில் நலனிழந்த நுதல் அரவுநுங்கு மதிக்குஉவமிக்கப்படுகிறது.[36]

2.4. தலைவியின் உறுப்புகளில் கண்ணே மிகுதியாக உவமிக்கப்படுகிறது. தலைவனின் உளங்கவர்ந்த கண்கள் சிறப்பாகவே காட்டப்படுகின்றன. மனத்தின்

இன்ப துன்ப நிலைகளைத் தோழிக்குக் கண்களே காட்டிக் கொடுத்ததால், அவற்றின் நிலைகளை அவன் தலைவனுக்குஉவமையுடன் விளக்குகிறான். கண்கள் ஊர்களுடனும் உவமிக்கப்படுகின்றன.[37] தலைவியின் கண்களுக்கு மலர்களே பெரிதும் உவமிக்கப்படுகின்றன. மலர்ச்சி, வடிவம், அழகு, குளிர்ச்சி, எழில், உளங்கவர்தல், மென்மை காரணமாக மலருடன் கண்கள் உவமிக்கப்படுகின்றன. கண்களின் சிறப்புக்குரிய நிலையில், ஆய்மலர்,[38] மலர்ச்சி நிலையில், பல்லிதழ் மலர்,[39] இருவிழி நிலையில், இணை மலர்[40] என்று உவமிக்கப்படுகிறது. குளிர்ந்த நிலையில், மழைக்கண்,[41] அழகிய நெடிய நிலையில், அணிமலர் நெடுங்கண்[42] எனக் கண்கள் மலருடன் பொதுவாக உவமிக்கப்படுகின்றன. சிறப்பு நிலையில் குவளை,[43] நெய்தல்,[44] நீலம்,[45] செங்கழுநீர்,[46] தாமரை,[47] பித்திகை,[48] ஆகிய மலர்களோடு உவமை கூறப்படுகின்றன. எளிதில் வாடாத நீருடன் கூடிய புதிய கரிய குவளை போன்ற மலர்கள் கண்களின் எழில், கருமை, மலர்ச்சி ஆகியவற்றிற்கு உவமிக்கப்படுகின்றன. தலைவியின் கலுழும் கண்களை நீருடன் கூடிய மலர்களுடன் உவமித்தல் சிறப்பிற்குரியது. செங்கழுநீர் பித்திகை ஆகிய மலர்கள் செவ்வரி ஓடிய கண்களுக்கு உவமிக்கப்படுகின்றன. கலுழ்ந்த கண்களுக்கு மாரிக் காலத்துப் பித்திகை உவமிக்கப்படுகிறது. தாமரை பெரும்பாலும் பெண்களின் கண்களுக்கு உவமித்தல் இல்லை. தலைவி புனலாடிக் கண் சிவந்த நிலையில் தாமரை உவமிக்கப்பட்டது வியத்தற்குரியது. கண்களை மலர்களுக்குஉவமிப்பது போன்று மலர்களுக்கும் கண்கள்,[49] முகம்,[50] நுதல்,[51] கைகள்[52] ஆகியவற்றை உவமிக்கும் நிலை அமைகிறது. வடிவம், பிறழ்ச்சி, ஒளி, அழகு, நீரில் உள்ள நிலை ஆகியவற்றால் கண்களுக்குக்கயலும் ஒப்பிடப்படுகிறது.[53] தலைவனின் உள்ளம் கவர்ந்த செவ்வரி படர்ந்த கண்கள் 'ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த பகழி' உவமிக்கப்படுகிறது.[54] தலைவியின் மருண்ட கண்கள் மருண்டமான் நோக்கத்துடன் உவமிக்கப்படுகிறது.[55] தலைவியின் இன்பத்தை விடத் துன்ப நிலைக்கே கண்கள் பெரிதும் உவமிக்கப்படுகிறது.

2.5. தலைவியின் அழகிய கூரிய வெண்பற்களுக்கு முல்லை முகை,[56] முருந்து,[57] முத்து,[58] முருக்கின் முகை[59] யுடனும் இன்சொல் கிளியின் சொல்லுடனும்[60] உவமிக்கப்படுகின்றன.

2.6. தலைவியின் பணைத்தோள் மூங்கிலுடனும்,[61] எவ்வி நீழலன்ன நலத்துடனும்[62] உவமிக்கப்படுகிறது. பரத்தை ஒருத்தியின் தோள் உழுந்தின்ற தடிக்கு[63] உவமிக்கப்படுகிறது. தோழி உயர்ந்த உவமையைத் தலைவிக்கும், இழிந்த உவமையைப் பரத்தைக்கும் அமைத்த திறன் வியத்தற்குரியது. வடிவம், மெலிவு, வழவழப்பு, சீரான அமைப்பு ஆகிய நிலைகளில் தோள் மூங்கிலுக்கு உவமிக்கப்படுகிறது. நலமிழந்த நிலையிலும் வேயுடன் உவமிக்கப்படுகிறது.[64] தலைவியின் மார்பம் தாமரை,[65] கோங்கு[66] முகைகளுடனும் வேங்கை[67] அலரி[68] மலர்களுடனும் உவமிக்கப்படுகின்றன. பிற்காலத்தில் பெண்களை முடிமுதல் அடிவரை வர்ணிக்கும் போக்குசங்ககாலத்தில் இல்லை. இயற்கைப் பொருட்களை உவமிக்கும் நிலையில், தலைவனின் உளம் கொள்ளும் வண்ணம் தலைவியின் அழகை, அவலத்தைப் பயன் நோக்கியே உவமிக்கின்றாள் தோழி.

3. <u>தோழி குறிப்புப் பொருளை ஆளும் சிறப்பு</u>

3.0. தான் கண்ட கருப்பொருள்களைத் தோழி, தன்னோக்கத்திற்கு எவ்வாறு பயன்படுத்திக் கொள்கிறாள் என்று இக்கட்டுரையில் ஆயப்படுகிறது. உள்ளுறை இறைச்சி என்பது குறிப்புப்பொருள் என்றே பொதுவாக இங்குக் கொள்ளப்படுகிறது.

3.1. தன்னிடம் களவை மறைக்கும் தலைவியிடம் தோழி அதைத் தானறிந்ததாக நேராகக் கூறின், நாணுடைய அவள், தீங்குவளோ என்ற அச்சத்தால் குறிப்புப் பொருளில் கூறுகிறாள்.[69] தலைவியின் ஆற்றுமையை வெளிப்படையாகக் கூறுதலும்அவனை வரும்படி கூறுதலும் பெண்மைக்கு இழுக்காதலால் குறிப்பாகவே உணர்த்தப்படுகிறது.[70]

3.2. வரைவு மேற்கொள் என்று நேராகக் கூறமுடியாத நிலையில் குறிப்புப் பொருள் மூலம் வரைவு தூண்டப்படுகிறது. இது வரைவு கடாதலில்

தான் அதிகமாக ஆளப்படுகிறது. விலங்கு, பறவைகளின் இல்லறச் சிறப்பு கூறித் தலைவியின் விழைவு தூண்டப்படுகிறது.[71] நேராகப் பொருளீட்டி வந்து வரைக எனக் கூறாமல், வரைய வேண்டிய முறை குறிப்பாக உணர்த்தப் படுகிறது.[72] காவலரின் காப்பும்இவ்வாறே உணர்த்தப்படுகிறது.[73] தலைவியின் தனிமை, இரக்கம் ஆகிய உணர்வுகள் தூண்டப்படுகின்றன.[74] தலைவியின் கொடுமையைச் சுட்டிக் காட்டமுடியா நிலையில் குறிப்பாகக் கடியப் படுகிறது. 'கடுவன் மாரிமொக்குள் புடைத்தல்'[75] 'காந்தள் மலர் பாம்பின் படம் போல் தோன்றுதல்'[76] என இவ்வாறு கருப்பொருள்களால் தலைவியின் கொடுமை கூறப்படுகிறது.[77]

3.3. தலைவன் வரைவு நீட்டித்தலால் தலைவி உறும் வேதனையை நேராக நவிலாமல் குறிப்புப்பொருள் மூலம் கூறினால் அதிகப் பலன் தரும். சான்றாகத் தலைவியின் அச்சத்தை உணர்த்த 'கனவில் புணர்ந்த மந்தி பாறு மயிர்த் திருத்துதல்'[78] கூறப்படுகிறது. இவ்வாறே தலைவியின் வேதனை நலனழிவு,[79] அன்பு,[80] மணந்தால் மீண்டும் பெறும் நலம்[81] முதலிய தலைவி நிலை கூறக் குறிப்புப்பொருளை ஆள்கிறாள் தோழி. தலைவன் வரும் வழி ஏதங்களும் குறிப்புப்பொருள் மூலம் உணர்த்தப்படுகின்றன. வழியில் அவனுக்கு ஏதம் ஏற்படின் தலைவி, உயிர் வாழா நிலை 'கலைஇறக்க மந்தி உயிர்வாழா நிலைக்குக் கூறப்படுகிறது.[82] இன்பத்திற்குத் தடையாயிருத்தல், தேன் உண்ணும் வண்டுகள் அஞ்சி ஆரவாரித்தலக்கு உள்ளுறுத்தப்படுகிறது.[83]

3.4. களவொழுக்கத்தால் அலர் உண்டாதலையும், அலர் கெடுத்துத் தலைவன் வரைவான் என்ற நம்பிக்கையைப் புலப்படுத்தவும், ~~வெறியெடுக்கவும்~~ வெறியெடுக்கவும் அன்னை அறிந்து ~~அறியவும்~~ அலர் காரணமாதலைச் சுட்டவும் குறிப்புப்பொருள் ஆளப் படுகிறது.[84] குறிஞ்சி நிலத்திற்கேஉரிய வெறியாட்டில் அந்நிலக் கருப்பொருள்கள் மட்டுமே ஆளப்படுகின்றன. அன்னை வெறியெடுப்பதை அறிவுறுத்தவும்,[85] ஆய்ந்து காண்போர்க்கு இவ்வெறியாட்டு உண்மை நிலை புலப்படுத்துவதையும்,[86] வெறி- யெடுப்பினும் தலைவன் வருகையை விரும்புதலையும்[87] தான் ஆய்ந்த அறிவால் அறிவுறுத்துகிறாள் தோழி.

3.5. இற்செறிப்பு நிலையில்—தலைவனுக்கு நேராக உணர்த்த முடியா நிலையில்—குறிப்புப்பொருள் சிறப்பாகவே பயன்படுத்தப்படுகிறது.[88] 'பிடியை மேகம் மறைத்தலால் களிறு பிளிறுதல்'[89] 'குரங்கு பழம் கவராமல் இருக்கக் காவலன் வலை மாட்டுதல்'[90] என இற்செறிப்பு உணர்த்தக் குறிப்புப் பொருள்கள் பொருத்தமாக ஆளப்படுகின்றன. மகளிர் நொதுமலர் வரைவை நேராகக்கூறுதலைத் தம் கற்புக்கும் நாணிற்கும் இழுக்காக நினைத்த நிலையில் உள்ளுறை ஆளப்படுகிறது. அதைத் தாங்கள் வெறுப்பதும் உணர்த்தப்படுகிறது.[91]

3.6. தலைவியின் நோய்க்குக் காரணம் அறியாமல் தவிக்கும் தாய்க்கு உண்மை தெரிவிக்கவும், உண்மை அறிந்த நிலையில் தாயின் உள்ளத்தில் எழும் ஐயங்களுக்கு விடை அளிக்கும் நிலையிலும் தோழி குறிப்புப் பொருளைக் கருவியாகக் கொள்கிறாள். தலைவியின் நலனழிவு கண்டு மயங்கும் செவிலிக்குத் தலைவன் தலைவியின் கட்டழகுமையை நவி நாகரிகத்துடன் குறிப்பிடுகிறாள்.[92] உண்மை உணர்ந்த நிலையில் செவிலியின் உள்ளத்தில் ஓடுகின்ற ஐயங்களைப் புரிந்து கொள்ளும் தோழி, தாயின் உள்ளம் விரும்பும்படியாகத் தலைவனின் காதல்,[93] மாறு அன்பு,[94] குடிப்பெருமை,[95] திருவுடைமை[96] ஆகியவற்றையும் எடுத்-துரைக்கிறாள். இருவருக்கும் காதலேற்பட்ட சூழ்நிலையும்[97] ஏதிலாட்டியர் அலர் தூற்றலால் தலைவி பெறும் துன்பமும்[98] எடுத்துரைக்கப்படுகிறது. தோழி குறிப்புப்பொருளின் மூலம் எவ்வாறு தன் கருத்தைக்கூறுகின்றாள் என்பதற்கு இவ்வொரு துறையே சாலும்.[98A]

3.7. இற்செறிப்பு காப்புமிகுதி, தமர் வரைவு உடன்படாமை, பிறர் வரைவு முதலிய இடையூறுகளினால் தலைவனும் தலைவியும் காண இயலா நிலை கண்ட தோழி உடன்போக்கிற்கு வழி வகுக்கிறாள். தமர் விரும்பும் மணமகனுக்குத் தலைவி உடன்படாளாயின் சினந்து அலைத் துன்புறுத்துவர். அதனால் கற்பைக் காக்கும் பொருட்டே பெருமானுடன் போதல் வேண்டும் எனத் தலைவியை உடன் போக்கு மேற்கொள்ளத் தூண்டுகிறாள். இதற்குக் குறிஞ்சி நிலத்தில் வேட்டை ஆடும் வேங்கை, களிறுகிய இரை தப்பியதனால் சினந்து முழங்கும் முழக்கத்திற்கு

அஞ்சிப் பிடி இரிதல் உள்ளுறுத்தப்படுகிறது.[99] தன் நாட்டு யானை போலவே தலைவன் பகைவர்களை வீழ்த்தும் பேராற்றலைக் காட்டி, அச்சத்தக்க வழியில் செல்லினும் அஞ்சற்க என உடன்போக்குத் தூண்டுகிறாள் தோழி.[100] உடன் போக்கு மேற்கொண்டு தலைவன் நாட்டிற்குச் சென்று மணந்து இல்லறம் சிறக்க வாழ்வதற்கு, 'சாந்த நறும்புகைமலைமுழுவதும் மணம் கமழ்தலுக்கு' உள்ளுறுத்தப்படுகிறது.[101] தலைவியை உடன்போக்கில் அழைத்துச் செல்ல வந்த தலைவனுக்கு நல்வினையால் தலைவியைப் பெற்றமை, புலிவிட்டுப் போன மானிறைச்சியை வழிச்செல்வோர் உண்பதற்குக் கூறுகிறாள்.[102] தான் ஓம்படை செய்த கருத்தை நேராகக் கூறாமல் 'சிறுசீ முட எருதிற்குஇருப்பையின் தழையையும் பூவையும் கொடுத்தலை' உள்ளுறுத்துகிறாள்.[103] தலைவி மூப்பினும் அன்புடன் ஒழுக வேண்டும் என்றும் குறிப்பாக அறிவுறுத்துதல் ஏற்புடையதாக அமைகிறது.[104]

3.8. வரைவு மலியும் நிலையில் தலைவன் எடுத்துக்கொண்ட முயற்சி 'கடுவன் சுற்றத்திடம் சென்று மெல்விரல் மந்தியைத் தரவேண்டுமென வேண்டுதலோடு ஒப்பிடப்படுகிறது.[105] தலைவியை வரைய வேண்டித் தமர் முற்றிலில் நிதியம் குவித்தமையும்,[106] தமர் கொடை நேர்ந்தமையும்[107] குறிப்பாய்க் காட்டி மகிழ்விக்கப்படுகிறது. திருமணத்திற்குப் பின் தலைவி மகிழும் நிலை 'வேங்கை மலர் மேலே உதிர யானை இனிது உறங்களுக்கு'ம் உள்ளுறுத்தப்படுகிறது.[108] அலர் அடங்க, தலைவன் வரைவது மகளிருக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.[109] நெய்தல் நிலத்திற்கேற்ப அக்கருப்பொருள்களே உள்ளுறுத்தப்படுகின்றன. தலைவியின் வரைவால் நாடு மாட்சிமைப் படுவதையும் எடுத்துக் கூறுகிறாள்.[110] தலைவன் தலைவியின் மண வாழ்க்கை இரு மலர்கள்—சிறப்பாகத் தாமரையும் புன்னையும் சேர்ந்து—மணம் வீசுதலுக்கு உவமிக்கப்படுகிறது. (உள்ளுறை உவமமாகக் கூறப்படுகிறது.)[111]

3.9. தலைவியின் துன்பம் உணர்ந்து தலைவனைச் செலவழுங்குவிக்க முனைகிறாள் தோழி. தலைவியின் அன்பும் துன்பமும் களிறு காணுப் பிடியின்

புலம்பலுக்கு உள்ளுறுத்தப்படுகிறது.[112] தலைவியின் இளமைக்கு மந்தியின் வன்பறழ் உவமிக்கப்படுகிறது.[113] அவள் பசலைக்கு ஆறலைக் கள்வரைக் கூறியது சிறப்பாக உள்ளது.[114]

3.10. ஆற்றுவித்தலில் பிறருக்குப் புலப்படா நிலையில் சங்கேத மொழி போன்று குறிப்புப்பொருளைப் பயன்படுத்துகிறாள் தோழி. தலைவன் விரைந்து பொருளீட்டி வருவான் என்று நம்பிக்கையூட்டுகிறாள்.[115] தலைவன் பொருளீட்டி வருதலுக்குக் கரடி புற்றிலே கிடந்த பாம்பு நடுங்க அகழுதலுக்கு உள்ளுறுத்தப்படுகிறது.[116] நெய்தல் திணையில் பெரும் பொருளைக் குறிக்க, இறால்மீன் முதலிய கடல்படு பொருள்கள் குறிப்புப்பொருள்களாகின்றன.[117] தலைவியின் பசலை மாயத் தலைவன் வருகின்றமை, அடுக்கம் புலம்ப யானையைக் கொன்று சிங்கம் இயங்குதலுக்கு உவமித்தல் சிறப்பாக அமைகிறது.[118] தலைவனின் அன்பும் உள்ளுறையால் கூறி ஆற்றுவிக்கிறாள் தோழி.[119] தலைவன் அன்புடன் வந்து மகிழ்வித்தலுக்கு ஆண்கரடி தன் குட்டியோடும் பிணவொடும் திளைத்தல் கூறப்படுகிறது.[120] தலைவியின் அலர்த்துன்பம் நீங்க வருவான் என ஆற்று-விக்கிறாள் தோழி.[121] பெண்டிர் நடுங்கும்படி யானை கன்றுடன் புகுதல், தலைவியின் பசலை மாய்தலுக்குக் கூறப்படுகிறது.[122] மீண்டு வந்த தலைவன் தலைவியுடன் இனிது வீற்றிருக்கும் காட்சிக்குக் காடு தழைக்கமழை பெய்தல் உவமிக்கப்படுகிறது.[123]

3.11. வாயில் மறுத்தலில் தலைவனின் கொடுமை சுட்டப்படுகிறது. மருதத்திணையில் பெரும்பான்மையாகவும், நெய்தல் திணையில் சிறுபான்மையாகவும் குறிப்புப்பொருள் பயன்படுத்தப்படுகிறது. தலைவனை நேராகக் கடியாமல், ~~வாயில் மறுக்காமல்~~ குறிப்புப் பொருளாலேயே தோழி வாயில் மறுக்கிறாள். வாயில் மறுப்புக்குக் காரணமும் காட்டுகிறாள். தலைவனின் தண்டாப் பரத்தமை கூறப்படுகிறது.[124] வாளை மீன் தாமரை வருந்த, மகளிர் இரிய, நீரில் பாய்ந்து பிறழ்தலுக்கு உள்ளுறுத்தப்படுகிறது. மருதத்திணையில் பரத்தனை

தலைவன் வாளை,[125] எருமை,[126] நண்டு[127] ஆகியவற்றிற்கு உவமிக்கப் படுகிறான். கள்வன், தாய் சூரப்பிறத்தல்,[128] முதலை தன் பார்ப்பைத் தின்றுதல்,[129] நண்டு வயலை மென்கொடி அறுத்தல்[130] என்று குறிப்பாகக் கூறும் வகையில் தலைவனின் பரத்தமைக் கொடுமையும், தலைவியின் துன்பமும் சுட்டப்படுகிறது.[131] தலைவனின் பரத்தமைக்குக் காரணமான பாணனின் பொய்ம்மையும் பழிக்கப்படுகிறது.[132] தலைவனின் பரத்தமையால் ஊரவர் அலர்தூற்றல் நெய்தல் நிலத்திற்கே உரியது.[133] ஊரவரின் அலர் தூற்றலுக்கு கோழலின் கண் உள்ள புள்ளிமிழ்தல் உள்ளுறுத்தியமை சிறக்கிறது.

3.12. வாயில் நேர்தலில் பரத்தமையை அகற்றும் முறையில் குறிப்புப்பொருள்கள் ஆளப்படுகின்றன. தலைவனின் பரத்தமையை இடித்துக் கூறிப் பரத்தமையை ஒழிக்க விரும்புவதால், தலைவனின் பரத்தமை கடியப் படுகிறது.[134] இவ்வாறு தலைவனை நேராகக் கடிய முடியா நிலையில் குறிப்புப்பொருள் பயன்படுத்தப்படுகிறது.

3.13. குறிப்புப்பொருளை ஆளும் தோழி அவ்வந் நிலத்திற்கேற்ற கருப்பொருள்களையே தலைவனுக்கும் தலைவிக்கும் ஆளுகிறாள். தலைவன் தலைவிக்கு ஏற்ற முறையில் அஃறிணை உயிர்களிலும் பால் வேறுபாடு காட்டுகிறாள். எடுத்துக்காட்டாகக் குறிஞ்சித்திணையில் தலைவனுக்குக் களிறு, கடுவன் போன்றவற்றைக் கூறினால், தலைவிக்குப் பிடி, மந்தி என்னும் முறையில் பால் வேற்றுமையுடன் உள்ளுறுத்தும் திறன் சிறக்கிறது.[135]

## 4. தோழியின் சிறைப்புறக்கூற்றுகப் பேசுந்திறன்

4.0. தோழி சிறைப்புறக் கூற்றை வரைவு கடாதலுக்குக் கருவியாக்கிய முறை, உரிய காரணங்கள், விளையும் பயன் ஆகியவற்றை விளக்கும் முறையில் தோழியின் அறிவு ஆயப்படுகிறது. தோழியின் உளவியல் அறிவிற்குச் சிறைப்புறக் கூற்று சிறந்த எடுத்துக்காட்டாகும். இக்கூற்றைத் தோழி பயன்படுத்துவதற்கு எட்டு காரணங்களைக் கூறலாம்.

(க) எதையும் நேராகக்கூறுவதிலும் குறிப்பாகக் கூறல் வலிமையுடையது.

(ங) ஆடவர், ~~உள்ளக்~~ நேராகக் கேட்பதை விடத் தற்செயலாக மகளிர் நிலையைக் கேட்க நேரும்போது உளம் மாறுதல் இயற்கை.

(ச) தலைவனைக் கண்டவுடன் உளமும் உடலும் மகிழ்ந்து நிற்கும் தலைவியின் உள, உடல் மெலிவைத் தலைவன் அறிய ஒரு வாய்ப்பாகிறது.

(ஞ) வழிஏதத்தை வீரமாக நினைக்கும் தலைவனுக்கு, அதனால் மகளிர் உறும் அச்சமும் துன்பமும் புலப்படுத்தப்பட்டு உளநெகிழ்வை உண்டாக்குகிறது.

(ட) ஊரவரின் அலர், வெறியாட்டு போன்றவற்றை நாணுடைய மகளிர் தலைவனுக்கு நேராகக் கூறாமல் மறைமுகமாகக் கூறப் பயன்படுகிறது.

(ண) இற்செறித்த நிலையில், — தலைவனை நேராகச் சந்திக்க முடியா நிலையில் — உள்ள நிலைமையை அறிவித்தே தீர வேண்டிய இக்கட்டான நிலையில், — இரவுக்குறியிடத்துச் சிறைப்புறத்திருக்கும் தலைவனுக்கு மற்றவர் தெரிந்து கொள்ள முடியா வகையில் அறிவுறுத்துவது எளிது.

(த) தலைவன் வரையா நிலையில் தங்கள் வெறுப்பு, சினம், மன உளைச்சல் ஆகியவற்றைக் கூறித் தலைவனை இயற்பழிக்க முடியும்.

(ந) தலைவி, தலைவனை நேராகக்கூடிய முடியா நிலையும்இதற்குக் காரணமாகலாம்.

4.1. வரைவு கடாதலில் மட்டும்தான் 'தலைவன் சிறைப்புறத்தானாக' என்ற சொல்லாட்சி காணப்படுகிறது. அறத்தொடு நிற்றலிலும்,[136] பரத்தையர் பிரிவிலும் 'கேட்ப' என்ற தொடர்தான் ஆளப்படுகிறது.[137] இக்கூற்று நாடகப் பாங்கில் அமைகிறது.

4.2. வரைவு கடாதலில் தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் பெரும்பான்மையாகவும்,[138] மற்றவர்களிடம் சிறுபான்மையாகவும்[139] உரையாடுகிறான். குறிஞ்சித்திணையில் இரவுக்குறியிடத்துப் பெரும்பான்மையாகவும், பகற்குறியிடத்துச் சிறுபான்மையாகவும் இக்கூற்று நிகழும். குறிஞ்சித் திணையில் யாரும் அறியாமல் மறைந்து கொள்ள ஏதுவாதலானும் அனைவரும் தூங்குவதாலும்

உறங்கா இருவர் பேச அதை ஒருவர் கேட்கும் வாய்ப்பேற்படுகிறது. தோழி, வரைவு கடாவ மேற்கொள்ளும் இவ்வுத்தியைத் தலைவியும் தன் கருத்தைத் தோழியின் மூலம் தலைவனுக்குப் புலப்படுத்தப் பயன்படுத்துகிறாள்.[140]

4.2.1. தலைவன் வரும் வழிஏதம் நினைத்து வருந்தும் தங்கள் எண்ணத்தைத் தோழி சிறைப்புறக் கூற்று மூலம் தலைவனுக்கு அறிவிக்கிறாள். தங்கள் அச்சம் கூறி அவன் வரவைத் தாங்கள் விரும்பாமையைக் குறித்தல்,[141] அலர் கூறினும் பகல் வருதலே நன்று எனத் தெரிவித்தல்,[142] களையையும் நிலவையும் விலக்கி இரவுக்குறியிடையீட்டைக் கூறல்,[143] ஏதம் ஏற்படின் பின் விளைவு கூறல்,[144] தலைவனைப் பழித்தல்[145] என இவ்வாறு ஏவழிஏதத்தைத் தலைவனுக்கு உணர்த்துகிறாள் தோழி.

4.2.2. தலைவன் உறைகொள்ளும் வண்ணம் அவன்விரும்பும் தலைவியின் உறுப்பு நலனழிவைவிளக்கமாகக் கூறுகிறாள் தோழி. கவின் மாறியது ஏன் எனத் தெரியாதது போலத் தலைவியை வினவுதல்,[146] நோய் கண்டு அன்னை வினவின் என்செய்வேன் என நொந்துரைத்தல்,[147] ஊரவரின் அலரால் தலைவியின் ஆற்றுமையைத் தெரிவித்தல்,[148] வரையாமையால் அவள் நலனழிவும் துன்பமும் கூறல்,[149] நலமிழந்தும் தலைவி தலைவன்பால் கொண்ட அன்பைப் புலப்படுத்துதல்[150] தலைவன் வரைந்தால் தங்கள் இடும்பை தீரும் என மகிழ்ச்சியோடு பேசிக் கொள்ளல்,[151] நம் துன்பம் செய்தோன் மலை நீரிலாவது விளையாடலாமா என வினவுதல்,[152] அவன் வரைய வேண்டிய இல்லுறைத் தெய்வம் வணங்கலாம் எனல்,[153] அவன் பெருமை கூறி வரைவானெனல்[154] ஆற்றுமை நீங்கச் சாவதைத் தவிர வேறு வழியில்லை எனத் தலைவன்பால் தாங்கள் கொண்ட நம்பிக்கையிழந்தலைக்கூறல்,[155] தலைவி நிலை கண்டு அவனைப் பழித்தல்[156] தன் நெஞ்சிடம் கூறுவதுபோன்று தலைவனுக்குத் தலைவியின் ஆற்றுமை அறிவுறுத்தல்[157] எனும் இடங்களில் சிறப்புறக்கூற்று நிகழும்.

4.2.3. அலர்

அலர் குறிஞ்சித் திணையை விட நெய்தலில் அதிகமாகப் பயின்று வருவதால் சிறைப்புறக்கூற்றும் நெய்தலில் அதிகமாக வருகிறது. பொதுவாக ஊரவர் அலர் தூற்றலைக்கூறல்,[158] அலரச்சம் கூறல்,[159] தலைவனுடன் கொண்ட கேண்மை அலராயிற்று என நொந்து கூறல்[160] தாங்கள் ஊரவரை வெறுத்தலைப்புலப்படுத்துதல்,[161] அலர் வேகம் கூறல்,[162] அலர் காரணமாக இற்செறிப்பு நிகழ்ந்ததைக்கூறல்,[163] அலர் தூற்றலால் தலைவியின் ஆற்றாமை கூறல்,[164] நெஞ்சிடம் கூறுவதுபோன்று தலைவனுக்கு அலர் அறிவுறுத்துதல்[165] ஆகிய இடங்களிலும் இக்கூற்று நிகழும்.

4.3. வெறியாட்டு நிகழும்போது, தங்கள் காதலையும் தலைவனின் அன்பின்மையையும் கூறல்,[166] கட்டுபார்த்தலின் மூலம் நெடுவேள் அணங்கிற்று என்றுமோ என்று தங்கள் அச்சத்தைப் புலப்படுத்துதல்,[167] பேய்க்கொண்டாள் எனத் தலைவி பழிக்கப்படும் நிலை கூறல்[168] நாடன் கேண்மை வெறி எடுக்கும்படி ஆயிற்று என நொந்து கூறல்[169] வெறியெடுக்குங்கால் தலைவனைச் சந்திக்க இயலாமையை அறிவுறுத்துதல்[170] தலைவிக்கு நோய் செய்தவன் நெடுவேள் அல்லன் தலைவனே எனத்தெளிவாகக் கூறல்[171] தலைவனுக்கு வெறி நிகழ்வதை அறிவுறுத்தி வரைவு கடாதல்[172] நெஞ்சிடம் கூறுவதுபோன்று தலைவனுக்கு வெறி அறிவுறுத்துதல்[173] என இவ்வாறு தலைவன் சிறைப்புறமாகத் தோழி தலைவனுக்கு வெறி அறிவுறுத்துகிறாள்.

4.4. இற்செறிப்பில்தான் சிறைப்புறக் கூற்று அதிகமாயுள்ளது. அலர், வெறியாட்டு முதலிய நிலைகளில் தோழி தலைவனுக்குத் தங்கள்நிலையை உணர்த்தவும் முடியும். தாயின் காப்பு மிகுதியில் தலைவியை விட்டுப் பிரியாத் தோழி தலைவனைத் தனியே சந்தித்தல் இயலாது. தலைவியுடன் தோழியின் செயலையும் கவனித்துக்கொண்டிருக்கும் தாய் அறிவதற்கும் ஏதுவாகும். தலைவி- யிடமும் பேச முடியா நிலை ஏற்படும்போது கிளி, தும்பி ஆகியவற்றுடன் நெஞ்சு ஆகியவற்றுடன் உறவனரயும் விளித்துத் தன் கருத்தைக் கூறியிருக்கலாம்.

4.4.1. திணை முதிர்ந்தமையால் இற்செறிப்பு நிகழும் எனல்,[174] தாய் அறிந்தனளோ எனத் தங்கள் ஐயத்தைத் தெரிவித்தல்,[175] தாய் கடிவாளோ எனத் தன் அச்சத்தைத் தோழி கூறல்,[176] நாடன் கேண்மையைத் தாய் அறிந்தனள் என அவள் சொல்லால், செயலால் ஊகித்தமையை இயம்பி இற்செறிப்பு நிகழும் என முடிவாகக் கூறல்,[177] காப்பு மிகுதி கூறல்,[178] இற்செறிப்பைக் கூறல்,[179] இற்செறிப்பதால் தங்கள் வேதனையைத் தெரி-வித்தல்,[180] இற்செறிப்பு கூறி வேற்று வரைவு நேர்ந்தபின் அவன் புலந்தும் பயனென் என வெறுப்புடன் கூறல்,[181] நெஞ்சுடன் கூறுவது போன்று தலைவனுக்கு இற்செறிப்பு உணர்த்துதல்,[182] என்றவிடங்களில் இக்கூற்று நிகழும்.

தலைவியுடன் உரையாடுவதல்லாமல் தலைவன் சிறைப்புறத்தானாக, செவிலி,[183] உழவர்,[184] கிளி,[185] தும்பி,[186] திணை,[187] ஆகியவற்றை விளித்தும் அவனுக்கு இற்செறிப்பை உணர்த்துகிறாள். நெய்தல் திணையில் மாவினை நோக்கிக் கூறுவது போன்று தலைவனின் போக்கு நீக்கி வரைவு கடாவுகிறாள் தோழி.[188]

4.5. குறியிடம் கூறும்போது தோழி பின்வருநிலையில் சிறைப்புறக் கூற்றைப் பயன்படுத்துகிறாள். குறியிடத்துத் தலைவனை அடிக்கடி வரக்கூறல்,[189] இரவுக்குறி மறுத்தவிடத்து கிளியிடம் உரையாடுவது போன்று தினைப்புனக் காவல் தொடங்குதலையும் கூறல்,[190] தலைவன் வந்தது அறிந்தும் குறியிடத்து அவர் வரவில்லை, இப்போது வரின் நன்றும் எனல்[191] தலைவன் அல்லகுறிப்பட்டு வந்தவிடத்து, குறி பிழைத்தமை தங்கள் தவறல்ல எனக் காரணத்தோடு சுட்டிக் காட்டல்[192] என இவ்வாறு தலைவன் சிறைப்புறமாகக் குறியிடம் கூறுகிறாள் தோழி.

4.6. அறத்தொடு நிற்கும்போதும் தமர் கேட்கவும்[193] செவிலி கேட்கவும்,[194] முருகன்,[195] வேலன்,[196] அகவன் மகள்,[197] கழங்கு[198] ஆகியவர்களை விளித்து உரையாடுவது போன்றும் உண்மை அறிவிக்கிறாள்.

4.7. வரைவு மலியும் போதும், வள்ளைப்பாட்டில் தோழி இயற்பட மொழியத் தலைவி இயற்பழித்தமையாலும், தலைவனை முருகனைப் போலப் பாடியமையாலும், சிறைப்புறத்திருக்கும் தலைவன் கேட்டு வரைவு மேற்கொண்டான் எனக் காரணம் காட்டி மகிழ்கிறாள்; மகிழ்விக்கிறாள் தோழி.[199] பரத்தையர் பிரிவிலும் வாயிலார் கேட்கவும்[200] பாணன் கேட்கவும்[201] தலைவன் கேட்கவும்[202] தோழி தலைவியிடம் உரையாடுகிறாள்.

5. <u>தோழியின் வரலாற்றறிவு</u>

5.0. சங்க இலக்கியச்சான்றோர்கள் தங்களைப் புரந்த மன்னர்களின் வரலாறுகள், தங்கள் காலத்தில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள், தாங்கள் பிறந்த, வாழ்ந்த, கேட்ட, உளங்கவர்ந்த வளப்பமான பகுதிகள் ஆகியவற்றைப் புறநூல்-களில் அமைத்ததோடன்றி அகநூல்களிலும்அமைத்துப் பாடினர். இச்சான்றுகளே அக்கால வரலாற்றை அறியும் கருவூலங்களாக இருக்கின்றன.[203] அரசர்களைப் பற்றியும் ஓரளவு புலவர்களைப் பற்றியும் அறியும் சான்றுகளாகவும் அக்குறிப்புகள் அமைகின்றன.

5.1. புலவர்கள் தங்கள் கருத்துகளையெல்லாம் தோழி பாத்திரத்-திலேயே அமைத்ததால் வரலாற்றுச் செய்திகளையும் அவள் மூலமாகவே கூறுகின்றனர். ஆகவே தோழியின் வரலாற்றறிவை ஆய்வது இக்கட்டுரையின் நோக்கமல்ல. தோழி வரலாற்றுக் குறிப்புகளை அக இலக்கியத்தில் பயன்படுத்தும் அறிவுத்திறனே இங்கு ஆயப்படுகிறது. அந்நிலையில் அமைப்பு நோக்கித்துறைதோறும் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

5.2. நீண்ட அடிகளையுடைய அகநானூற்றில்தான் வரலாற்றுக் குறிப்புகள் அதிகமாக ஆளப்பட்டுள்ளன.[204] தோழியின் கூற்றுக, பாலைத் திணையில், தலைவியை ஆற்றுவிக்கும் நிலையில்தான் மிகுதியாக வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன.[205] பொதுவாகச் சேர,[206] சோழ,[207]

பாண்டியர்[208] என்னும் மூவேந்தர்களும், சிறப்பாக நன்னன்,[209] புல்லி,[210] பாரி[211] என்னும் சிற்றரசர்களும் கூறப்படுகின்றனர். தலைநகரங்களாகிய உறந்தை,[212] கொற்கை,[213] கூடல்,[214] தொண்டி[215] ஆகியவற்றுடன் மாந்தை[215] என்னும் பட்டினமும் மிகுதியாகக் கூறப்படுகிறது. கொல்லியும்[217] வேங்கடமலையும்,[218] காவிரியாறும்[219] புலவர் பாடும் புகழ் பெறுகின்றன. தலைவியின் நலனிற்குத் தொண்டி, மாந்தை, மருங்கூர்ப்பட்டினம்,[220] கழுமலம்,[221] பவத்திரி[222] முதலான சிறந்த உவமைப்பமான-பயனுடைய ஊர்கள் உவமித்தல் பொருத்தமாக அமைகிறது. இவ்வாறு தலைவியின் அழகோடு ஊர்களை உவமித்தல் தமிழிலக்கியத்தில் அன்றி வேறு இலக்கியங்களில் காணாத ஒன்று. பாரியின் பைஞ்சுனையில் பூத்த புதுமலர்,[223] நள்ளியின் கானத்தில் உள்ள நறுமலர் நாறும் நெற்றி,[224] சாய்க்கானத்தில் உள்ள மூங்கில் போன்ற தோள்,[225] மழுவாய் நெடியோன் இயற்றிய வேள்வியுள் நாட்டப்பட்ட நெடுந்தூண் போன்ற பிறர் காணற்கியலாத மார்பகம்[226] என இவ்வாறு தலைவியின் உறுப்புகளின் அழகு வரலாற்றுச் சிறப்புகளுடன் உவமிக்கப்படுகிறது.

5.3. குறைநயக்கும் நிலையில் தலைவன் ஒழுகலாற்றினை மறைமுகமாகக் கூறுகிறாள் தோழி. அஃதை தந்தை அகவன் மகளிருக்கு வேறொரு காரணத்திற்காகப் பிடியைப் பரிசாகக் கொடுத்தது போன்று தலைவனும் தோழியிடம் குறையிரந்தாலும் தலைவியின் பொருட்டே வருகிறான் என்று அவள் நன்கு அறிகின்றாள்.[227] தலைவனைச் சேட்படுத்த விரும்பும் தோழி தலைவியின் இன்மைத் தன்மையைக் கூறுகிறாள். தலைவியின் அமுத கண்களுக்கு, தேர்வண் சோழரின் குடந்தை வாயிலில் உள்ள கிடங்கில் மலர்ந்த நீலமலரும், அலைக்கும் விரல்களுக்குப் பொதியமலையில் பூத்த காந்தளங் கொழுமுகையும் உவமிக்கப்படுகிறது.[228]

5.4. வரைவு கடாவும்போது தலைவியின் பேரழகை ஊர்களோடு உவமித்து இத்தகைய அழகு அரியலாமா? என வினவுகிறாள் தோழி. தலைவியின் அமும் கண்களுக்கு, தொண்டியிலுள்ள உழவரின் கூர்வாள் பட்ட நெய்தல் மலர்

நீரில் அலைகின்ற தோற்றத்தை உவமை கூறி வரைவு கடாவுகிறாள் தோழி.[229] தலைவன் வரும் வழிஏதமும் வரலாற்றுச் செய்திகளுடன் உவமிக்கப்படுகிறது. அதியன் அட்டில் போல ஒலிக்கும் அருவி,[230] வழுதி போர்க்களத்தில் ஏந்திய வேல் போல் மின்னும் மின்னல்,[231] என்பன கூறி வழிஏதம் சுட்டித் தலைவியின் துன்பம் புலப்படுத்தப்படுகிறது. தலைவியின் துன்பத்திற்குக் காரணத்தையும் வரலாற்றுச் செய்திகளுடன் உவமித்து வரைவு கடாவுகிறாள் தோழி. வெளியன்தித்தன் ஆனிரை கொள்ளுவது போல மாலைப்போது வருத்துகிறது.[232] தலைவன் மலையன் கானத்துச் சந்தனம் நாறும் மார்பினனாக எல்லோரும்அறிய வருகிறான்.[233] அவன் வருகை புரையாற்று முன்துறையிலும்[234] உள்ள நாரை இனம் ஒலித்தல் போன்றும் ஆர்க்காட்டின் தெருவில் கள் சாடியில் வண்டுகள் ஒலித்தல் போன்றும்[235] அம்பலாகிறது. கொங்கர் மணிகளை இடுப்பில் கட்டித் தெருவில் ஆடும் உள்ளி விழாவைப்போன்று அலராகின்றது;[236] வாகைப்பறந்தலையில் பசும்பூண் பாண்டியனும் விளைவல் அதிகனும், களிறொடு அழிந்தபோது கொங்கர்கள் ஆர்ப்பைவிடப் பெரிதாக அலரெழுகின்றது[237] என அலர்மிகுதி கூறி வரைவு கடாவுகிறாள் தோழி. அலரால் அன்னை தலைவியின் களவை அறியும் வாய்ப்பேற்படுகிறது. அதனால் கொற்றச் சோழர் குடந்தையில் வைத்த நிதியத்தைக் காப்பது போன்றும் காக்கின்றாள்.[238] பாரியின் பலவுறு குன்றம்போல, கவின் மிக்க தலைவி காப்புக்குட்படுகிறாள்.[239] ஆய் எயினன் மிஞிலியொடு பொருது இறந்தபோது, அவனைக் காணச் செல்லாத சுகைபோன்ற நன்னன் உற்ற துன்பத்தைவிடத் தோழி அதிகமாகத் துன்புறுகிறாள்.[240] அன்னையின் காவலால் இனிய மாந்தையூர் இன்னாததாகியது,[241] எனக் காவல் கடுமையைச் சுட்டுகிறாள். காவல் படுத்தும் தாய் 'பெண் கொலை புரிந்த நன்னன் போல வரையா நிரையம் செல்ல வேண்டும்' என்று சாபம் கொடுக்கிறது தோழியின் உள்ளம்.[242] தலைவியின் பாசிலை விலையாகக் கோசரின் நியமத்தையே கொடுத்தாலும் ஈடாகாது என்று தலைவியின் சிறப்பைக் கூறுகிறாள் தோழி.[243] இல்லையேல் மருதி கடல் புகுந்ததுபோல, தலைவியும் கடல் புகுந்து இறக்க நேரிடும்[244]

என்று அச்சுறுத்தும் முகத்தான் வரைவு கடாவுகிறாள் தோழி. இவ்வாறு தலைவியின் நலனழிவு, ஆற்றாமை, அலர் தூற்றல், தாய் காப்பு முதலிய களவு இடையூறுகளைக் கூறி வரைவு கடாவும்தோழி வரலாற்றுச் செய்திகளையும் ஆங்காங்கே பயன்படுத்துகிறாள்.

தலைவியை உடன்போக்கும் தோழி பழையனின் வேல் போன்ற தலைவனின் பிழையா நன்மொழியை நினைவூட்டி அனுப்புகிறாள்.[245]

5.5. தலைவன் வரைவு மேற்கொண்டதால் பாண்டியருடைய கோடிக்கரைக்கண் அமைந்த துறை அருகில், ஆலமரத்தில், ஒலித்துக் கொண்டு இருந்த குருகுகள், இராமன் மறை சொல்லுங்கால், கைகவிக்க அடங்கியது போன்று தலைவன் வரைவு மேற்கொண்டதால் ஊரவரின் அலர் அடங்கியது என மகிழ்ந்து கூறுகிறாள் தோழி.[246] அவர் இல்லறம் நிகழ்த்தி இனிது காக்க, பாண்டியனின் புகழ் இமயத்திற்கும் வடக்கில் செல்வதாக என்று திருமாலை வேண்டத் தலைவியை அழைக்கிறாள் தோழி.[247]

5.6. ஆற்றுவித்தல் நிலையில்தான் தோழி அதிகமாகப் பல வரலாற்றுக் குறிப்புகளை அமைக்கிறாள்.[248] தலைவன் நீண்டதூரம் செல்வதால் தம்மை மறந்து விடுவானோ என்று அஞ்சி வருந்தும் தலைவியை, அவன் நெடுந் தொலைவு செல்லினும் தலைவியின் அழகு அவரைத் தங்க விடாது என்றும் பெருஞ்செல்வம் பெறுவதாயினும் அவள்பால் கொண்ட அன்பு தலைவனைத் தங்கவிடாது என்றும் ஆற்றுவிக்கிறாள் தோழி. அன்றையத் தமிழகத்தின் எல்லையாக வேங்கடம் கருதப்பட்டதால் வேங்கடத்தையே கடந்து செல்லினும், மொழி மாறுபடுகின்ற வடுகர் தேயத்தையே கடந்து செல்லினும் என்று தலைவனின் நீண்ட பயணத்திற்கு எல்லை காட்டுகிறாள் தோழி. எத்தனையோ மன்னர்கள் வேங்கடத்தை ஆண்டபோதும், புல்லியின் ஆளுகைக்குரிய வேங்கடமே சிறப்பிக்கப் பட்டுள்ளது. புல்லிக்குரிய வேங்கடமலை,[249] மொழி பெயர் தேயமாம்

வடுகர் நாடு,[250] எருமை என்பவனுடைய நாட்டிலுள்ள அயிரியாற்றின் பகுதி,[251] தொண்டர்களின் வழையமல் அடுக்கம்,[252] கண்ணன் எழினியின் தேம்முது குன்றம்,[253] நன்னனின் பொன்படு மலை,[254] மோரியரின் பொன்புனை திகிரி குறைத்த மலைகள்[255] ஆகிய நெடுந்தொலைவு நாடுகளுக்குத் தலைவர் செல்வதாயினும் அவர் தலைவியைப் பிரியார் என ஆற்றுவிக்கிறாள்தோழி. வழியருமையும் நெடுந் தொலைவும் காட்டப்படுகின்ற அப்பகுதிக்குரிய மன்னர்களைப் பற்றிச் சுட்டும்போது அவர்கள் வீரமிக்கவர்களாகவே காட்டப்படுகின்றனர்.

5.7. நாட்டுநிலைப் பகுதிகளைக் காட்டும்போது அதற்குரிய தலைவனுடைய வன்மையும், வீரமும், அப்பகுதியின் வளமும் குறிக்கப்படுகின்றன. தலைவன் செல்லும் பகுதி மொழி மாறுபட்ட நாடாயினும், அது வளப்பமுடைய பகுதி என்றும், அதைக்கொண்ட வள்ளல் ஆளுவதால் அவர்கள் ஊறு செய்யாமல் அவருக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் செய்வர் என்றும் தலைவியை ஆற்றுவிக்கும் முறையில் வரலாற்றுக் குறிப்புகள் காட்டப்படுகின்றன.

5.8. தலைவன் செல்லும்வழியருமை காட்டும் நிலையிலும் வரலாற்றுக் குறிப்புகள் இடம் பெறுகின்றன. அவன் செல்லும்வழியில் பொதிய மலையில் மன்னன் திதியனின் அவையில் இசைக்கும் இன்னிசைபோன்ற அருவிகள் கறங்கும்;[256] மூவனுடைய பற்களைக் கொணர்ந்து வாயிற்கதவுகளில் வைத்திழைத்தான், தொண்டி நகரின் காவலன் சேரன் கணைக்காலிரும்பொறை; அவனுடைய பாசறையில் உறங்காமலிருந்த வீரர்கள் உறங்குமாறு சினந் தணிந்த மதயானையின் ஒற்றை மருப்புப்போன்று விளங்கிய அருவியுடையது;[257] உதியஞ் சேரல் பெருஞ்சோறு கொடுத்த ஞான்று சுற்றியிருந்த இரும்பல் கனிச் சுற்றம் போன்று குறியவும் நெடியவுமாகிய குன்றுகளை உடையது,[258] என்று சுட்டப்படுகிறது.

5.9. தலைவன் நெடுந்தொலைவு செல்லினும் தலைவியின் பேரழகு அவனைத் தங்க விடாது. தலைவன் இவள் நலனை இழக்க விடான் என உறுதியாக வற்புறுத்தும் முறையில் பல வரலாற்று உவமைகள் கையாளப்படுகின்றன.

5.10. தலைவியின் பேரழகுடன் வரலாற்று உவமைகள் சுட்டப் படுகின்றன. தலைவி, முள்ளூர் மன்னன் காரி, ஓரியைக் கொன்று சேரலர்க்கீந்த கொல்லிப்பாவைபோன்றவள்.[259] உறந்தைக்குக் கிழக்கில் உள்ள நெடும் பெருங்குன்றத்துப் பூத்த காந்தட் நறுமலர் மேனியாள்.[260] வானவரம்பனின் வெளியத்தன்ன மாணலத்தினள்.[261] பாண்டியனின் கூடல் அன்ன கூந்தலையும்[262] சோழரின் காவிரி இழிபுனல் வரித்த அறல் என நெறித்த கூந்தலையும் உடையவள்.[263] முருகனின் தண்பரங்குன்றத்து அந்துவன் பாடிய நெடுவரையில் சுனையின்கண் பூத்த நெய்தல்மலர் சூடிய கொண்டை தாழ்ந்துள்ள சிறு புறத்தினள்.[264] அரலைக் குன்றத்து நெடுஞ்சுனையில் ,மலர்ந்த குவளையுடன் கட்டப்பட்ட குளவி நாறும் நுதலினள்.[265] பாண்டியர் பகைவரை அழித்த வேல் போன்ற உண்கண்ணினள்[266] வாணன் சிறுகுடியில் வயலில் மலர்ந்த ஒண்செங்கழுநீர் அன்ன கண்ணினள்;[267] அறத்திற் காக்கும் பாண்டியரின் கொற்கையம் முத்தன்ன நகையினள்;[268] வெல்போர் வானவனின் கொல்லி மலையிலுள்ள மூங்கிலையும்[269] பாண்டியனின் பொருப்பில் விளையும் வேயினையும் ஒத்த தோளினள்,[270] ஆவியின் பொதினியை ஒத்த முலையினள்;[271] ஆஅய் கானத்துத் தலைநாள் அலரி நாறும் அலர்முலை ஆகத்தினள்.[272] பண்ணனுக்குரிய காவிரியின் வடபக்கத்தில் உள்ள நெடுங்கால் மாவின் தளிர் ஏர் ஆகத்தினள்;[273] இவ்வாறு தலைவியின் உறுப்பு நலன்களோடு வரலாற்றுக் குறிப்புகளும் இணைக்கப்படுகின்றன.

5.11. ஊரின் பல வளங்களையும் கூறி இத்தகைய நாட்டையே பெறினும் அவர் நின்னைப் பிரிந்து அங்கே தங்கார் என்று ஆறுதல் கூறும்போதும் வரலாற்றுக் காட்சிகள் மிளிர்கின்றன. இப்பகுதியில் பெருஞ்செல்வத்து மன்னர்களின் சிறப்பும், வெற்றி மேம்பாடும் அவர்களுக்குரிய நாட்டு வளப்பமுமே பெரிதும் பேசப்படுகின்றன. புல்லியின் வேங்கடம்,[274] குட்டுவனின் குடநாடு,[275] கொடுமுடியானுக்குரிய ஆமூர்,[276] சோழரின் நல்நாடு,[277] நந்தன் வெறுக்கை,[278] நன்னனின் ஏழிற்குன்றம்,[279] சோழரின் உறந்தை,[280] சேரலாதன் பகைவர்களை

வென்று மாந்தை முற்றத்து சேர்த்த நிதியம்[281] ஆகியவற்றைப் பெறுவதேயாயினும் தலைவியைப் பிரிந்து அங்கே தங்கான் என்று தலைவனின் அன்பையும், தலைவியின் சிறப்பையும் மறைமுகமாகச் சுட்டி ஆற்றுவிக்கிறாள் வரலாற்று அறிவுடைத் தோழி.

5.12. அலர் கூறி வருந்தும் தலைவியை, வருந்தாதே அவர் விரைவில் வந்து விடுவார் என ஆற்றுவிக்கும் தோழி, அலரின் ஆரவாரத்தையும், கொடுமையையும் உவமிக்கும் நிலையில், வரலாற்றுக் கூறுகள் அமைக்கப் படுகின்றன. பாண்டியன் நேரா எழுவரை ஆலங்கானத்தில் வென்றபோது எழுந்த ஆர்ப்பினும்,[282] விச்சியர் பெருமகன் வேந்தரொடு பொருதபோது குறும்பர் ஊர்களில் உண்டான ஆரவாரத்தைப்போன்றும்,[283] போர்க்களத்தில் தான் விரும்பும் அரசன் வெற்றி பெறும்போது உண்டாகும் ஆரவார ஒலி விவரிக்கப் படுகிறது. வெற்றிக்குப்பின் அரசன் கொண்டாடும் வெற்றி விழாவில் உண்டாகும் ஆர்ப்பும் அலருக்கு உவமையாகிறது. கொங்கர்களை வென்ற பசும்பூட் பாண்டியன் நெடுநகர் கூடலில் வெற்றிவிழா எடுத்த காலத்தும்[284] மத்தி எழினியின் பல்லைப்பிடுங்கி வெண்மணி வாயில் கதவில் பதித்தபோதும்,[285] எழுந்த ஆர்ப்பொலி அலர் ஒலியுடன் ஒப்பிடப்படுகிறது. கொற்கை முன்துறையில் மகளிர் முத்தொடு வலம்புரி சொரியும் உவா நாளில் கடல் ஆரவாரிப்பது போன்றும்[286] ஆங்கலோரியார் பாடிய வழுதுணை தழும்பனது ஊணூருக்கு அப்பால் உள்ள மருங்கூர்ப்பட்டினத்து அங்காடித் தெருவின் ஓசை போன்றும்,[287] அலர் எழுகின்றது. இவ்வாறு அலர் கூறி வருந்தும் தலைவியைத் தேற்றும் முகமாக அலர் எழினும் வருந்தற்க; அவர் விரைவில் வருவர் என்றும் தேற்றுகிறாள் தோழி.

5.13. தலைவன் மீண்டு வருவதாகக் கூறிச் சென்ற பருவம் கண்டு தலைவியை ஆற்றும் நிலையிலும் வரலாற்றுக் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. நீள்மாடக் கூடலார் தமிழ்ச்சுவை நுகரும்பொழுதில் வந்துவிடுவார் என்றும்,[288] வெல்வேல் திரையன் வேங்கட நெடுவரையில் வளர்ந்த வேங்கை மரத்திலுள்ள மயில் தன் பெடையை அகவும் குளிர்ப்பருவத்தே வருவேன் என்றும்[289] தலைவன்

கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்து விட்டது. இரவலர் வரும்போது அந்திரன் கொடுப்பதற்காகத் தொகுத்த யானைபோல உலகம் உவப்ப மேகம் திரள்கிறது[290] ஆலங்கானத்து வேல்கெழு தானைச்செழியன் உறைகழி வாளினைப் போன்று மின்னல் மின்னுகிறது.[291] ஆகவே தலைவர் உடனே வந்து விடுவார் என ஆற்றுவிக்கிறாள் தோழி.

5.13.1. நமக்காகத் தலைவர் வரவில்லையென்றாலும், கைஇய மகளிர் தம் ஆயமோ[ ]டாடும் வையைவார் எக்கர் நுகர்ச்சியையும்[292] வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டு விரும்பியும்[293] கூடல்மா நகரை நினைந்தும் வருவார்,[294] அதனால் கவலற்க என மதுரைமாநகரின் சிறப்புக் கூறி ஆற்றுவிக்கிறாள் தோழி.

5.13.2. இன்றும் வரவில்லையென்றாலும் கங்கை வங்கம் போகுவர் கொல்? வேறெவ்வினை செய்வர் கொல்? என்றும் பெரும்பாலும் தலைவர் பொருள்தேடச் செல்லாத இடத்தையும் சுட்டிக்காட்டுகிறாள் தோழி.[295]

5.14. தலைவன் பிரிவதற்கு முன்பே தலைவி நெற்றி பாழாகிறது. சோழரின் தலைநகரான உறந்தையில் பேரியாற்றின் குளிர்ந்த சோலையில் உத்திரப் பெருவிழா நிகழ்ந்து போன பிற்றைநாளிலே நெருப்பில்லாத ஆற்றிடைக் குறை போன்று, தலைவியின் நெற்றி கவினிழந்து விட்டதே; தலைவன் பிரிந்தால் என்ன ஆவாளோ எனக் கவலுகிறாள் தோழி.[296]

5.15. தலைவன் வினைமுடித்து மீண்டபோது கடுந்திண்டேர்ப் பொருப்பன் வாய்மையன்ன வைகலொடு புணர்ந்து வருகிறான் என்று அவன் வருகை சிறப்பிக்கப்படுகிறது.[297] கரிகாலன் முன் நிற்க மாட்டாராய்ச் சூடா வாகைப் பறந்தலையிற் கரிகாலன் வெற்றிபெற ஒன்பது குடையும் நண்பகல் ஒழித்து பீடின் மன்னர் ஓடியது போன்று நீ ஓடுவாய்[298] என வாடையை நோக்கிக் கூறி தலைவனின் வரவிற்குப் பண்ணு பாடுகிறாள் தோழி.

5.15.1. பிரிந்த தலைவன் மீண்டவுடன் தலைவியை நன்காற்றுவித்தாய் என்று நன்றி கூறுகிறான். பொரியவின் கள்கமழ் பொறையாறு அன்ன இவள் நற்றோள் சிறக்கவும்,[299] துறைகெழு மாந்தையன்ன இவள் நலம் மாண்புறவும் நீ வந்தனையோ[300] என்று இவள் மகிழ்கிறாள். நீ வருவாய் என்று கரைந்த காக்கைக்கு, நள்ளி கானத்தில் உள்ள ஆயிரை பயந்த நெய்யினை, தொண்டி முழுதும் விளைந்த வெண்ணெல் சோற்றில் பெய்து எழுகலத் தேந்தினும்[301] சிறிது எனக் ~~காக்கைக்கு~~ நன்றி கூறுவதுபோன்று நான் ஆற்றவில்லை என்று அடக்கத்தோடு தன் வரலாற்றறிவு கலந்து மறுக்கிறாள் தோழி.

5.16. தலைவியின் துன்பம் கூறித் தலைவனைச் செலவழுங்குவிக்கிறாள். தோழி. ~~தலைவியின்~~ கடலனுக்குரிய விளங்கில் அன்ன தலைவியின் அம்மெழில் உண்கண் கலுழ்கிறது.[302] பிட்டனுக்குரிய குதிரைமலையின் பக்கத்திலுள்ள நெடுஞ்சுனையில் மழையில் பூத்த தண்கமழ் நீலம்போல பனிக்கிறது.[303] அவியனுக்குரிய வீரட்டத்து உள்ள மூங்கிலைப் போன்ற தோள் நெகிழ்கிறது.[304] இவ்வாறு கண் கலுழ, தோள் நெகிழ்ந்த தலைவியைப் பிரிந்து செல்வதா எனக் கேட்டுச் செலவழுங்குவிக்கிறாள் தோழி. கோட்டூர்ப் பறந்தலையில் வாகை சூடிய பண்ணி என்பவன் அப்போர்க்களத்தில் செய்த களவேள்வியைவிடச் சிறந்த பயனையே பெறுவதேயாயினும் செல்லற்க[305] என்று தலைவனின் பிரிவைத் தடுக்கும் முயற்சியில் தோழி வரலாற்றுக் குறிப்புகளை அமைக்கிறாள்.

5.17. தோழி தலைவனை வாயில் மறுக்கும் நிலையில் வரலாற்றுக் குறிப்புகள் ஆங்காங்கே உள்ளன. தலைவன் பரத்தையுடன் நீராடியதும்,[306] பரத்தையைக் கவர்ந்ததும் அலருக்குக் காரணமாகின்றன.[307] மன்னர்கள் ஒருவருடன் ஒருவர் வென்றபோது எழும் ஆர்ப்பொலியை ஒத்தும் அதைவிட மிகுதியாகவும் பரத்தையுடன் தலைவன் ஆடியபோது அலர் எழுந்ததாக உவமிக்கப் படுகிறது.

5.17.1. எவ்வியின் நீழல் அன்ன பரத்தையின் பணைத்தோள் அழகையும்,[308] அட்டவாயிலன்ன இருங்கதிர்க்கழனியன்ன பெருங்கவினையும்,[309]

பழையன் ஒக்கிய வேல் போன்ற பிழையாக் கண்ணழகையும்[310] கூறி, நீ இத்தகையவரிடமே செல்க என வரலாற்றுக் குறிப்புடன் வாயில் மறுக்கிறாள்.

5.17.2. தலைவியின் வீட்டில் தங்காமல் தலைவன் பரத்தையின் வீட்டில் தங்கியபோது, பரத்தை மகிழ்ச்சி அடைகிறாள். பழையன் மாறனைக் கிள்ளிவளவன் கூடலில் சென்று, வென்று ஊர் கவர்ந்தபோது, கோதை மார்பன் அடைந்த உவகையைப் போல் இருந்ததாம், அவள்மகிழ்ச்சி.[311] பரத்தையின் இம்மகிழ்ச்சியால் தலைவி சிறைமுற்றிருப்பதைக் கூறி வாயில் மறுக்கிறாள் தோழி. பரத்தை தலைவியின் வீட்டில் வந்து உறவாடும்போது, 'பாணனுடன் மற்போரிட்டு ஆரியப் பொருநன் கிடக்கை' நோக்கிக் கணையன் நாணியதைப் போன்று தோழி நாணுகிறாள்.[312]

5.17.3. தலைவியின் பேரழகு தேனூர்,[313] இருப்பை,[314] ஆமூர்,[315] ஆர்க்காடு[316] முதலிய ஊர்களோடு உவமிக்கப்படுகிறது. தலைவியின் மாணலம் இழக்குமாறு செய்த தலைவனின் கொடுமையைச்சுட்டி வாயில் மறுக்கிறாள் தோழி. தொண்டி அன்ன[317] தலைவியின் நலத்தைத் தந்து செல்க என்று வேண்டும் முறையிலும் வாயில் மறுக்கப்படுகிறது. பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர் தனிரும் வெய்ய உவர்க்கும் தலைவனிற் மனமாற்றமும் அன்பின்மையும் சுட்டப் படுகிறது.[318]

5.17.4. விறலி தலைவனின் வாயிலாக வரும்போது முள்ளூரில் மலையனது ஒருவேற்கு ஓடிய ஆரியர்போல, தோழிக்கு அஞ்சிய நிலை கூறப் படுகிறது.[319]

5.18. தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்த செய்கையானது, பகைவர்களை வென்று தோற்றோடச் செய்த நன்னன், அப்பகையரசின் உரிமை மகளிரைப் பற்றி வந்து அவர் தலையை மழித்து அக்கூந்தலைக் கயிறாகத் திரித்து அக்கயிற்றாலே அப்பகைவரது யானையைப் பிணித்த கொடுமையினும் கொடியதாயிருந்தது எனத் தலைவன் கொடுமையை இடித்துரைத்தும்[320]

தலைவி நலனழிவு குறித்தும்[321] அன்னியும் இருபெரு வேந்தரும் பொருது, அழித்த புன்னை விழுமம் போன்ற நன்றிலை குறித்தும்[322] தோழி வாயில் நேர்கிறாள். இவ்வாறு வரலாற்றுச் செய்திகளைத் தகுந்த இடம் நோக்கி அமைக்கும் தோழியின் அறிவு வியத்தற்குரியது.

6. தோழியும் உளவியலும்

6.0. உளவியல்துறை பிற்காலத்தது. ஆயினும் அது இலைமறை காயாக, இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது.

6.1. தோழியும் ஊக்கியும்

உளவியலில் வரும் ஊக்கிகள் (Motivation ) ஓர் உயிரியின் நடத்தைக்கு அடிப்படையானவை ஆகும். ஒருவனின் விடாய்கள் (Needs) உந்துகள் ( drives ) இயல்பூக்கங்கள் (Distincts ) ஆகியன ஊக்கியில் அடங்கும். ஊக்கியின் இயக்கமானது ஓர் உயிரியின் நடத்தையைத் தொடங்கி வைத்துப் பிறகு, அந்த நடத்தை ஒரு குறிக்கோளை அடையும்வரை தொடர்ந்து நடக்கச் செய்வது. இத்துடன் அந்த நடத்தையைக் குறிப்பிட்ட வழியில் ஈடுபடுத்துவதும்அதுவே ஆகும்.[323] தோழியைப் பொறுத்தமட்டில், அவளுடைய விடாய்களும், உந்துகளும் தலைவிக்காகவே அமைகின்றன. அவளுடைய இயல்பூக்-கங்களும் தலைவியின் நலனுக்கே பயன்படுகின்றன.

6.1.1. ஊக்கியின் அடிப்படைத் தன்மைகள் மூன்றாகும். அவை (1) சக்தி (Energy ); (2) விடாமுயக்கம் (Persistance ); (3) மாறுபடும் இயல்பு (Variability) என்பன.[324] தோழி தலைவியின் நல்வாழ்வுக்காக, சிந்தனை, சொல், செயல் வழியாகத் தன் சக்தியை வெளியிடுகிறாள்.

6.1.2. ஊக்கியால் தூண்டப்பட்ட ஒருவன் எளிதில், அதற்கான நடத்தையைக் கைவிடமாட்டான். இதுவே விடாமுயக்கம் எனப்படும்.[325]

தலைவியின் திருமணம் என்ற குறிக்கோளால் தூண்டப்பட்ட தோழி, தன் முயற்சியைக் கைவிடாமல், விடாமுயற்சிக்கு உட்படுகிறாள்.

6.1.3. ஊக்கியால் தூண்டப்பட்ட ஒருவன் தன்குறிக்கோளை அடைவதற்கு ஒரே மாதிரியான நடத்தையில் ஈடுபடாமல், பல்வேறு செயல்களின் மூலம் குறிக்கோளை அடைய முயல்கிறான். இதை மாறுபடும்இயல்பு என்று உளநூலார் உரைப்பர்.[326] தலைவியின் நல்வாழ்வைக் குறிக்கோளாகக் கொண்ட தோழி பகல் இரவுக்குறி இடையீடு, நொதுமலர் வரைவு, இற்செறிப்பு, ஊரவரின் அலர், திணைமுதிர்ச்சி, வெறியாட்டு ஆகியவற்றை உணர்த்துதல், சிறைப்புறமாகப் பேசுதல் என்று தலைவன் மாட்டும், அறத்தொடு நிலை என்று செவிலி மாட்டும் எதுவும் பயன்தராவிடின் உடன்போக்கு என்ற முறையிலும் மாறுபட்ட இயல்புகளின் வழி செயல்படுகிறாள். இவை களவுக்காலத்தில் நிகழ்வன. கற்பிலும் வாயில் மறுத்தல், செலவழுங்குவித்தல், ஆற்றுவித்தல் என்னும் முறைகளில் இவ்வியல்பினை வெளிப்படுத்தி நல்வாழ்வுக்கு உறுதுணையாகிறாள்.

6.1.4. ஊக்கியை முக்கியமாக இருவகையாகப் பிரிப்பதுண்டு. அவை உடல்சார்பு ஊக்கிகள் (Pysiological Motivatioh) உளச்சார்பு ஊக்கிகள் (Psychological Motivation) என்பன. உடல்சார்பு ஊக்கிகளை முதன்மை ஊக்கிகள் ( Primary ) என்றும் உளச்சார்பு ஊக்கிகளைத் துணைமை ஊக்கிகள் (Secondary ) என்றும் உரைப்பர். தாகம், பசி, தூக்கம், பால் உணர்ச்சி ஆகியன உடல்சார்பு ஊக்கிகள். கூடி வாழ்தல், பாதுகாப்பு தருதல், அன்பு காட்டல் ஆகியன உளச்சார்புஊக்கிகள்.[327] தோழியிடம் உடல் சார்பு ஊக்கிகளின் வெளிப்பாடு புலப்படுவதில்லை. அவள்தலைவியுடன் ஒருங்கு வாழ்தல், அவளுக்காகப் பாதுகாப்பு தருதல், அன்பு காட்டுதல் ஆகிய உளச்சார்பு ஊக்கிகளுக்கு என்றும்நிலைக்களனாக நிலவுகிறாள்.

6.2. தோழியும் மெய்ப்பாடும்

மெய்ப்பாடு ( Emotion ) மனிதனிடம்அமைந்துள்ள இன்றியமையாத கருவும். அது உடலைச் சார்ந்த எழுவது. தமிழ்மொழியில் காரண காரியத்

தொடர்பைத் தெரிவிக்கும் சொல்லாக, அறிவுக்குப் பொருத்தமாக இயல்புடன் அமைந்துள்ளது. உடல் உணர்வுகள் தூண்டப் பெறுவதால் ஏற்பட்டுள்ள நிலையை இது குறிக்கும்.

மற்றவர்கள் துன்புறும்போது அவர்களுக்காக வருந்துவது சார்பு உணர்ச்சி ( Sympathy ) எனப்படும். இது பொதுவாக அனைவரிடமும் அமைந்திருக்கும். ஒருவன் மற்றொருவனை உள்ளப்போக்கில் தன்னைப் பொருத்தி, அவன் ஈடுபடும் நடத்தையில் தானும் ஈடுபடுவது ஒற்றுணர்ச்சி (Empathy) எனப்படும். இது சார்புணர்ச்சியின்று மாறுபட்டது. கலைஞர், மிக உயர்ந்த சிந்தனையாளர் ஆகிய மிகச் சிலரிடமே ஒற்றுணர்ச்சி என்னும் இம்மெய்ப்பாடு காணப்படும்.[328] தோழியிடத்தும் இந்த ஒற்றுணர்ச்சியே அமைந்து கிடக்கிறது. அவள் தலைவியின் துன்பங்களில் தன்னையும் பொருத்தித் துயரமடைகிறாள். ஆகவேதான் அவள் பல இடங்களில் 'நம்' என்று கூறுகிறாள்.[329] இதனால்தான் பல பாடல்கள் தோழி கூற்று தலைவி கூற்று என்று ஐயுறத்தக்க நிலையில் காணப்படுகின்றன.

## 6.3. தோழியும் ஆளுமையும்

உளவியலில் முக்கியமானது ஆளுமை என்பதாகும். தன்னளவிலும் தன் பட்டறிவுக்கேற்றவாறும் இயங்கும் தனித்த பண்பியல்புகளின் அமைப்பே ஆளுமை என்று கூறப்படும்.

6.3.1. ஒருவனின் நிரந்தரமான அடையாள இயல்புகளும் அதாவது என்றும் மாறா உடல், உள்ள இயல்புகளும் போக்குகளும், நடத்தைகளும் ஒருவனின் ஆளுமையை அமைக்கும். மனிதனின் ஆளுமைக்கு மரபும் சூழ்நிலையும் ஒருங்கே காரணமாக அமைகின்றன.[330]

6.3.2. தோழி, செவிலியின் மகளாக இருக்கிறாள். அவள் மரபின்வழி நற்றாயை அடுத்திருக்கும் செவிலியைப் போல எப்போதும் தலைவியின் அருகிலேயே இருக்கிறாள். ஆகவே அவளின் சிந்தையும் செயலும் தலைவியையே

என்றான்றும் வட்டமிட்டுக் கொண்டிருக்கிறது. பூக்கொய்தல், புனலாடல், புனம் காத்தல் முதலான சூழ்நிலைச் செயல்களின் போதும் அவள் தலைவிக்குத் துணையாக நிற்கிறாள். எனவே, இதன் தொடர்பாக அவளுடைய ஆளுமை தலைவியின் சார்பாய் அமைந்த உடல் உள்ள இயல்புகள், போக்கு, நடத்தை ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்துள்ளது.

6.3.3. தோழி அனைவருடனும் நல்லவிதமாகப் பழகுகிறாள். அவள் தலைவனிடமும் தலைவியிடமும், செவிலித் தாயிடமும் திறமையாக நடந்து கொள்ளுகிறாள். அவள் எப்போதும்தன்னம்பிக்கையுடன் காணப்படுகிறாள். பொறுமையுடனும் விருப்பத்துடனும் செயல் புரிகிறாள். ஆர்வத்துடனும் நம்பிக்கையுடனும் இயங்குகிறாள். குறியிடையீடு, வரைவுநீட்டித்தல் முதலான ஏமாற்றங்களையும் சங்கடங்களையும் தக்க முறையில் சமாளிக்கிறாள். எனவேதோழி சிறந்த ஆளுமை[331] கொண்டவள் என்று துணியலாம்.

6.3.4. தோழியின் ஆளுமை வகை

உளநூலார் ஆளுமையின் அடிப்படையில், அகமுகத்தினர் (Intervert) என்றும் புறமுகத்தினர் ( Exctrovert ) என்றும் மக்களை இருவகையாகப் பிரிப்பர்.[332] புறமுகத்தினரின் முக்கியப் பண்புகளில் சில தோழியுடன் பொருந்தி வருகின்றன.

(க) சூழ்நிலைக்கு ஏற்றபடி விழிப்பாக இருத்தல் (தோழி சூழ்நிலைக் கேற்றவாறு பகல் இரவுக்குறிகளை அமைக்கிறாள்).

(ஙு) அனைவருடனும் எளிதாகப் பழகுதல் (அவள் தலைவி, தலைவன், செவிலி முதலியோருடன் எளிதாகப் பழகுகிறாள்).

(ச) செயல் துடிப்புடன் இருத்தல் (அவள் குறியிடத்துய்த்தல் முதற் கொண்டு பள்ளியிடத்துய்த்தல் வரை சிறப்பாகச் செயல்படுகிறாள்).

(ஞ) மாறுதல்களை விரும்புதல் (தன் எண்ணம்நிறைவேறாத சமயத்தில் அறத்தொடு நிற்றல், உடன்போக்கு ஆகிய மாற்றங்களை அமைக்கிறாள்).

(ட) எந்த நிலைக்கும் தன்னைச் சரிக்கட்டிக் கொள்ளுதல் (குறை நயத்தலில் தலைவனைப் புகழும் அவள் பரத்தையிற் பிரிவில் அவனைக் கடிகிறாள்; வாயில் மறுக்கிறாள்).

(ண) தன் உணர்ச்சிகளைப் பிறர்க்குப் புலப்படுத்துதல் (அவள் வரைவு கடாதலில் தன் உணர்ச்சிகளை நேர்முகமாகவும் சிறைப்புறமாகவும் தலைவனுக்குப் புலப்படுத்துகிறாள்).

(த) கலகலப்பாகப் பேசுதல் (பிறரை விடத் தோழியின் கூற்றுதான் அகத்துறையில் அதிகம்).

(ந) பிறர்மேல் காரணமற்ற வெறுப்பு இல்லாமை (தலைத் தொண்டாற்ற வேண்டிய பாணனும் விறலியும் பரத்தைக்காகக் கீழ்நிலையுறும் போது அவர்கள் மீது வெறுப்பு கொள்கிறாள். தலைவன் தவறுணர்ந்து வீடு திரும்பும்போது, அவனுக்காகத் தலைவியிடம் வாயில் நேர்கிறாள்).

(ப) மாறுபட்ட பாலினருடன் சமுகமாகப் பழகுதல் (தலைவனுடன் பழகுதல்).

(ம) பொதுவாக உற்சாகமாக இருத்தல் (அவள் எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் உற்சாகத்துடன் செயலாற்றுகிறாள்). எனவே ஆளுமையின் அடிப்படையில் தோழியைப் புறமுகத்தினளாக வகைப்படுத்தலாம்.

6.4. தோழியும் உளப்பாங்கும்

தோழியிடம் சமுதாய உளப்பாங்குகளில் சிறந்தவையும் தனிநபர் உளப்பாங்குகளில் தகுந்தவையும் காணப்படுகின்றன. (1) பணிவுடைமை; (2) நட்புணர்வு; (3) எந்த நிலையையும் சமாளிக்கும் திறம்; (4) தோல்வி-யையும் கவலைகாது ஏற்கும் மனநிலை ஆகிய இவை சிறந்த சமுதாய உளப் பாங்குகள் ஆகும். இவை தோழியிடம் முற்றிலும் பொருந்தியுள்ளன.

6.4.1. பின்வருவன தனிநபர் உளப்பாங்குகள் ஆகும்.

(க) மனப்பக்குவம் (இதனுள் பொறுப்புணர்ச்சி, தன்னம்பிக்கை, தன்னடக்கம், தன் கட்டுப்பாடு, உழுவலன்பு முதலியன அடங்கும்) (தலைவியைத் தலைவனிடம் குறியிடத் துய்த்துத் தான் ஒதுங்கிக் கொள்ளும் மனநிலை).

(ஊ) பிறரிடம் நன்மையே காணும் பான்மை (குறிநயத்தலில் தலைவியின் நலம் கூறல்).

(ச) தன்னிலை அறிவு (உவமை, உள்ளுறைக் கூற்றுகள், சூழ்நிலை பற்றிய அறிவு).

(ஞ) விரும்பத்தக்கவராய் இருத்தல் (தோழி, அனைவராலும் விரும்பத்தக்கவளாகச் செயல்படுகிறாள்).

(ட) மற்றவர்கள் விரும்பிப் பேசும் பேச்சுகளில் தானும் விருப்பத்துடன் இருத்தல் (வெறியாட்டில் தானே கலந்து கொண்டு வேலனை எள்ளுதல், கழங்கைக் கேலி செய்தல்).

(ண) தடுமாற்றம் இல்லா நிலை (ஆற்றுவித்தல், அறத்தொடு நிற்றலில் முதலியவற்றில் தடுமாறு நிலை)
தோழியிடம் இவை அனைத்தும் அமைந்துள்ளன.

6.5. இதுவரை தோழியை, உளவியல் இலக்கணத்துடன் பொருத்திக் காட்டப்பட்டது. இனி அவளின் நடைமுறை, உளவியலுடன் ஒப்பிட்டுக் காட்டப் பெறுகிறது.

6.5.0. இலக்கியமும் உளவியலும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டவை. சங்க இலக்கியம் வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு எழுந்த நாடகப் பாங்கு பெற்றிருப்பதால், அது உளவியலுடன் முற்றிலும் தொடர்பு கொண்டிருக்கிறது. அகத்திணையாயினும் புறத்திணையாயினும் வாழ்க்கைச்சிக்கலில் எழுந்த ஒரு மனநிலையின் எதிரொலி அதில் அமைத்துக் காட்டப்பட்டிருக்கிறது. அகப்பொருள் இலக்கியத்தில் வரும் துறைகள், மெய்ப்பாடுகள், கூற்றுகள் முதலியன மனித இயல்பை ஒட்டியன. உள இயலுடன் ஒப்பிடத்தக்கன. அவை சிறப்பாகப் பெண்டிரின் மன இயல்பைத் தெளிவாக எடுத்துக்காட்டும் சிறப்புடையன. சங்கப் பாடல்கள் அமைப்பாலும், நடையாலும், உரையாடல் தன்மையாலும் கருத்தமைதியாலும், நிகழ்ச்சிப் பின்னலாலும் உளவியல் அடிப்படையில் ஒத்து நிற்பவை. எனவே சங்க இலக்கியத்தை உளவியல் இலக்கியமென்னினும் தவறாகாது.

6.5.1. உளவியல் நூலைப் படிக்காமலேயே அக்காலப் புலவர்கள் காட்டியதோழி வாழ்வுடன் ஒன்றி, அடிப்படை மனநிலைகளைக் காட்டியிருப்பது பெரிதும் வியப்புக்குரியது.

6.5.2. `காமர் கடும்புனல் கலந்தெம்மோடு ஆடுவாள்' என்று தொடங்கும் கலித்தொகைப் பாடல் ஒன்று[333] காரண காரியத்தை உளவியல் அடிப்படையில் கூறுகிறது. தினைப்புனம் காக்கப் போனவர்கள் தம் காவல் தொழிலை விட்டு நீராடப்போனது ஏன் என்று தாய் கேட்பாள் என்று அறிந்து, 'காமர் புனல்' என்று தாயாயிருந்தாலும் அவளுக்கும் நீராடும் விருப்பத்தை ஊட்டக்கூடிய புனல் என்றே எச்சரிக்கையாகத் தொடங்குகிறாள் தோழி. அவர்கள் நிதானமாக ஆடியிருந்தால் ஆடியவர்களைத் தண்ணீர் அடித்துக் கொண்டு போயிராதே என்று அடுத்து வரப்போகும் தாயின் கேள்வியை எதிர்பார்த்து 'கடும்புனல்' என்று கூறுகின்றாள். தலைவியை மட்டும் ஏன் தனியே நீராட விட்டீர்கள் என்று தாய் கடியும் முன்னே `நாங்கள் ஒன்றாகத்தான் சேர்ந்து நீராடினோம். ஆனால் அவளை மட்டுமே வெள்ளம் இழுத்துச் சென்றது' என்பதைக் குறிப்பிடும். முறையில் `கலந்தெம்மோடு ஆடுவாள்' என்றாள்.

6.5.3. தோழி, தலைவிஇருவரில் தோழியே உலக அனுபவம் பெரிதும் நிரம்பப் பெற்றவள். ஆகவே அவள் மக்களின் உள்ளப் பாங்கைத் தேவையான அளவுக்கு அறிந்தவளாக விளங்குகிறாள். அவள், தலைவிதலைவனுடன் பெற்ற இயற்கைப் புணர்ச்சியைத் தலைவியின் நாற்றம், தோற்றம், ஒழுக்கம் உண்டி இவற்றைக் கவனித்துத் தானே உணர்ந்து கொள்கிறாள். பல்வேறு கவர்பொருள் சொல்வர் ஊடலாலும் முன்னுற உணர்கிறாள். அவள் தலைவியை நேரடியாக வினவாமல், குறையுற உணர்ந்தும்இருவரும் உள்வழி அவன் வரவுணர்ந்தும் உண்மையை அறிகிறாள்.

6.5.4. தலைவியின் நிலையைப் புரிந்துகொண்ட தோழி, தான் எதையும்அறியாதவள் போலத் தலைவனுக்காகக் குறையிரக்கும்போது, அவளது உளவியல் அறிவு புலனாகின்றது.

6.5.5. வரைவு கடாவும் முறைகளிலும் அவளது உளவியல் அறிவு விஞ்சி நிற்கிறது. தலைவனுக்குப் பகல், இரவுக்குறி மறுத்து அதன் மூலம் அவன் மனத்தில்தான் வரைந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தைத் தோற்று- விக்கிறாள். அலர் அறிவுறுத்தியும், அவன் வரைய முற்படாதபோது வேலனின் வெறியாட்டுமூலம் திருமணம் செய்யத் தூண்டுகிறாள். அதற்கு மேலும் அவனுக்கே உரிய தலைவியைப் பிறர் வரைந்து கொள்ள முயல்கின்றனர், என்று சொல்லிப் போட்டி மனப்பான்மையையும் ஏற்படுத்தி, அவளை மணந்து கொள்ளுமாறு செய்கிறாள். அன்றியும் நேரிடையாகக் கூறுவதினும், மறைமுகமாகக் கூறுவது பெரும்பயனைத் தரும்; நோக்கம் நிறைவேற உடனே வழி வகுக்கும் என்ற மெய்ம்மை உணர்ந்திருந்த அவள் தலைவன் சிறைப்புறமாக, அவனிடம் சொல்ல வேண்டியதெல்லாவற்றையும் சொல்கிறாள். சிறைப்புறக் கூற்றுகளை அவள் அதற்காகவே அமைத்துக் கொண்டிருக்கிறாள். அன்றியும் வெறியாட்டில் தலைவியின் நோய்க்குக் காரணம் முருகனே என்றுரைக்கும் கூற்றைக் கேலி செய்வதன்மூலம் மறைமுகமாக உண்மையைப்புலப்படுத்துகிறாள்.[334]

6.5.6. ஆற்றுவித்தல் பகுதியிலும் அவள் உளவியலைத் தெளிவாகக் கையாளுகிறாள். வீட்டிலேயே அடைபட்டுக்கிடப்பின், உள்ளத்தின் துயரம் குறையாது. ஆகவே அவளை வெளியே அழைத்து வந்து அவளது கவனத்தை மாற்றிக் கவலையைக் குறைக்க முற்படுகிறாள். கார்காலத்தில் திரும்பி வருவதாகச்சொன்ன தலைவன் உரிய காலத்தில் வரவில்லை. ஆனால் கார்காலம் வந்தது; கொன்றையும் பூத்தது. அதைக் கண்டு தலைவி வருந்துவாளே என்று நினைக்கிறாள் தோழி. எனவே கொன்றை, வம்பமாரியைக் கார் என மதித்து விட்டதே என்று கூறித் தலைவன் சொன்ன கார்காலம் இன்னும் வரவில்லை என்று குறிப்பாக அறிவித்து, கொன்றையின் அறியாமைக்கு இரங்குவதுபோல நடித்துத், தலைவியின் சிந்தனையைத் திறம்பட "மடைமாற்று"கிறாள் அவள்.[335]

6.5.7. தலைவன் செல்லும் வழியில் அவன் காணும் காட்சிகளைக் கூறும் வகையில் சின்னீரைப் பிடியூட்டிப் பின் உண்ணும் களிற்றைப் பற்றி அவள்

தலைவிக்குத் தெரிவிக்கிறன். அந்தக் காட்சியைக் கண்டவுடன் தலைவன் தலைவியை நினைவுகூர்வான் என்பதையும், உளவியல்படி அவன் உடனே திரும்பி வருவான் என்பதையும் அறிவிப்பதுடன், தலைவியின் வேதனை குறைவதற்கும் வழி வகுக்கிறன்.

6.5.8. குறிஞ்சிப்பாட்டு தோழியின் உளவியல் புலமைக்குப் பொருத்தமான சான்ருக இருக்கிறது. தொடக்கத்திலேயே அவள் இரண்டு முறை அன்னையை அழைக்கிறள். 'அம்மா, அம்மா' என்று அழைப்பது தன் தவறுக்கு அஞ்சி கெஞ்சுவதைப் போன்றும் இருக்கிறது. தாயின் மனம் வேறு எங்கோ இருந்தால், தம் சொற்கள் பலன் தராமல் போய்விடுமோ என்ற அச்சத்தால் அந்நிலை நேராதபடி தடுக்கும் முன் எச்சரிக்கையும் அதில் இருக்கிறது.

6.5.8.1. அவள் ஆரம்பத்திலேயே 'தாயே, நீயும்தலைவிக்காக வருந்துகிருயே, தலைவியின் நோயைத் தீர்க்க வெறியாடலை எடுத்துக் கடவுளை வணங்குகிருயே' என்று கூறித் தாய்மீது இரங்குவது போலப்[336] பேசித் தாயின் இரக்கத்தைத் தேவைக்கு அதிகமாகத் தேடிக் கொள்கிறள். அவள் பின்னுல் தன்னைக் கடியாமல் இருக்கும் பொருட்டுத் தலைவிக்கும் தனக்கும் ஏற்பட்ட அச்சத்தைப்படிப்படியாகக் கூறுகிறள்.[337] முதலிலேயே பேரச்சம் கூறி விட்டுப் பிறகு சிறு அச்சம் கூறினுல் அது மனத்தில் பாய்ந்து பதியாது என உளவியலை அறிந்த அவள், முதலில், நாய்களால் வந்த அச்சத்தைத் தம் விளையாட்டுகளுக்குப் பின் கூறிச் செவிலியின் மனத்தை அடுத்துவரும்பேரச்சத்திற்கும் தயார் செய்து வைக்கிறள். பிறகே யானையால் வந்த பெரிய அச்சத்தைக் கூறித் தாயின் அனுதாபத்தைப்பெற முறையாக முயல்கிறள். அந்நிலையில் தலைவன் தன்னளி நியாயமானது என்பதை அத்தாயின் உளங்கொள்ளவும் செய்கிறள்.[338]

6.5.8.2. அவள் தலைவனைப் பற்றிக் கூறும்போது, தாயின் மனத்தில் அவனைப் பற்றிய உயர்ந்த கருத்து தோன்றும்படி கூறுகிறள். தலைவி,

அழகுடைய தலைவனை விரும்புவது இயற்கை என்பதால் தலைவனின் அழகு மாட்சியை அவள் விதந்துரைக்கிறாள்.[339] தாயர் அவனது செல்வச் செழிப்பையே விரும்புவராகலின் அவன் பொன் அணிகலனைப் பூண்டவன் என்று கூறி அவர்கள் மனத்தை நிறைவு செய்கிறாள்.[340] தாய்வழியாகத் தலைவனைப் பற்றி அறியும் தந்தை அவனது கல்வியை விரும்புவான் என்பதால் அவன் கல்வி வழங்கிய பண்புடைமையைப் பெற்றவன் என்றுரைக்கிறாள்.[341] தலைவனது உடன் பிறந்தார் அவனது ஆற்றலைக் கேட்கவிரும்புவார் என்பதால், அவனது ஆண்மையைப் பற்றியும் அறிவிக்கிறாள்.[342] இவ்வாறு தலைவன் அனைவராலும் விரும்பப்பெறும் தகுதி படைத்தவன் என்று தெரிவித்து விடுகிறாள். தலைவியைச் சந்திக்க முடியாதுவிடினும், உயிருக்கு ஆபத்து நேரும் வழியிலும்தலைவன் நாள்-தோறும் இரவில் வருகிறான் என்று சொல்லி அவனது மாறா அன்பையும் ஆணித்தரமாகக் கூறி விடுகிறாள்.[343]

6.5.8.3. முடிவு நிலையிலும் அவள் தன் கருத்தைத் தாய் மேல் திணிக்கவில்லை. அவள் தலைவியின்பால் இரங்குவதாகவே கூறுகிறாள். செவிலியும் தலைவிக்காக வருந்துபவளாதலின் தலைவியின் துயரம் போக்குவதில்தான் தாயோடு ஒத்து நிற்பவள் போலக் காட்டிக் கொள்கிறாள். அத்தலைவனையே, தலைவிக்குத் திருமணம் செய்யுமாறு வெளிப்படையாக அவள் கூறவில்லை. அப்படிக் கூறியிருந்தால் தாய்க்குமறுப்புணர்வு தோன்றக் கூடும். யாரோ ஒருவன் ஒரு நாள் காப்பாற்றியதற்காக, அவனுக்கே ஆயுள் முழுவதும் தலைவியைத் தருவதா என்று தருக்கவாதம் எழக்கூடும். ஆகவே அதைத் தவிர்த்து, தலைவி 'வலைப்படு மஞ்ஞையின் நலம் செலச்சாய்'[344] நினைந்து நினைந்து அவள் கண்கள் கலுழ்கின்றன. எனவே செய்யத்தக்கது அறிந்து செய்க என்று அன்பியலாகவே முடிக்கிறாள். இதனுள் தாயின் உள்ளத்திற்குச் சிந்தனை தரும் உளவியலோடு படிப்பவரின் நெஞ்சினையும் தொட்டீர்க்கும் தனித்திறனும் தோழியின் பேச்சில் காணப்படுகிறது. இவ்வாறு அன்றைய தோழியின் சொல்லிலும், செயலிலும் உளவியல் போக்கு தெறிப்பனாகத் தோன்றி, இன்றைய உள இயலாரையும் வியப்பில் ஆழ்த்துகிறது.

6.6. ஆய்வு முடிவுகள்

(அ) தலைவியின் நலனுக்குக் கடற்கரைப் பகுதிகளும் வளப்பமான நகரங்களும் ஒப்பிடப்படுகிறது.

(ஆ) தலைவியின் கூந்தல், நுதல், கண்கள் ஆகியவற்றிற்கும் ஊர்கள் ஒப்பிடப்படுகின்றன.

(இ) தலைவியின் உறுப்புகளில் கண்ணே ~~பெரும்பான்மை~~ மிகுதியாக உவமிக்கப்படுகிறது.

(ஈ) இன்பத்தை விடத் துன்பத்தை விளக்கவே ஊர்கள் அதிகமாக ஒப்பிடப்படுகின்றன.

(உ) முடிமுதல் அடிவரை வர்ணிக்கும் போக்குசங்ககாலத்தில் அக இலக்கியத்தில் இல்லை.

(ஊ) வரைவுகடாதல், ஆற்றுவித்தல் துறைகளில் குறிப்புப் பொருள் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது.

(எ) திணைக்கேற்றவாறு கருப்பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன.

(ஏ) வரைவு கடாதலில் மட்டும் சிறைப்புறக் கூற்று அமைகிறது. வரைவு கடாதலிலும்இற்செறிப்பில்தான் சிறைப்புறக் கூற்று அதிகம்.

(ஐ) குறிஞ்சித்திணையில் இரவுக்குறியிடத்துப் பெரும்பான்மையாகவும், பகற்குறியிடத்துச் சிறுபான்மையாகவும் சிறைப்புறக் கூற்று நிகழும்.

(ஒ) அகநானூற்றில்தான் வரலாற்றுக்குறிப்புகள் அதிகம்.

(ஓ) பாலைத்திணையில், தலைவியை ஆற்றுவிக்கும் நிலையில் வரலாற்றுக் குறிப்புகள் மிகுதியாக வருகின்றன.

(ஔ) புல்லியின் ஆளுகையில் உள்ள வேங்கடமே மிகுதியாகச் சிறப்பிக்கப்படுகிறது.

(அஅ) தோழி உளச்சார்பு ஊக்கிகளுக்கு நிலைக்களனாக அமைகிறாள்.

(அஆ) தோழியிடத்தில் ஒற்றுணர்ச்சி அமைந்திருக்கிறது.

(அஇ) ஆளுமையின் அடிப்படையில் தோழியைப் பிற முகத்தினளாகக் கூறலாம்.

(அச) தோழியிடம் சமுதாய உவமைப்பாங்குகளில் சிறந்தவையும், தனிப்பட்ட உவமைப்பாங்குகளில் தகுந்தவையும்காணப்படுகின்றன.

(அரு) குறையிரத்தல், வரைவு கடாதல், ஆற்றுவித்தல், செலவழுங்குவித்தல் தோழியின் உளவியல் அறிவு சிறக்கிறது.

(அசா) சிறைப்புறக் கூற்று தோழியின் உளவியல் அறிவையே காட்டும்.

(அஎ) குறிஞ்சிப்பாட்டில் தோழியின் உளவியல் புலமை சிறக்கிறது.

* * *

## இயல் ஏழு

## தோழியின் செயல்திறன் - களவு

"நன்னுதல் நலனுண்டு துறத்தல் கொண்க
தீம்பா லுண்பவர் கொள்கலம் வரைதல்
நின்றலை வருந்தியாள் துயரம்
சென்றனை களைமோ பூங்கனின் தேரே" -நெய்தற்கலி 16.

- அம்மூவனார் (வரைவு கடாதல்)

"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;
அவருந், தெரிகணை நோக்கிச் சிலை நோக்கிக் கண்சேந்
தொருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி
இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை" - குறிஞ்சிக்கலி 39

- கபிலர் (அறத்தொடு நிற்றல்)

"அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்த லோம்புமதி பூக்கே ழூர" - நற்றிணை 10

- குடவாயிற் கீரத்தனார் (உடன்போக்கு)

## தோழியின் செயல் திறன் - களவு

0.0. களவு வாழ்க்கை என்ற தேரின், அச்சாணியுடன் கூடிய சக்கரம் போன்றவள் தோழி. அவளின் செயல்திறன் இல்லையானால், தலைவி தலைவனின் களவொழுக்கம் ஓர் இம்மியளவும் இயங்காது. சங்க இலக்கியத்தில் தோழி 784 பாடல்களுக்குரியவள்.[1] அவள் களவில் 481 [2] பாடல்களில் இடம் பெறுகிறாள். அக்களவில் தோழியிற் புணர்ச்சி, பகல் இரவுக்குறிகள், வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, வரைவு மலிதல் எனும் 6 துறைகளில் 165 நிலைகள் அவளுக்குரியன.[3] அவள் கற்பில் 303 [4] பாடல்களுக்கு உரியவளாகிறாள். அதில் வரைவின் பின் செலவழுங்குவித்தல், ஆற்றுவித்தல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் எனும் 5 துறைகளில் 107 நிலைகளில் தொண்டாற்றுகிறாள். அவளது பணி களவியலில் மிகுதியாக உள்ளது.[5]

0.1. களவு நீள வேண்டும் என்பதும் காதலாயினோர் இருவகைக் குறிகள் நிகழ்த்த வேண்டும் என்பதும் அகத்திணையின் நோக்கம் இல்லை. பால் வயத்தால் தாமே கண்டு தம்முட் புணர்ந்த களவுக் காதலர்கள் கற்பாக வேண்டும்; வெளிப்படையாக மணந்து இல்லறம் நடத்த வேண்டும் என்பதே அதன் நோக்கம். இந்நோக்கத்தை நிறைவேற்ற வருபவளே தோழி என்பார் டாக்டர் வ.சுப. மாணிக்கம்.[6]

### 1. தோழியிற் புணர்ச்சி

1.0. தோழியிற் புணர்ச்சி என்னும் இத்துறை தோழியின் உளவியல் அறிவைச் சிறப்பாகக் காட்டுகிறது. தலைவன் தலைவி உறவு அறிந்தும் அவன் தலைவிக்கு ஏற்றவனே என்பதறிந்தும் அவன் உறவு உண்மையானதுதானா என்றறிய தோழி செய்யும் சூழ்ச்சிகள் அவளுடைய பேரறிவையே காட்டுகிறது. குறிஞ்சி, நெய்தல், மருதம் ஆகிய முத்திணைகளிலும் சேர்ந்த 40 பாடல்கள் இப்பகுப்பில் அடங்குகின்றன. இப்பிரிவில் தலைவன், தலைவி, நெஞ்சு ஆகியோரிடம் தோழி

உரையாடுகிறாள்.[7] 24 புலவர்கள் இத்துறையில் பாடியுள்ளனர். அதிகமான பாடல்களைப் பாடியவர் கபிலரே.[8] இப்பகுப்பில் தோழி 17 நிலைகளில் செயலாற்றுகிறாள்.[9]

1.1. காமப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்னும் மூன்று நிலைகளிலும் தலைவியைப் புணர்ந்த தலைவன் நான்காவது நிலையாகத் தோழியின் துணையை நாடுகிறான். 'தன்வயின் பாங்கன் அவள் வயிற் பாங்கு செய்யாமையின்' தோழியிற் புணர்ச்சியை மேற்கொள்வதாகப் பேராசிரியர் கூறும் உரை சிறப்புடையதாயிருக்கிறது.[10] தோழியின் இன்றியமையாமையைத் தலைவன் எவ்வாறு அறிந்தான் என்பதை இறையனாரகப்பொருள் அழகுற விளக்குகிறது.[11]

1.1.1. தோழி தலைவன் தலைவி நட்புறவைக் குறையுற உணர்தல், முன்னுற உணர்தல், இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல் என்னும் இம்முறையினால் அறிகிறாள்.

1.1.2. தலைவனுடைய கூட்டத்தால் தலைவிக்குப் புதிய மனம் ஏற்படுகிறது. தலைவியின் உறுப்புகளில் புதுப்பொலிவு தோன்றுகிறது. முன்பு ஆயத்துடன் விளையாடியவள் தனியாக இருக்க முற்படுகிறாள். வழக்கமாக உண்ணும் அளவை விடக் குறைவாக உண்கிறாள். முன்பு எச்செயலையும் தோழியின் துணையுடன் செய்தவள் தற்போது தன் வினைகளை மறைக்கிறாள். முன்பு மனம் போன போக்கில் சென்றவள் தற்போது ஒரு குறிப்பிட்ட திசையை நோக்கியே செல்கிறாள். முன்பு செவிலியுடன் தூங்கியவள் இப்போது தனித்து உறங்குகிறாள். இதுவரை பெறாத புதிய அனுபவங்களைப் பெறுவதை விரும்புகிறாள். இதைத் தொல்காப்பியர்[12] நாற்றம் தோற்றம் முதலான எழுவகை நிலைகளில் ஆராய்வதாக இலக்கணம் கூறுவர்.

1.2. தன் பெண்மையினாலும் நாணத்தாலும் தான் காதல் கொண்ட நிலையைத் தன்உயிரனைய தோழியிடமும் தலைவியால் கூற இயலவில்லை. தலைவியை நன்குணர்ந்த தோழி அவளிடம் செய்திகளை வெளிப்படையாகக் கேட்கவும் முடியவில்லை. தலைவியின் நாணத்திற்கும் கற்பிற்கும் இழுக்கு நேராவண்ணம் இவர் பொருள் நாட்டத்தால் உண்மையை நாடுகிறாள். இதை நச்சினார்க்கினியர் அழகுற விளக்குகிறார்.[13] களவுச் செய்திகளைத் தலைவி கூறுதற்கு முன்னமேயே தலைவன் தோழியிடம் கூறியிருக்கிறான் என்பர்.[14] அதனால் களவை நேராகக் கேளாமல் தலைவியே ஒத்துக்கொள்ளும்படியாகத் தோழி பக்குவமாகச் செயல்படுகிறாள். தலைவன் தலைவியிடத்து நிகழ்ந்திருக்கக் கூடிய செயலைத் தன்னிடத்து நிகழ்ந்ததாகக் கூறி அதன் வாயிலாக அவள் உளக்கருத்து அறிகிறாள் அறிவுடைத் தோழி. தோழியின் பெண்மைக்கு - கற்புடைமைக்கு - ஏலாத சொற்களைச் செயல்களைக் கூறலாமா என்ற வினா எழுதல் இயல்பு. அறக்கழிவுடையதாயினும் பொருட்படவரின் கொள்ளத் தக்கன எனத் தொல்காப்பியரே விதி வகுத்துள்ளார்.[15] தோழியே தன் செயலைப் 'பெரும்பழி'[16], 'பண்பில் செய்தி'[17] எனக் கூறுகிறாள். தலைவியிடத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் ஏற்பட்ட உணர்வைத் தன் மேலிட்டுத் தலைவியின் கருத்தை அறிய முயல்கிறாள் தோழி.[18]

<u>சேட்படுத்தல்</u>

1.3. தலைவியின் மூலம் இன்னவள்தான் உயிர்த்தோழி என்றறிந்த தலைவன் அவளைக் குறையிரக்கிறான்.

"பணிந்த மொழியால் தோழி தேஎத்து
இரந்து குறையுறுதலுங் கிழவோன் மேற்றே"[19]

என்று களவியலுரை கூறும். அவன், தலைவியும் தோழியும் ஒருங்கிருக்கும்போது, "ஊரும் பேரும் கெடுதியும்" வினவித்தோழியைக் குறையிரக்கிறான்.[20] 'மாயம்

சொல்லி வந்த சிறவனைத் தலைவி பொறுத்த காரணம்' குறித்துத்[21] தோழி ஆராய்கிறாள்.

1.3.1. தலைவியைத் தலைவனோடு சேர்த்து வைக்கும் தன் முயற்சியினருமை, தலைவியினருமையை அறிவிக்க, காதல் உறுதியை நிலை நிறுத்த, விரைவில் மணமுடிக்க, தலைவன் தலைவிபால் அன்பு 'முதிரக் கடமையுணர்வு கொண்ட தோழி தலைவனைச் சேட்படுத்துகிறாள்.[22] சேட்படுத்துதல் என்பது தலைவியை அணுக்கமாய் நினைத்த அவனது நெஞ்ச நினைப்பைச் சேட்படுத்துதல் எனலாம். தலைவியின் அருமையைப் புலப்படுத்தலாம்.

1.3.2. தலைவனின் அழகு, பண்பு, குடிப்பெருமை ஆகிய அனைத்தும் தலைவிக்கு ஏற்ற நிலையிலிருப்பினும் அவன் தலைவிபால் உண்மையான காதலுடையவனா என்றறியத் தோழி பல சோதனைகளை நிகழ்த்துகிறாள். தலைவன் கடுந்தேர்ச் செல்வன் காதல் மகன்; தலைவி மீனெறி பரதவர் மகள். அதனால் தலைவியின் சிறுநல்வாழ்க்கை தலைவனுடன் பொருந்தாது எனத் தலைவனின் பெருமை கூறி மறுக்கிறாள்.[23] தலைவியின் அருமை தெரிய வேண்டுமென்று அவன் கொடுக்கும் கையுறையை மறுக்கிறாள். குறிஞ்சித் திணையில் காந்தட்பூவும் நெய்தல் திணையில் நெய்தல் தழையும் மறுக்கப்படுகின்றன.[24] தலைவியின் பேதைமை கூறி அகற்றுகிறாள்.[25] தாய், தமர், காவலர் வருவர் என அச்சுறுத்துகிறாள்.[26] நாளுக்கு நாள் அலைக்கழிக்கும் அவனை அணுஅணுவாக ஆராய்ந்து கொண்டும் வருகிறாள். கடைசியில் தோழிக்கே இரக்கம் தோன்றினும், தலைவன் மடலேறுவதாக அச்சுறுத்தினும்[27] தலைவனுக்கு உதவி செய்வதாக வாக்களிக்கிறாள். அதன் பிறகுதான் அவன் கொடுக்கும் தழையாடையையும் வாங்குகிறாள்.[28]

1.4. குறை நயத்தலிலும் வாயின் மறுத்தலிலும் தலைவன் தோழியைப் பணிந்து வேண்டுகிறான். குறை நயத்தலில் காதலால் கட்டுண்ட தலைவன் தலைவியைப்

பெற வேண்டியும், வாயில் மறுத்தலில் பரத்தமை மேற்கொண்டதால் ஊடிய தலைவியின் இல்புகும் உரிமை இழந்த நிலையிலும் தோழியைப் பணிந்து வேண்டுகிறான் தலைவன். உயர்ந்த தலைமகன் தோழியைக் குறையிரப்பதாகச் சங்க இலக்கியம் போல பிற இலக்கியங்களில் காணல் அரிது. ஆண்மை-யுடையவன் பெண்ணிடம் தாழ்ந்து நிற்றல் ஆகாது என்ற பிற்காலச் சமுதாய மாற்றத்தையே இது குறிக்கிறது.

குறை நயத்தல்

1.4.1. தோழி தலைவியிடம் குறை நயத்தலை 'குறைந்து அவட் படரினும்' என்று பொதுவாகத் தொல்காப்பியம் கூறும்.[29]

1.4.2. தலைவனிடம் ஒப்புதல் அளிக்கும் நிலையில் தழையாடை வாங்கிய தோழி தலைவியையும் இணங்க வைக்கும் பொறுப்பையும் ஏற்கிறாள். "குன்றநாடன் உடுக்கும் தழை தந்தான். உடுப்பின் அன்னை அறிவாளோ என அஞ்சுகிறேன். திருப்பிக் கொடுப்பின் தலைவன் துயருறுவானோ என அஞ்சுகிறேன். இடையில் வாடுவதோ இத்தழை?" என வினவித் தழையை ஏற்கும் முறையால் அவனையும் ஏற்க வேண்டுகிறாள் தோழி.[30] தன் சொற்களால் தலைவியின் செயலில் நேரும் மாற்றத்தையும் கூறித் தலைவியை உடன்பட வைக்கிறாள்.[31] தலைவியின் உளங்கவரும் வண்ணம் தலைவனின் பேரழகு,[32] செல்வச்சிறப்பு,[33] வீரம்,[34] அடக்கம்[35] முதலியவற்றை எடுத்துக் கூறுகிறாள். தலைவன் உயர்ந்தோனாயினும் தலைவிமீது கொண்ட காதலால் அவனுடைய பணிவு, அடக்கம், காதலை அடைய மேற்கொள்ளும் முயற்சி ஆகிய அனைத்தையும் எடுத்துக் கூறித் தலைவியின் உள்ளத்தில் இரக்க உணர்வைத் தோற்றுவித்து அவள் தலைவனை ஏற்குமாறு செய்கிறாள்.[36] நேராகவே, இனி நாம் அவனைக் காக்க விடக் கூடாது என்று வற்புறுத்துகிறாள்.[37] கிளி ஓட்டலிலேயென்றாலும் அழாதிருத்தலையேனும் செய்க என வேண்டுகிறாள்.[38]

நீயும் கண்டு நமரோடும் எண்ணி அளவறிந்தறிதல் வேண்டும். பெரியோர் ஆராய்ந்து நட்பு செய்வார்களேயல்லாமல் நட்பு செய்தபின் ஆராயார்[39] எனக் கூறுகின்ற முறையில் அமைந்தது கபிலரின் இப்பாடல் மட்டுமே. அஞ்சும் தலைவியிடம், இழந்த நலம் மீட்டுத் தருவேன் என உறுதிமொழி கூறுகிறாள்.[40] தோழி தலைவியுடன் உறழ்ந்தும் குறை நயக்கிறாள்.[41]

1.5. ஆய்வு முடிவுகள்

(அ) குறிஞ்சி, நெய்தல் திணைகளில் தோழி தலைவியிடம் குறை நயக்கிறாள். ஆனால் அவள் தலைவியிடம் மறுமொழி எதிர் பார்ப்பதில்லை. மருத நிலத்தில் தோழி 'என்னை நின் குறிப்பு?' என நேராகவே மறுமொழியும் வேண்டுகிறாள்.[42]

(ஆ) குறிஞ்சி நெய்தல் திணைகளில் தலைவன் செயலில் வேறுபாடு அமைகிறது. குறிஞ்சித் தலைவன் நிலத்திற்கேற்பச் சிறு கிளி கடிகிறான். நெய்தல் தலைவன் கானலில் ஆயத்தோடாடியும், நெய்தல் பூக்கொணர்ந்தும், பாவை செய்து தந்தும், தலைவியை மகிழ்விக்கிறான்.

## 2. பகல் இரவுக் குறிகள்

2.0. களவு கற்பாக வேண்டும் என்ற நோக்கம் நிறைவேறத்தக்க காலம் உருவாகும் வரை களவு நீடிக்கும். அக்காலத்துப் பகல் இரவுப் புணர்ச்சிகள் நிகழும். முன்பில்லாத ஆற்றலும் துணிவும் நுட்பமும் காமத்தால் உண்டாகும் என்ற அடிப்படையில் இரவுக்குறிப் பாடல்கள் அமைந்துள்ளன. இல்லறம் ஏற்பதற்கு முன்னர் பயிற்சிப்பள்ளி போல் இலங்கும் களவொழுக்கத்தினைத் தக்கவகையில் நிகழச்செய்யும் போக்கில்தான் பகல் இரவுக் குறிகளை அமைத்துக் கொடுக்கிறாள் தோழி.[43]

2.0.1. இப்பிரிவில் குறிஞ்சி, நெய்தல், மருதம் ஆகிய திணைகளில் 21 பாடல்கள் இடம் பெறுகின்றன. கலித்தொகையில் இத்துறைப் பாடல்கள் இல்லை. களவுக்குரிய இத்துறையில் மருதம் வருதல் குறித்தற்குரியது. தோழி தலைவன் தலைவி கிளி ஆகியோரிடத்தில் தோழியின் கூற்று அமைகிறது.[44]

2.0.2. 14 புலவர்கள் இப்பிரிவில் பாடியுள்ளனர். இதில் அதிகமாகப் பாடிய பெருமை கபிலரையே சேருகிறது.[45] இத்துறையில் 16 நிலைகளில் தோழி செயலாற்றுகிறாள்.[46]

2.0.3. பகல் இரவுக் குறிகள் வரைவு கடாதல் துறையிலும் வருகின்றன. இப்பகுதியில் இவை நேரும் நிலையில் அமைகின்றன.

தலைவனைச் சந்திக்கத் தோழி தலைவியை உடம்படுத்தல், தலைவனுக்குக் குறியிடம் அமைத்துக் கொடுத்தல், குறியிடத்துத் தலைவன் வந்தபோது தாயைச் சோதித்தல், தாயறியா நிலையில் குறியிடத்துக் கொண்டு சேர்த்தல், தலைவன் குறி பிழைத்தவிடத்து, அது தங்கள் தவறன்று எனக் காரணம் காட்டி நிலைநாட்டுதல் அதைத் தலைவிக்கும் கூறி அவளைத் தேற்றுதல், பகலில் வருவோனை இரவிலும் வந்து தங்குக என வேண்டுதல் ஆகியன இத்துறையில் தோழியின் பொறுப்புகளாகின்றன.

2.1. தலைவன் இரவுக்குறி வேண்டியபோது உடன்பட்ட தோழி தலைவியையும் அதற்கு உடன்பட வேண்டுகிறாள். தலைவன் பகலில் வந்தும் தலைவியைக் காணாமல் வறிதே பெயர்தலைக் கூறி வழி இன்னாவாயினும் இரவில் வருதலுக்கு ஒப்புதல் தர வேண்டுகிறாள் தோழி. தலைவன் கானலிடத்து வந்து காணாமல் போகின்றார் போலும் என்றும், தலைவர் சாரலில் இடையாமத்து வந்து காண்பர்; அதனால் உண்டாகும் பழிக்கு நாணாமல் இருப்போமாக என்றும் தலைவியிடம் இரவுக்குறி முகம் புகுகிறாள் தோழி.[47] பகற்குறியிடத்துத் தலைவியைச் சந்தித்த தலைவன் வேட்கை தீரா நிலையில் இரவுக்குறி வேண்டும் போதும், தோழி தலைவியின் உடன்பாடு வேண்டுகிறாள். பகலில் தங்கிய

தலைவன் செயலைக் கூறியும், இரவில் அவன் தங்க வாய்ப்பு நன்கு அமைந்துள்-ளமையையும் அவன் தங்க விரும்புவதையும் கூறுகிறாள் தோழி. இரவுக்குறியிடத்தை மட்டும்தான் அவன் தலைவியிடத்து அனுமதி வேண்டுதல் நோக்கற்குரித்து.

2.2. தலைவி பயிலும் இடங்களில்தான் குறியிடங்கள் அமைக்கப் பெறும். அதனால் குறியிடம் அமைக்கும் பொறுப்பு, தலைவி தோழியையே சேருகிறது.[48] குறிஞ்சி நிலத்தில் தோழி, தலைவி கிளி கடியும் தினைப் புனத்தைக் குறியிடமாகக் கூறுகிறாள்.[49] நெய்தல் நிலத்தில் ஓங்கி வளர்ந்த பெண்ணை மரத்திற்கு நடுவே தோன்றும் சிறுகுடிப்பாக்கத்தையும் புன்னைத் தண்ணறுங் கானலையும்[50] குறியிடமாகக் கூறுகிறாள். மருத நிலத்தில் 'எம் ஊர்க்கு அணித்தாய்ப் பொய்கை உளது; அதன் அருகே ஒரு சிறுகான் யாறு உளது. அதன் அருகே மக்கள் வழக்கற்ற பொழிலும் உளது. அங்குக் குழைக்கு எருமன் கொணர யாம் வருவோம்'[51] எனத் தலைவனுக்கு விளக்கமாக வழி கூறிப் பகற்குறியிடம் அமைத்துக் கொடுக்கிறாள். அவ்வத் திணைக்குரிய இயற்கைச் சூழலே குறியிடமாக அமைக்கப் பெறுகிறது. இரவுக்குறி இல்லின் அருகில் அமையும். அதனால் தோழி பகற்குறி மட்டும்தான் அமைத்துக் கொடுப்பதாகப் பாடல்கள் அமைகின்றன.[52]

திணை அறிந்தமையால் தலைவன் வரவு வேண்டிக் கிளியை நோக்கிக் கூறியும்,[53] தலைவனிடம் நேராகவே, மடல்சூழ் பெண்ணை நல்லூருக்கு வரும்படியும்[54] வேண்டுகிறாள் தோழி.

2.3. பகற்குறியில் அடிக்கடி இடையீடு ஏற்படுவதால் தலைவியின் துயர் தீர்வதற்காகப் பகலில் வருபவனை, இரவில் வருக எனத் தோழி வேண்டுகிறாள். இரவில் தங்குதற்கு வாய்ப்பாக, மலைபோன்ற மணல் குவிந்துள்ள இடத்தில் தேரை நிறுத்துக[55] என்றும் ஒருவரையொருவர் அறியாச் சேரியை-யுடைத்து எனவும்[56] புன்னை உதிர்த்த தாதினை ஊதும் வண்டின் இசையால் தேர்மணி ஓசை கேட்க முடியாது[57] எனவும் குறியிடம் கூறுகிறாள். இவ்வமைப்பு நெய்தலில் மட்டுமே காணப்படுகிறது.

2.3.1. தலைவன் இரவுக்குறியிடத்து வந்திருப்பதை அறிந்து தலைவிக்குத் தெரிவிப்பவளும் தோழிதான். இக்குறிஞ்சிப் பாடல்களில் தலைவன் வரும் வழியருமை புலப்படுத்தப்படுகிறது. அவன் கடுஞ்சுழி நீத்தம் நீந்தி வந்ததாகக் கூறப்படுகிறது.[58]

"மாரிக் குளத்துக் காப்பா என்னன்
நூ வலி வளைந்த தொடலை யொள்வாள்
பாசி சூழ்ந்த பெருங்கழல்"

என அருவழியில் வந்த தலைவனின் நிலை சுட்டப்படுகிறது.[59]

2.3.2. இரவுக்குறியிடத்துத் தலைவன் வந்து நிற்கும்போது தோழி தாயைச் சோதிக்கிறாள். 'அன்னாய்! கதவங்குழைய இன்னிசை அருவி பாடுகிறது' என்கிறாள். அதற்கு மேலும் படப்பையில் செயலையைப் பாம்பென நினைந்து இடி இடிக்கிறது என்கிறாள். அதன் பிறகும் தாய் எழாமலிருக்கிறாளா என்று பார்த்து விட்டுத் தலைவியிடம் அன்னை கவலையில் மடிந்தனள்[60] என்று கூறும் தோழியின் பொறுப்பும் அறிவும் வியத்தற்குரியது.

2.4. சிறைப்புறத்து மறைந்து நிற்கும் தலைவனை விரைவில் வெளியே வரச்செய்ய, 'என்னையர் திமில்' தோன்றுகிறது. இப்போது தலைவன் வரவில்லை-யென்றால் தலைவியைக் காணல் இயலாது' எனக் குறிப்பாகக் கூறி அவனை வரும்படிச் செய்து விடுகிறாள் தோழி.[61]

2.5. குறிஞ்சித் திணையில் குறியிழைத்த தலைவன் பின்னர் வரும்போது 'நொச்சிப்பூ விழும் ஒலியை நாம் மட்டும் உறங்காது கேட்கிறோம்' எனத் தோழி தலைவியிடம் உரையாடும் முறையில் கூறிக் குறியிழைத்தமை தங்கள் தவறல்ல என நிலைநாட்டுகிறாள்.[62] தலைவியின் 'தந்தை அறிவார்' என்று தலைவன் வரவில்லைபோலும் என்று குற்றஞ்சாட்டுகிறாள்.[63] நெய்தல் திணையில் குறியிழைத்த நாளின் மறுநாள் காலையிடத்து, தலைவன் வந்த தேர் நசுக்கிய சுறை நெய்தலை ஆற்றுத தலைவிக்குக் காட்டுகிறாள்.[64]

2.6. ஆய்வு முடிவுகள்

(அ) குறியிடம் கூறும்போது அவ்வத் திணைகளுக்குரிய இயற்கைச் சூழலையே அமைக்கிறாள் தோழி.

(ஆ) நெய்தல் திணையில் மட்டுமே தலைவன் தலைவியைச் சந்திக்கும் வாய்ப்புகள் கூறப்படுகின்றன.

(இ) இத்துறையில் யாரும் அறியாக் குறியிடத்தைத் தேர்ந்தெடுக்கும்போதும், தாயின் உறக்கத்தைச் சோதிக்கும்போதும் தோழியின் அறிவு சிறக்கிறது.

(ஈ) இரவுக் குறியிடத்தில் மட்டும்தான் தோழி தலைவியின் அனுமதி வேண்டுகிறாள்.

(உ) பகல் இரவுக் குறிப் பாடல்கள் கலித்தொகையில் இல்லை.

## 3. வரைவு கடாதல்

3.0. வரைவு கடாவல் என்னும் இத்துறையில்தான் தோழியின் முழு ஆற்றலும் வெளிப்படுகிறது. தோழியின் உளவியல் அறிவு, சொல்வன்மை, தலைவிமாட்டு கொண்ட பேரன்பு ஆகிய பல பண்புகளும் ஒருசேரக் காண முடிகிறது.

3.0.1. களவின் முட்டுப்பாடுகளையெல்லாம் அகம் 122ஆம் பாடல் நன்கு விளக்குகிறது. தித்தன் உறந்தையின் புறங்காட்டில் உள்ள முட்டுப்பாடுகளைவிடக் களவு வாழ்வில் தடைகள் அதிகம் இருப்பதாகத் தலைவி கூறுகிறாள். இத்தடைகள் நீங்கத் தோழி மேற்கொள்ளும் முயற்சியே வரைவு கடாதல் என்னும் இத்துறையாகும். இவ்வரைவு கடாதல் முறையைத் தோழியே

"கானல் அல்கிய நங்கள வகலப்
பல்புரிந் தியறல் உற்ற நல்வினை"[65]

என்று கூறுகிறாள். அவள் கையாளும் உத்திகளைச் சூழ்ச்சியாகக் கூறுகிறாள்.

"அழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போகிய
ஒன்று மொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும்வேண்டுமாற் சிறிதே"[66]

என்று தோழி தலைவியை ஆற்றுவதுபோல் கூறி வரைவு கடாதலின் இன்றியமை-யாமையை விளக்குகிறாள். தலைவியும், "நோய் நீந்து அரும்படர் தீரநீ நயந்து, கூறினை வேறு தோழி"[67] என வரைவு கடாவும்படிக் கூறுகிறாள்.

3.0.2. வரைவு கடாதலில் மட்டுமே தோழி கையாளுகின்ற ஒரு சிறந்த உத்தி தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவியிடமும், தலைவி தோழியிடமும் உரையாடும் நிலையில் அமைகிறது.[68]

திருமணம் தவிர்க்க முடியாதது; இன்றியமையாதது; இதனைப் புரிந்து கொண்டால் நயமும் பொருத்தமும் உடையதாகத் திருமணத்தைச் செய்ய முயல்வோம் என்பர் அறிஞர் பெர்குட்டூநா.[69] தோழியின் செயல்கள் யாவும் மணவினையைக் குறித்தே நிகழும் என்று டாக்டர் மொ.அ. துரையரங்கனர் விளக்குகின்றார்.[70] இக்கருத்தினை டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்களும் விளக்குவார்.[71]

வரைவு கடாதல் ஏன்?

3.0.3. தலைவன் பின்னர் கிடைக்க இயலாத களவின்பம் நீட்டிக்க ஆசைப்படுதல். சிறிது இன்பம் கிடைத்தவுடனேயேஅதிலேயே ஈடுபட்டு இருத்தல் மனிதர் இயல்பு. அதைக் கடந்து நிலைத்த இன்பத்திற்கு முன்னேறத் தூண்டுதல், சமுதாயத்தில் பெண்மைக்குத்தான் கற்புத் தேவை என வரையறுக்கப்பட்டதால், தன் கற்பிற்காகப் பெண்மை அஞ்சுதல், இயற்கையும் பெண்மைக்கே வீறு விளைப்பதால் பெண்மை அச்சம் கொள்ளுதல், ஊரவரும் ஆடவனை விட்டுப் பெண் மீதே அலர் தூற்றல், பெண்மையின் மென்மையான உள்ளம் தலைவன் வரும் வழி ஏதத்திற்காக அஞ்சத் தலைவன் அதை வீரமாகக் கொள்ளல், பெண்மை காதலைத் தவிர வேறறியாதலால் ஆற்றுமை கொள்ள, தலைவன் தன்

வாழ்வில் காதல் ஒரு பகுதியாக இருக்க, வரைவு நீட்டித்தல், நொதுமலர் வரைவு அச்சம், இற்செறிப்பால் தலைவனை அடிக்கடி காண முடியா நிலை, இன்னோரன்ன காரணங்களால் தலைவன் களவை நீட்டிக்க விரும்புவதும், தலைவியும் தோழியும் களவைக் கற்பாக்க விரும்புவதும் இயற்கையே.[72]

3.0.4. தொல்காப்பியர் வரைவு கடாதலைக் களவியலிலும், பொருளியலிலும் விரித்துக் கூறுகிறார். தோழியின் செய்கையெல்லாம் 'வரைதல் வேட்கைப் பொருள்' என்றே தொல்காப்பியம் கூறும்.[73]

3.0.5. தோழி கூற்றாக உள்ள 784 பாடல்களில் 257 பாடல்கள் இத்துறையில் மட்டும் அமைந்துள்ளன.[74] தலைவனும் தலைவியும் வரைதலையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்ட தோழியின் கூற்று இத்துறையில்தான் அதிகம். இத்துறையில் மட்டும் 79[75] நிலைகளில் செயலாற்றுகிறாள். குறிஞ்சித்திணையில் வரைவு கடாதல் கூற்று அதிகமாயுள்ளது. பாலை ஒழிந்த நெய்தல், முல்லை, மருதம் திணைகளிலும் இக்கூற்றுகள் அமைகின்றன. இத்துறையில்தான் களவில் தோழி தலைவனிடம் அதிகமாக உரையாடுகிறாள். அடுத்த நிலையில் தலைவி செவிலியிடமும், திணை போன்ற பிறவற்றிடமும் தோழி உரையாடுகிறாள்.[76]

3.0.5.1. புலவர்களின் உள்ளம் கவர்ந்த துறையாகவும் தங்கள் திறனெல்லாம் காட்டும் துறையாகவும் இது அமைந்துள்ளது. அதனால் 123 புலவர்கள் இத்துறையில் பாடியுள்ளனர்.[76A] அதிகமாகப் பாடிய பெருமை கபிலரையே சாரும்.[77] இது ஆற்றாமை, வழிஏதம், அலர், வெறியாட்டு, இற்செறிப்பு குறிமறுத்தல் என்று தனித்தனியாக இனி ஆயப்படும்.

3.1. ஆற்றாமை

3.1.0. தலைவியின் ஆற்றாமை கூறித் தோழி தலைவனை வரைவு கடாவும் பாடல்கள்தான் சங்க இலக்கியத்தில் அதிகமாயுள்ளன. இப்பிரிவில் 109 பாடல்கள் காணப்படுகின்றன.[78] களவுத் திணைகளாகிய குறிஞ்சி,

நெய்தல் திணைகளில்தான் ஆற்றாமை கூறி வரைவு கடாவும் பாடல்கள் மிகுந்துள்ளன. நெய்தலைவிடக் குறிஞ்சியில்தான் அதிகமாகக் காணப்படுகின்றன.[79] இவ்வாறு வரைவு கடாதலைத் தொல்காப்பியர், "காதல் மிகுதி உளப்படப் பிறவும்" என்றும் "மகடூஉப் பிரிதலச்சம் உண்மையானும் என்றும் வரையறுப்பர்.[80] தலைவனின் பிரிவு, அவன் விரைவில் வரையாமை, அவன் வரும் வழியச்சம், ஊரவர் தூற்றும் அலர், திணைமுதிர்ச்சி ஆகியவற்றால் நேரும் இற்செறிப்பு, தாய் நிகழ்த்தும் வெறியாட்டு முதலியன தலைவியின் துன்பத்திற்குக் காரணங்களாகின்றன. இதனால் தலைவி ஆற்றாமையால் வருந்த, தோழி தலைவனை வரைவு வேண்டுதல் அமைகிறது.

3.1.0.1. தலைவி படும் துன்பத்தை, இடும்பை,[81] அணர்,[82] எவ்வம்,[83] உயங்கல்,[84] வருத்தம்,[85] துயரம்,[86] பைதல்,[87] பேதுறல்,[88] அழுங்கல்,[89] படர்,[90] உகுதல்,[91] இனைதல்,[92] கலங்குதல்,[93] நோய்,[94] எனப் பொது நிலையிலும், விளியாநோய்,[95] அலமரல் நோய்,[96] அருநோய்[97] என நோயாக உருவகித்துச் சிறப்பு நிலையிலும் கூறித் தலைவனை வரையத் தூண்டுகிறாள் தோழி. பின்வரும் நிலைகளில், தலைவியின் துன்பம் கூறி வரைவு வேண்டும் தோழி எவ்வாறு செயல்படுகிறாள் என்று ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

3.1.1. தலைவியின் வருத்தத்தைப் பொதுவாகக் கூறி வரைவு வேண்டப்படுகிறது.[98] தலைவியின் துன்பங்களையெல்லாம் கூறி இத்துன்பங்களுக்குக் காரணம் தலைவன் வரைவு மேற்கொள்ளாமையே என்று அறிவுறுத்தித் துன்பத்தைக் களைக என வேண்டும் முறை இந்நிலையில் அமைகிறது.

3.1.2. தலைவியின் காம மிகுதி கூறி அவள் காமம் தணிய வரைவு தூண்டுதல் அடுத்த நிலையில் அமைகிறது.[99] சிறுகோட்டில் பெரும்பழம் தொங்குவதுபோல அவள் உயிர் சிறிதாகவும் காமம் பெரிதாகவும் உள்ளது. காமம் அதிகமானாலும் தலைவனிடத்துத் தலைவியும் தோழியும் கொண்ட தொடர்பு தேயாது எனக் கூறித் தலைவனின் வரவைத் தடுக்கும் முயற்சியும் அமைகிறது.[100]

காமநோய் காரணமாகத் தலைவியின் உறங்காநிலையும்[101] ஊரவர் தூங்கிடும் அவள் மட்டும் தூங்காநிலையும் கூறப்படுகிறது. தலைவனின் தோள் சேர்ந்தாலல்லது தலைவியின் கண்கள் உறங்காது எனத் தலைவன் மேற்கொள்ள வேண்டிய செயலும் சுட்டப்படுகிறது.[102]

3.1.2.1. தலைவியின் உறங்காக் கண்கள் அவலையும் மீறி உறங்கும் போது உண்டாகும் கனவு தலைவியை வருத்துமாற்றை எடுத்துரைத்து வரைவு கடாதலும் அமைகிறது.[103] கனவில் காணுத் தலைவனின் மார்பைக் கனவில்தான் தலைவி காண்கிறாள் என இடித்துரைக்கவும் படுகிறது.[104]

3.1.3. தலைவி காணும் முதல், கரு, உரிப்பொருட்கள் தலைவியின் ஆற்றுமையைக் கிளறி விடும் பான்மை கூறித் தலைவனை வரைவு கடாதலும் அமைகிறது. குறிஞ்சி நிலத்தை விட நெய்தல் நிலத்தில் பொழுதும், கானல் கழி முதலிய இடங்களும் பிற சுற்றுப்புறச் சூழல்களும் தலைவியை அதிகமாக வருத்துகின்றன. நெய்தலின் உரிப்பொருளாகிய 'இரங்கல்', தலைவியின் நிலையில் பொருத்தமாகவே கூறப்படுகிறது.

3.1.3.1. நெய்தல் நிலத்தில் கழிபூத்த மலரைத் தலைவனின் தார் நாற்றத்துடன் நினைத்து வருந்துதல் அமைகிறது.[105] தலைவனைச் சந்தித்த இடங்களாகிய கழியும் கானலும் துன்பம் பெருக ஏதுவாகின்றன.[106] குறிஞ்சித் திணையில் தலைவனின் ஊர், அருவி கண்டும்[107] அன்னை காத்த தொன்னலம் சிதைதல் கண்டும் அழுதலும்[108] அமைகிறது. இவ்வாறு தலைவியின் துன்பத்திற்குச் சூழ்நிலை காரணமாகிறது.

3.1.3.2. மாலைப்பொழுது கழிவது கண்டு தலைவி இரங்குதல்,[109] நள்ளென் யாமமும்[110] இன்னுவாடையும்[111] அலைத்தல், எனப் பொழுதும், பருவக் காற்றும் தலைவியை வருத்துவது காட்டி, வரைவு கடாதல் மேற்கொள்ளப் படுகிறது.

3.1.3.3. சுற்றப்புறத்தில் எழும் ஒலி தலைவியை வருத்துதல் கூறப்படுகிறது. கடல் ஒலி 'பழம்புண் உறுநர்' வருந்துதலாகத் தலைவிக்குத் தோன்றுகிறது.[112] கடலும் தலைவியைப்போன்று காதல் செய்தகன்றவரை உடையதோ என்று தன்னைக் கடலுடன் தொடர்பு படுத்திப் பார்க்கும் நிலை அமைகிறது.[113] இனிய குழலொலியும் இன்று நேரத்தில் ஒலிப்பதால், தலைவியை வருத்துகிறது.[114] இனக்குருகு ஒலி தலைவனின் தேர் ஒலியை நினைவூட்டுகிறது.[115]

3.1.3.4. அன்றில்,[116] நண்டு[117] ஆகியவற்றின் இணைக்காட்சிகளும் தனை பிரிந்து இருக்கும் தலைவியை வருத்துகின்றன. இங்குச் சுற்றுப்புறச் சூழல் உள்ளத்துடன் தொடர்பு பெறும் நிலை விளக்கப்படுகிறது. நெய்தல் நிலத்தில் தான் தலைவியைச் சுற்றுப்புறச் சூழலில் எழும் ஒலி, வாழும் இணைக்காட்சி ஆகியவை வருத்துவதாகக் காட்டப்படுகிறது. சுற்றப்புறச் சூழலால் தலைவி வருந்துவது கூறித் தலைவனை வரைவு கடாவும் இவ்வமைப்பு குறிஞ்சித் திணையை விட நெய்தலில் சிறப்பாக அமைகிறது. அறிஞர்களும் இக்கருத்திற்குத் துணை புரிவர்.[118]

3.1.4. தலைவனின் பிரிவால் தலைவியின் புறநலன் உறும் புன்மையைச் சுட்டி, ஆற்றாமையைப் புலப்படுத்தி வரைவு கடாதல் தோழி கையாளும் மற்றொரு உத்தி. இதில் சில முறைகள் கையாளப்படுகின்றன.

3.1.4.1. தலைவியின் நலன், ஆய்நலன்,[119] தொல்கவின்,[120] மாணலம்[121] எனச் சிறப்பிக்கப் பெறுகிறது. தலைவியின் முன்பிருந்த மேனி நிலையை ஊருடன் ஒப்பிட்டு அவள் நலனிழந்த நிலை கூறி வரைவு கடாதல் அமைகிறது. கழுமலம்,[122] மாந்தை,[123] தொண்டி[124] என வளம் மிகுந்த நெய்தல் நிலக் கடற்கரைப் பட்டினங்களே தலைவியின் முன்னுள் நலனுடன் உவமிக்கப் பெறுகின்றன. இம்மரபு தமிழிலன்றி வேறு எவ்விலக்கியத்திலும் காணப்படாதது என்பர்.[125]

3.1.4.2. 'தளிரன்ன எழில்மேனி தகைவாட' என இவ்வாறு தலைவி நலன் பிரிவுக்கு முன்பிருந்த நிலையையும் பிரிவில் மாறிய நிலையையும்

முரண்நிலையில் காட்டித் தோழி வரைவு கடாவுகிறாள்.[126] தலைவியின் பேரழகும், அது மாறும்படிச் செய்த தலைவனின் கொடுமையும் குறிப்பாகச் சுட்டப்படுகிறது.

3.1.4.3. கழலும் வளையைச் செறித்துக் கொள்ளும் தலைவியின் செயல் கூறி, அதனால் தலைவனின் பிரிவில் உண்டாகும் நலனழிவைப் பிறர்க்குத் தோன்றுவாறு மறைக்கும் தலைவியின் நாணுடைமையையும் தலைவனின் பழி மறைக்கும்[127] பண்புடைமையையும் கூறி வரைவு கடாவுகிறாள் தோழி.

3.1.4.4. தலைவன் வருவதற்கு முன் தலைவியின் நலன் அழிவையும், வந்த பின் நலம் பெற்றமையையும் தலைவனுக்குக் கூறி மன்றல் வேண்டுதல் இன்னொரு உத்தியாகும். இதனால்தான் தலைவிநிலை தலைவனுக்குத் தெரிய வாய்ப்பில்லை என்ற குறிப்பும் அடங்குகிறது. இப்பகுப்பில் கலித்தொகைப் பாடல் சிறப்பாகக் காணப்படுகிறது. நீரற்ற புலம் போன்றவள் வைகறை கார் பெற்ற புலமாதல், பொருளில்லான் இளமைபோல் புல்லென்றவள், வைகறை அருள்வல்லான் ஆக்கம்போல் அணிபெறுதல், அறஞ்சாரான் மூப்பேபோல் அழிந்தவள், வைகறை திறன் சேர்ந்தான் ஆக்கம் போல் அழகு பெறுதல் என இவ்வாறு வாழ்க்கை உண்மைகளையே உவமையாக்கித் தலைவியின் நிலை கூறப் படுகிறது. எனவே கவின் தீராமல் காக்க எனத் தலைவனை வரைவு வேண்டும் முறை அமைகிறது.[128]

3.1.4.5. தலைவியின் நலனை விரும்பவில்லையெனில் தொலைந்த நலனையாவது மீண்டும் தந்து செல்க எனத் தலைவனை வேண்டுதல்[129] தலைவியின் தொல்கவின் தொலைதல் தகுமோ எனத் தலைவனிடமே வினவுதல்[130] தலைவன் அருள் செய்தால் தலைவியின் ஆய்நலன் கெடுமா எனக் கடிதல்[131] என இவ்வாறு தலைவியின் நலனழிவு கூறித் தலைவனை வரைவு கடாதலும் மேற்கொள்ளப்படுகிறது.

3.1.5. இவ்வாறு பொதுநிலையில் தலைவியின் நலனழிவைக் கூறி வரைவு கடாதலோடு சிறப்பு நிலையில் தலைவன் விரும்பிய ஒவ்வொரு உறுப்பும்

நலனழிதலைக் கூறியும் வரைவு தூண்டுதல் அமைகிறது. இந்நிலையில் தலைவியின் முகம், மேனி, நுதல், கண், தோள் ஆகிய உறுப்புகளின் நலனழிவு சுட்டிக் காட்டப்படுகின்றன.

3.1.5.1. தலைவன் பிரிவதற்கு முன்பு இருந்த தலைவியின் மதிமுகம், பின்பு அவன் பிரிவில் ஞாயிற்று ஒளியால் கெடுகின்ற உச்சிக்காலத்து மதிபோல அழகிழந்தமை உவமை வாயிலாய் விளக்கப்படுகிறது.[132]

3.1.5.2. தலைவனின் பிரிவில் தலைவியின் மேனி பசலையுறுதலைச் சுட்டியும் வரைவு கடாவப்படுகிறது. தலைவியின் பசலையைப் பொதுவாகக் கூறுதல்,[133] தலைவி பசலையுறுவதற்கு முன் தலைவி நிலையையும் பசலையுற்ற பின் தலைவி நிலையையும் முரண்நிலையில் காட்டுதல்[134] தலைவியின் பசலை கூறி அதற்குக் காரணமான தலைவனின் அன்பின்மை, வரையாத கொடுமை சுட்டுதல்[135] என இவ்வாறு தலைவியின் பசப்பு கூறப்படுகிறது.

3.1.5.3. தலைவன் அருளாமையால் அவள் விரும்பிய நுதல் பசந்தலைக் கூறி வரைவு தூண்டப்படுகிறது. நன்னுதல் பசலையைப் பொதுவாகக் கூறுதல்,[136] தலைவனின் அருளினால் நுதலிலிருந்த அழகும், பிரிவில் அது மாறியதையும் முரண்நிலையில் சுட்டிக் காட்டுதல்,[137] நன்னுதல் பசலைக்கு மருந்து தலைவனின் அருளே-அதாவது அவன் வரைவு மேற்கொள்ளுதலே-என முடிவாகக் கூறுதல்[138] என இன்ன வகையால் வரைவு கடாவுகிறாள் தோழி. தலைவியின் நுதல், பிறைநுதல்,[139] நறுநுதல்,[140] மாசறு சுடர் நுதல்[141] என அழகும் தன்மையும் சிறப்பிக்கப் பெறுகின்றன.

3.1.5.4. கண்ணழகு கூறி வரைவு மேற்கொள்ளத் தோழி தலைவனைத் தூண்டு முறையும் அமைகிறது. தலைவியின் உறுப்புநலனில் கண்களே அதிகம் இடம் பெறுகின்றன. தலைவன் நயந்த கண்ணின் அழகைச் சிறப்பித்து இத்தகைய அழகிய கண்கள் அழும்படிச் செய்யலாமா என வரைவு கடாவுகிறாள் தோழி.[142]

3.1.5.4.1. தலைவன் விரும்புகின்ற அந்தக் கண்களின் அழகை விளக்கமாகக் கூறி, அவன் உள்ளத்தில் அன்புணர்வைத் தூண்டி வரைவு மேற்கொள்ள வழி வகுக்கப்படுகிறது. கண்ணழகு பெரும்பாலும் மலர்களோடும் சிறுபான்மை பிறவற்றோடும் உவமிக்கப்படுகிறது. பல்லிதழ் மலருண்கண்,[143] நெய்தல் உண்கண்,[144] ஆய்மலர் மழைக்கண்,[145] மாணெழில் மலர்க்கண்,[146] மலிசுனை மலர்[147] ஒக்கும் உண்கண்,[148] பாடில் உண்கண்,[149] பேரமர் மழைக்கண்,[150] அரி மதரெழில் மழைக்கண்,[151] நீர்நீந்து கண்,[152] கயலேர்கண்,[153] வென்றவேல் நுதியேய்க்கும் நெடும் பெருங்கண்[154] என வடிவம், வினை நோக்கி வர்ணிக்கப்படுகிறது. கண்ணழகு கூறி அவன் உள்ள விழைவைத் தூண்டுகிறாள் தோழி.

3.1.5.4.2. தலைவியின் கண்ணழகு கூறும் தோழி அது எவ்வாறெல்லாம் வருந்துகிறது என்றும் தலைவன் உள்ளம் ஏற்கும் முறையில் கூறுகிறாள். நீரேற்ற மலரும் கூர்வாளுற்று வாடிய மலரும்[155] நீருமிழ் கயலும்[156] அதற்கு உவமிக்கப்படுதல் சிறப்பாக அமைகிறது. நுதியேய்க்கும் நெடும்பெருங்கண் விறல் நலன் இழந்தமையும் சுட்டப்படுகிறது.[157] தலைவி தன் நாணுடைமையால் அழ விரும்பாமையும், அவளையும் மீறிக் கண்கள் நீர் சொரிவதும் விளக்கித் தலைவியின் அவல நிலையும், மனநிலையும் தெளிவாக்கப்படுகிறது.[158]

3.1.5.4.3. தலைவியின் அழுகைக்குக் காரணமும் காட்டுகிறாள் தோழி. தலைவன் பிரிய எண்ணுதல்,[159] அருளாமை,[160] வரையாமை,[161] புணர்ச்சியின்மை[162] தலைவியைத் துறத்தல்[163] என இவற்றைக் காட்டித் தலைவியின் அழுகைக்குக் காரணமான தலைவனின் கொடுமை சுட்டப்படுகிறது.[164]

3.1.5.4.4. தலைவனின் பிரிவில் அழுத கண்கள் பசந்து துன்புறுதலும் கூறப்படுகின்றன. கண் பசப்பைப் பொதுநிலையிலும்,[165] பசப்பதற்கு முன்பும் பின்பும் இருந்த முரண்நிலையும் சுட்டித்[166] தோழி வரைவு கடாவுகிறாள்.

3.1.5.5. தலைவன் பிரிவால் தலைவியின் அழகிய தோள் நலமிழந்ததலையும் கூறி வரைவு கடாவுகிறாள் தோழி.[167] தலைவன் திறம் பாடத் தலைவியின் தோள் பழைய நலம் பெற்ற நிலைமை கூறி அதன் மூலம் தலைவி தலைவன்மேல் கொண்ட அன்புநிலை சுட்டப்படுகிறது.[168] தலைவனின் பிரிவால், வளை கழலுதலைக் கூறிக் குறிப்பாகத் தலைவியின் தோள் மெலிவு தலைவனுக்கு உணர்த்தப்படுகிறது.[169]

3.1.6. தலைவியின் துன்பங்களைச் சுட்டியும் வரைவு மேற்கொள்ளா நிலையில் தலைவியின் ஆற்றுமையையும் அன்பு மிகுதியையும் வெளிப்படுத்தி, அவள் இறக்கவும் நேரிடும் என்று முடிவாகத் தோழி கூறுகிறாள். தலைவியின் சாக்காடு தலைவனிடம் குறிப்பாகவும்[170] வெளிப்படையாகவும்[171] உணர்த்தப்படுகிறது.

3.1.7. தலைவனைத் தோழி கடிந்துரைத்தும் வரைவு தூண்டுகிறாள். தலைவனுடன் தாங்கள் கொண்ட தொடர்பிற்காக வருந்தியும், நலனழிவு நேர்தலால் நொந்துரைத்தும் வரைவு தூண்டப்படுகிறது.[172] தலைவனின் பண்புடைமை கூறிச் சிறந்த தலைவன் தலைவியை வருத்தலாமா என வினவும் பாங்கில் வரைவு கடாவுதல் அமைகிறது.[173] தலைவனின் பண்பில சொல்லும் தன்மை, பொய்ம்மை ஆகிய பண்புகள் பழிக்கப்படுகின்றன.[174] தலைவியின் நலனுண்டு துறக்கும் செயல் 'தீம்பால் உண்பவர் கொள்கலம் எறிதல் போல் உள்ளது' என நேராகக் கடிந்தும் வரைவு கடாவுகிறாள் தோழி.[175]

3.1.8. பணிந்தும் வருந்தியும் நேரிடையாகவே இடித்தும், கடிந்தும் வரைவு கடாவும் தோழி, தலைவன் சிறைப்புறமாதலை அறிந்து அவன் வரவு அறியாமல் பேசிக் கொள்வது போன்றும் வரைவு கடாவுகிறாள். தலைவனின் நட்பு நிலைக்குமா என்ற தங்கள் அச்சத்தைப் புலப்படுத்துதல்,[176] தலைவனின் அறநெறியில் தங்கள் நம்பிக்கையின்மையைப் புலப்படுத்துதல்,[177] இனி இறப்பைத் தவிர வேறு வழியில்லை என்று தாங்கள் நினைப்பதைக் குறிப்பாகப் புலப்படுத்துதல்[178] என இவ்வாறு தலைவன் சிறைப்புறமாகத் தலைவியுடன் உரையாடும் நிலையில் வரைவு கடாவுகிறாள் தோழி.

3.1.9. வள்ளைப் பாட்டு மூலமாகவும் வரைவு கடாவுகிறாள் தோழி. அவள் சொல்லெடுக்க, தலைவி ஆற்றுமையைக் கூறும் முறையிலும்[179] தலைவன் சிறைப்புறத்தானாக அவள் இயற்பட மொழிய தலைவி இயற்பழிக்கும் முறையிலும்[180] தலைவன் சிறைப்புறத்தானாக, அவளும் தலைவியும் வள்ளைப் பாட்டு பாடத் தலைவி ஆற்றியமை அவள் தன்னினே கூறும் முறையிலும் தலைவனை வரைவு தூண்டுகிறாள்.[181] தோழி தலைவி இருவரும் மாறி மாறித் தினை குற்றும்போது, தலைவனின் புகழையும் இகழையும் மாறி மாறி வள்ளைப் பாட்டில் அமைத்துப் பாடித் தலைவனை வரைவு கடாவும் முறை குறிஞ்சித் திணைக்கே சிறப்பாக அமைகிறது.

3.1.10. தலைவியின் துயரைப் புலப்படுத்தி, உடனே தேர் பூண்டு தலைவியின் துயர் களைக என நேரிடையாக வேண்டும் முறையிலும் வரைவு கடாவப் படுகிறது. இவ்வமைப்பு நெய்தற் கலியில் மட்டுமே காணப்படுகிறது.[182] தலைவியின் துன்பத்திற்கு மருந்தாக விரைந்து செல்லத் தலைவனை முடுக்கி வரைவிற்கும் வழி வகுக்கப்படுகிறது.[183]

3.1.11. தோழி தன் துன்பம் கூறி வரைவு தூண்டுதலும் செய்கிறாள். தன் கண்கள் அழுததையும்[184] இரவிலும் தூங்காமல் வருந்தியதையும் கூறி வரைவு மேற்கொள்ள வேண்டுகிறாள்.[185]

3.1.12. ஆய்வு முடிவுகள்

(அ) குறிஞ்சி, நெய்தல் மகளிரின் அன்பத்தில் வேறுபாடில்லை. நிலத்தின் சூழலால் அன்ப அளவு வேறுபடுகிறது. அன்பம் மிகுவிக்கும் இச்சூழலை வரைவு கடாவும் உத்தியாகத் தோழி பயன்படுத்துகிறாள்.

(ஆ) உரிப் பொருளுக்கேற்ப, சுற்றுப்புறச் சூழலால், குறிஞ்சிநிலத் தலைவியை விட நெய்தல் நிலத் தலைவியே அதிகமாக வருந்துகிறாள். வரைவு கடாவும் தோழியும் இவ்வுத்தியைக் குறிஞ்சியிலும் நெய்தலில் அதிகமாகக் கையாளுகிறாள்.

(இ) திணைகுற்றும்போது பாடும் பாட்டு குறிஞ்சி நிலத்திற்கே உரியதாதலால், வள்ளைப்பாட்டு மூலம் வரைவு கடாவுதல் குறிஞ்சித் திணையில் மட்டுமே தோழியால் கையாளப்படுகிறது.

(ஈ) களவு வாழ்வில் தலைவன் நெய்தலில் மட்டும்தான் தேருர்ந்து தலைவியைக் காண்கிறான். அதனால் 'உடனே தேர்பூண்க' எனத் தோழி தலைவனை வேண்டுதல் நெய்தல் திணையில் மட்டுமே அமைகிறது.

(உ) தலைவனின் பிரிவால், தலைவியின் புறநலன் உறும் புன்மையைப் பொதுநிலையிலும் சிறப்பு நிலையிலும் கூறித் தலைவனை வரைவு கடாவுகிறாள்.

(ஊ) தலைவன் எந்த உத்திக்கும் உடம்படாநிலையில் தலைவியின் சாக்காட்டைக் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் அறிவித்து வரைவு கடாவுகிறாள்.

### 3.2. வழிஏதம்

3.2.0. தலைவனின் அன்பை விளக்கும் படிக்கற்களாகிய வழிஏதங்களைத் தோழி வரைவு கடாவும் உத்தியாக மாற்றுகிறாள். இப்பிரிவில் குறிஞ்சித் திணையில் 56 பாடல்களும்,[186] நெய்தல் திணையில் 6 பாடல்களுமாக[187] மொத்தம் 62 பாடல்கள் அமைகின்றன. "ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்" என்றும்,[188] "பொழுதும் ஆறும் காப்புமென்றிவற்றின் வழுவினாகிய குற்றம் காட்டலும், தன்னை யழிதலும் அவணூ றஞ்சலும்"[189] என்றும் இவ்வரைவு கடாவும் முறைக்கு இலக்கணம் வகுப்பார் தொல்காப்பியர்.

3.2.0.1. இரவில் அருவழியாயினும் எளிதாக எண்ணித் தலைவியால் கொண்ட அன்பால் வரும் தலைவன் நிலையையும், அவன் வரவை விரும்பினும் தலைவனுக்கு ஊறு நேருமோ என அஞ்சும் தலைவி நிலையையும் சீர்தூக்கி, வரைவுகடாதலே ஏற்றது என முடிவெடுக்கிறாள் தோழி. பெண்பாலாதலால் தோழியின் நெஞ்சமும் தலைவியின் நெஞ்சு போலவே அஞ்சுகிறது. அதனால் அஞ்சுதற்குரிய வழிஏதங்களையே கருவியாகக் கொண்டு தலைவனை வரைவு கடாவுகிறாள் தோழி.

3.2.0.2. வழிஏதத்தைப் பற்றிக் கவலைகொள்ளாத ஆண்மை நெஞ்சம் கொண்ட தலைவனுக்கு எடுத்துரைக்க வேண்டியிருப்பதால் தோழி

வழிஏதங்களை விரிவாகவே கூறுகிறாள். தலைவன் வரும் வழியில் இயற்கை-யாகவே அமைந்திருக்கும் இடையூறுகளையும், தோன்றும் முட்டுப்பாடுகளையும், பொருந்தாக் காலத்தையும் விளக்குதல் தேவையாகிறது.

3.2.0.3. வழிஏதங்களினால் தலைவனுக்கு ஊறு ஏற்பட்டதாகப் பாடல்கள் இல்லை. புலவர்கள் பாடும் மரபும் இல்லை. ஆனால் அவ்வேதங்களைத் தோழி வரைவு கடாவும் உத்தியாகத்தான் பயன்படுத்துகிறாள்.

3.2.0.4. வழிஏதம் காதலுணர்வு மட்டுமே கொண்ட தலைவனுக்குப் பொருட்டல்ல. அஞ்சா நெஞ்சங்கொண்ட இளந்தலைவன் வழி இடையூறுகளைப் பொருட்படுத்துவதில்லை. அவனுக்குத் தலைவியைச் சந்திப்பதே ஒரே நோக்கமாக இருக்கிறது. தலைவி தோழி போலில்லாமல், ஆண்மையாளனாகிய தலைவனுக்கு அச்சவுணர்வே இருக்காது. தலைவியின் அன்புக்கு முன் வழிஏதம் போன்ற இடையூறுகள் அவன் நெஞ்சில் நிலவுவதில்லை. ஆனால் தலைவியின் நெஞ்சில், தலைவனைச் சந்திக்கும்போது மட்டும் காதலுணர்வு மிகுகிறது. மற்ற நேரங்களில் அவன் வரும் வழியச்சமே நெஞ்சை அலைக்கிறது. வழி-யச்சத்தால் களவில் நிறைவின்மை, வழிஏதமின்றிச் சென்றானோ என்ற துடிப்பு ஆகியன மகளிரின் வாழ்வில் அமைகின்றன. தலைவனின் அஞ்சாமையும் காதலுணர்வும் ஒரு புறமாகவும் வழிஏதம் பற்றிய அச்சம் மறுபுறமாகவும் முரண்நிலையில் இப்பகுதி காட்டப்படுகிறது. அதனால் இக்கொடுமைப் பின்புலம் வரைவு கடாவும் உத்தியாகத் தோழியால் பயன்படுத்தப்படுகிறது.

3.2.1. களவு வாழ்வில் குறிஞ்சி நிலத்திலும், கற்பு வாழ்வில் பாலை நிலத்திலும் வழிஏதம் கூறப்படுகிறது. குறிஞ்சியில் அவ்வழிஏதம் வரைவு கடாவும் உத்தியாகவும், பாலை நிலத்தில் (அன்புக்காட்சி காட்டி) ஆற்றுவிக்கும் உத்தியாகவும் மாற்றம் பெறுகிறது.

3.2.1.1. மதயானைகளையும் அடித்துச் செல்லும் பெருவெள்ளத்தில் தலைவன் கருங்கண் பன்றியைப் போன்று நீந்தி வருதல் கூறப்படுகிறது.[190] அவன் வரும் பாதை பெருவழியாக இல்லை. சிறுநெறியாகவே காட்டப் படுகிறது.[191] அவன் வரும் வழியில் இரவில் இரை தேடும் கொடிய விலங்குகள் குறிக்கப்படுகின்றன. தலைவன் வரும் வழியருமை புலப்படுத்த யானையே அதிகமாகக் கூறப்படுகிறது. இரவுக்குறியில் புலிக்கும் யானைக்கும் நடக்கும் போராட்டமே அதிகமாகச் சுட்டப்படுகிறது. புலியைக் கொன்ற யானையின் வெற்றியைக் குறிப்பிட்டு, அது வெற்றிச் செருக்குடன் திரியும் பாதையில் வரலாமா என வினவும் போக்கு அமைகிறது.[192]

3.2.1.2. புலிக்குப் பயந்து ஓடுதல்,[193] தன் குடும்பத்தைக் காத்தல்[194] என இவ்வாறு புலிக்கஞ்சும் யானையைக் கூறி யானையே புலிக்கஞ்சும் வழியில் வரலாமா எனத் தலைவன் வரவைத் தடுக்கும் முயற்சியில் பாடல்கள் அமைகின்றன.

3.2.1.3. புலியின் மீதுள்ள பகையால் வேங்கை மரத்தைக் குத்தும் கழுவு கொள் நெஞ்சுடன் உள்ள கோட்டுமாவைக் காட்டி இவ்வழியில் வாரல் எனத் தடுக்கும் முயற்சியும் காணப்படுகிறது.[195]

3.2.1.4. புலியைக் கொன்ற யானையின் வெற்றி காட்டப்படுவது போல, யானையைக் கொன்ற புலியின் வெற்றியும் குறிக்கப்பட்டு வரைவு கடாவப்படுகிறது.[196]

3.2.1.5. புலியின் மீது சினம் கொண்ட யானை காட்டப்படுவது போல யானை மீது கறுவு கொண்ட புலியும் காட்டப் பெற்று வழியருமை புலப்படுத்தப்படுகிறது.[197]

3.2.1.6. புற்றுச் சோற்றினைத் தின்னும் கரடி எங்கு உலவும் வழக்கரு வழி,[198] மிகுந்த வலியுடைய கோள்மா வழங்கும் இருள்வழி,[199] களிற்றினைச் சந்தன மரத்துடன் புரட்டும் பெருஞ்சின மாசுணம், அகல்வாய்ப்

பாம்பு, அணங்குடை அரவு ஆகியன திரியக்கூடிய பகல்நேரத்திலும் அஞ்சும்-படியான கடும் சுரன்[200] என அருவழிகளைக் கூறித் தலைவனின் வரவைத் தடுத்து வரைவு முயற்சி தூண்டப்படுகிறது.

3.2.2. தலைவன் வருங்கால் ஊரவரை எழுப்பும் கூகையிடத்து உரைக்கும் முகமாகச் சிறைப்புறத்து இருக்கும் தலைவனுக்கு இரவுக்குறியின் களவு முட்டுப்பாடு தோழியால் அறிவுறுத்தப்படுகிறது.[201]

3.2.3. இடர்மிக்க வழியினைக் காட்டும் தோழி ஏதமிக்க காலத்தையும் சுட்டி வரைவு கடாவுகிறாள். பாம்பின் பகையான, முரசு போல் முழங்கும் இடி,[202] இருளைக் கிழிப்பது போன்று மின்னும் மின்னல்[203] ஆகியவற்றைக் காட்டித் தலைவனின் வரவு மறுக்கப்படுகிறது. தலைவன் வரும் வழியில் இடி மின்னலுடன் கூடிய மழையே பெய்வதாகக் காட்டப் படுகிறது.[204] தாவில் பெரும்பெயல்[205] உரவுமழை[206] ஆடுமழை[207] பல்துளி[208] என மழை பொழியும் நிலை கூறப்படுகிறது. அருவழியில், மழை பொழியும் நேரத்தில் இருளும் அதிகமாகக் காட்டப்படுகிறது.[209] கானவர் மடிந்த கங்குல்[210] நாம நள்ளிருள்[211] ஆரிருள்[212] வியலிருள்[213] கனையிருள்[214] மையிருள்[215] என இருளின் தன்மை புலப்படுத்தப்படுகிறது. தலைவன் பெரும்பாலும் நடுநாள் இரவில்தான் வருவதாகக் காட்டப்படுகிறது. பானாள்[216] அரைநாள்[217] நடுநாள்[218] கங்குல்[219] யாமம்[220] எனத் தலைவன் வரும் நேரம் கூறி வாரல் வருந்துவம் யாம் என வரைவு கடாவுகிறாள் தோழி.

3.2.4. வழிஏதம் கூறி வரைவு கடாதல் நெய்தலிலும் குறிஞ்சியிலேயே பெருவரவாக உள்ளது. குறிஞ்சித்திணையில் தோழி இரவுக்குறியிடத்து வழிஏதம் கூறிக் குறி மறுத்து வரைவு கடாவுதலைச் சிறந்த உத்தியாக மேற்கொள்கிறாள். தலைவன் ஏதமிக்க வழியில் வருவதால் தோழி தலைவி இருவரின் அச்சம் மனத் துன்பம், தலைவனுக்கு ஏதம் நேரின் இருவரும் உயிர் வாழாமை ஆகிய குறிப்புகள் தெரிவிக்கப்படுகின்றன.

3.2.5. தலைவியின் ஆற்றாமையைத் தெரிவிக்கும் முறையில் சில உத்திகளையும் தோழி மேற்கொள்ளுகிறாள்.

3.2.5.1. தலைவன் சிறைபுறத்தானாகத் தலைவியிடம் கூறுவது போன்று, வழிஏதம் கூறி இன்று அவன் வராமலிருந்தால் நலமாயிருக்கும் என்றும்,[221] நேற்று சென்றவன் தன் இருப்பிடத்தை அடைந்திருப்பானோ என்றும்,[222] ஓங்குமலை நாடன் வரும் வழியைக் காண முடியவில்லை என்றும் அவ்வழி வந்து வருத்துகிறது என்று தங்கள் துன்பத்தையும்[223] உறக்க-மின்மையையும்[224] குறிப்பாகக் கூறி வரைவு கடாவப்படுகிறது. தலைவனிடம் நேராகவே தங்கள் அச்சம்[225] துன்பம்[226] ஏதம் நேரின் உயிர் வாழாமை[227] ஆகியவற்றைக் காட்டியும் வரைவு தூண்டப்படுகிறது.

3.2.5.2. இரவுக்குறியில் தலைவன் வருதலால் தாய் அறியவும் இற்செறிப்பு நிகழவும் நேரிடலாம் எனத் தலைவனுக்கு அறிவுறுத்தப்படுகிறது. தலைவன் மின்னொளிர் எஃகத்துடன் தனியனாக வந்ததால் தாய் கண்டு நெடுவேள் எனப் பரவினாள் என்றும்[228] இரவில் வந்து தலைவியின் ஆகம் புல்லியதால் அறுகாற் பறவை மொய்க்கத் தாய் வினவி அறிந்தாள் என்றும் கூறிக் குறி மறுத்தலோடு இற்செறிப்பும் உணர்த்தப்படுகிறது.[229]

3.2.5.3. தலைவன் சிறைப்புறமாகத் தலைவியிடம் உரையாடும் நிலையில், செல்கின்றீரா என்று கேட்கும் வன்மையும் இல்லை; வருவீரோ என வினவவும் முடியவில்லை. என் செய்வது எனத் தங்கள் மனக்குழப்பத்தைத் தெரிவித்தும்,[230] அவன் இன்று ஏன் வரவில்லை? வந்து அருளமாட்டானோ என வினவுவது போன்றும், அவலநிலை உணர்த்தப்பட்டு வரைவு தூண்டப் படுகிறது.[231]

3.2.5.4. பல்லோர் துஞ்சும் பானாட் கங்குலில் எப்படித்தான் வந்தாயோ, எங்கள் சிறுகுடியை எப்படித்தான் அறிந்தாயோ என இரங்குவது போன்றும்[232] வரவு மறுக்கப்படுகிறது.

3.2.6. தலைவன் வரும் வழிஏதம் கூறி இரவுக்குறி மறுத்துப் பகற்குறி நேர்தலும்[233] பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்தலும்[234] இருகுறி மறுத்தலும்[235] எனக்குறி மறுப்பதன் மூலம் வரைவு கடாவுகிறாள் தோழி.

3.2.6.1. தலைவன் சிறைப்புறமாக, நெடுவெண்ணிலவிடம் தலைவன் வரும் வழிஏதம் கூறி நீயும் களவிற்கு நல்லையல்லை எனப் பழிப்பதுபோல இடர்ப்பாடு கூறிக் குறி மறுத்து அவன் வரைவு கடாவுகிறாள்.[236] தோழி சொல்லெடுப்பத் தலைவியின் மூலம் அரைநாள் வந்து துன்பம் கொடுத்த அன்பிலாளனை நயந்தேன் எனத் தலைவனைப் பழித்தும்[237] தலைவியிடம் கூறுவது போன்று இருளிடைச் சிறுநெறியில் தமியனாக வருதலால் அருளிலர் எனப் பழித்தும்[238] வரைவு கடாவுதல் அமைகிறது.

3.2.6.2. தலைவனிடம் நேராகவே 'ஏதம் மிக்க வழியில் வருதல் பண்பெனப்படுமோ?'[239] 'சான்றோய் அல்லை'[240] அருள் செய்வது போலத் தோன்றினும் நீ உண்மையாக அருளவில்லை[241] தீங்குதான் செய்கிறாய் எனக் கடுமையாகவே கடிந்தும் வரைவு கடாவுகிறாள் தோழி.

3.2.6.3. நெய்தல் திணையில் பகற்குறிக்கண் வந்த தலைவனைக் குறி மறுக்கும் போதும்,[242] இரவுக்குறி வருவேன் என்ற தலைவனிடம் மறுக்கும்போதும்,[243] இரவுக்குறி வந்த தலைவனிடம் பகலில் வருக எனக் குறி மாற்றும்போதும்,[244] தலைவனுக்குப் பகற்குறி மறுத்து இரவுக்குறி வேண்டும்போதும்,[245] பகற்குறிக்கண் வந்தவனிடம் இரவும் விருந்தினனாகத் தங்குக எனத் ~~தலைவனை~~ வேண்டுமிடத்தும்[246] இரவுக்குறி ஏதம் காட்டி வரைவு தூண்டப்படுகிறது.

3.2.7. குறிஞ்சி நிலத்தில் காட்டப்படுகின்ற அளவிற்கு நெய்தலில் வழிஏதம் காட்டப் பெறவில்லை. ஓதம் மல்குதல்[247] துறைச்சுறு கலித்தல்

வன்னெயிற்றரவும்[248] வயமீனும் உலவுதல்[249] கொடுங்கால் முதலை வழி வழக்கறுத்தல்[250] சில நண்டுகள் வலைக்கு வெளியே வந்து தேரினைத் தடுத்தல்[251] ஆகிய சில வழிஏதங்களே குறிக்கப்படுகின்றன. அவையும் குறிஞ்சியில் அஞ்சுமளவிற்குக் கொடுமையுடையதாகக் காட்டப் பெறவில்லை.

### 3.2.8. ஆய்வு முடிவுகள்

(அ) வழிஏதம் பற்றித் தலைவியின் நெஞ்சம் அஞ்சுவதில்லை. அவளுக்கு வழிஏதம் ஏற்பட்டதாக அக இலக்கியத்தில் ஒரு பாடலும் இல்லை.

(ஆ) களவு வாழ்வில் குறிஞ்சி நிலத்திலும் கற்பு வாழ்வில் பாலை நிலத்திலும் வழிஏதம் கூறப்படுகிறது. குறிஞ்சியில் அவ்வழிஏதம் வரைவு கடாவும் உத்தியாகவும் பாலையில் ஆற்றுவிக்கும் உத்தியாகவும் செயல்படுகிறது.

(இ) தலைவன் வரும் வழியருமையைப் புலப்படுத்த விலங்குகளில் யானையே அதிகமாகக் கையாளப்படுகிறது. இரவுக்குறியில் புலிக்கும் யானைக்கும் இடையே நடக்கும் போராட்டமே அதிகமாகக் காட்டப்படுகிறது.

(ஈ) தலைவன் பெரும்பாலும் மழைநாளில் நடுநாள் இரவில் சிறு நெறியில் வருவதாகவே காட்டப்படுகிறான்.

(உ) வழிஏதம் கூறி வரைவு கடாதல் நெய்தலினும் குறிஞ்சித் திணையில்தான் பெருவரவினதாக உள்ளது. இரவு நேரத்தில் தலைவன் வருதல் இதற்குக் காரணமாக அமைகிறது. வழியேதமும் குறிஞ்சித்திணையில் அஞ்சுமளவிற்கு, நெய்தலில் கொடுமையுடையதாகக் காட்டப்படவில்லை.

## 3.3. அலர்

3.3.0. களவு நீட்டிக்கும் தலைவனைத் தோழி வரைவு கடாவ மேற்கொள்ளும் உத்திகளுள் ஒன்று அலர் எனப்படும் பழிச் சொல்லாகும். இப்பிரிவில் 34 பாடல்கள் இடம் பெறுகின்றன.[252] குறிஞ்சித் திணையில் 9[253] பாடல்களும், நெய்தல் திணையில் 24 பாடல்களும்[254] இடம் பெறுகின்றன. களவுக்குரிய இப்பிரிவில் மருதப்பாடலும்[255] வருகிறது.

தோழி தலைவனிடம் நேராக வரைவு கடாவும் பாடல்கள் மிகக் குறைவாகவே உள்ளன.[256] மற்றவை யாவும் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவியிடம் உரையாடுவதாகவே காணப்படுகின்றன. இவ்வரைவு கடாதலைத் தொல்காப்பியர், "அம்பலும் அலரும் களவு வெளிப் படுக்குமென்று, அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்" வரைவு தோன்றும் என்று கூறுவர்.[257]

3.3.0.1. காதலரின் மறை ஒழுக்கம் குறித்து ஊரவர் சொல்லும் பழிச்சொல் மூவகைப்படும். (1) அம்பல் - இது ஒருவருக்கொருவர் மறைமுகமாகச் சைகைவழி தூற்றும் பழி. (2) அலர் - இது ஒருவருக்-கொருவர் சொல்வழியே மறைமுகமாகத் தூற்றும் பழிச்சொல். (3) கௌவை - இது ஒருவருக்கொருவர் வெளிப்படையாகத் தூற்றும் பழிச்சொல். அம்பல் என்பது அலரின் முகிழ்நிலை. கௌவை என்பது அலரின் முதிர்நிலை.

3.3.0.2. முகிழ்முகிழ்த்தல் - சொல் நிகழ்தல் - இல் அறிதல் - அயல் அறிதல் - சேரி அறிதல் - ஊர் அறிதல் - நாடு அறிதல் - தேசம் அறிதல் என அலரின் வளர்ச்சியை - படிநிலையை இறையனாரகப்பொருள் காட்டும்.[258] அம்பல் என்பது போதுநிலை எனவும் அலர் என்பது நாறும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற்போல நிற்கும் நிலை என்றும் வேறுபடுத்தப் படுகிறது.[259]

> "சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
> மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
> மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்ற"

என்ற உலோச்சனாரின் பாடலில் அம்பலின் தோற்றம், தன்மை, பரவும் வேகம் ஆகியன விளக்கப்படுகின்றன.[260] அம்பல்,[261] அலர்,[262] கௌவை[263] என்றும் மூன்று நிலையையும் இலக்கியம் பகர்கிறது. அம்பல் - அலர் - கௌவை என்ற வளர்ச்சி நிலையை இலக்கியம் காட்டுகிறது.[264]

"களவும் கற்பும் அலர்வரைவு இன்றே"[265] எனத் தொல்காப்பியம் களவு, கற்பு ஒழுக்கங்களில் அலரின் இடத்தைக் கூறுகிறது. ஆயினும் இரு ஒழுக்கங்களிலும் அலரின் நிலை வேறுபடுகிறது.

3.3.0.3. களவில் தலைவன் தலைவி இருவருமே தொடர்புடைய-ராயினும், தூற்றப்படுபவள் தலைவி மட்டுமே; தலைவனல்லன்; தூற்றுபவரும் மகளிரே தூற்றப்படுபவரும்; மகளிரே. களவில் அலரைப் பொறுத்தவரை அது மகளிருக்குரியதாகவே அமைகிறது.

3.3.0.4. கற்பிலும் அலர் தூற்றப்படுகிறது. தலைவன் பரத்தையுடன் நீராடும் இடம் பலரும் படியும் இடமாதலால் தலைவன் பரத்தை உறவை அறிந்து அலர் தூற்ற வாய்ப்பேற்படுகிறது. இங்கே தூற்றுபவர் மகளிராயினும் தூற்றப்படுபவன் தலைவனே. தலைவியோ பரத்தையோ அல்லர்.

3.3.0.5. களவில் தலைவன் வரத் தடையாயிருப்பதாலும், தாய் அறிய வாய்ப்பேற்படுவதாலும், இற்செறிப்பு நிகழ்வதாலும் தலைவியாலும் தோழியாலும் நடைமுறையில் அலர் வெறுக்கப்படுகிறது. உளவியல் அடிப்படையிலும் இது வெறுக்கப்படுகிறது. நாணுடைய மகளிர், தம் களவைப் பிறர் அறிவதாலும் அறிந்தோர் தூற்றுவதாலும் அதை எவரும் விரும்பாததாலும் அலரை வெறுப்பது இயல்பாகிறது. அலர் தூற்றும் மகளிர் அலர்வாய்ப் பெண்டிர்[266] கொடிதறி பெண்டிர்[267] வெவ்வாய்ப் பெண்டிர்[268] ஏதில் மாக்கள்[269] என்று தோழியால் தூற்றப்படுகின்றனர். அலர்ச் சொல்லும் சிறுசொல்,[270] ஏச்சொல்[271] ஈரஞ்சாரா இயல்பில் பொய்ம் மொழி,[272] புரையல் தீமொழி பயிற்றிய உரை,[273] ஏதில்மொழி,[274] பசலை பாடல்,[275] நொதுமலர் ஏர்புரை,[276] தீமொழி[277] எனப் பழிக்கப் படுகிறது. அலர் தூற்றும் மூதூரும் மையலூர்,[278] அம்பலூர்,[279] அழுங்கலூர்,[280] பேதையூர்[281] என மாற்றம் பெறுகிறது. அலர் தூற்றும் ஊரே அலர்சுமந்து ஒழிக எனச் சாபத்திற்கும் ஆளாகிறது.[282]

3.3.1. தோழியாலும் தலைவியாலும் அலர் வெறுக்கப்படுகிறது. கற்பில் அலருக்குக் காரணமான தலைவன் வெறுக்கப்படுகிறான்.

3.3.1.1. களவில் வரைவு கடாவும் உத்தியாகக் கொள்ளப் படுகின்ற இவ்வலர், கற்பில் புறத்தொழுக்கம் இல்லை என்று பொய் கூறும் தலைவனுக்கு ஊரவரின் அலர் கூறித் தலைவனின் பொய்ம்மையை நிறுவவும், அவன் பரத்தமையைத் தாங்கள் அறிந்தமையை அறிவுறுத்தவும் வாயில் மறுக்கவும் காரணமாகிறது.

3.3.2. வம்புரையாக உள்ள இவ்வலர் அக்காலச் சமுதாயப் போக்கையே காட்டுகிறது. தலைவன் தலைவியைத் திருமணம் மேற் கொள்ளாமல் வரைவு நீட்டிப்பதையும், திருமணம் மேற்கொண்ட தலைவன் பின்பு பரத்தமையில் ஈடுபடுவதையும் அக்காலச் சமுதாயம் ஏற்கவில்லை. இதை மகளிரின் வாயிலாக அறிவித்து, நீக்க வழி வகுக்கிறது. களவில் கூறும் அலர் வரைவிற்கு வழி வகுக்கிறது. கற்பில் கூறும் அலர் பரத்தமையைப் போக்குகிறது. வரைவு மலிதலில் அலர் தூற்றியவர்கள் வாய் தலைவன் வரைவு மேற்கொண்டவுடன் அடங்கியமை இந்நிலையையே காட்டுகிறது.[283]

3.3.2.1. அலர்வாய்ப் பெண்டிர் நேராக அலர் தூற்றுவதாகப் பாடல்கள் இல்லை. தோழி தலைவி கூற்று மூலமாகத்தான் ஊரவர் கூறிய அலரை அறிய முடிகிறது.

3.3.2.2. அலரைப் பற்றிய தன் கருத்தைத் தலைவன் கூறவும் இல்லை. அதை அவன் விரும்புதல் அல்லது வெறுத்தல் போன்ற குறிப்பு ஏதுவும் இல்லை.

3.3.2.3. தொல்காப்பியம், 'அலரின் தோன்றும் காமத்து மிகுதி'[284] என அலரின் நன்மை கூறும். அலரால் தலைவனுக்கோ தலைவிக்கோ காமம் சிறப்பதாகச் சங்க இலக்கியத்தில் பாடல்கள் கிடையாது. திருக்குறள் கண்ட தலைவனுல் மட்டும்தான் அலர் தலைவியை எளியளாக்கியதாலும்,[285] காமச்சிறப்பதாலும்[286] வரவேற்கப்படுகிறது. அலரால் பாதிக்கப்படுவது மகளிராதலால் அவர்கள் அலரை விரும்பாமை இயல்பானதே.

3.3.2.4. ஐங்குறுநூற்றில் அலர்கூறி வரைவு கடாவுவதாகப் பாடல் அமையவில்லை. கற்பொழுக்கம் மேற்கொண்ட தலைவன் களவுக் காலத்து நிலை கேட்டபோது 'அம்பலாகற்க என வேட்டேம்' எனத் தோழி தலைவனுக்குத் தெரிவிக்கிறாள்.[287] இரவுக்குறி வேண்டும் தலைவனுக்கு அம்பல் சேரி அலராகும் என்று இரவுக்குறி மறுக்கிறாள் தோழி.[288]

3.3.2.5. தோழி தலைவனை வரைவுகடாவ ஊரலரைக் கருவியாகக் கொள்கிறாள். ஊரவர் அலர்தூற்றலால் அன்னை அறிவாள்; இற்செறிப்பு நிகழலாம்; அதனால் தலைவியைக் காணல் இயலாது; அதனால் உடனே வரைவு மேற்கொள்க என்று தலைவனிடத்து வரைவு கடாவும் உத்தியாக மேற்கொள்கிறாள் தோழி.

3.3.3.0. அலர் குறிஞ்சி, நெய்தல் ஆகிய இரு நிலத்திற்கும் உரியதாயினும் நெய்தல் திணையில் அதிகம் பயன்படுத்தப்படுகிறது. குறிஞ்சியில் தலைவன் யாரும் அறியா இரவில் நடந்து வருதலால் அலரெழ வாய்ப்பில்லை. நெய்தல் நிலத்திலோ தலைவன் பலரும் காணப் பகலில் வருதலும்,[289] மணியொலிக்கத் தேரில் வருதலும் ஊரவரை எழுப்பி அலர் தூற்ற வாய்ப்பேற்படுத்துகிறது.[290] (நெய்தலில் பாகன் தேரை ஓட்டினும் அவனுடன் தலைவன் பேசுவதில்லை. முல்லைத்திணையில் தலைவன் பாகனுடன் பேசுகிறான்)[291]

3.3.3.1. குறிஞ்சித்திணையில் வழிஏதம் கூறி வரைவுகடாவுதலும் நெய்தல் திணையில் அலர்கூறி வரைவு கடாதலும் இயல்பாக அமைகிறது. குறிஞ்சியில் வழிஏதம் கூறுவதில் தலைவியின் பேரச்சமும், நெய்தலில் அலர் கூறலில் தலைவியின் நாணழிவும் புலப்படுத்தப்படுகின்றன.

3.3.3.2. குறிஞ்சியில் பகற்குறியில் தலைவன் முருகனைப் போல வயநாய் பிற்பட வரும்போதுதான் அலர் தூற்றப்படுகிறது.[292] நெய்தல் திணையில் மணி ஒலிக்கத் தேரில் வருதல்[293] நீல் செவித்தாகிய புணர்ச்சி[294]

பணிமொழி பயிற்றல்[295] மகளிருடன் ஆடி நொதுமலர் போலக் கதமென வந்து முயங்கிச் செல்லுதல்[296] நெய்தல் தழையைத் தலைவிக்குச் சூட்டுதல்[297] ஆகியவை அலருக்குக் காரணமாகின்றன. தலைவனின் வருகையும் செயலுமே அலருக்குக் காரணம் எனக் கூறி வரைவு கடாவும் நிலையும் அமைகிறது.

3.3.4. அலர் கூறலுக்குச் செயலின் விளைவுகள் காரணமாகின்றன. குறிஞ்சித் திணையில் தலைவனின் புகழ்பாடித் தலைவி நெல்குற்றுவது அலருக்குக் காரணமாகிறது.[298] அலருக்குக் காரணமாக நெய்தல் தலைவியின் செயல் குறிப்பிடப்படவில்லை. அவளுடைய நெற்றிப் பசலையே அலருக்குக் காரணமாகிறது.[299]

3.3.4.1. அலர் கூறல் சில விளைவுகளுக்குக் காரணமாதலைச் சுட்டித் தோழி வரைவு கடாவுகிறாள். (1) தலைவியின் புறநலனழிதல்.[300] (2) அகநலனழிவுக்கு—அதாவது நாண் அழிவுக்குக்—காரணமாதல்.[301] (3) அன்னை அலைத்தல்.[302] (4) அன்னை அறிந்து இற்செறித்தல்.[303] (5) தலைவனைக்காண முடியாமல் அவன் வரவைத் தடைசெய்தல்[304] என்பன அவை.

3.3.5. அம்பல், அலர், கௌவை ஆகியவற்றின் ஒலி, நாரைக் கூட்டத்தின் ஒலி,[305] உள்ளி விழவில் எழும் பேராரவாரம்[306] சோழரின் புள்ளொலித்து ஓவாத் தேர்வழங்கும் தெருவில் எழும் ஆரவாரம்[307] உப்பு வண்டிகளின் ஒழுகையைப் பார்ப்போர் எழுப்பும் ஆரவாரம்[308] பசும்பூண் பாண்டியனால் அதிகன் பட்டபோது கொங்கர் எழுப்பிய ஆரவாரம்[309] ஆகியவற்றுடன் உவமிக்கப்படுகின்றன. குறிஞ்சி நெய்தல் திணைகளில் அலர் மிகுதி காட்ட வரலாற்றுக் குறிப்புகளுடன் இணைக்கப்படுகின்றன. பலரும் அறிய ஏதுவாகும் இடம் இணைக்கப்படுகின்றது. இதிலிருந்து ஒலியின் மிகுதி, பலரும் அலர் அறியும் இடம், வேகம், பரவும் வகை, தலைவியின் களவு குறித்து எள்ளல் நகை ஆகிய அனைத்தும் விளக்கப்படுகிறது.

3.3.6. தலைவன் சிறைப்புறமாகத் தலைவியிடம் உரையாடும் போக்கில் அலரைப் பற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. மகளிரின் நாணம் இதற்குக் காரணமாகலாம். கலித்தொகையில் மட்டும் தலைவனிடம் இது நேராகவே கூறப்படுகிறது.

3.3.6.1. அலர்த் தோற்றத்திற்குத் தலைவனையே காரணமாக்கி அலர் ஆற்றலால், தலைவி அன்புநிலை கூறுதல், அலர் விளைவால் தலைவியின் நலனழிவு, இற்செறிப்பு, தலைவனைக் காண முடியா நிலை ஆகிய விளை பயன்களையும் கூறித் தலைவனை வரைவு கடாவுகிறாள் தோழி.

3.3.7. ஆய்வு முடிவுகள்

(அ) அம்பல் வளர்ந்து அலராகி, கௌவையாக முதிர்கிறது.

(ஆ) களவிலும் கற்பிலும் பயன்படுத்தப்படும் அலர் மகளிர்க்கே உரியது.

(இ) அலர் எழுந்ததாகத் தோழி கூறுவதே தவிர நேராகத் தோழியையோ, தலைவியையோ நோக்கி மகளிர் பேசுவதாகப் பாடல்கள் இல்லை.

(ஈ) களவில் அலர், தலைவியையும், கற்பில், தலைவனையும் பாதிக்கிறது. களவு நீட்டிப்பதையும், பரத்தமையையும் சமுதாயம் எதிர்த்ததையே இவ்வலர் காட்டுகிறது. களவில் அலர் வரைவு கடாவும் உத்தியாகிறது. கற்பில் தலைவனின் பொய்ம்மையை நிறுவவும், தலைவனுக்குத் தாங்கள் பரத்தமை அறிந்ததை அறிவுறுத்தவும், வாயில் மறுக்கவும் பயன்படுகிறது. அலர் களவில் வரைவு தூண்டவும், கற்பில் பரத்தமையை நீக்கவும் பயன்படுகிறது.

(உ) களவில் தோழியும் தலைவியும் அலரை வெறுக்கின்றனர். கற்பில் அலருக்குரிய தலைவனை வெறுக்கின்றனர்.

(ஊ) அலர் குறிஞ்சியை விட நெய்தலில் அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது. தலைவன் பகலில் வருதல் இதற்குக் காரணமாக அமைகிறது.

(எ) குறிஞ்சித்திணையில் தலைவியின் செயலும் நெய்தல் திணையில் தலைவனின் செயலும் அலருக்குக் காரணமாகின்றன.

## 3.4. வெறியாட்டு

3.4.0. சமுதாயச் சடங்குக்கும் கற்பொழுக்கத்துக்கும் இடையே நிகழும் போராட்டத்தைப் புலப்படுத்தும் முறையில் வெறியாட்டு என்னும் துறை அமைந்துள்ளது. எனவே சுவைமிக்க அகப்பாடல் பலவற்றுக்கான கருவை இத்துறை வழங்கியுள்ளது. மனவுணர்வுகளுக்கு மதிப்பளிக்காத மரபுவழிச் செல்லும் முதுமைக்கும், மரபு முதுமை இரண்டினையும் எள்ளி நகையாடி ஆனால் அவற்றின் வரம்புகளை மீற இயலாது தவிக்கும் இளமைக்கும் நடக்கும் போராட்டமே இவ்வெறியாட்டு எனலாம்.

3.4.0.1. இப்பகுப்பில் 16 பாடல்கள் இடம் பெறுகின்றன.[310] ஒரு மருதப்பாடல்[311] தவிர மற்றவை அனைத்தும் குறிஞ்சிப்பாடல்களே. இம்மருதப்பாடல் மட்டும் தலைவன் கூற்றாக வருகிறது. தோழி, நெஞ்சிடம் உரையாடுவதாக அமையும் பாடல்[312] தவிர மற்றவை தலைவன் சிறைப் புறத்தானாக அவள் தலைவியிடம் உரையாடுவதாக அமைகிறது. முருக வழிபாட்டைத் தலைவி தோழி ஆகிய இருவரும் கற்புக்கு இழுக்கென நினைத்ததும் தலைவனிடம் நேராகக் கூறுவதை நாணிழுக்கு என நினைத்ததும் இதற்குக் காரணமாகலாம். அகநிலை வெறியாட்டு, முருக வழிபாட்டைச் சார்ந்திருத்தலாலும் களவில் மட்டுமே இடம் பெறலாலும் இது குறிஞ்சித் திணைக்கே சிறப்பாக அமைகிறது.[313] இக்கூற்றிற்குக் கலைக்களஞ்சியமும் அரண் செய்யும்.[314]

3.4.1. களவொழுக்கத்தைத் தாய்க்கு வெளிப்படுத்தி அறத்தொடு நிற்கவும், தலைவனை வரைவு கடாவவும் தோழி வெறியாட்டைக் கருவியாகக் கொள்கிறாள். தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும்போது உண்மை உணர்த்தும் நோக்கத்தின் நிலைக்களனாக இது விளங்குகிறது. தலைவனுக்கு வெறியாடலைப் பற்றி உணர்த்தும்போது, வரைவுக்குத் தூண்டுகோலாகப் பொலிகிறது. செவிலி, தலைவி, முருகன், வேலன், அகவன்மகள், கழங்கு

ஆகியவர்களை நோக்கித் தோழி வெறியாட்டை அறிவுறுத்தும்போது அறத்தொடு நிற்றலாகிறது. தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்கு வெறியாட்டை அறிவுறுத்தும்போது வரைவு கடாதலாகிறது. அறத்தொடு நிற்றலில் வெறியாட்டைக் கூறிய தொல்காப்பியர் அதை வரைவு கடாதலில் கூறவில்லை.

3.4.1.1. கலித்தொகையில் மட்டும் வெறியாட்டு கூறி வரைவு கடாதலோ அறத்தொடு நிற்றலோ இல்லை. கலித்தொகை காலத்தில் மக்கள் வெறியாட்டில் நம்பிக்கையிழந்த போக்கையே இது தெளிவாக்குகிறது.

3.4.2. தோழி தலைவனுக்கு வெறியாட்டை அறிவுறுத்துங்கால், வேலன் செய்யும் சடங்குகளை விரிவாகவே கூறுகின்றாள். வேலன் வெறிக்களத்தையும் முருகனின் புகழையும் பாடுகிறான்.[315] வேற்றுப் பெருந்தெய்வத்தையும் வாழ்த்துகிறான்.[316] முருகன் பண்பிற்கு ஏற்ப வல்லோன் பொறியமை பாவை போலக் கையோச்சி ஆடுகிறான்.[317] இரவு நேரத்தில் களம் இழைக்கிறான்.[318] அகன்ற பந்தல் அமைக்கிறான்.[319] வேலிற்குக் கடம்ப மலர் சூட்டுகிறான்.[320] கடம்பு கொடி எடுக்கிறான்.[321] தினை அரிசி பரப்புகிறான்.[322] கள்ளும் கன்னியும் கையுறையாக வைத்து வழிபடுகிறான்.[323] பூம்பலியாவது[324] மறிப்பலியாவது[325] தருகிறான். உருவச் செந்தினை குருதியொடு தூவுகிறான்.[326] அப்போது இன்னியம் கறங்குகிறது[327] என இவ்வாறு வெறியாட்டு நிகழ்ச்சிகள் விரிவாகவே கூறப்படுகின்றன. ஆனால் வெறி முடிவில் வேலன் என்ன சொன்னான் என்பது கூறப்படவில்லை. வெறியாடலைத் தலைவனுக்குத் தெரிவிக்கும் தோழியின் நோக்கமே இதற்குக் காரணமாகலாம். வேலன் நடத்தும் வழிபாட்டு முறை இன்று மலபாரில் தெய்யாட்டம் மற்றும் அப்பகுதியைச் சேர்ந்த பூசாரிகள் நடத்தும் முறைகளோடு ஒத்திருப்பதாக திரு பி.எல். சாமி அவர்கள் கூறுகிறார்.[328] வெறியாடல் இன்றும் குறி கேட்கும் பழக்கத்தின் ஆதிமூலமாக அமைகிறது. தலைவியின் மெலிவிற்கு முருகனே காரணம் என்ற வேலனின் வாய்மொழி, பழி ஊரிடம் பாவம் ஊரிடம் என்ற

பழமொழிக்கு உறுதுணையாக நிற்பதுடன், சமூகத்தின் அறியாமைச் சின்னமாகவும் அமைந்திருக்கிறது.

3.4.3. தோழி வெறியாட்டை அறிவுறுத்துவதால் சில பயன்கள் விளைகின்றன.

3.4.3.1. வெறியாட்டால் இற்செறிப்பு மிகுதிபடக் களவுச் சந்திப்பு அரிதாதல்.

3.4.3.2. வேற்றுத் தெய்வத்தைத் தொழ நேரிடுவதால் தலைவியின் கற்புக்கு இழுக்கு நேர்தல்.

3.4.3.3. வெறியாட்டு நிகழுகையில் தலைவியின் பெயர் முருகனோடு தொடர்பு படுத்துவதால் தலைவி தலைவன் இருவர் ~~பெயருக்குமே~~ இழுக்கு உண்டாதல்.

3.4.3.4. வெறியாட்டின் பின் நோய் தீரவில்லையெனில் ஐயுற்றுப் பெற்றோர் நொதுமலர் வரைவிற்கு ஏற்பாடு செய்யலாம் என உணர்தல்.

3.4.3.5. தன் அன்புக்குரிய தலைவியின் பொருட்டு வெறியாட்டெடுக்கப் படுவதை நினைத்துத் தலைவன் நெகிழ்ந்து வரைவுக்கு முயலத் தூண்டுதல்.

3.4.3.6. தலைவியின் நோய் முருகனால் தீராது தலைவனால்தான் தீர்க்கமுடியும் என்று தாங்கள் நம்பும் நம்பிக்கையைத் தெரிவித்தல்.

3.4.3.7. தலைவன் வரையாததால் தங்கள் வேதனையையும் ஆற்றாமை-யையும் தலைவியின் உள, உடல் மெலிவையும் தலைவனுக்கு அறிவித்தல்.

3.4.3.8. தலைவியின் நிலைக்குத் துன்புறும் — ஐயமுறும் செவிலி நிலைமையைத் தெரிவித்தல்.

3.4.3.9. வெறியாட்டின் பின் நோய் தீரவில்லையென்றால் அலர் எழும் எனத் தலைவனுக்கு அறிவித்தல்.

3.4.3.10. தோழியின் இவ்வுத்தியால் வெறியாட்டு நிகழு முன்னரே அதனைத் தடுத்து வரைந்து கொள்ளவே தலைவன் முந்துவான். இவ்வுளவியற் போக்கை உணர்ந்தே தலைவனை நெறிப்படுத்துவதற்கு வெறியாட்டைக் காரணமாக்குகிறாள் தோழி. வெறியாட்டு நிகழாத போதும் கூட நிகழ-விருப்பதாக அவள் படைத்தும் மொழிகிறாள்.

3.4.4. தோழி தலைவனுக்குக் கீழ்க்கண்ட நிலைகளில் வெறியாட்டை அறிவுறுத்துகிறாள்.

3.4.4.1. தாய் வெறியெடுக்கத் துணிந்ததைத் தலைவனுக்கு அறிவித்தல்.[329]

3.4.4.2. தலைவியின் பசலைபாய்ந்த நுதலைக்கண்டு தாய் கட்டுவிச்சியிடம் கேட்டால் நெடுவேள் அணங்கிற்று என்பாளோ எனத் தங்கள் ஐயத்தைக் கூறுதல்.[330]

3.4.4.3. தலைவியின் நோய் வெறியாட்டால் தீராது. தலைவனால் தான் முடியும் என்ற தங்கள் உணர்வைத் தலைவனுக்குத் தெரிவித்தல்.[331]

3.4.4.4. வெறியாட்டெடுக்க விரும்பினர் என அறிந்தாலே போதும். அவர் வரைவொடு வருவர் என்று தங்கள் நம்பிக்கையைத் தெரிவித்தல்.[332]

3.4.4.5. வேலன் இவள் நோய்க்குக் காரணம் முருகெனக் கூறி விட்டால் அது தலைவனின் பெருமைக்கு இழுக்கல்லவா? என்று தோழி தலைவியை வினவுவது போன்று தலைவன் பெருமையை நிலைவுறுத்துதல்.[333]

3.4.4.6. இந்நோய் தன்னால் வந்ததன்று தலைவனால் வந்தது என முருகன், தாய்க்கு முன்னிலையாளும் கனவாளும் கூறவில்லையென்றால் ஏதமுண்டாகுமா என நொந்து கூறுதல்.[334]

3.4.4.7. வெறியாடலைத் தாங்கள் வெறுப்பதைக் குறிப்பாகக் காட்டித் தலைவனை வரைவு தூண்டுதல். அறியா வேலன்,[335] பொய்வல் பெண்டிர்[336] என வழிபாடு நிகழ்த்துவோர் எள்ளப்படுகின்றனர். தலைவன் இல்லா நிலையில் புச்சூட்டிக் கொள்வதாலும்,[337] வேற்றுத் தெய்வ வாழ்த்துகளைக் கேட்பதாலும்[338] தலைவியின் கற்புக்கு இழுக்கு நேர்தலையும் சுட்டிக் காட்டுதல்.

3.4.4.8. முருகனால் இந்நோய் வந்தது என முதுவாய் வேலன் கூறுவானாயின் அவனையே, 'உம் இறை காட்டுமான் அடிவழி ஒற்றி வேட்டுச் செல்லுமோ?' என வினவி அவனுக்கு உண்மையை அறிவிக்கலாமா? எனத் தலைவியிடம் வினவுதல்.[339]

3.4.4.9. தலைவனின் பிரிவால் தலைவி உற்ற நோயே காரணம் எனக் காட்டித் தலைவன் வரையாமையாலும் தாய் வெறியெடுப்பதாலும் தலைவியின் ஆற்றாமையைக் கூறி வரைவு வேண்டுதல்.[340]

3.4.4.10. நுதல் பசத்தல்,[341] தோள் நெகிழ்தல்,[342] வளை நெகிழ்தல்,[343] அல்குல் வாடல்[344] ஆகிய தலைவனின் பிரிவால் ஏற்பட்ட நலனழிவே தாய் வெறியெடுக்கக் காரணம் எனக் காட்டித் தலைவியின் துயர் தீர்ப்பது தலைவனின் கடன் என அறிவித்தல்.

3.4.4.11. தலைவியின் வேதனை கண்டு தாய் அலமரும் நிலையைக் காட்டி இரக்க உணர்வைத் தூண்டுதல், ~~தோழி~~. அன்னை தலைவியின் நோய் அறிய முயலுதல்,[345] நோய் தணியாமை கண்டு அழுதல்,[346] தலைவியின் நலனழிவை மீண்டும் பெறத் தெய்வத்தைப் பரவுதல்,[347] செம்முது பெண்டிரொடு நின்று கட்டிற் கேட்டல்,[348] ஆகிய தாயின் செயல்களைக் கூறி வரைவு மேற்கொள்ளத் தூண்டுகிறாள் தோழி. வெறியாட்டுப்பாடல்கள் அனைத்தும் தலைவியின் நோய்க் காரணம் அறியாமல் வருந்திய தாய் வெறியெடுப்பதாகவே காட்டப் படுகிறது.

3.4.4.12. வேலனால் வினை மறி கொலையுறுதலைச் சுட்டித் தலைவனின் உள்ளத்தில் இரக்கவுணர்வைத் தூண்டுதல்.[349]

3.4.4.13. வெறியெடுக்குங்கால் இல்லோர் நகை காண்பதற்-காகவாவது நாடன் வந்தால் நல்லது என்று அவன் வரவைத் தாங்கள் விரும்புவ-தாகக் கூறியும் வரைவு தூண்டுதல்.[350]

3.4.4.14. தலைவன் தந்த நோயை, முருகனால் தீர்க்க முடியாத நோயை முருகன் தந்தது என்றும், அதைத் தன்னால் தீர்க்க முடியும் என்றும் கூறும் வேலன் பொய்ம்மை நீக்கவாவது வரைவானா எனக் குறிப்பாக வேண்டுதல்.[351]

3.4.4.15. வெறியெடுத்த பின் நோய் தீரவில்லையெனில் அலர் தூற்றலும் நோய் தீர்ந்தால் கற்புக்கு இழுக்கும் உண்டாதலால் தலைவி உயிர்வாழாள் என விளைவு நோக்கிய தலைவியின் அச்சம் கூறி விரைவில் வரையத் தூண்டுதல்.[352]

3.4.4.16. தலைவியின் வேறுபாடறிந்த தாய் வெறி எடுக்க அதற்குக் காரணமான குன்றநாடன் செய்கையை நினைந்து தாங்கள் வருந்துவதை அறிவித்தல்.[353]

3.4.4.17. தலைவனுடன் கொண்ட கேண்மையால் நாளும் அன்னை வேலனை அழைக்கும் காவமாகப் பயன் தருவதாயிற்று எனத் தலைவியிடம் நொந்து கூறல்.[354]

3.4.4.18. தலைவி தலைவன்பால் அன்போடிருந்தும் தலைவனால் விரும்பப்படாமை ஏன் என்று வேலனையாவது கேட்போமா? எனத் தலைவியிடம் வினவுவது போன்று தலைவியின் அன்புடைமையையும், தலைவனின் அன்பின்மையையும் முரண்நிலையில் சுட்டிக் கூறுதல்.[355]

3.4.4.19. தலைவனுடன் உறவு கொண்டதால் வந்த வினையோ இவ்வெறியாட்டு என நேராகவே கடிதல்.[356]

3.4.4.20. பெயரால் கொள்ளப்பட்டாள் தலைவி என ஊரவர் ஏச்சுக்கு ஆளானதை நொந்து கூறுதல்.[357]

என இன்னோரன்ன வகையால் சிறைப்புறத்தானாக இருக்கும் தலைவனுக்கு வெறியாட்டை உணர்த்துகிறாள் தோழி. தலைவனுக்கு வெறியாட்டு அறிவுறுத்தும் நிலையில் வரைவு முடித்தலையே குறிக்கோளாகக் கொண்ட தோழியின் முயற்சியும், செயல் திறனும் சிறக்கிறது.

3.4.5. குறிஞ்சித் திணையில் தாய் வெறியெடுக்கத் துணிந்தமை, தலைவனின் வரைவு முயற்சியில் கொண்ட நம்பிக்கை, வெறியெடுப்பதால் தலைவனின் பெருமைக்கு இழுக்கு நேரக் கூடாது எனத் தாங்கள் அஞ்சும் அச்சம், வேற்றுத் தெய்வ வழிபாட்டால் கற்புக்கு இழுக்கு நேருமோ என்ற வேதனை, தலைவன் வரையாமையால் தலைவியின் உடல், உள மெலிவு, மாற்றம், அதனால் தாயின் துயரம், மறி கொலையுறும் வேதனை, தலைவியின் நோய் முருகனால் தீர்க்க முடியாது எனத் தாங்கள் நம்பும் நம்பிக்கை, அலர், நொதுமலர் வரைவு இற்செறிப்பு நிகழலாம் எனத் தாங்கள் அஞ்சுகின்ற அச்சம், தலைவியின் அன்பு, தலைவனின் அன்பின்மை ஆகியவற்றைத் தோழியும் தலைவியும் கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ளும் வகையில் குறிஞ்சித்திணையில் தலைவனுக்கு அறிவுறுத்துகிறாள் தோழி.

3.4.5.1. மருதத் திணையில் தலைவியும் தோழியும் தலைவனுடன் வந்து உறவாடியதாலோ, தலைவியின் நோயறியாமல் தாய் அழவும், தலைவியின் மேனி பசலையுறவும் நேர்ந்தது என நேராகவே கூறுகிறாள் தோழி. கருப்பொருள் அளவில்தான் குறிஞ்சிப் பாடலின்று மருதப்பாடல் வேறுபடுகிறது.

3.4.6. ஆய்வு முடிவுகள்

(அ) வெறியாட்டுத் துறையில், தோழி நெஞ்சிடம் உரையாடுவதாக அமைந்த ஒரு பாடலைத் தவிர, மற்றவை அவள் தலைவன் சிறைப்புறத் தானாகத் தலைவியிடம் உரையாடுவதாகவே உள்ளன.

(ஆ) அகநிலை வெறியாட்டு முருக வழிபாட்டைச் சார்ந்திருத்தலாலும், களவில் மட்டுமே இடம் பெறுவதாலும் இது குறிஞ்சித் திணைக்கே சிறப்பாக அமைகிறது.

(இ) செவிலி, தலைவி, முருகன், வேலன், அகவன்மகள், கழங்கு ஆகியவர்களை நோக்கித் தோழி வெறியாட்டை அறிவுறுத்தும்போது அது அறத்தொடு நிற்றலாகிறது. தலைவன் சிறைப்புறத்தானாக, தலைவிக்குக் கூறும்போது அது வரைவு கடாதலாகிறது.

(ஈ) அறத்தொடு நிற்றலில் வெறியாட்டைக் கூறிய தொல்காப்பியர், அதை வரைவு கடாதலில் கூறவில்லை.

(உ) கலித்தொகையில் மட்டும் வெறியாட்டுக் கூறி வரைவு கடாதலோ அறத்தொடு நிற்றலோ இல்லை.

(ஊ) வெறியாட்டு நிகழ்ச்சிகள் விளக்கப்படுகின்றனவே தவிர, வெறி முடிவில் வேலன் என்ன சொன்னான் என்பது கூறப்படவில்லை.

(எ) வெறியாடல் இன்று குறி கேட்கும் பழக்கத்தின் ஆதிமூலம்.

(ஏ) தோழி வெறியாட்டை அறிவுறுத்துவதால் 9 பயன்கள் விளைகின்றன.

3.5. <u>நொதுமலர் வரைவு</u>

3.5.0. நொதுமலர் வரைவு கூறி வரைவு கடாவும் நிலையில் நான்கே பாடல்கள் வருகின்றன.[358] குறிஞ்சி,[359] நெய்தல்[360] திணைகளில் அமைந்த இப்பாடல்களில் உள்ளுறை மூலமாகவே நொதுமலர் வரைவு உணர்த்தப் படுகிறது. மகளிர் நாணத்தாலும் வெறுப்பாலும் நொதுமலர் வரவைத் தலைவனுக்கு உணர்த்தாமையையே இது குறிக்கிறது. அதே நேரத்தில் அயலவர் மணம் பேசி வந்தமையை அறிவுறுத்தியே தீர வேண்டும் என்ற நிலையில் உள்ளுறை மூலமாக உணர்த்துகின்றனர். தலைவனிடம் பேசுவதாக உள்ள ஒரு பாடல் தவிர மற்றவை அனைத்தும் தலைவன் சிறைப்புறமாகத் தலைவியிடம் கூறும் கூற்றுகவே அமைந்துள்ளன.[361]

3.5.0.1. காதல் நெறி மெத்தெனச் செல்வதன்று. பெற்றோர் வேற்று மணமகனைத் தேர்ந்தெடுக்கும்போது, காதற்பெண்மக்கள் கட்டாயம் மறுக்கின்றனர். பழிக்கின்றனர். தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்று

அடக்கம் மிக்க நன்மகள்கூட அயலவனே - அல்லவனே - மனக்க ஒருபோதும் ஒப்புவதில்லை எனப் பேராசிரியர் ஹெர்போர்டு 'சேக்ஸ்பியர் கண்ட காதலும் மணமும்' என்னும் நூலில் குறிப்பர்.[362]

3.5.1. நொதுமலர் வரைவு களவு நிலை நங்கையின் கற்பைச் சோதிக்கும் களம். வெறியாட்டுக்கும் அஞ்சாத தலைவி நொதுமலர் வரைவிற்கு அஞ்சுகிறாள்.

"விரிநீ ருடுக்கை யுலகம் பெறினும்
அருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் கூடுதல் இல்லியல் பன்றே"

என்னும் முல்லைக்கலிப் பாடல்[363] இக்கருத்தை அரண் செய்யும். நொதுமலர் வரைவை அறத்தொடு நிற்றலுக்குக் காரணமாகக் கூறும் தொல்காப்பியர் அதை வரைவு கடாதலுக்குக் காரணமாக்கவில்லை என்பது நோக்குதற்குரியது.

3.5.2. நானுடைய மகளிர் நொதுமலர் வரைவைத் தலைவனுக்கு நேராகக் கூறாமல் உள்ளுறை மூலமாகவே உணர்த்துகின்றனர். "மகளிர் கழித்துப் போட்ட பூவை முதிர்ந்த ஆ தின்னுதல்",[364] "சிறுகண் பெருஞ்சினப் பன்றி, குறுங்கை இரும்புலியுடன் பொருதல்"[365] வலைஞர் தந்த கொழுமீன் வல்சியிடத்துப் பறைதபு முதுகுருகு இருத்தல்[366] என உள்ளுறை மூலமாகவே நொதுமலர் வரைவு உணர்த்தப்படுகிறது. தலைவனுக்குச் சிறந்த பொருட்களும், நொதுமலர் வரைவிற்கு இழிந்தனவும் உள்ளுறுத்தித் தன் வெறுப்பையும், சினத்தையும் புலப் படுத்துகிறாள் தோழி. வரைவு இன்றியமையாமை நோக்கி வரைவு கடாதலைக் குறிப்பாகக் கூறாமல் வரைந்தனை கொண்மோ என நேராக வெளிப்படையாகவே வினவுவது பொருத்தமாக அமைகிறது. "யாரை எலுவ யாரே நீஎமக்கு" எனக் கடுமையாகவே தாக்குகிறாள்.[367] இதைத் தொல்காப்பியர் 'செங்கடுமொழி' என்பர்.[368] தலைவன் சிறைப்புறத்தானாக தலைவியிடம் உரையாடும் நிலையில்,

நீவா என்றலும், கிழவோன் தன்னை வாரல் என்றலும்"[380] எனத் தொல்காப்பியம் குறிமறுத்து வரைவு கடாவும் முறைக்கு இலக்கணம் வகுக்கிறது.

3.6.1. <u>பகற்குறி மறுத்தல்</u>

தாய் வளர்த்த புன்னை தலைவிக்குத் தமக்கையாகும் எனவும் அதனால் அப்புன்னையின் நிழலில் தலைவனுடன் உறவாடத் தலைவி நாணுகிறாள் எனவும் தலைவனிடம் கூறிப் பகற்குறி மறுக்கிறாள் தோழி.

3.6.2. <u>இரவுக்குறி மறுத்தல்</u>

"ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்"[381]

என்று இக்குறி மறுத்தலைத் தொல்காப்பியர் கூறுவர். தலைவன் இரவுக்குறி நயந்தபோதும், அவன் இரவுக்குறி வந்தவிடத்தும் மறுப்பு தெரிவிக்கப்படும். இம்மறுப்பு தற்சார்பு காரணமாகவும் தலைவன் சார்பு காரணமாகவும் அறிவிக்கப் படும். இரவுக்குறி மறுப்பு அனைத்திலும்இரவுக்குறி ஏதம் வலியுறுத்தப்படுகிறது. தலைவன் இரவுக்குறி வேண்டியபோது காமம் மிகுமாயினும் நின்பால் கொண்ட தொடர்பு தேயாது எனக் குறிப்பாகக் கூறி இரவுக்குறி மறுக்கிறாள் தோழி.[382] தலைவன் வாராமையால் தலைவி ஆற்றுமை காரணமாக நலமிழப்பினும் இரவில் ஏதம் மிக்க வழியில் வாரற்க என மறுக்கிறாள்.[383] இரவுக்குறி வந்த தலைவனிடம் இரவுக்குறியில் தனியனாய் வருகிறாய். மன்றல் வேண்டின் பெறுவாய். இனி வாராதே. வரின் எங்கள் துன்பம் நீங்க நின் சிறுகுடி எய்திய பின் "நாய்பயிர் குறிநிலை" கொண்டு ஊதுக என வேண்டும் முறையால் குறி மறுக்கிறாள்.[384] ஊதல் ஒலி கேட்கும் தூர அளவிலேயே தலைவனின் இருப்பிடமும் உணர்த்தப்படுகிறது. பகைவர்க்கு உவகை தரும்படியாக வருதலால் ஏற்படும் தலைவியின் துன்பமும் கூறித் தோழி இரவுக்குறி மறுக்கிறாள்.[385] இரவுக்குறி ஏதம் நேரின் தாங்கள் உயிர் வாழாமையையும் தெரிவித்து வராதே எனக் குறி மறுக்கிறாள்.[386] அலர்மிகுதி மட்டுமே கூறி வரவு மறுக்கிறாள்.[387] அலர்ப்பெருக்கத்துடன் வழியருமையும் கூறிக் குறி மறுக்கிறாள்.[388] கடுமா தாக்கின் நேரும் விளைவு

குறித்த தங்கள் அச்சத்தைத் தெரிவித்துக் குறி மறுக்கிறள்.[389] இருள் நிறைந்த நேரத்தில் கோட்டுமா வழங்கும் காட்டு நெறியில் வராதே என நேராகவே குறி மறுக்கிறள்.[390]

3.6.3. பகற்குறி_மறுத்து_இரவுக்குறி_வேண்டல்

இதை "வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தினும்" என்பர் தொல்காப்பியர்.[391] பிறவகைக் குறிமறுத்தலில் ஒரு குறி மறுத்துப் பிறிதொரு குறி வருக எனக் குறி மாற்றி அமைக்கும் அமைப்பு காணப்படுகிறது. ஆனால் இப்பகுப்பில் பகற்குறி மறுத்து இரவுக்குறி வேண்டுவதாக ஒரு பாடலே உள்ளது.[392] இப்பிரிவில் மற்றொரு முறையும் கையாளப்படுகிறது. பகற்குறி வந்தவிடம் இரவிலும் விருந்தினைத் தங்கும்படி வேண்டும் முறையாகவே இருக்கிறது. குறிஞ்சித் திணையை விட நெய்தல் திணையிலேயே இம்முறை அதிகமாகக் காணப்படுகிறது. குறிஞ்சித் தலைவனை விட நெய்தல் தலைவன் அதிகமாகப் பகற்குறியில் வருதல் இதற்குக் காரணமாக அமையலாம். இப்பகுதியில் எல்லாப் பாடல்களும் தோழி தலைவனிடம் கூறும் கூற்றுகவே அமைந்துள்ளன.[393] தோழி தலைவனிடம், பகற்பொழுதில் வரும்போது தலைவியின் துயரைக் கூறி அதனால் சிறுகல் வழியாயினும் இரவு வருக எனப் பகற்குறி மறுத்து இரவுக்குறி வேண்டுகிறள்.[394] இதில் சில பொதுவான அமைப்பு முறைகள் காணப்படுகின்றன. நெய்தல் திணையில் இரவுக்குறி வேண்டும் முறையில் மாலைப்பொழுது விரிவாகவே கூறப்படுகிறது. இம்மாலைப்பொழுது, பகலில் வந்து தலைவியிடம் உறவாடும் தலைவன் பிரியும் பொழுதாகவும், தலைவியின் துன்பம் துவங்கும் பொழுதாகவும் கூறப்படுகிறது. நெய்தலுக்கே உரிய உரிப்பொருள் இதில் சிறக்கிறது. நெய்தல் பின்புலம் இதற்குக் காரணமாகும். நச்சினார்க்கினியர் உரையும்இதற்கு அரண் செய்கிறது.[395] மாலைப்போதில் இயற்கையின் மாற்றங்களும், மகளிர் மாலைப்போதில் செய்யும் செயல்களும் விளக்கமாகக் கூறப்படுகின்றன.[396]

3.6.3.1. தலைவன் செயல்: மாலைப்பொழுதில் தலைவியைப் பிரிந்து தன்னூர் செல்ல விரும்பும் தலைவனின் செயல் கூறப்படுகிறது. ஊர் செல்ல ஏற்பாடு செய்யும் செயலும், தலைவியிடம் அன்பு காரணமாகச் செய்யும் தலையளியும் இப்பிரிவில் காட்டப்படுகின்றன. தலைவனின் அன்பைத் தலைவனிடமே கூறி அவன் நெஞ்சில் நெகிழ்ச்சியை உண்டாக்குகிறாள் தோழி. வலவன் தேரை இயக்குதல்,[397] அத்திரியைத் தேரில் பூட்டுதல்,[398] எனத் தலைவன் பிரிவதற்கு முன் ஏற்பாடு செய்வதாகக் கூறப்படுகிறது. தலைவன் பிரியும்போது தலைவியின் மாட்டுச் செய்யும் அன்புச் செயல்கள் தலைவன் மனங்கொள்ளும் வகையில் உரைக்கப்படுகின்றன. வண்டல் விளையாடல், திரை உதைத்தல், அரும்பு கொய்தல், இனிய கூறல்[399] மாலை நேரத்தில் மால்கொள நோக்குதல்,[400] தலைவியின் தொடி திருத்தி, மயிர் நீவி, 'செல்லினி மடந்தை நின் தோழியுடன்' என விடுதல்[401] முதலிய அன்புச் செயல்கள் விளக்கமாகக் காட்டப்படுகின்றன.

3.6.3.2. செலவைத் தடுக்கும் காரணங்களாகத் தலைவியின் துயரும் வழிஏதமும் கூறப்படுகின்றன.

3.6.3.2.1. <u>தலைவி துயர்</u>

மாலைப்போதும், தலைவனின் பிரிவும் தலைவியின் துயர் மிக ஏதுவாகின்றன. தலைவியின் துயரை முதல் காரணமாகக் கூறித் தலைவனைச் செலவு தவிர்ந்து இரவில் தங்கள் ஊரில் தங்க வேண்டுகிறாள்; அல்லது இரவில் வர வேண்டுகிறாள் தோழி. தவிர்தல் அல்லது இரவில் வர வேண்டுதல் என்பவற்றில் ஏதேனும் ஒன்று அவளது கூற்றாக அமையும். தலைவியின் பேரழகைச் சுட்டி இவ்வழகு அழியும் வண்ணம் வருந்தும் தலைவியின் வருத்தமும் அவளால் நன்கு காட்டப்படுகிறது.[402]

3.6.3.2.2. வழிஏதம்

கழியில் ஓதம் மல்குதல்[403] துணைச்சுறு வழங்கல்[404] அரவும் வயமீனும் உலவுதல்,[405] அலவன் தேர்வழி தடுத்தல்[406] முதலிய காரணங்களை நெய்தலுக்குரிய வழிஏதங்களாகக் கூறித் தலைவன் செலவைத் தடுக்க முயல்கிறாள் தோழி.

தலைவியின் துயரைக் காட்டுவதுடன் வேறு சில காரணங்களையும் தலைவன் தங்குவதற்காகக் காட்டுகிறாள் அறிவுத்தோழி. குமலி இளைத்தன[407] என்றும் ஆத்திரியும் இளையரும் 'களைத்துள்ளனர்'[408] என்றும் எனவே களைப்பு நீங்கத் தங்கிச் செல்க என்றும் வற்புறுத்துகிறாள் தோழி.

3.6.3.3. குறியிடம் கூறல்

தலைவனின் செலவைத் தடுக்கும் தோழி அவனை இரவில் தங்கள் விருந்தினனாகத் தங்க வேண்டுகிறாள். இரவில் தங்கும் இடத்தையும் குறிக்கிறாள். குறிஞ்சித் திணையில் வேங்கை கமழும் முன்றில்களையுடைய பாக்கம்,[409] கான மஞ்ஞை தங்கும் கல்லகவூர்,[410] முன்கிற்குவட்டிடை உள்ள ஊர்[411] எனக் குறிஞ்சிப் பின்புலம் காட்டப்படுகிறது. நெய்தல் திணையில் கடல் பின்புலமும், பரதவர் வாழ்க்கையும் காட்டப்படுகிறது.[412] முல்லைத் திணையில் 'இடையன் ஆடுகளைப் பெயர்ப்பதற்காக எழுப்பும் வீளை ஒலி கேட்டு அஞ்சி முயல் ஒளிக்கும் புன்புல வைப்பின் சிறு நல்லூர்'[413] தலைவன் தங்கும் இடமாகக் காட்டப்படுகிறது. இத்திணைகள் எல்லாவற்றிலும் வளப்பமுடைய இடமாக, தலைவன் தங்குதற்குரிய சிறந்த இடமாகக்காட்டித் தலைவியின் சிறப்பும் குடிப் பெருமையும் குறிப்பாகச் சுட்டப்படுகிறது.

3.6.3.4. நல்வாய்ப்பு

தலைவன் வருவானேல் தமர் காப்பில்லாததால் அவன் இங்கு இன்புறலாம் என நல்வாய்ப்பும் காட்டுகிறாள் அறிவுடைத்தோழி. "நீசென்றிருந்து வருவது போன்று

வருக. எமர் இனித முகமன் கூறி அவர்களே உன்னைத் தங்குமாறு வேண்டுவர்" எனவும்[414] 'சுடர் கொளுத்தி எமர் வேட்டம் புக்கனர்'[415] எனவும், 'தப்பிச் சென்ற கோட்சுறு வேட்டம் வாய்க்காமல் எமர் வாரார்'[416] எனவும் கூறித் தலைவன் அஞ்சாமல் வரலாம் என ஊக்குவிக்கிறாள் தோழி.

3.6.3.5. விருந்தோம்பல்

தலைவிக்குத் தலைவன் சிறந்த விருந்தினனாதலால் மிகச் சிறந்த உயர்ந்த உணவு வகைகளே கூறப்படுகின்றன. குறிஞ்சி நிலமாயின் நறுவண்டு வேங்கை முன்றிலில் குரவை காணலாம்.[417] முல்லை நிலமாயின் களாக்கனி, விளாம்பழம், தயிர், வரகரசி, புற்றத்து ஈயலுடன் கூடிய வெஞ்சோற்றை வெண்ணெயுடன் இனையர் பெறலாம். தலைவன் தலைவி கையால் பாலுடை அடிசில் உண்ணலாம்.[418] நெய்தல் நிலமாயின் தலைவன் ஏறிச் சென்ற மாவிற்கும் ஊர் உப்பு நொடை நெல்லின் அயினியும்,[419] வெண்ணெய் மாத்தயிர் மிதியும்[420] கொடுக்கப்பெறும். தலைவன் நறுஞ்சாந்து அணியலாம்.[421] என இவ்வாறு விருந்தோம்பற் சிறப்பு கூறப்படுகிறது. நெய்தல் திணையில் தலைவன் உண்ணும் உணவு வகை என்று எதையும் கூறவில்லை. பொதுநிலையிலேயே காட்டப் படுகிறது.[422]

3.6.3.6. தலைவனை இரவு தங்க வேண்டும் என வேண்டும் முறையில் சில உத்திகளைக் கையாளுகிறாள் தோழி. அவனைத் தங்க வைக்க வேண்டும் என்பதை விட,நிலையாகத் தலைவியுடன் ஒன்றிவாழ வரைந்து கொள்ள வேண்டும் என்பதைக் குறிப்பாகக் கூறுவதே இதன் அடிப்படை நோக்கமாகும்.

3.6.3.6.1. எந்தை கல்கெழு பாக்கத்தில் தங்க வேண்டுமெனில் முன்னதாகத் தாமம் நல்க வேண்டுமெனல். இருந்தோர்[423] இதில் தலைவனைத் தங்க வேண்டும் என இரக்கும் முறையின்று வேறுபட்டு, அவன் தங்க விரும்பின், அவன் மாலையைத் தருதல் வேண்டும் என உரைக்கும் தோழியின் போக்கு மாறுபடுகிறது.

3.6.3.6.2. தலைவனிடம் நேராக வேண்டாமல், குழந்தைகள் அடிக்கும் பறையில் எழுதப்பெற்ற குருவி அடிபெறல் போலத் தலைவனைத் தங்களிடமிருந்து பிரித்துச் செல்லும் மா அடிக்கப் பெறுவதாக எனச் சினந்து கூறும் நிலையில் குறிப்பாகத் தங்கும்படிக் கூறல்.[424]

3.6.3.6.3. இரவு எங்கள் ஊரில் தங்கினால் என்ன எனத் தலைவனை வினவு முகமாகத் தங்க வேண்டுதல்.[425]

3.6.3.6.4. இரவு தங்கின் தவறுமா எனக் கேட்டல்.[426]

3.6.3.6.5. அவன் நல்விருந்து அயர நல்கினால் நல்லது என வேண்டுதல்.[427]

3.6.3.6.6. அவனைத் தன் ஊர்க்குச் செல்லாதே என்று தடுத்துத் தம்மூர் இருக்குமிடம் கூறல்.[428]

3.6.3.6.7. தலைவியின் துயர் கூறித் தம்மூரில் தங்கிச் சென்றால் நல்லது என அறிவுறுத்தல்.[429]

3.6.3.6.8. தலைவனை இரவில் வருக என நேர்முகமாகவே வேண்டுதல்.[430]

3.6.3.6.9. இரவுக்குறி வந்த தலைவனை, நீங்காமல் தங்க வேண்டுதல்.[431] என இன்னோரன்ன முறையில் தலைவனைத் தங்க வேண்டுகிறாள் தோழி.

3.6.4. <u>இரவுக்குறி மறுத்துப் பகற்குறி நேர்தல்</u>

குறிஞ்சி, நெய்தல் ஆகிய இரு துறைகளிலும் தலைவன் வரும் வழிஏதம் காரணமாக்கி இரவுக்குறி மறுக்கப்படுகிறது. பகற்குறி அழகான, ஏதமில்லா இடமாகக் காட்டப்படுகிறது. வழிஏதம் கூறல், அவ்வழியில் தலைவன் வருதலால் தலைவி உறும் துன்பம் அறிவித்தல் பகற்குறி கூறல், அக்குறியிடத்துத் தலைவன் இனிது இன்புறலாம் எனல், எனும் முறைகளால் தோழி வரைவு

கடாவுகிறாள். நேராகவே இரவுக்குறி மறுத்துப் பகற்குறி கூறினும் பகற்குறியிலும் இடையீடு என்பதைப் பெற வைத்துக் குறிப்பாக மறுப்பதாகவே இப்பகுப்பு முறை அமைந்துள்ளது.

3.6.4.1. குறிஞ்சித் திணையிலும் நெய்தல் திணையிலும் இரவுக்குறி ஏதம் குறிமறுக்கும் உத்தியாக அன்றிக் குறிமாற்றும் உத்தியாகப் பயன்படுகிறது. நெய்தல் திணையிலும் குறிஞ்சித் திணையில்தான் நிலத்திற்கேற்ப வழிஏதம் சிறப்பாகக் காட்டப்படுகிறது.[432]

3.6.4.2. தலைவன் வரும் வழிஏதத்தால் தலைவி உறும் துன்பமும் காட்டப்படுகிறது. தலைவன் தனியாக வருதலைக் கண்டு கண்கள் அழுதல்,[433] உயிர் வாழாமை[434] ஆகிய தலைவியின் துன்பம் கூறி இரவுக்குறி மறுக்கப்படுகிறது.

3.6.4.3. தலைவனிடம் இரவுக்குறி மறுத்த தோழி பகற்குறி இடம் கூறுகிறாள். சிறுதினை காக்கும் இடம்,[435] கொடுந்தேன் இழைத்த நெடுவரையிடத்துப் பழம் தூங்கும் காந்தளம் பொதும்பர்,[436] வேலன் வெறியயர் வியன்களம் ஒக்கும் சாரல்,[437] தோன்றி வேங்கையொடு கமழும் சாரல்,[438] விரவுவீ அகலறை விரிக்கும் சாரல்,[439] தந்தையின் கன்முகை இதணம்[440] என இவ்வாறு குறிஞ்சிக் கருப்பொருளுக்கேற்பப் பகற்குறி கூறப்படுகிறது. நெய்தல் திணையில் உணங்கற் படுபுள் ஓப்பும் புன்னையந் தண்பொழில்[441] எனக் குறியிடம் கூறப்படுகிறது.

3.6.4.4. குறியிடம் கூறிய தோழி, தலைவன் தலைவியிடம் பெறும் இன்பத்தையும் விளக்கிக் கூறுகிறாள். தடமென்தோள் தழுவல்,[442] மார்பம் முயங்கல்,[443] கூந்தல் மெல்லணையில் துயிலல்,[444] கோங்குமுகை அன்ன ஆகத்துத் துயிலல்[445] ஆகிய இன்பக் கூறுகளைக் காட்டிக் குறிமாற்றி வரைவு கடாவுகிறாள் தோழி.

3.6.4.5. தோழி பகற்குறி கூறினும் இடையீட்டை மறைவாகச் சுட்டிக் காட்டுதல் தோழியின் வியத்தற்குரிய அறிவினையே காட்டுகிறது.

"கொடுந்தேன் இழைத்த நெடுவரையிடத்துப் பழம் தூங்கும் காந்தளம் பொதும்பர்" என்பதால் சிலர் தேனழிக்க வருவார் சிலர் பழமெடுக்க வருவார் சிலர் பூப்பறிக்க வருவார். இவர்களின் வரவால் பகற்குறியும் அரிதென்பதை அவன் பெற வைக்கிறாள்.[446]

3.6.4.6. பகற்குறியிடத்தே தலைவியை அளிப்பதற்கு வருவாயேனும் நின்தேருருள் மென்பூங்கொடியை அறுப்பதுபோல நின்வரவைப் பிறர் அறியக் கொடி அன்னை மெல்லியலாராகிய எமதுள்ளத்தைப் புண்படுத்தும் என்னும் கருத்தை உள்ளுறுத்தி "நின் ஆழி மென்கொடி அறுக்கும்" என்று கூறிக் குறிப்பாகப் பகற்குறி மறுக்கிறாள்.[447]

3.6.4.7. "அன்னை அறியினும் அறிக, அலர்முனர் கேட்பினும் கேட்க" என்று பகற்குறிக்கண் உளதாகும் இடையூறு உணர்த்தியும் பகற்குறியும் மறுக்கிறாள்.[448]

3.6.4.8. தலைவியும் தோழியும் இருக்கின்ற புனமும் தந்தையின் காப்பில் உள்ளது என்பது தோன்ற 'எந்தை இதணம்' என்றும் அவன் ஆற்றல் தோன்றத் 'தொலையா வேலின் எந்தை' என்றும் கூறுகிறாள். இதனால் அவன் அறியாவாறு வருதலும்அரிது எனப் பகற்குறி வருதலும் இன்னுமை உடைத்து என்பதைப் பெற வைக்கிறாள்.[449] இவ்வாறு தோழி தன் நுண் அறிவால் நேராக இரவுக்குறி மறுத்தும் குறிப்பாகப் பகற்குறி மறுத்தும் வரைவு கடாவுகிறாள்.

3.6.5. <u>இருகுறிமறுத்தல்</u>

பகல், இரவு என்னும் இரு குறிகளையும் மறுத்து இனி தலைவன் வரைதலே நலம் என வரைவு கடாவுகிறாள் தோழி. பகற்குறி வரும் தலைவன் மறுபடியும் இரவுக்குறி வேண்டும்போது தோழி, இருகுறி இடையீடு சுட்டிக் குறிமறுத்து வரைவு கடாவுகிறாள்.

3.6.5.1. பகற்குறியிடத்து அலர்,[450] திணைமுதிர்ச்சி,[451] தாய் தந்தை காவல்[452] முதலிய இடர்ப்பாடுகளும் இரவுக்குறியிடத்து அம்பல்,[453] தாய் காப்பு,[454] காவலர் காவல்[455] தலைவன் வரும் வழி ஏதம், ஏதம் நேரின் தலைவி உயிர் வாழாமை[456] முதலிய காரணங்களும் கூறி இரவுக்குறி மறுக்கிறாள். இப்பகுப்பில் தோழி இருகுறி இடர்ப்பாடுகளையும் தெற்றென விளக்குகிறாள்.

### 3.6.6. ஆய்வு முடிவுகள்

(அ) பகற்குறி மறுத்தல் குறிஞ்சித் திணையில் இல்லை. நெய்தல் திணையில் அலர் தூற்ற வாய்ப்பு உள்ளதால் பகற்குறி மறுப்பு காணப்படுகிறது.

(ஆ) இரவுக்குறி மறுப்பு நெய்தலை விடக் குறிஞ்சியிலேயே அதிகம் அதனால் குறிஞ்சித் திணையில் மட்டும் இரவுக்குறி வரும் தலைவனிடம்இரவுக்குறி ஏதம் கூறி மறுக்கும் நிலை காணப்படுகிறது.

(இ) பகற்குறி மறுத்து இரவுக்குறி வேண்டும் முறை குறிஞ்சியிலும் நெய்தலில்தான் அதிகமாயுள்ளது.[457] தலைவன் குறிஞ்சித்திணையில் இரவை விட பகலில் அருகியே வருகிறான். நெய்தல் தலைவனே இரவைவிட பகலில் பயின்று வருகிறான். அதனால் பகலில் வந்து மாலையில் பிரியும் நேரத்தில் இரவில் தங்கிச் செல்க என வேண்டுதல் சிறக்கிறது.

(ஈ) குறிஞ்சித் திணையில் தோழி குறிமறுக்கும் உத்தியாக வழிஏதத்தைக் கையாளுகிறாள். நெய்தல் திணையில் வழிஏதம், பகற்குறி வந்து பெயரும் தலைவனைத் தங்க வைக்கத் தோழி கையாளும் உத்தியாக மாற்றம் பெறுகிறது. குறிஞ்சியைப் போலன்றி நெய்தலில் வழியேதம் அவ்வளவு சிறப்பாகக் காட்டப் பெறவில்லை.

(உ) நெய்தல் நிலத்தில், தலைவனின் மாவிற்கும் விருந்தோம்பல் கூறப்படுகிறது.

### 3.7. இற்செறிப்பு

3.7.0. இற்செறிப்பு இயற்கையின் நிகழ்ச்சியாலும் ஐயத்தின் விளைவாலும் நிகழும். திணைமுதிர்ச்சியின் காரணமாகத் தலைவி இயல்பாக இற்செறிக்கப்படுவாள். ஊரவரின் அலர், தலைவனின் வருகை, அவன் உறவால் தலைவியின் உள்ளத்திலும் உடலிலும் ஆற்றாமையால் ஏற்பட்ட மாற்றங்களைத் தாய் உணர்ந்த நிலை என்பன தலைவிமேல் ஏற்பட்ட ஐயத்தின் விளைவாகும். இற்செறிப்பைக் கருவியாக்கி வரைவு தூண்டலில் தோழியின் அறிவு காட்டப்படுகிறது. இற்செறிப்பு என்னும் குறியீட்டுச் சொல் பெண்களை வீட்டுக்குள் கட்டுப்படுத்திய நிலையைக் காட்டுவதாகவும் கூறுவர்.[458] இற்செறிப்பைத் தோழி கூறுவது வெறும் அறிவிப்பு மட்டுமன்று, தலைவன் மனத்தில் அதிர்ச்சியை உண்டாக்கி வரைவு மேற்கொள்ள விரைவு படுத்துவதுமாகும். தாயின் காப்பு மிகுதியால் தாங்கள் படும் துன்பத்தையும் விளக்கிக் கூறி அந்நிலையிலிருந்து தங்களைக் காக்கும்படி தலைவனின் அருளையும் அவள்வேண்டுகிறாள். இற்செறிக்கும் நிலையில் தாங்கள் தாயையும் வெறுப்பதைக் காட்டித் தலைவன்பால் தாங்கள் கொண்ட அன்பின் மிகுதியையும் புலப்படுத்துகிறாள். இதைக் காப்பின் கடுமை கையற வரினும்[459] என்று இலக்கணம் வகுப்பர் தொல்காப்பியர்.

3.7.0.1. இப்பிரிவில் 54 பாடல்கள் இடம் பெறுகின்றன. குறிஞ்சித் திணையில் பெரும்பான்மையாகவும் நெய்தல் மருதத் திணைகளில் சிறுபான்மை-யாகவும் பாடல்கள் அமைகின்றன.[460] திணைமுதிர்ச்சி, அலர், தலைவியின் ஆற்றாமை ஆகிய மூன்றும் இற்செறிப்புக்குரிய காரணங்களாகின்றன.

### 3.7.1. திணை முதிர்ச்சி

திணை முதிர்ச்சி கூறி வரைவு கடாவும் முறை குறிஞ்சித் திணைக்கு மட்டுமே உரியது. முற்றிய திணை களவொழுக்கத்திற்கு முதல் இடையூறாகும். தலைவி புனங்காத்தல் இல்லையெனில் பகற்குறியும் புணர்ச்சியும் இல்லை

என்பதைத் தலைவனுக்குக் குறிப்பாகவும் நேராகவும் உணர்த்தி வரைவு கடாவுகிறாள் தோழி.

3.7.1.1. திணை முதிர்ச்சி கூறி வரைவு கடாதலில் தோழி சில உத்திகளைக் கையாளுகிறாள். தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் உரையாடுதல்,[461] தன்னுள் பேசிக் கொள்ளுதல்,[462] கிளி,[463] திணை[464] போன்றவற்றிடம் பேசுதல் என்னும் முறையில் குறிப்பாகவும், தலைவனிடம் நேராகவும்[465] இற்செறிப்பு உணர்த்தி வரைவு கடாவுகிறாள். தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் உரையாடுவதாக அமையும் கூற்றுகள் இப்பிரிவில் அதிகமாக உள்ளன.[466] தாயின் காப்பின் கடுமையால் சந்திக்க முடியாநிலை இதற்குக் காரணமாகலாம்.

3.7.1.2. தலைவன் சிறைப்புறத்தானாக, தோழி தலைவியிடம் உரையாடும் நிலையில் 'வேங்கை மௌவல் மலர்தல், நிலவு விரிதல் ஆகிய திணை முதிர்வுக்குரிய பருவ நிகழ்ச்சிகளை மட்டுமே தலைவியிடம் சுட்டிக் கூறுகிறாள்.[467] தலைவியிடம், திணை முதிர்ந்ததால் இற்செறிப்பு நிகழலாம் என்றும் தாங்கள் அடையும் வேதனையையும் ஆற்றாது கூறுகிறாள்.[468] தலைவியிடம், 'நாளை சிறுதினை கடிய முடியுமா' என வினவுவது போன்றும் முன்பு காவல் மறந்து தலைவனுடன் இருந்தபோது தினை கவராச் சிறுகிளிக்கு என்ன கைம்மாறு செய்ய வல்லோம் என்று கூறுவது போன்றும் தலைவனுக்கு இற்செறிப்பு உணர்த்தப்படுகிறது.[469] தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தினை கொய்யத் தொடங்கினர்; தலைவன் எவ்வாறு வருவானோ எனத் தன்னுள் பேசுவது போன்றுஇற்செறிப்பு உணர்த்துகிறாள்.[470]

3.7.1.3. அன்னை தினைப்புனத்திற்கு விடாமையைத் தலைவனுக்குக் கூறுமாறு கிளியிடம் வேண்டுகிறாள்.[471] தலைவியை இற்செறித்து வெறியெடுக்க விரும்புவதால் நின்னைக் காப்பாரில்லை. அதனால் பின்பு விளைக[472] என்றுதினையிடம் வேண்டும் முறையிலும் சிறைப்புறத்திருக்கும் தலைவனுக்கு

இற்செறிப்பு உணர்த்தப்படுகிறது. குறிஞ்சித்திணைக் கருப்பொருளாகிய கிளியும் தினையும் தோழிக்குத் தலைவனை வரைவு கடாவக் கருவியாகின்றன.

3.7.1.4. தோழி தலைவனிடம் நேராகவும் இற்செறிப்பை உணர்த்துகிறாள். தினை முதிர்ச்சியினால் இற்செறிப்பு நிகழலாமென்றும், அதனால் ஏற்படும் தலைவியின் ஆற்றாமையும், நலனழிவும் தலைவனுக்குக் குறிப்பாகக் கூறுகிறாள்.[473] தலைவியின் இன்னோசையை இனமெனக் கருதிக் கிளி படரும் என்று காவலுக்குத் தலைவியை விட மாட்டார் எனத் தலைவனிடம் தலைவியின் இன்குரலையும் இற்செறிப்பையும் கூறி வரைவு கடாவுகிறாள்.[474] தினை முதிர்ந்ததால் 'கிளி கடி பாடல்' ஒழியும்படி தலைவி இற்செறிக்கப் பட்டாள் எனத் தலைவனிடம் கூறி வரைவு தூண்டுகிறாள்.[475]

3.7.2. <u>அலர்</u>

அலரெழுந்ததால் இற்செறிப்பு நிகழ்ந்தது எனக் காரணம் காட்டி வரைவு கடாவுகிறாள் தோழி. இவ்வலர் நெய்தல் திணையிலேயே பெருவரவாக உள்ளது. இற்செறிப்பு அலர் காரணமாகப் பின்வரும் நிலைகளில் அமைகிறது. அலரெழுந்ததால் தாய்ஐயுறுகிறாள். தலைவி இற்செறிக்கப்படுவாள். இனி அவளைக் காண முடியாது எனத் தலைவன் சிறைப்புறத்தானாக அறிவுறுத்துகிறாள் தோழி.[476] தலைவனிடமே தாய் ஐயுற்றிருக்கிறாள். பலமுறை தேர் வருகிறது; எனவே நீங்கள் வெளியே செல்லாதீர்கள் என்று கூறுகிறாள். அதனால் தலைவி இற்செறிக்கப்படலாம் என அறிவிக்கிறாள் தோழி.[477] அலரெழுந்ததால் தாய் தலைவியை இற்செறித்தனள் என்று கூறி இனி அவளைக் காண முடியாது. வரைதலே நலம் எனக் குறிப்பாக அறிவுறுத்தப்படுகிறது.[478] அலரெழக் காரணம் நீதான் எனத் தலைவனையே காரணமாக்கி இற்செறிப்பு உணர்த்தப்படுகிறது. தலைவன் பலர் காணத் தேரில் வந்ததும்[479] இடுப்பில்

கட்டிய தழை போலத் தலைவியை விட்டு நீங்காமல் இருந்ததும்[480] இற்செறிப்-புக்குக் காரணங்களாகக் காட்டப்படுகின்றன.

3.7.3. தலைவி ஆற்றாமை

இற்செறிப்பாள் என ஐயுற்ற நிலையிலும் இற்செறித்த பின்னும் தலைவியின் நிலையைத் தலைவனுக்குப் பல்வேறு உத்திகளால் புலப்படுத்தி வரைவு கடாவுகிறாள் தோழி.

3.7.3.1. தலைவியின் களவைத் தாய் அறிந்தால் தலைவி என்னுவாளோ என்று தலைவனிடம் நேராகவே ஐயுற்றுக் கூறுவதுபோல இரக்கம் தோன்றக் கூறுகிறாள்.[481]

3.7.3.2. களவு வெளிப்படா நிலையில் தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் உரையாடுவது போன்று, தாயின் சொற்களையும் செயல்களையும் கூறித் தாய் அறிந்தாளோ இற்செறிப்பாளோ என ஐயுற்றுக் கூறுகிறாள் தோழி. தலைவியைத் தாய் கூர்ந்து நோக்குகிறாள்.[482] 'நன்னுள் வேங்கை மலர்க' எனக் கூறித் தோழியின் முகத்தைக் குறிப்பாக நோக்குகிறாள்.[483] 'மழை பொழிந்து வரும் புதுநீர் மருந்துமாகும். அந்நீரில் ஆடப்பெறின் இவள் துன்பம் தீர்வாள்' எனக் கூறுகிறாள்.[484] தலைவியின் துன்பம் அறிந்ததைப் போல, தலைவி நலம் பெறத் 'தலைவியோடு நாளை சுனை ஆடுக' எனத் தோழியிடம் கூறுகிறாள்.[485] அன்னை நெய்தல் பூவைப் பறி எனக் கூறவில்லை.[486] இக்காரணங்களால் தாய் அறிந்தனள் போலும் என்று தங்கள் ஐயத்தையும் கூறி இற்செறிப்பு நிகழலாம்; அதனால் தலைவியைக் காண இயலாது எனத் தலைவனுக்கு அறிவுறுத்தப்படுகிறது.

3.7.3.3. களவு வெளிப்படா நிலைமையில் இல்லில் நடந்த நிகழ்ச்சிகளைத் தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் உரையாடும் நிலையிலும், நேராகவே தலைவனிடத்துக் கூறும் நிலையிலும் அவனுக்குத் தெரிவித்து இற்செறிப்பு நிகழலாம் என அறிவுறுத்துகிறாள் தோழி.

'தினையைப் பைங்கிளி கவர, நீ எங்குச் சென்றாய்' எனத் தாய் தலைவியைக் கூறத் தலைவி பொய்கூறத் தெரியாமல் நாடனைக் காணவில்லை; அவனுடன் ஆடவில்லை எனக் கூறியதால் தாய் தலையிறைஞ்சியதையும் கூறி இற்செறிப்பு நிகழலாம் என அறிவுறுத்துகிறாள் தோழி.[487] தலைவியின் உச்சியில் வண்டுகள் மொய்த்தலுக்குக் காரணம் கேட்கத் தோழியோ அருகிலிருக்கும் சந்தனக் கட்டையே என்றும், வண்டுகள் மலர்களின் தாதினை வெறுத்தமையே என்றும் பொய் சொன்னதைக் கூறுகிறாள்.[488] இவ்விடங்களில் தோழியின் அறிவு வியத்தற்குரியதாய் உள்ளது. தலைவி உறங்காமை கண்டு தாய் வினவ, நாடனுடன் தொடர்பு கொண்டவர்களுக்குத் தூக்கமும் வருமோ என தனக்குள் கூறிக் கொண்டதையும் நவின்று, தங்கள் துன்பத்தையும் அறிவித்து, வரைவு கடாவுகிறாள் தோழி.[489]

3.7.3.4. களவொழுக்கத்தால் தலைவியின் உடலில் ஏற்பட்ட மாற்றத்தைத் தாய் அறிந்தனள். இனி இற்செறிப்பாள் எனத் தலைவனுக்கு அறிவிக்கிறாள் தோழி. தலைவன் உறவால் தலைவியின் நுதல் பசத்தல்[490] சுணங்கு பரத்தல்,[491] வளை நெகிழ்தல்,[492] நோயொடு வைகுதல்[493] ஆகிய மாற்றங்களைத் துவித்துணர்ந்த தாயின் கூர்த்த மதியினை அறிவுறுத்தித் தலைவி இற்செறிக்கப்படுவாள் எனத் தலைவனுக்குக் கூறுகிறாள் தோழி. தலைவியின் மாற்றம் கண்டு தலைவன் எங்கே என நேராகக் கேட்கும் தாயின் செயலும் கூறப்படுகிறது.[494]

3.7.3.5. நாடன் வரவை ஐயுற்ற நிலையில் தாயின் செயலைக் கூறி இற்செறிப்பாள் என அறிவுறுத்துகிறாள் தோழி. ஐயச்செய்கை தாய்க் கெதிர்மறுத்துப் பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும் என இலக்கணம் வகுப்பர் தொல்காப்பியர்.[495] இரவில் வருகின்றான் என்பது உண்மையோ பொய்யோ யாதோ என மறைந்து நின்று கண்டு தாய் சினத்தல்,[496] தலைவன் வந்தமை அறிந்து சினத்தல்[497] எனத் தலைவனின் வரவை நேராகவே கண்டு தலைவியைச் சினக்கும் தாயின் செயலைத் தலைவனுக்கு அறிவுறுத்துகிறாள் தோழி.

3.7.3.6. தலைவன் சிறைப்புறத்தானாக, தலைவியிடம் உரையாடும் நிலையில் தலைவனைத் தாய் நேராகவே கண்டு விட்டதையும் பின் அவள் செயலையும் குறிப்பாகக் கூறி இற்செறிப்பாள் என அறிவுறுத்துகிறாள் தோழி. தலைவியைக் காண உவகையோடு வரும் தலைவனைக் கண்டு தாய் முருகென நினைந்து, முகமன் கூறிச் செந்தினையை நீரொடு தூவி நெடுவேளைப் பரவுதல் போல் வணங்குதல்[498] தலைவனைக் கண்ட தாய் தோழி முகம் நோக்கி 'நல்லைமன்'னெனச் சிரித்துப் பெயர்தல்[499] ஆகிய தாயின் செயல்களைக் கூறித் தலைவி இற்செறிக்கப்படுவாள் என்பதைத் தலைவனுக்கு அறிவிக்கிறாள் தோழி.

3.7.3.7. தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் உரையாடும் நிலையில் இற்செறிப்பைக் குறிப்பாக உணர்த்துகிறாள் தோழி. தலைவனை நேரில் காண முடியாத தலைவி தோழி ஊசலாட்ட, அவன் குன்றத்தையாவது கண்டு ஆறுதல் பெறும் நிலையில் உள்ளமையை அவனுக்கு அறிவுறுத்துகிறாள்.[500] மகளிர் விளையாடாமல் இல்லிலிருத்தல் அறமன்று. புதுநீர் ஆடட்டும் என்று யாராவது தாயிடம் கூறினால் ஆட விடுவாளோ[501] என்று தலைவியிடம் தோழி வினவுவது போன்று சிறைப்புறத்திருக்கும் தலைவனுக்கு இற்செறிப்பு உணர்த்தப்படுகிறது. தும்பியிடம், தலைவனின் நெடுவரையை அடைந்தால், 'களைஞர் தங்கை தமரின் தீராள்' எனத் தலைவனுக்கு உணர்த்த வேண்டும் நிலையிலும்[502] உழவனிடம், 'நாற்று நடுங்கால் நெய்தல் ஓம்பு; தலைவி வரும்போது அணிவாள்' என்று கூறும் முறையிலும் தலைவனுக்கு இற்செறிப்பு உணர்த்தப்படுகிறது.[503]

3.7.3.8. இற்செறிப்பில் தாயின் காவல் மிகுதி கூறி இனி, தலைவியைக் காணல் அரிது; அவளை வரைதலே நலம் என்று வரைவு கடாவுகிறாள் தோழி. தலைவன் மீது கொண்ட அன்பின் காரணமாகத்

தாயையே அறவில் அன்னை[504] எனப் பழிக்கும் – 'நிரையம் புகுக' எனச் சபிக்கும் – மகளிரின் உள்ளம் புலப்படுத்தப்படுகிறது.[505] அன்னையின் தழுவலிலிருந்து தலைவி மீள முடியா நிலை சுட்டப்படுகிறது. 'ஊரி முருங்கப் பீலி சாய நன்மயில் வலைப்பட்ட' நிலையில் தலைவி இருப்பதாகக் கூறி இற்செறிப்பின் துன்பம் உணர்த்தப்படுகிறது. தலைவி தாயின் தழுவலை விரும்பாமையையும், தலைவன் தழுவலையே விரும்புவதையும் குறிப்பாக உணர்த்துகிறாள் தோழி.[506] பாரியின் பலவுறு குன்றம் போல் காப்பினள்[507] சோழரின் நிதியத்தன்ன காப்பினள்[508] எனத் தாயினது காப்பின் கடுமையை ஊரோடு உவமித்துக் கூறுகிறாள். தலைவி தலைவனைச் சந்திக்க விடாமல் தடுக்கும் தாயைச் சபிக்கிறாள். தலைவன் வந்ததால் உறங்காத தாயைப் 'பெண்கொலை புரிந்த நன்னன்போல நீங்காத நிரையம் புகுக'[509] எனச் சாபம் தருகிறாள். இங்குத் தாயின் கனிவும் சேயின் முனிவும் புலப்படுகிறது.

3.7.3.9. தந்தையின் காப்பினைப் புலப்படுத்தி வரைவு கடாவுகிறாள் தோழி. காவல் சிறப்பினையுடைய மாங்காட்டினுடன் தந்தையின் காவல் கடுமை ஒப்பிடப்படுகிறது.[510] தலைவியின் தந்தையின் கைவேல் அஞ்சாமல் வருகிறாயே எனத் தலைவனைக் கேட்கும் முறையிலும் காப்பின் கடுமை அறிவுறுத்தப்படுகிறது.[511]

### 3.7.4. ஆய்வு முடிவுகள்

(அ) தலைவியின் களவு வாழ்வைத் தாய் விரும்பாமையும், தன்னால் இயன்றவரையில் தாய் தடுப்பதையும் இப்பகுதி காட்டுகிறது. சமுதாயத்தில் களவு மணம் விரும்பாமையையே இது குறிக்கிறது. தாய் அறியாமல் மகள் களவை மறைப்பதும், களவறிந்த தாய் மகளைச் செறிப்பதும் சமுதாயப் போக்கைக் காட்டுகிறது. தாய் ஒரு புறமும், தலைவிதோழி மறுபுறமுமாக அமைந்த போராடும் போராட்டமாகவே 'இற்செறிப்பு' நிலை காணப்படுகிறது.

(ஆ) களவு அறிந்த நிலையில் மகளிரின் உரிமை புறக்கணிக்கப்பட்டமை புலனாகிறது. தலைவனை வரைவு கடாவத் தாய் தந்தையரைக் கருவியாக்கிக் கொள்ளும் தோழியின் அறிவு வியத்தற்குரியது.

(இ) தினை முதிர்ச்சி காரணமாக நிகழும் இற்செறிப்பு குறிஞ்சித் திணைக்கே உரியது. அலர் காரணமாக நிகழும் இற்செறிப்பு நெய்தல் நிலத்திற்கே உரியது.

(ஈ) குறிஞ்சித்திணையில் அன்னை தலைவியின் துன்பம் அறிந்தவள் போலக் கருப் பொருளுக்கேற்பச் சுனையிலும், மழை பொழிந்து வரும் புதுநீரிலும் ஆடுக என்கிறாள். நெய்தல் திணையில் நெய்தல் பூப்பறிக்க நாளும் அனுப்பியவள், மாற்றம் கண்ட பிறகு அனுப்பவில்லை. திணைக்கு ஏற்ற முறையில் சுனைநீரும் நெய்தல் பூவும் தாய்க்குக் கருவியாகின்றன.

(உ) குறிஞ்சி நெய்தல் ஆகிய இரு திணையிலும் அன்பு அன்னையை அறவில் அன்னை எனப் பழிக்கும் நிலை காணப்படுகிறது.[512]

(ஊ) குறிஞ்சித்திணையில் தாய் நாகரிகமாகத் தலைவியின் காதலுணர்வைத் தானுக உணர்ந்து இற்செறிக்கிறாள். ஆனால் நெய்தல் திணையில் தலைவன் எங்கே என நேராகத் தலைவியைக் கேட்கிறாள் அறவில் அன்னை.[513]

(எ) குறிஞ்சித் திணையில் தோழி, தலைவன் சிறைப்புறமாகத் தும்பி, கிளி, தினை ஆகியவற்றிடம் சுறுமுகமாகத் தலைவியின் இற்செறிப்பை உணர்த்துகிறாள். மருதத்திணையில் உழவனை விளித்துக் குறிப்பாக இற்செறிப்பு உணர்த்துகிறாள் தோழி.

## 4. அறத்தொடு நிற்றல்

4.0. அறத்தொடு நிற்றல் என்ற துறை களவைக் கற்பாக மாற்றுவதற்கான முயற்சியாகும். களவு கற்பு என்னும் இரு கரைகளுக்கிடையே ஒரு பாலம் போல விளங்கும் இத்துறை, அகத்திணைத் துறைகள் அனைத்திலும் சிறப்புடையது என்பர் அறிஞர்கள்.[514] அறத்தொடு நிற்றல் என்னும் இத்துறையின் பெயருக்கு வெவ்வேறு காரணங்கள் கூறுவர் ஆய்வாளர்கள்.[515] களவைக் கற்பாக மாற்றும் இல்லறமாகிய அறத்தின் முக்கிய கட்டத்தை அது நிலைபெற உதவுவதால் இது அறத்தொடு நிற்றலாயிற்று எனல் பொருந்தும்.

4.0.1. அறத்தொடு நிற்றல் என்னும் இத்துறையில் 46 பாடல்கள் காணப்படுகின்றன. இத்துறையில் குறிஞ்சித் திணையோடு மருதம், நெய்தல், பாலைத் திணைப் பாடல்களும் விரவி வருகின்றன. இத்துறையில் தோழி, செவிலி, தலைவி, முருகன், அகவன்மகள், வேலன், கழங்கு ஆகியோர்களிடம் உரையாடுகிறாள். கலித்தொகையில் மட்டும் இத்துறை இல்லை.[516]

19 புலவர்கள் இத்துறையில் பாடியுள்ளனர். கபிலரே மிகுதியான பாடல்களைப் பாடிய பெருமைக்குரியவராகிறார்.[517] இத்துறையில் தோழி 26 நிலைகளில் செயலாற்றுகிறாள்.[518]

4.0.2. தொல்காப்பியர் அறத்தொடு நிற்றலைக் குற்றமில் வகையாய்க் கூறும் புரைதீர் கிளவி யென்று[519] உரைப்பார். இறையனார் களவியல் உரையும் 'மாறுகோளில்லா மொழி' என்று அழகான விளக்கமும் கூறும்.[520] இத்துறையில் தோழியின் அறிவும் சொல்லாற்றலும் சிறந்தவை அறிஞர் பலரும் ஒப்புவர்.[521]

4.0.3. இத்துறைச் சிறப்பு நோக்கியே, வேற்றுமொழியன் ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ்மொழியின் தனியிலக்கிய மதிப்பை அறிவுறுத்த விரும்பிய குறிஞ்சிக் கபிலர் இத்துறையில் 261 அடிகள் கொண்ட குறிஞ்சிப் பாட்டைச் செய்தருளினார்.

4.1. அகத்திணையிலக்கியத்துத் தோழி மிகுந்த உரிமையுடையவள். தலைவியின் உரிமையையும் செயலையும் தன் உரிமையும் செயலுமாகவும் கொள்ளும் சிறப்புடையவள். எனினும் தலைவியின் இசைவின்றி அறத்தொடு நிற்கும் உரிமை மட்டும் தோழிக்கு இல்லை.[522] தலைவியின் அநுமதி இல்லாமல் தோழி அறத்தொடு நின்றதாக மிகக் குறைவாகவே பாடல் கிடைக்கிறது.[523] தலைவியின் அநுமதி இல்லாமல் நின்றதால் 'ஒல்லை யாயினும் கொல்லை யாயினும்' என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள். தலைவி தோழிக்கு அறத்தொடு நின்று தன் காதலைப் புலப்படுத்து முன்னரே, தோழி தானே தன் மதி நுட்பத்தால் தலைவியின் காதலை அறிந்து கொள்கிறாள். அதனால் தலைவி அறத்தொடு நின்று, தன் காதலை வெளிப்படுத்துவதாக அமைந்த பாடல்களின் எண்ணிக்கை குறைவாக உள்ளது.

4.1.1. வரைவு கடாதல் முதலிய வழிகளெல்லாம் கையாளப்பட்ட பிறகு அறத்தொடு நிற்றல் என்னும் இந்நெறியைத் தலைவியும் தோழியும் மேற்கொள்வர். குழந்தை இறப்பினும் தாய்பிழைக்க என்பது போல இதுவரை உயிரினும் சிறந்ததாகக் காத்துவந்த நாண் விட்டேனும் கற்பைத் தலையாகப் போற்றியொழுக வேண்டிய நிலை தலைவிக்கு ஏற்படுகிறது. தோழி தன் சொல்லாற்றலால் தலைவியே தன் காதலை வெளியிடுமாறு செய்கிறாள்.[524]

4.1.2. இது மிக நுண்ணிய முறையாகும். தலைவி, தோழி, செவிலி, நற்றாய், தந்தை என ஏணி போலப் படிப்படியாகத் தொடரும் நிலைகளை-யுடையது இது.[525] இக்களவொழுக்கத்தை யார் யாருக்கு வெளிப்படுத்தலாம் என்பதையும், வெளிப்படுத்திய பின் அவரவர் மனநிலை என்ன என்பதையும் இலக்கணம் வகுத்துக் காட்டுகிறது.[526] இவ்வமைப்பு முறையைக் கலித்தொகை,

> "அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
> என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்
> அவருந் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்

> தொருபக லெல்லாம் உருத்தெழுந் தூறி
> இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
> தெருமந்து சாய்த்தார் தலை"

என அழகாகப் படம்பிடித்துக் காட்டுகிறது.[527]

தலைவி தன் மறையை வெளிப்படுத்தியபின் தான் செவிலிக்கு அறத்தொடு நிற்பதாக உறுதி கூறித் தலைவியின் உள்ளத்தில் அமைதியும் நம்பிக்கையும் சுரக்கச் செய்கிறாள் தோழி.[528]

4.2. தலைவி நிலை கண்டு நோய் அறிவதற்காக மாற்றுக் காணத் தாய் வெறியாட்டெடுக்குமிடத்தும்,[529] உடல் மெலிவு கண்டு வெறியெடுக்க நினைக்கும்போதும்[530] நொதுமலர் வரைவின்போதும்[531] வரைவு எதிர் கொள்ளாமல் தமர் மறுத்தபோதும்[532] காப்பு மிகுதிக்கண் தலைவி நிலை கண்டு செவிலி கேட்கும்போதும்[533] முன்னிலை, அறனெனப்படுதல் என்னும் இரு வகையானும் தோழி தாய்க்கு அறத்தொடு நிற்கிறாள். இவ்வாறே தொல்காப்பியமும் இலக்கணம் வகுக்கிறது.[534]

4.2.1. தோழி அறத்தொடு நிற்கும்போது, அவளுடைய பொறுப்பு பெரிதாக உள்ளது. தன் சொல்லாற்றலையெல்லாம் காட்ட வேண்டிய சூழ்நிலை உருவாகிறது. மாந்தர்தம் உளவியலை அறிந்து அவள் அன்னையின் மனங்கொள்ளுமாறு அறிவுறுத்தும் சூழ்நிலைக்குத் தன்னைத் தயார் செய்து கொள்கிறாள்.

4.2.2. தலைவியின் காதல் நோயை வெளிப்படுத்தாவிட்டால் அது வளர்ந்து அவளையே அழித்து விடுமோ என்ற கவலை ஒருபுறமும், களவு நிலையை வெளிப்படுத்தினால் தாய் தன்னைச் சினப்பாளோ என்ற அச்சம் மறுபுறமும் தோழியை அலைக்கழிக்கிறது. அவள்

> "இகல்மீக் கடவும் இருபெரு வேந்தர்
> வினையிடை நின்ற சான்றோர் போல"

இருபேர் அச்சமோடு அன்புறுவதாகக் கூறுகிறாள்.[535] தன் பொறுப்பையும் மறைமுகமாகச் சுட்டுகிறாள். மரபுவழி மணத்தின் பெருமையையும் கூறுகிறாள். தாங்கள் தேர்ந்த மணத்தின் சிறப்பையும் நிலைநாட்டுகிறாள்.[536] அன்னாய், அன்னாய் எனப் பலமுறை அழைத்துக் கோபத்தை ஆற்றியும் தான் சொல்லப் போவதைக் கூர்ந்து கேட்கும்படியும் செய்கிறாள்.[537] சினவாதி கேட்பாயாக என்ற பீடிகையுடன் தொடங்குகிறாள். தலைவி சூழ்நிலையால், ஊழ்வினையால் காதல் வயப்பட்டாள்; அவள் குற்றமற்றவள் என அறிவுறுத்துகிறாள்.[538] தலைவி துன்பம் கண்டு தான் துன்புறுவதையும் கூறுகிறாள்.[539] எதைக் கூறினால் தாயின் உள்ளம் தலைவியின் களவை ஏற்றுக் கற்பு மணமாக்கும் என்றறிந்து பக்குவமாகச் சொல்லாடுகிறாள்.

4.3. "எளித்தல் முதலான எழுவகையால் தோழி அறத்தொடு நிற்பதாகத் தொல்காப்பியம் கூறும்.[540]

4.3.1. <u>எளித்தல்</u>

தம் குடிக்கும் தலைவியின் அழகிற்கும் ஏற்றவனோ தலைவியின்பால் கொண்ட அன்பு மாறாமலிருப்பானோ என்று நினைக்கும் தாய்க்குத் தலைவனின் குடிப்பெருமை,[541] செல்வம்,[542] பேரழகு,[543] வீரம்,[544] பண்புடைமை,[545] அன்புடைமை[546] ஆகியவற்றை எடுத்துக் கூறித் தாயர் விருப்பத்திற்கேற்பவே தலைவி தலைவனைத் தேர்ந்தெடுத்துள்ளாள் எனத் தலைவனின் பெருமையைப் புலப்படுத்துகிறாள் தோழி.

4.3.2. <u>ஏத்தல்</u>

தலைவன் பெருந்தகுதியுடையவனாயிருந்தும் மிக எளியனாக உள்ளான். புலி புலி என்ற பூசல் கேட்டவுடன் தானே வந்து உதவி செய்தல்,[547] சிற்றில் விளையாட்டில் விருந்துண்ண விரும்பல்,[548] மனையில் இளைப்பாறுதல்,[549]

தாங்கள் பேசாமலிருந்தும் தங்கள் கொம்புக்காகக் காத்திருத்தல்[550] எனத் தலைவனின் எளிமையைச் செவிலி ஏற்குமாறு கூறுகிறாள் தோழி.

4.3.3. வேட்கையுரைத்தல்

தலைவனைக் காண முடியாமையால், வேட்கைமிகுதியால் தலைவியின் உடலில் பல்வேறு மாற்றங்கள் நிகழ்கின்றன. தலைவிதன்பதிற்குக் காரணம் அறியாமல் வருந்தும் செவிலியிடம் தலைவியின் நோய், நோயுற்ற காரணம், நோய்க்கேற்ற மருந்து ஆகியவற்றை அறிவித்தும் மருத்துவராகத் தோழி செயல்படுகிறாள்.

தலைவியின் கண்ணழகைக் கூறி, அக்கண்கள் அழுவதைக் காட்டி, அவ்வழுகையை மாற்ற வேண்டும் எனத் தாயிடம் வேண்டுகிறாள் தோழி.[551] தலைவியின் மேனி பசத்தல்,[552] கண்கள் உறக்கமிழத்தல்,[553] உடல் நடுங்குதல்[554] எனத் தலைவி நிலை கூறிச் செவிலிக்கு அறத்தொடு நிற்கிறாள். நோய் கூறியவள் நோய்க்கு மருந்து தலைவனின் மார்பில் உறங்குதல்,[555] அலர் குன்றத்தைக் காணல்[556] என்பதையும் அறிவிக்கிறாள்.

4.3.4. கூறுதல் உசாதல்

தலைவியின் வேறுபாடு கண்ட தாய் தலைவியின் நோய்க்குக் காரணம் அறிய அறிவுநரை வினவியும்,[557] கழங்கெடுத்தும்,[558] அகவன் மகளைக் கேட்டும்,[559] வேலனை வினவியும்,[560] முருகனை நோக்கி வெறியெடுத்தும்[561] துன்புறுகிறாள். இந்நிலை அக்காலச் சமுதாயச் சூழ்நிலையையே காட்டுகிறது. வேலனுக்கும் முருகனுக்கும் அஞ்சியொழுகிய மகளிர் காதலில் கட்டுண்ட பிறகு முருகனையும் வேலனையும் எதிர்க்கும் போக்கு காணப்படுகிறது. கற்பு வாழ்வு மேற்கொண்ட நிலையில் பிற தெய்வம் தொழுதல் ஏற்றதன்று என்று கருதிய முறை புலப்படுகிறது. தாய் வெறியெடுக்குமிடத்து, வேலன் வேண்ட வெறிமனை வந்த முருகனை 'மடவன்' என்று எள்ளுகின்றாள் தோழி.[562]

வேலன் கொடுக்கும் பலியை 'மாமலைச் சிலம்பனின் மார்பு உண்ணுமோ எனச் சிவேணடியின் மூலம் செவிலியை உய்த்துணர வைக்கிறாள்.[563] அகவன் மகளிடம் தலைவனின் மலையைப் பற்றிய பாட்டைக் கேட்கும் வேட்கையைப் புலப்படுத்துவது போன்று குறிப்பாகச் செவிலிக்கு உண்மை உணர்த்துகிறாள்.[564] கழங்கிடம் "தலைவி மார்பை அணங்கியவன் முருகனல்லன்" என்று அறிந்தும் பொய் கூறுவதாகப் பழிக்கிறாள்.[565]

4.3.5. ஏதீடு

தலைவியின் உயிரைப் பெரிதாக நினைக்கும் செவிலியிடம், களிறு,[566] புலி,[567] நாய்[568] முதலியவற்றிலிருந்து தலைவன் தலைவியைக் காத்தான் எனத் தலைவனின் வீரம் கூறியும், புனலிலிருந்து காத்தான் என அருள் கூறியும்,[569] பூ,[570] தழை[571] தந்தான் என்று அன்பு கூறியும் அறத்தொடு நிற்கிறாள் தோழி. தலைவி தலைவன்பால் கொண்ட காதலுக்குக் காரணம் நன்றியுணர்வே என நிலைநாட்டுகிறாள். தலைவியின் உயிரைக் காத்த தலைவனை ஏற்குமாறு செய்கிறாள்.

4.3.6. தலைப்பாடு

தலைவனும் தலைவியும் தாமே எதிர்ப்பட்டு ஆய்ந்த மன்றல் இது எனவும், தனக்கு எதுவும் தெரியாதென்றும் தோழி செவிலிக்குக் கூறுகிறாள். கூறியதை உறுதிப்படுத்த புகார்த் தெய்வம் நோக்கிக் கடுஞ்சூள் வேண்டுமானால் தருவதாகவும் கூறிக் குற்றமின்மையை நிலைநாட்டுகிறாள்.[572]

4.3.7. உண்மை செப்பல்

தலைவன் தலைவியின் காதல் நிகழ்ச்சியை உள்ளவாறே செப்புகிறாள் தோழி. பொதுவாக, இத்துறை இருவரின் காதல் நிகழ்ச்சியைக் கூறுவதாயினும், தோழி செவிலியிடம் உரையாடும்போதுதான் உண்மை செப்பல் என்னும் முறை சிறப்பாக அமைகிறது.[573]

4.4. தோழி பெரும்பாலும் தன் தாயாகிய செவிலியிடம் நேராகவே அறத்தொடு நிற்கிறாள். வெறியாட்டு போன்ற பிற நிலைகளில் தலைவியிடம் உரையாடுவது போன்று அவள் செவிலியும் தமரும் கேட்கும்படியாக அறத்தொடு நிற்கிறாள்.[574]

4.4.1. செவிலி தலைவிநிலை அறிய வெறியெடுக்குமிடத்தும், அயலவர் மணம் பேசி வரும்போதும், தலைவனின் வரைவைத் தமர் மறுக்கும்போதும், தலைவி ஆற்றாமையால் வருந்துமிடத்தும் தாய்க்கு உண்மையை அறிவுறுத்த விரும்பும் தோழி உத்திகள் பல கையாளுகிறாள். அறியாமையால் வெறியென மயங்கி அருந்துயர் உழக்கும் அன்னைக்கு நாடன் செய்த நோயை அறிவித்தல் நல்லது எனத் தலைவியிடம் அனுமதி வேண்டுகிறாள் தோழி.[575]

4.5. வெறியாட்டு

இச்சடங்கு முறை குறிஞ்சி நிலத்திற்கு மட்டுமே உரியதாதலால் தோழி இத்திணையில் மட்டும் அறத்தொடு நிற்கிறாள். இதைத் தொல்காப்பியர் களம் பெறக் காட்டினும் என்றும்,[576] 'முன்னிலை'[577] என்றும் குறிப்பர்.

4.5.1. தலைவியின் மெய் வேறுபாடு கண்டு தாய் வெறியெடுக்கும் போது தோழி அறத்தொடு நிற்கிறாள். இப்பகுப்பில், முருகன் வேலன் அகவன் மகள், கழங்கு ஆகியவற்றை விளித்துத் தாய்க்கு உண்மை நிலையைப்புலப்படுத்துதல், தலைவியிடம் உரையாடும் நிலையில் தாய்க்குக் கூறல், தலைவியின் நிலையைச் ~~செவிலிக்கு~~ நேராகவே கூறல் என்னுமுறையில் செயலாற்றுகிறாள் தோழி. தோழி தலைவியிடம் உரையாடுவது போன்று குறிப்பாகவும் உணர்த்துகிறாள்.[578] தாய் கேட்கும்படியாக முருகன், வேலன், அகவன்மகள் ஆகியவர்களையும் கழங்கையு விளிதல்,[579] குறிஞ்சி நிலத்தில் அமைகிறது. நெய்தல் திணையில் தாய் வெறியாட்டெடுக்கவில்லை. ஆனால் தெய்வத்தால் ஆயிற்றோ எனத் தமர் ஐயுறுகின்றனர். அதனால் தோழி, பெரிய நீர்த்துறையின்கண் இவளை

வருத்தியவன் கடவுள் அல்லன்; நறுந்தார் கமழும் மார்பனே எனத் தெளிவுறுத்தித் தலைவன் தலைவியைச் சந்தித்த குறியிடமும் செப்பி உண்மை கூறுகிறாள்.[580]

4.5.2. செவிலி வெறியெடுக்கும்போது, குறிஞ்சித் திணையில் தோழி நேர்முகமாகவும், குறிப்பாகவும், சுற்றி வளைத்தும் அறத்தொடு நிற்கிறாள். நெய்தலில் செவிலி வெறியெடுக்க நினைக்கும்போதே இவள் நோய்க்குக் காரணமானவன் அருந்திறல் கடவுளல்லன்; தலைவனே என நேராகவே உண்மை கூறுகிறாள்.[581] மருத நிலத்தில் இவள் நோய்க்குக் காரணம் தெய்வமாயின் ஊரனுக்காகப் பசப்பது ஏன் என வினவினை எழுப்பி உண்மை கூறுகிறாள்.[582]

4.6. நொதுமலர் வரைவு

மற்ற சூழ்நிலைகளில் அறத்தொடு நிற்காவிடினும் மற்றவர் உணரவில்லை-யென்றால் தலைவியின் கற்புக்கு இழுக்கு நேராது. ஆனால் நொதுமலர் வரைவில் தலைவியின் கற்புக்கு இழுக்கு நேரும். அதனால் அலட்சியமாக இருத்தல் இயலாது. தாய்க்கு உண்மை நிலையை உணர்த்தியே தீர வேண்டும். தாயும் உணர்ந்தே ஆக வேண்டும் என்ற வகையில் பாடல்கள் அமைந்துள்ளன. 'பிறன் வரைவு ஆயினும்' எனத் தொல்காப்பியர் இப்பகுப்பைக் கூறுகிறார்.[583] 'நான் குன்ற நாடன் வரும்போதெல்லாம் நின்னருமை அவனுக்குரைத்தேன். நீ தலைவனை வெறுப்பது போல் தலைவன் உன்னை வெறுக்கவில்லை. தாய் என்னை வினவும்-போது என்னிடம் அறத்தொடு நின்று விடு. வேற்றவன் தூதும் வருகிறது' எனத் தலைவிக்கு அறிவுரை கூறுகிறாள் தோழி.[584] தானும் அறத்தொடு நிற்பதாக உறுதி கூறுகிறாள்.[585]

4.6.1. நொதுமலர் வரைவில் தோழி செவிலிக்குப் பெரும்பாலும் நேராகவே உண்மையைக் கூறுகிறாள். குறிஞ்சி நிலத்தில் தோழி செவிலியிடம் தலைவன் மார்பில் உறங்க விரும்பும் தலைவி விருப்பத்தையும் முயங்கா நாளில் வருந்தும் வருத்தத்தையும் கூறுகிறாள்.[586]

4.6.2. நெய்தல் நிலத்தில் தலைவி தன் எதிர்ப்பை அஞ்சாமையோடு அறிவிக்கிறாள். பாலும் உண்ணாமல், உறுதியோடு இருக்கிறாள். இதனால் செவிலி தோழியை வினவ வாய்ப்பேற்படுகிறது. தோழியும் உறுதியாய்த் தன்னைத் துறைவனுக்குத் திருமணம் செய்வித்தால்தான் இவள் பால் குடிப்பாள்; இல்லையேல் இறந்துபடுவாள் என முடிவாகக் கூறுகிறாள். சங்க இலக்கியத்தி-லேயே தலைவியின் அஞ்சாமையைத் தெரிவிக்கும் புதுமையான பாட்டு இது எனலாம்.[587] நெய்தலுக்கே உரிய அலர் மூலம், செவிலி ஏற்பாடு செய்வதைத் தாங்கள் அறிந்ததையும் அதனால் அவள் கருத்துக்கு மாறாக, துறைவனையே தலைவன் என்று கூறுவதாகவும் இயம்பி அவர்களைக் கூட்டியதே தெய்வம்தான் எனச் செவிலி விரும்பும் வண்ணம் எடுத்துரைத்து அறத்தொடு நிற்கிறாள் தோழி.[588]

4.6.3. பாலை நிலத்தில் தோழி தலைவன் தலைவி காதல் தோன்ற காரணமாகிய புனல்தரு புணர்ச்சியையும் சுட்டி, இவள் உயிரையே காப்பாற்றியதால் நன்றியோடு தலைவனுக்கே மணம் முடிக்க வேண்டும் என்ற முடிவையும், தேரொடு வந்த தோன்றல் என்று செவிலி விரும்பும் செல்வச் சிறப்பையும், 'இவள் உயிர் அவன் பெயரோடு இணைந்து விட்டது' என அவனையன்றி வேறொருவரை மணக்க விரும்பா நிலையையும் பாலை நிலத்தில் தோழி கூறி அறத்தொடு நிற்கிறாள்.[589] குறிஞ்சி, நெய்தல், பாலைத் திணைகளில் முறையே தலைவியின் வருத்தம், உறுதி, நன்றியுணர்வு ஆகியன தோழி அறத்தொடு நிற்கும் கருவியாகின்றன.

### 4.7. தமர் மறுப்பில்

தலைவனின் பெருமை அறியாமையால், தலைவிக்குத் தலைவன் ஏற்றவன் இல்லை எனத் தமர் மறுக்கின்றனர். அதனால் தலைவனின் பெருமையை நன்கறிந்த தோழி மாறான கருத்துக் கொண்ட தமருக்கு உண்மை நிலையைத் தெளிவாக்க வேண்டும். அதே நேரத்தில் அவனையன்றி வேறொருவரையும்

தலைவி மணக்க இசையாள். எனவே அவனுக்கே தலைவியை மணம் முடிக்க வேண்டும் என முடிவாக உறுதியாகக் கூறும் முறையில் பாடல்கள் அமைகின்றன. தொல்காப்பியம் 'அவன் வரைவு மறுப்பினும்' என இலக்கணம் கூறும்.[590]

4.7.1. குறிஞ்சித் திணையில் தோழி தலைவனின் உயர்வு, அறிவுள்ளம், காதற்சிறப்பு ஆகியவற்றையும் தலைவியின் துயரையும் கூறி அவனுக்கே, தமர் மறுக்காமல் மணம் முடிக்க வேண்டும் என்று நேராகவே கூறுகிறாள்.[591] நாடன் விரும்பின், பசுப்போல் பெண்டிரும் பெறுவான்; அவன் வழிவழி வரும் அன்பினன் ஆதலால் அவனையே விரும்புகிறாள் என்று தலைவனின் சிறப்பு கூறப்படுகிறது. தமர் மறுப்பரோ எனத் தலைவி அஞ்சியபோது, செவிலி கேட்பத் தலைவியிடம் உரையாடுவதுபோன்று தமர் மறுக்கத் தலைவன் தன்னூருக்குச் சென்றால் 'நம் இன்னுயிர் என்னாகும்' என்று தங்கள் அச்சத்தைப் புலப்படுத்தியும், 'நின் அழகைத் தொலைத்த குன்ற நாடனுக்கே மணம் முடிப்பர்' என முடிவாகக் கூறி மகிழ்வித்தும், செவிலிக்குக் குறிப்பாக அறத்தொடு நிற்கிறாள்.[592]

4.7.2. மருதத்திணையில் தலைவி தலைவன் மார்பினைப் பொருந்திய நிலையிலும் நலனிழந்ததைத் தெரிவித்து, பொருந்தவில்லையெனில் என்னாவாள் என்று செவிலியையே வினவும் நிலையில் தலைவியின் விழைவையும், வேற்று வரைவினால் பயனின்மையையும் தெளிவாக்குகிறாள்.[593]

4.7.3. குறிஞ்சித் திணையில் தலைவனின் பெருமையும், மருதத் திணையில் தலைவியின் ஆற்றாமையும் மையப் பொருளாகின்றன.

4.8. தலைவியின் ஆற்றாமை மிகுந்த விடத்து

தலைவியின் ஆற்றாமை கண்டு தோழியே, தலைவியிடம், களவைத் தாய்க்கு அறிவிக்க அனுமதி வேண்டுகிறாள்.[594] குறிஞ்சித்திணையில் சுனைப்பூவிற்காக அழுத தலைவிக்கு, உயர்ந்த தலைவன் பூ பறித்துத் தந்தமையைக் கூறுகிறாள்.

பூந்தருபுணர்ச்சியால் காதல் மலர்ந்தமையும் தலைவியின் சிறப்பும் கூறப் படுகிறது.[595]

4.8.1. நெய்தல் நிலத்தில் தோழி, தலைவியின் நோய்க் காரணத்தை அறியாததையும், தலைவி திரை முழக்கம் கேட்டு உறங்காமை-யையும் கூறுகிறள்.[596] கானலில் ஒருநாள் நடந்த நிகழ்ச்சியைத் தாயிடம் கூறி அவன்தான் இவள் மெலிவிற்குக் காரணமாக இருக்குமெனத் தானும் ஐயுற்றுக் கூறுகிறள்.[597] தலைவியின் துயருக்குக் காரணம் 'மெல்லம் புலம்பன்' என்றும், மேனி பசத்தலுக்குக் காரணம் காமநோயே என்றும் நேராகவே கூறுகிறள்.[598]

4.8.2. பாலைத் திணையில் பசந்த தலைவியைக் கண்டு சிவந்த கண்ணுடன் தாய் தலைவியை அலைக்கும்போது, தலைவன் ஒருநாள் கொடுத்த கோங்கமலர் இவளைப் பசலையாக்கியது என உண்மையைக் கூறுகிறள் தோழி.[599]

4.8.3. தலைவியின் ஆற்றுமையைத் தெரிவிக்கும் வகையில் குறிஞ்சித் திணையில் சுனைநீல மலரும், பாலைத் திணையில் கோங்கமலரும் பூந்தரு புணர்ச்சிக்குக் கருவியாகக் காட்டப்படுகிறது.[600]

4.8.4. அறத்தொடு நின்ற பின்பு வரைவுவேண்டி பிரிந்த தலைவன் கடிதின் வாராதவழி, ஐயுற்ற செவிலி நம்மைத் துறந்தான் போலும். நங்கட்குக் கூறிய திறம் யாது? என்று வினவுகிறள். இவ்வாறு செவிலி வினவுதல் நெய்தல் திணையில் மட்டுமே காண முடிகிறது. தண்கடற் சேர்ப்பன் தலைவி தோளைப் பிரிவானுயின் அவனுல் விரும்பப்பட்ட தோள் என்ன பயனுடையது என்று அவன் பெருமையையும்,[601] அவன் துறந்தாலும் அவன் அளியே நினைவுக்கு வருகிறது எனத் தாங்கள் அவன்பால் கொண்ட நம்பிக்கையையும் புலப்படுத்துகிறள் தோழி.[602]

4.8.5. செவிலியிடம் அறத்தொடு நின்ற தோழி வரைவு மாட்சிமைப் பட்ட பிறகு தலைவியின் வருத்தம் செவிலியால் தீர்ந்தது என மகிழ்ந்து நன்றியோடு

கூறுகிறாள்.[603] இவ்வமைப்பு முறை குறிஞ்சித் திணைக்கு மட்டுமே உரியது. அறத்தொடு நின்ற பிறகும் தோழி செவிலியிடம் உரையாடும் முறை ஐங்குறு நூற்றில் மட்டுமே அமைந்துள்ளது.

4.9. ஆய்வு முடிவுகள்

(அ) அகத்திணைத்துறைகள் அனைத்திலும் சிறப்புடையது இத்துறை. எனவேதான் கபிலர் வேற்றுமொழி அரசனுக்கு இத்துறைக்குரிய பாடலைப்பாடி, தமிழின் அகப்பொருள் பெருமையை அறிவுறுத்தினார்.

(ஆ) மிக்க உரிமை பெற்ற தோழியும் தலைவியின் அனுமதி கேட்கும் ஒரே துறை இதுதான்.

(இ) நட்பம் மிக்க இத்துறை தோழி முதல் தமர் வரை படிப்படியாக வெளிப்படுத்தப்படும்.

(ஈ) தோழியின் திறமையும், சொல்லாற்றலும், உளவியல் அறிவும் முற்றிலும் வெளிப்படும் நிலை கொண்டது இத்துறை. தலைவிக்கும் குடும்பச் சூழ்நிலைக்கும் இடையே தோழி பெரிதும் இடர்ப்படும் நிலைமையை இத்துறை காட்டும்.

(உ) கற்புக்குச் சிறப்பிடம் தந்த பெண்டிர் முருகனையும் வெறியாடும் வேலனையும் கூட எள்ளும் மனநிலை பெறுகின்றனர்.

(ஊ) குறிஞ்சி, நெய்தல், மருதம் ஆகிய திணைகளில் நிகழும் வெறியாடல் களில் வேறுபாடுகள் உள்ளன.

(எ) எளித்தல் முதலான ஏழு நிலைகளில் தோழி தாய்க்கு அறத்தொடு நிற்கிறாள்.

(ஏ) நொதுமலர் வரைவில் குறிஞ்சி, நெய்தல், பாலைத்திணைகளில் முறையே தலைவியின் வருத்தம் உறுதி நன்றியுணர்வு ஆகியன தோழி அறத்தொடு நிற்கும் கருவியாகின்றன.

(ஐ) தமர் மரபில் குறிஞ்சித் திணையில் தலைவனின் பெருமையும் மருதத் திணையில் தலைவியின் ஆற்றாமையும் மையப் பொருளாகின்றன.

(ஒ) தலைவியின் ஆற்றாமையைத் தெரிவிக்கும் வகையில் குறிஞ்சித் திணையில் சுனைப்பூ மலரும், பாலைத்திணையில் கோங்கமலரும் கருவியாகின்றன. நெய்தல் திணையில் தலைவியின் காம நோயை வலியுறுத்துகிறன்.

(ஓ) அறத்தொடு நின்ற பிறகும் தோழி செவிலியிடம் உரையாடும் முறை ஐங்குறுநூற்றில் மட்டுமே காணப்படுகிறது.

## 5. உடன்போக்கு

5.0. உடன்போக்கு என்னும் இத்துறையில் அமைந்த 23 பாடல்களில் ஒரு பாடல்[604] தவிர மற்றவை களவுப்பாடல்களே. கலித்தொகையில் இத்துறைப் பாடல்கள் இல்லை. குறிஞ்சி, நெய்தல், பாலை என்னும் மூன்று திணைகளிலும் வரினும் பாலையில்தான் பயின்று வருகின்றது. தோழி தலைவனிடமும் தலைவியிடமும் உரையாடுவதாகக் கூற்றுகள் அமைகின்றன.[605] தோழி இத்துறையில் 14 நிலைகளில் செயலாற்றுகிறாள். 14 புலவர்கள் இத்துறையில் பாடியுள்ளனர்.[606] அதிகப் பாடல்கள் பாடியவர் கபிலர்.

5.0.1. தொல்காப்பியர் "தலைவரும் விழுமநிலை...தோழிமேன" என்னும் நூற்பாவில், இத்துறையைக் குறிப்பர்.[607] இத்துறையைக் கொண்டு தலைக்கழிதல் எனக் குறிப்பர் தொல்காப்பியர்.[608]

5.0.1.1 இற்செறிப்பு, ஊரலர், வெறியாட்டு, நொதுமலர் வரைவு என்ற இன்னாச் சூழ்நிலைகளைக் கடத்தற்கு இருவழிகள் உள்ளன. ஒன்று அறத்தொடு நிற்றல், மற்றொன்று உடன்போகுதல். இவற்றில் ஒன்று நிகழ்ந்தால் மற்றொன்று நிகழாது. அறத்தொடு நின்றபின் உடன்போகார். உடன்போனபின் அறத்தொடு நிற்பதால் பலனில்லை. அறத்தொடு நிற்றல், உடன்போதல் என்ற இரண்டினுள் ஒன்றே களவு நாடகத்தின் இறுதிக் காட்சியாக அமையும்.[609]

5.0.2. உடன்போக்கையும் திருமணம் என்றே கொள்வர் தொல்காப்பியர்.[610] இக்கருத்தைக் காரண காரியம் காட்டி நிலைநிறுத்துவர் பரிமேலழகர்.[611] இத்திருமணத்திற்குத் தோழியே சாட்சியாக அமைகிறாள். இன்றும் சில பழங்குடி மக்களிடம் உடன்போக்குத் திருமணம் நிலவுகிறது.[612]

5.0.3. உடன்போக்கினை அருகிய வழக்கென்றும்[613] பெருகிய வழக்கென்றும்[614] வேறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. திராவிடப் பழங்குடியினரிடம் அதிலும் சிறப்பாக செஞ்சு, சோழகர் என்ற பழங்குடிகளிடத்தில் இம்மணமுறை இன்றும் நிலவுகிறது.[615]

5.0.4. பெற்றோர் முன்னிலையில் தலைவன் தலைவிக்கு மணம் முடித்து விடலாம் என்ற உறுதி இருந்தால் தோழி உடன்போக்கிற்கு இசையாள்.[616] உடன்போக்கின்றித் தலைவியின் கற்பைக் காக்க முடியாது என்ற நிலை வரும்போது தான் தோழி உடன்போக்கிற்கு வழி வகுக்கிறாள். இன்னது செய்ய வேண்டுமென்று அறியாமல் தத்தளித்துக் கொண்டிருக்கும் தலைவன் தலைவி ஆகியோர் நெஞ்சங்களுக்கு ஒரு வழியைக் காட்டி அதன் வழிச் செல்ல ஊக்கமளிக்கிறாள் தோழி.

5.0.5. அறத்தொடு நின்ற பிறகும் பெற்றோர் நொதுமலர் வரைவிற்கு முயலும்போது தோழி உடன்போக்கிற்கு வழி வகுப்பதாக மு. இராகவையங்கார் கூறுவர்.[617] முன்னமேயே மண முடித்திருந்தால் உடன்போக வேண்டியதில்லை என்று நற்றாய் ஒருத்தி செவிலியிடம் கூறும் கூற்றும்,[618] உடன்போக்கை அறத்தாறு என்று செவிலி கூற்றும்[619] மு. இராகவையங்காரின் கருத்தை மறுப்பதாக அமைகின்றன.

5.1. உடன்போக்கிற்குரிய காரணங்களாகப் பின்வருவனவற்றைக் கூறலாம். நொதுமலர் வரைவு, தலைவி ஆற்றாமைப் பெருக்கம், அம்பலும் அலரும் களவை வெளிப்படுத்தும் என்ற மகளிரின் அச்சம், ஊரவரின் அலர் மிகுதியைப் பொறுக்க இயலாமை, தலைவன் வரைவிடை வைத்த பிரிவில் பிரிவாரோ என்ற தலைவியின் அச்சம், சிறுகோல் கொண்டு அலைக்கும் தாயின் காவல் மிகுதி, களவு கற்பாக மாற விரும்பும் பெண்மையின் விருப்பம், அன்னையிடம் தோழி அறத்தொடு நிற்கும் சூழல் வாய்க்காத நிலை ஆகியவற்றை உடன்போக்கின் காரணங்களாகக் கொள்ளலாம்.

5.2. சில நேரங்களில் தோழியும் தலைவியோடு உடன்போக்கில் சென்றிருப்பதாகத் தெரிகிறது.[620] ஆனால் மிகுதியான பாடல்கள் தலைவி மட்டும் உடன்போக்கு மேற்கொள்வதாக அமைகின்றன. தோழி தலைவனிடம் கூறும் கூற்றில் உடன்போக்கில் தலைவியுடன் தானும் வந்திருந்ததைக் குறிப்பாகச் சுட்டுவதாக அமைகிறது. உடன்போக்கில் தலைவனைப் பின்பற்றி வந்த தமரைக் கண்டு அஞ்சி ஒளிந்த காட்டை நினைக்கும்போது,

"அன்றைய பனைய வாகி இன்றுமெம்
கண்ணுள் போலச் சுழலும் மாதோ"[621]

என்பழைய நிகழ்ச்சியை நினைவு கூர்கிறாள் தோழி. தலைவியுடன் சென்ற தோழி மரத்தடியில் இளைப்பாறியபோது யானையின் பிளிற்றொலியைப் பிடி கேட்டு அதற்கு ஊறு நேர்ந்ததாக நினைந்து புலம்பியதைத் தலைவனின் செலவழுங்குவிக்கும்போது நினைப்பூட்டுகிறாள். மேற்குறித்த பாடல்கள் தலைவியுடன் சில நேரங்களில் தோழியும் சென்றிருக்கலாம் என்பதைத் தெளிவாக்குகின்றன. தலைவன் வரைவு நீட்டிக்க ஆற்றுவிக்கும் தோழி, "வதுவை கூடி நீடின்று நம்மொடு செல்வர்" என உடன்போக்கில் தன்னையும் உடன்படுத்திக் கூறும் கூற்றும் இக்கருத்தை அரண் செய்யும்.[622]

5.3. உடன்போக்குப் பாடல்கள் களவா கற்பா என்ற ஐயம் இருப்பினும் தோழியின் கூற்றளவில் களவுக்குரியனவாகவே அமைகின்றன. உடன்போக்கில் தோழி முழு உரிமை பெற்றவளாயுள்ளாள். இத்துறையுள் தோழியின் கடமை, பொறுப்பு, பாசம் ஆகிய உணர்வுகள் தெளிவாகின்றன. உடன்போக்கு மேற்கொள்ளத் தலைவனைத் தூண்டுதல், தலைவன் உடன்போக்கு நயக்கும்போது தலைவியிடம் அறிவிக்கும் வரை பொறுக்கும்படி தலைவனிடம் வேண்டுதல், தலைவன் எண்ணத்தைத் தலைவியிடம் கூறித் தன் துன்பத்தைப் பொறுக்கும்படி வேண்டுதல், தலைவன் எண்ணத்தைத் தலைவியிடம் கூறி அவளை உடன்படச்

செய்தல், தலைவன் தலைவியை அழைத்துச்செல்லவந்தபோது, தோழியின் ஓம்படைச் செயல் என்னும் முறையில் உடன்போக்கில் தோழியின் செயல்திறன் வெளிப்படுகிறது.

5.3.1. இந்நெறியில் மென்மையான தலைவி வருதல் இயலாது என மறுக்கிறான் தலைவன். தோழி,

"ஊர்ப்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்கா
டின்னா வென்றி ராயின்
இனியவோ பெரும தமியோர்க்கு மனையே"

என்று தலைவனைத் தன் சொல்லாற்றலால் மடக்கி விடுகிறாள்.[623] கடுமையான கானமாயினும் தலைவனுடன் வரின் இனிதாகும் எனத் தலைவியின் உள்ளமும் புலப் படுத்தப்படுகிறது.[624] தலைவிக்காக வருந்தும் தோழியின் இடும்பை களைவதற்காகவே தலைவி உடன்போக்கு மேற்கொள்வதாகத் தோழி கூறுவதால் இருவருக்குமிடையே உள்ள உறவு நெருக்கமும் புலப்படுத்தப்படுகிறது.[625] பாலை நில வெம்மையைத் தலைவனின் அன்பாம் தன்மை நீக்கி விடும் என்று தலைவனின் அன்பில் தலைவி தோழி கொண்ட நம்பிக்கையும் புலப்படுத்தப்படுகிறது. எத்தகைய கொடிய பாலையாயினும் தலைவனுடன் வர விரும்பும் தலைவியின் அன்பையும் வெளிப்படுத்துவதே தோழியின்நோக்கமாகிறது. கொடிய பாலை-யாயினும் தலைவன் தலைவியை அழைத்துச் செல்லலே நன்று என்ற முடிவும் தெளிவாகிறது.

5.3.2. பொதுவாகத் தலைவன் உடன்போக்கை விரும்பும்போது தோழி மறுக்காத நிலையே காணப்படுகிறது. ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்று மட்டும் தலைவிக்குக் கூறும் வரை பொறுக்குமாறு வேண்டும் முறையில் அமைகிறது.[626] தலைவி வரவிரும்பியும், கண்கள் கலுழும் நிலை காட்டி உடன்போக்கு மேற்கொள்ள முடியாநிலையும் உணர்த்தப்படுகிறது.[627]

5.3.3. தலைவன் உடன்போக்கிற்கு உடன்பட்டதைக் கூறித் தலைவியை உடன்படுத்தும் பாடல்களே அதிகமாகக் காணப்படுகின்றன. தலைவி தலைவனை விரும்பினும், நாணத்தால் உடன்போக்கு மேற்கொள்ள விரும்பாநிலை காணப்படுகிறது. உடன்போக்கினால் பழி ஏற்படும் என்பதைத் தோழியும் அறிந்திருப்பினும்[628] சூழ்நிலையின் நெருக்கடியால் தலைவி உடன்போதலே நன்று என்ற முடிவில் தலைவியையும் உடன்படச் செய்கிறாள் தோழி. தலைவன் உடனழைத்துச் செல்ல விரும்புவதையும் அவன் உறுதியாக அழைத்துச் செல்வான் என்பதையும் தலைவிக்கு அறிவுறுத்துகிறாள்.[629] உடன்போவதற்கு அவன் ஆவன செய்வதையும் தெரிவுறுத்துகிறாள்.[630] அருவழியாயினும் தலைவனுடன் செல்லல் நன்று எனத் தான் எடுத்த முடிவையும் தெரிவிக்கிறாள்.[631] தான் முடிவெடுத்ததற்கான காரணங்களையும் விளக்குகிறாள் தோழி. ஊரவர் அலர் தூற்றல்[632] அன்னை அலைத்தல்,[633] நொதுமலர் வரைவு நிகழ்தல்,[634] தலைவனைக் காண இயலாமை[635] என உடன்போக்குக்குரிய காரணங்களைத் தலைவியின் உளம் கொள்ளும்படிக் கூறுகிறாள் தோழி. உடன்போக்கு மேற் கொண்டால் அன்னை சொல்லிலிருந்தும் அலர் தூற்றிலிருந்தும் உய்யலாம் என நன்மையும்[636] தெற்றி உலர்தல், வயலை வாடுதல், நொச்சி மென்சினை உலர்தல், அன்னை அல்லலுறுதல், தமர் கோபமுறுதல்[637] எனத் தீமையும் கூறப்படுகிறது. உடன்போக்கு செல்ல வாய்ப்பாக உள்ள காலச் சிறப்பும் காட்டப்படுகிறது.[638]

5.3.4. தன் உயிரன்ன தலைவியையும் தன்னையும் பிரிக்கும் அனைவரையும் தோழி வெறுக்கும் நிலை காணப்படுகிறது.

"ஊஉ ரலரெழச் சேரி கல்லென
ஆனா தலைக்கும் அறனி லன்னை
தானே இருக்க தன்மனை யானே"[639]

எனத் தோழியின் வெறுப்பு புலப்படுத்தப்படுகிறது. அலர் சுமந்து ஒழியச் சாபமும் கொடுக்கப்படுகிறது.[640]

5.3.5. தலைவன் செல்லும் வழி அருவழியாயினும் தலைவி உடன் செல்வதே நன்று என்ற குறிப்பு தோழியின் மூலம் தெளிவுபடுத்தப்படுகிறது. தலைவன் குறியிடத்து வந்து காத்திருக்கும் நிலையில் தலைவியின் நாணம் உடன்போக்கினை மறக்கும்போது பொறுப்புணர்ந்த தோழியின் கையும் காலும் தீயுறு தளிரினைப்போல் நடுங்குகிறது.[641]

5.3.6. தலைவியின் பிரிவு நினைந்து துன்பமுறும் தோழி தலைவியிடம் அதைக் கூறாமல் "வாராய் தோழி முயங்குகம் பலவே" என்ற சொற்களிலேயே தன் துயரைத் தேக்கி விடுகிறாள்.[642] 'நலம் கவர் பசலையை நகுவோம்'[643] என்ற சொற்களில் தோழியின் துன்பம் மறைக்கப்படுகிறது. சாகுந்தலத்தில், சகுந்தலை ஆசிரமத்திலிருந்து தன் கணவனின் நகருக்குப் புறப்பட்டபோது தோழியரான அநசூயையும், பிரியம்வதையும் வருந்திய நிலையுடன் இத்தோழியின் நிலைமையை ஒப்பிடலாம்.[644]

5.4. தாமே மணமகனைத் தேடி, விரும்பி மகளுக்குத் திருமணம் செய்தபோதும், அவள் மணமகன் இல்லம் செல்லுங்கால், பெற்றோர் அழுகின்றனர். இது உலகியல் நடைமுறை. இந்நிலை தோழிக்கும் பொருந்துகிறது. பெற்றோரும் மற்றோரும் அறிந்து மகிழ்ந்து தம் ஊரில் செய்ய வேண்டிய திருமணம், வேற்றூரில் யாருமின்றி தானும் காணாமல் நடக்கப் போகிறது. தலைவி தன்னையும் தலைவனின் அன்பையுமே நம்பிச் செல்கிறாள். தாயின் அரவணைப்பிலிருந்து நீங்கிச் செல்லும் செல்வ மகளிடத்து, என்றைக்கும் தலைவனின் அன்பு நிலைத்திருக்குமா? என ஐயுறுகிறது தோழியின் உள்ளம். இந்நிலையில், தாயுள்ளம் பெற்ற தோழி தாய் தந்தையரின் கடமையைச் செயலாற்ற முன் வருகிறாள். இதைத் தொல்காப்பியர் 'ஓம்படைக் கிளவி' என்பார்.[645] பூக்கேழ் ஊரனே, பழையன் வேல் வாய்த்ததைப் போன்ற நின் பிழையா நன்மொழி தேறி இவள் உன்னுடன் வருகிறாள். இளமை மாறினும் மேனியில் மணியெனத் தாழ்ந்து கிடக்கும் நன்னெடுங்கூந்தல் நரையொடு முடிக்கும் முதுமையையடைந்தாலும், நின் இன்பத்திற்குத் துணை நில்லாள் என நினைக்காமல், கை விடாமல்

பாதுகாப்பாயாக[646] என்றும் நாடனே, உலகத்தில் பெரு நன்மை செய்யின் போற்றுபவர் உளர். இவள் நினக்குச் செய்த நன்மை சிறிதெனினும் இவள் நின்னொடு புலக்குங்கால் அப்பிழைக்கும் தீர அருள்வாயாக. இவள் நின் அலது வேறு பற்றுக்கோடு இல்லாதவள்[647] எனத் தலைவி நிலையைச் சுட்டி, உலகியலை அறிவுறுத்தித் தலைவனிடத்துத் தலைவியை ஒப்படைக்கிறாள் உளவியல் வல்ல அன்புத் தோழி.

உடன்போக்குமேற்கொண்டு மணமுடித்து, தலைவனும் தலைவியும் மீண்டு வந்தபோது, தோழி தலைவியிடம் நீ செல்லும்சுரம் இனியவாகுக என்று நினைத்து வருந்திய என்னை விட இவ்வூரும் உன் பிரிவால் அயருற்றது என்று அறிவிக்கிறாள்.[648]

## 5.5. ஆய்வு முடிவுகள்

(அ) கலித்தொகையில் இத்துறைப் பாடல்கள் இல்லை.

(ஆ) குறிஞ்சி, நெய்தல், பாலை என்ற மூன்று திணைகளிலும் வரினும் பாலையில்தான் அதிகமாக வருகின்றது.

(இ) உடன்போக்கும் திருமணமே என்ற கருத்தை உறுதிப்படுத்தல்.

(ஈ) அறத்தொடு நின்ற பிறகும் பெற்றோர் உடன்படார் என்ற மு. இராகவையங்காரின் கருத்தினை மறுத்தல்.

(உ) தோழியும் உடன்போக்கில் சென்றுள்ளாள் என்ற கருத்தை நிறுவுதல்.

(ஊ) உடன்போக்கு நிலையில் தோழி முழு உரிமை பெற்றுள்ளாள்.

(எ) உடன்போக்கில் அன்னையின் பொறுப்பைத் தோழி ஏற்றல்.

# 6. வரைவு மலிதல்

6.0. களவு நாடகத்தின் இறுதிக்காட்சியாக இன்ப முடிவாய் இத்துறை அமைகிறது. இதனை இயக்கும் ஆற்றலாகத் தோழியும் துய்ப்போராகத் தலைவனும் தலைவியும் அமைவர். தலைவி தோழி ஆகிய இருவரும் மகிழும் ஒரே துறை இதுதான். அறிவுப்படைப்பான தோழி இங்கு உணர்வுப்படைப்பாக மாற்றம்

பெறுகிறாள். இத்துறையில் 44 பாடல்கள் அமைகின்றன. செவிலி கூற்றுக மூன்று பாடல்கள் இடம் பெறுகின்றன.[649] மற்றவை தோழி தலைவியிடம் கூறுவன. பாலை ஒழிந்த மற்ற திணைகளில் இத்துறைப் பாடல்கள் விரவி வருகின்றன.[650] இத்துறையில் 13 நிலைகளில் தோழி செயலாற்றுகிறாள்.

6.0.1. 22 புலவர்கள் இத்துறையில் பாடியுள்ளனர். இத்துறையில் அதிகமாகப் பாடிய பெருமை கபிலரையே சேரும்.[651] "வரையுடன் பட்டோர்க் கடாவல் வேண்டினும்" என்று இத்துறையைத் தொல்காப்பியர் குறிப்பர்.[652]

தான் மேற்கொண்ட முயற்சியால் பெற்ற வெற்றிப் பெருமிதம், தலைவியின் துன்பம் நீங்கும் என்ற உள்ளத்தின் மகிழ்ச்சி ஆகியவை இத்துறையில் தோழி கூற்றின் வாயிலாகக் காட்டப்படுகின்றன. தலைவன் வரைவு மலிந்தமை அறிந்த தோழி அச்செய்தியைத் தலைவியிடம் கூறப் புகுவதாக இத்துறை அமைவதால் தோழியின் மகிழ்ச்சியே பெரிதும் காட்டப்படுகிறது. தலைவியின் உணர்வு நிலை அதிகமாகக் காட்டப்படவில்லை. குறிஞ்சித்திணையில் மட்டுமே தன் மகிழ்ச்சியை விளக்கிக் கூறுகிறாள் தோழி.[653]

6.0.2. தலைவன் வரைவு முயற்சி மேற்கொண்டமையைக் காரண காரியங்களுடன் விளக்குதல், அம்முயற்சியால் தோழி உற்ற மகிழ்ச்சியைத் தலைவி-யுடன் பகிர்ந்து கொள்ளுதல், தலைவியின் துன்பம் தீரும் என மகிழ்ந்து கூறுதல், வரைவால் நேரும்இன்பச் சூழ்நிலையை விளக்குதல், வரைவுக்குக் காரணமாக நினைத்த தெய்வங்களை வணங்குதல் ஆகியவை தோழியின் செயலாக இத்துறையில் விளக்கப்படுகின்றன.

6.1. தலைவி மகிழும் நிலையில், தலைவன் வரைவு மேற்கொண்டமை பரவலாகக் கூறப்படுகிறது.[654] மறைந்து வந்த தலைவன் பலரறிய வருதல்,[655] இரவில் வந்த தலைவனின் குதிரைகள் பகலில் வருதல்,[656] தேர்மணிக்குரல் இசைக்க வருதல்[657] ஆகியவை தலைவன் வரைவு மேற்கொண்டமைக்கான காரணங்களாகின்றன.

களவுநிலையில் தலைவனின் வருகையைப் புலப்படுத்தும் இம்முறை நெய்தலில் மட்டுமே கையாளப்படுகிறது. காரண காரியங்களுடன் ஒன்றை நிறுவும் தோழியின் அறிவு இங்குப்புலனாகிறது. தலைவன் வரைவு மேற்கொண்டமையால் தோழி தன் மகிழ்ச்சியையும் தலைவிக்குக் கூறுகிறாள். நாடு வறங் கூர்ந்த காலத்து,

"பெரும்பெயல் பொழிந்த ஏம வைகறைப்
பல்லோ ருவந்த உவகை யெல்லாம்"

உள்ளத்தில் பெய்தது போன்று மகிழ்கிறாள் தோழி.[658] இவ்வுவமையின் வாயிலாக இதுவரை தான் உற்ற துன்பத்தையும், வரைவு மலிந்ததால் தான் பெற்ற மகிழ்வின் எல்லையையும் தோழி தலைவிக்குக் குறிப்பிடுகிறாள். தோழியின் மகிழ்ச்சியை அவளது கண்களும் காட்டுகின்றன.[659] தன் மகிழ்ச்சியைச் செவிலியிடமும் பகிர்ந்து கொள்ளுகிறாள் தோழி.[660] அறனில் அன்னை எனத் தாயை முன்பு பழித்த தோழி இப்போது அவள் பெரும்பெயல் உலகம் பெற வாழ்த்துகிறாள்.[661] தலைவனின் வரைவைக் கூறியதால் குற்றேவல் மகளும், "நெய்பனி குறும்பூழ் காயமாக ஆர்பதம்" பெற விரும்புகிறாள்.[662] தலைவருடன் வந்த குதிரைகளும் இளைப்பாற அவாவுகிறாள்.[663] உவகையோடு தலைவியையும் வாழ்த்துகிறாள்.[664]

6.2. தலைவன் வரைவு மேற்கொள்வதற்கு முன்பிருந்த தலைவியின் அவல நிலையையும், வரைவு மலிந்த பிறகு மாறும் இன்ப நிலையையும் விளக்க-மாகவே கூறுகிறாள் தோழி. தலைவன் வரையு முன்பு ஊரவரின் அலர் தூற்றலும்,[665] வரைவின் பின் அது அடங்குதலும் சுட்டப்படுகின்றன.[666] 'அலரெழுந்த ஊராரை உச்சி மிதிக்கலாம்' என்ற தோழியின் கூற்றிலிருந்து[667] அலரின் மீது தோழி கொண்ட சினம் புலப்படுத்தப்படுகிறது. தலைவன் இரவில் வரும் இடும்பை,[668] தலைவனின் பிரிவில் தலைவி உறும் நோய்,[669] பசலை[670] ஆகியவை இனி நீங்கும் என மகிழ்ந்து கூறுகிறாள் தோழி. தலைவனுடன் கொண்ட நட்பு எழிலுடையதாதல்,[671] கனவிலும் தலைவன் பிரியா நிலை வாய்த்தல்,[672]

நுதல் பொன்னிறம் சிவத்தல்[673] மென்முலை ஆகம் கவின் கொள்ளல்[674]
தாயரும் விரும்புதல்[675] எனத் தலைவனின் வரைவில் தலைவி பெறும் மகிழ்ச்சி-
யையும் தெரிவிக்கிறாள் தோழி.

6.3. தோழியின் முயற்சியால் தலைவன் வரைவு மேற்கொண்டமையும் விளக்கப்படுகிறது. வள்ளைப்பாட்டில் தோழி தலைவனைப் பழிக்கத் தலைவி புகழ்ந்ததைத் தலைவன் கேட்டல்,[676] தலைவியின் நிலை கண்டு தோழி அறத்தொடு நிற்றல்,[677] தலைவன் வரைவு கடாதல்[678] என இவ்வாறு தோழியின் முயற்சியால் வரைவு மேற்கொண்டமையும் அறிவித்தல். தான் மேற்கொண்ட முயற்சியையும் கூறி வரைவு புலப்படுத்துதல், குறிஞ்சிக்கலியில் சிறப்பாக அமைகிறது.[679] தலைவன் வரைவு மேற்கொண்டமைக்கான காரணமாகவும் அது காட்டப்படுகிறது. அறத்தொடு நிற்றலில் புனல்தரு புணர்ச்சி விளக்கப்படுகிறது. தலைவனுடன் காதல் கொண்டமையே கற்பாகக் கருதப்படுகிறது. மகளிரின் கற்பினால் சமுதாயத்தின் விளையும் பயன் கூறப்படுகிறது. அருமழை தருதல்,[680] வள்ளி கீழ் வீழ்தல், வரையிசை தேன் தொடுத்தல், கொல்லை குரல் வாங்கி ஈனுதல்[681] ஆடவர்களின் அம்பு இலக்கு தவறுதிருத்தல்[682] என இவ்வாறு கற்பின் பயன் கூறப்படுகிறது. ஆடவரின் உழைப்பே தலைவியின் கற்பில் அடங்கியிருத்தலும், அவளை விரும்பியவனுக்குத் திருமணம் செய்யவில்லையெனில் குடும்பமே குலையும் என்று தோழி கூறும் போக்கும் சமுதாய மாற்றத்தையே புலப்படுத்துகிறது. பெண்களின் கற்புடைமை வலியுறுத்தப்பட்ட காலக் கட்டத்தை இக்கூற்று நிலைவுப்படுத்துகிறது. போலும். வள்ளைப்பாட்டின் மூலம் வரைவுமேற்கொண்டமை குறிஞ்சித்திணைக்கே உரியது. வரைவு கடாதல் முறையில் தலைவியின் துன்பத்தை விரிவாகவே கூறுகிறாள் தோழி.

6.4. மற்ற திணைகளினின்றும் முல்லைத் திணையில் வரைவு மலியும் முறை வேறுபடுகிறது. பொதுவாக, முல்லைத் திணையில் கற்புப் பாடல்களே அமையும். சோழன் நல்லுருத்திரனால் பாடப்பட்ட முல்லைக்கலியில் மட்டும் தோழி கூற்றுகக்

களவுப் பாடல்களே வருகின்றன. கொல்லேற்றினை அடக்கித் தலைவன் மேற்கொள்ளும் முறை முல்லைக்கலியில் மட்டும் காணப்படும் சிறப்பு. தலைவன் வரைவு மேற்கொண்டமைக்கான காரணமோ தலைவியின் துன்பமோ இதில் காட்டப்படவில்லை. பெற்றோர் உடன்பட்டமை கூறி மகிழும் நிலை விளக்கப் படுகிறது. பொதுவன் கொலையேறு தழுவுதல்,[683] தலைவியின் கழையுள் தலைவனின் கண்ணி வந்து வீழ்ந்ததால் தெய்வம் காட்டியது எனத் தமர் மகிழ்தல்[684] தலைவனின் கண்ணியைத் தலைவி புனைந்தமையைக் காண்டல்[685] எனத் தமர் திருமணம் உடன்பட்டமைக்குரிய காரணங்களைச் சுட்டுதல் முல்லைக் கலியில் மட்டுமே காணப்படுகிறது.[686]

6.5. குறிஞ்சித் திணையில் காட்டியது போன்று தலைவன் தலைவியரின் களவு வாழ்க்கையைத் தாய் தந்தையர் அறிந்ததாக முல்லைக்கலியில் காட்டப் பெறவில்லை. தாய் மகளின் களவு அறியா நிலையில் இயற்கையாகவே தெய்வம் கூட்டியதாலும், சமுதாய வழக்கத்தையொட்டிப் பொதுவன் அஞ்சாமல் கோட்டிடைப் புகுந்தமையாலும் வரைவு நிகழ்வதாகக் கலித்தொகை காட்டுகிறது. தெய்வ நம்பிக்கையாலும், ஏறுகோடல் என்ற நிகழ்ச்சியாலும் மணமுறையில் ஏற்பட்ட இம்மாற்றம் பிற்காலச் சமய சமுதாய மாற்றத்தின் முன்னோட்டமாகவே இலங்குகிறது.

6.6. தலைவன் வரைவு மேற்கொண்டால் தெய்வம் வணங்கும் முறையும் தெரிய வருகிறது. மகிழ்ச்சிப் பெருக்கில் இறைவனை வணங்கிக் குரவை ஆடும் முறையும் தெளிவாக்கப்படுகிறது. வரைவு நேர்ந்ததால் முல்லைக் கலியில் திருமாலும்[687] குறிஞ்சிக்கலியில் வரையுறை தெய்வமும் உவப்பு வணங்கும் முறையும் கூறப்படுகிறது.[688]

6.7. பரிபாடலில் மருதத்திணையில் இத்துறை அமைகிறது. வரைவு மலிதல் பரிபாடலில் புனலாட்டு வாயிலாகப் பேசப் பெறுகின்றது. தோழி புனலணியின்பம் கூறல் பிற சங்க இலக்கியங்களில் அமையாத ஒன்று. முற்பிறவியில்

செய்த தவத்தினால் இப்பிறப்பில் வையையில் தைந்நீராடல் கிடைக்கப் பெற்றதாகக் கூறப்படுகிறது.[689] கன்னிப்பருவத்து வையையில் தைந்நீராடியதால்தான் வரைவு மலிவு நேர்வதாகக் கூறும் இவ்வமைப்பு முறை சமுதாய மாற்றத்தையே காட்டுகிறது. மார்கழி நோன்பினால் சிறந்த கணவன் வாய்க்கப் பெறுவர் என்ற பிற்கால சமய நம்பிக்கைக்கும் இது வழிகாட்டியாக அமைகிறது.

6.8. நெய்தல் திணையில் வரைவு மலிதலுக்குக் காரணம் காட்டப் பெறவில்லை. தலைவன் வரும் முறையைக் கூறி அதனால் வரைவு மேற்கொண்டுள்ளான் எனத் தோழி தன் முடிவைக் கூறுவதாக அமைகிறது. தலைவன் பலரும் காண வருதலும்,[690] தேர்மணி ஒலிக்க வருவதும்[691] வரைவு மேற்கொண்டமையை அறிவிக்கும் முன்னறிவிப்பாகின்றன. நெய்தலுக்கே உரிய அலர் நிலையில் அலர் அடங்க வரைந்தனன் எனத் தலைவி தோழியின் மகிழ்ச்சி கூறப்படுகிறது.[692]

### 6.9. பள்ளியிடத்து உய்த்தல்

தற்காலத்தில் முதிய மங்கல மகளிர் இச்சடங்கைச் செய்வது போன்று அக்காலத்தில் செய்ததாகச் சங்க இலக்கியம் காட்டவில்லை. ஆனால் தோழி இச்சடங்கை நிறைவேற்றுவதாகக் காட்டுவது சிந்தனைக்குரியது.

> "எக்கர் ஞாழல் இகந்துபடு பெருஞ்சினை
> வீயினி கமழும் துறைவனை
> நீயிது முயங்குமதி காதலோயே"[693]

என நெய்தல் திணையில் வதுவை முடிந்த பிறகு தலைமகளைப் பள்ளியறைக்கு உய்க்கும் தோழி கூறுகிறாள். இச்சடங்கைப் பற்றி ஐங்குறுநூறு தவிர வேறெந்த நூலிலும் காணப்படாமையும் குறிக்கத்தக்கது.

இவ்வாறு தலைவியின் காதலை உய்த்துணர்வதிலிருந்து, அவளைப் பள்ளியிடத்து உய்க்கும் வரை தோழியின் செயல்திறன் படிப்படியாக வளர்ச்சி பெற்றுள்ளது.

## 6.10. ஆய்வு முடிவுகள்

(அ) தோழி வரைவு மலிதல் துறையில் குறிஞ்சித்திணையில் மட்டும் தன் மகிழ்ச்சியை விளக்கமாகக் கூறுகிறாள்.

(ஆ) நெய்தல் திணையில் மட்டுமே வரைவு மேற்கொண்ட தலைவனின் நிகழ்ச்சிகள் விரிவாக இடம் பெறுகின்றன.

(இ) தலைவன் வரைவு மேற்கொண்டதற்கான காரணத்தைக் குறிஞ்சிக்கலி குறிப்பிடுகிறது.

(ஈ) தலைவனுடன் காதல் கொண்டதையே கற்பாகக் கருதிய நிலையும் அக்காலத்தில் இருந்திருக்கிறது. மகளிரின் கற்பினால் சமுதாயத்தில் விளையும் பயன்களும் சுட்டப்படுகின்றன.

(உ) கற்புப் பாடல்களே மிகுதியாயுள்ள முல்லைத்திணையில் சோழன் நல்லுருத்திரன் களவுப் பாடல்களையே பாடியிருக்கிறார். அவ்வப் பாடல்களும் வரைவு மலிதல் துறையிலேயே அமைந்திருக்கின்றன. ✓

(ஊ) தமர் திருமணத்திற்கு உடம்பட்டதற்குரிய காரணங்களை முல்லைக்கலியில் மட்டுமே காணப்படுகிறது.

(எ) கலித்தொகை மணமுறையில் தெய்வ நம்பிக்கை ஏறுகோடல் நிகழ்ச்சி ஆகியவற்றால் ஏற்பட்ட மாற்றத்தைக் காட்டுகிறது.

(ஏ) பரிபாடலில் மட்டும், மருதத் திணையில் தோழியின் புலவியின்பம் கூறப்படுகிறது. இது மார்கழி நோன்பிற்கு வழிகாட்டியாக அமைகிறது.

(ஐ) தோழி, தலைவியைப் பள்ளியிடத்தில் உய்ப்பதாக ஐங்குறுநூற்றில் மட்டும் காணப்படுகிறது ***

## இயல் எட்டு

## தோழியின் செயல்திறன் - கற்பு

"வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து
செலவயர்ந் தனையால் நீயே நன்றும்
நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்
முறுவல் காண்டலி னினிதோ
இறுவரை நாடநீ யிறந்துசெய் பொருளே" - ஐங்.309

- ஓதலாந்தையார் (செலவழுங்குவித்தல்)

"நசை பெரி துடையர் நல்கலு நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்
அன்பின தோழியவர் சென்ற வாறே" - குறுந்.37

- பாலைபாடிய பெருங்கடுங்கோ (ஆற்றுவித்தல்)

"வேம்பின் பைங்காயென் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர் இனியே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்ய உவர்க்கும் என்றனிர்
ஐய அற்றால் அன்பின் பாலே" -(குறுந்.196

- மிளைக்கந்தனார் (வாயில் மறுத்தல்)

## தோழியின் செயல் திறன் -- கற்பு

0.0. களவில் அமைந்த தோழியின் தொண்டு கற்பிலும் தொடர்கிறது. பொருள் ஈட்டல், பகைதணித்தல் முதலான காரணங்களால் தலைவன் பிரிய நினைக்கும்போது, அவனைப் பிரிந்து வாழ இயலாத் தலைவியின் நிலை எண்ணிச் செலவழுங்குவிக்க முனைகிறாள் தோழி. தவிர்க்க இயலாத நிலையில் அப்பிரிவு நிகழும்போது வருந்தும் தலைவியை ஆற்றியும் அமைகிறாள். அவன் வினைமுற்றி வரும்போது தலைவியோடு சேர்ந்து மகிழ்கிறாள். தலைவன் பரத்தனானபோது அவன் புறத்தொழுக்கம் சுட்டிக் கடிகின்றாள். அவன் உள்ளம் திருந்தி வரும்போது, தலைவியிடம் அவனுக்காக வேண்டியும், வாயில் நேர்ந்தும் உதவுகின்றாள் தோழி.

### 0.1. குடிநகரில் தோழி

தலைவியின் கற்பு வாழ்வில், அவள் மாமன் மாமியுடன் கூட்டுக் குடும்பத்தில் வாழ்ந்ததாகச் சான்றில்லை. தலைவன் தாய் தந்தையர் பற்றிய குறிப்பும் கிடைக்கவில்லை. தலைவியும் தலைவனும் இல்லறம் நிகழ்த்துங்-கால் அவனைத் தோழி காணச் செல்கின்றாள். அவருடன் தங்கி விடுகிறாள். பின் தலைவி மகப்பேறு உற்ற காலத்து, செவிலியாக மாறுகிறாள். தலைவியின் இல்லறத்தில் நிகழும் போராட்டங்களுக்கேற்பத் தோழியும் உடனிருந்து தலைவியின் துன்பத்தில் பங்கேற்று ஏவல் புரிகிறாள்.

0.2. தலைவியின் மனை 'கடிநகர்'[1] 'மனைமனை'[2] எனக் கூறப்படுகிறது. தலைவியின் மனைக்குச் சென்ற தோழி, தலைவன் தலைவியிடம் கொண்ட அன்பு நோக்கி நெகிழ்கிறாள். 'ஆம்பல் பறிக்கச் சென்றவர் நீர் வேட்கையுறலது போன்று இவளுடன் உறைந்தும் நடுங்குகின்றீர்; தொழுதகான் பிறையைப் போன்று நாங்கள்அரியராயிருந்தபோது எவ்வாறிருந்தீரோ'[3] எனத் தலைவன் அன்பு கண்டு மனநிறைவோடு கூறுகிறாள். களவுக்காலத்துத் தலைவியை நன்காற்றுவித்து உதவி புரிந்த தோழியைக் கண்ட தலைவன் நன்றியோடு புகழ்கிறான். புகழெனின்

நானும் தோழி, 'நீ சிறிது பிரியினும் கன்பசக்கும் இவளை நீ காத்ததன்றி எங்கள் செயல் ஒன்றும் இல்லை'[4] என்றும் 'தலைவியின் நற்றோளை மறவா நீயே பெரியை'[5] என்றும் கூறுகிறாள். இங்குத் தோழியின் பண்புடைமையும், தலைவியை மணந்ததால் தலைவனிடம் கொண்ட நன்றியுணர்வும் புலனாகிறது. விசும்பு இன்னாத் தீயையும் இனிய காற்றையும் பயப்பது போன்று, தலைவனின் மார்பு தலைவிக்கு நோயும் இன்பமும்[6] ஆகியவற்றையும் குறிக்கிறாள்.

0.3. தலைவன் தான் வரையாத நாளில் என்செய்தீர் என்று கேட்கிறான். அப்போது தோழி, வேந்தனின் பகை அவிய யாண்டு பல நந்த, அறம் நவி சிறக்க, அரசு முறை செய்ய, களவு நீங்க, நன்மை பெருக, தீமை அழிய, மாரி வாய்க்க, வளம் சிறக்க எனத் தலைவி பொதுநல உணர்வோடு வாழ்த்திய நிலையைக் குறிக்கிறாள். 'வாழி யாதன் வாழி யவினி'[7] என வீட்டு மகளிர் நாட்டு மன்னனைப் போற்றிய நிலையும் புலப்படுத்தப்படுகிறது. தன்துறையூரன் வரைக; தலைவன் தன்னூருக்குக் கொண்டு செல்க; தலைவன் சூள் பொய்யற்க; தலைவனின் கேண்மை அம்பலாகற்க; என்று தான் விரும்பியதையும்[8] தலைவனுக்குக் கூறுகிறாள். தலைவி புதல்வன் பெற்றபோது, வந்த செவிலிக்கும் தலைவனைக் காட்டி மகிழ்கிறாள்.[9]

## 1. செலவுமுங்குவித்தல்

1.0. செலவழுங்குவித்தல் என்னும் இத்துறையில் மருதம் ஒழிந்த நான்கு திணைகளிலும் 57 பாடல்கள் காணப்படுகின்றன. பாலைத் திணையில்தான் அதிகப் பாடல்கள் உள்ளன. குறிஞ்சித் திணையில் அமைந்த பாடல்கள் அனைத்தும் களவுப் பாடல்களே.[10] மற்றத் திணைகளில் கற்புப் பாடல்களேகாணப்படுகின்றன. இத்துறையில் தோழியின் கூற்றுகள் தலைவனிடம் பேசுவதாகவே அமைகின்றன. கலித்தொகையில் மட்டும், தான் கூறியதால் தலைவன் செலவொழிந்தமையை மகிழ்ச்சியோடு தலைவிக்குக் கூறும் அமைப்பு காணப்படுகிறது.[11]

1.0.1. தோழி கூற்றாக 25 புலவர்கள் இத்துறையில் பாடியுள்ளனர். பாலை பாடிய பெருங்கடுங்கோதான் இத்துறையில் அதிகமாகப் பாடியவர்.[12]

இத்துறையில் தோழியின் செயல் 20 நிலைகளில் காணப்படுகிறது.[13]

1.0.2. இத்துறையில் தோழியின் குரல் தலைவனை வேண்டுதல் நிலையிலும் பணிவாகவும் அமைகிறது.[14] செலவழுங்குவிக்கும் நிலையில் தலைவனை வேண்டும் நிலை தோழியின் உளவியல் அறிவையே காட்டுகிறது. இத்துறைப் பாடல்களில் கையறுநிலைப் பாங்கு காணப்படுவதாகக் கூறுவர் இராம பெரியகருப்பன் அவர்கள்.[15] பரத்தையிற் பிரிவு ஒழிந்த பொருள், வேந்து, வினை போன்ற பிரிவுகளில் தலைவனைச்செலவழுங்குவித்தலையே இப்பகுதியில் ஆயப்படுகிறது.

1.0.3. நெடுந்தொலைவு சென்றுவந்து பொருளீட்டல் வேண்டும் என விரும்புகிறான் தலைவன். பிரிவுக்குரிய அச்சொல் மகளிர்க்கு அருவில் சொல்லாகிறது. பொருள் இன்றியமையாதது என்பது தோழி தலைவி ஆகிய இருவருக்கும் தெரிந்தது தான். தலைவனது ஆண்மைத்தீயைத் தலைவியின் காதல் நீரால் தணிக்க முயன்றும் இயலவில்லையென்றால், அப்பிரிவு அவனைச் சார்ந்தே வாழும் தலைவியின் மென்மையான நெஞ்சினைச் சிதைத்து விடுதல் கூடாது என்று கவலை கொள்கிறாள் தோழி. தலைவி பிரிவின் வெம்மையைத் தாங்கும் நிலை பெறுமளவும் தோழி தலைவனைச் செலவழுங்குவிக்க விரும்புகிறாள். இதைத் தொல்காப்பியம்,

> "பிரியுங் காலத் தெதிர்நின்று சாற்றிய
> மரபுடை எதிரும்"[16]

என இலக்கணம் வகுக்கிறது. தலைவி ஆற்றியிருப்பதாகக் கூறிச் செலவுடன்படும் பாடல்கள் மிகமிகக் குறைவே.[17] தலைவனை வாழ்த்தியும், விடை கொடுத்தும் தோழி அனுப்பும் முறையில் ஒரு பாடலே கிடைக்கிறது.[18]

1.0.4. மகளிரின் உள்ளத்தில் தலைவன் செல்லும் வழியின் ஏதமே அதிகமாகக் கவலையைத் தருகிறது. பாலைப் பாடல்களில் தலைவன் வேனிற் காலத்தில் தேரின்றி நடந்து செல்வதாகவே காட்டப்படுகிறான். (தலைவன்

தேரில் செல்ல இயலா வறுமையுற்ற பிறகே தலைவியைப் பிரிந்து செல்வது அதற்குக் காரணமாகலாம்) முல்லைத்திணையில் தலைவன் பொருளீட்டிச் செல்வச் சிறப்போடு வருதலைக் குறிக்கத் தேரில் வருதல் காட்டப்படுகிறது. பிரிவுத் துயரை நன்கு புலப்படுத்துவதற்காக, கதிர்காய்தல், அழல் மேய்தல், நீர் வற்றியிருத்தல், அனல்காற்று வீசுதல் என்று தலைவன் செல்லும் பாலை வழியின் வெம்மையையும், நெறி மயக்குற்ற தன்மை, வழியின் கடுமை, விலங்குகளின் போராட்டம், மறவர் கொடுமை, வழிக்கொலையை எதிர்நோக்கி அதனின்று பயன் பெறும் விலங்குகளின் போக்கு முதலிய கூறுகளையும் சுட்டி, பாலை நிலத்துக் கொடுமையை விளக்கிப் பின்னர்த் தலைவியின் துயரைக்கூறிச் செலவழுங்குவிக்கும் போக்கு காணப்படுகிறது. இத்துறையில் தோழியின் கூற்று தலைவனை வேண்டும் முறையிலும் தலைவனின் உள்ளத்தில் இரக்க உணர்வைத் தூண்டும் நிலையிலுமே அமைகிறது.[19] தலைவனின் பிரிவில் தலைவி உறும் புற நலனழிவு கூறல், உயிர்வாழாப் பண்பு கூறல், களவுக்கால நிகழ்ச்சிகளைக் கூறல், பொருள், இளமை, யாக்கை நிலையாமையைக் கூறல், உடன்போக்கு தூண்டல், கடிதல், அறிவுரை கூறல் என்னும் முறையில் தலைவனைச் செலவழுங்கு-விக்கிறாள் தோழி.

## 1.1. தலைவியின் துன்பம்

தலைவனின் மேலுள்ள அன்பால் அவனுடைய பிரிவில் தலைவியின் நலனழிவு பெரிதும் கூறப்படுகிறது. 'அழிவொடு கலங்கிய எவ்வத்தள்' என்று தலைவி கூறப் படுகிறாள்.[20] துன்பத்திற்கு அடிப்படையான அன்புநிலையும் விளக்கப்படுகிறது.[21] தலைவனின் பிரிவில் தலைவியின் புறநலன் உறும் புன்மை விரிவாகவே கூறப்படுகிறது. தலைவனின் இரக்கவுணர்வைத் தூண்டத் தலைவியின் அழுகையே பெரிதும் காட்டப் படுகிறது. தலைவன் விரும்பிய கண்களின் அழகை விளக்கிக் கூறிப் பின் அவை அழும் நிலையைக் கூறுதல் செலவழுங்குவிக்கும் உத்தியாக மேற்கொள்ளப்படுகிறது.[22]

1.1.1. கண்களுக்கு அடுத்த நிலையில் சிறுநுதல் பசத்தல்,[23] பெருந்தோள் சாய்தல்,[24] வளைநெகிழ்தல்,[25] அல்குல் அவ்வரி வாடல்,[26] இறை நெகிழ்தல்[27] முதலிய உறுப்பு நலன் அழிதல் விளக்கப்படுகின்றன.

1.1.2. தலைவன் பிரிந்தால் தலைவியின் கவின் பாழ்படும் எனப் பின்வரும் அவலநிலை மட்டும் கூறிச் செலவழுங்குவிக்கப்படுகிறது. தலைவன் நீங்கினால் தலைவியின் அழகு வாடும்,[28] அழகு பிறழ்தரும்,[29] தொல்லெழில் சிதையும்,[30] அணிவாடும்,[31] வனப்பு எஞ்சும்,[32] அவ்வரி வாடும்,[33] பைதல் கொள்ளும்[34] என அவலநிலை மட்டும் கூறப்படுகிறது.

1.1.3. தலைவி தலைவனோடு கூடிக் கவின்பெற்ற அழகையும் பிரிந்தால் பொலிவிழக்கும் தோற்றத்தையும் முரண் அமைப்பில் பொருத்திக் காட்டுதல். உடனிருக்குங்கால் போற்றிப் பிரியுங்கால் தூற்றும் இயல்புடையார் போன்ற கண்கள், தலைவன் உடனிருக்குங்கால் மலர்போன்ற அழகுடையதாகி, பிரியுங்கால் கலுழ்கின்றன[35] என எடுத்துக்காட்டப்படுகிறது. இவ்வாறே வளை, நுதல், நலம், முகம் ஆகியவற்றின் தன்மையும் முரண்நிலையில் காட்டப் படுகின்றன.[36]

1.1.4. தலைவன் பிரிவைப் பற்றிக் கேட்ட அளவிலேயே வளை ஓட, கண் அழ, நுதல் நலனிழப்பவள் அவன் பிரிந்தால் என்னாவாளோ எனத் தலைவி நிலை கூறித் தலைவனின் மனத்தில் இரக்கவுணர்வு தூண்டப்படுகிறது.[37]

1.1.5. தலைவன் பிரியாதிருக்கும்போதே இந்நிலை உறுபவள் பிரியுங்கால் என்னாவாளோ என்ற வினாவிலேயே தோழி விடையையும் அமைத்துத் தரச் செலவழுங்குவித்தலும் அமைகிறது. தலைவன் முயங்கி அருகிருக்கவும் பனிப்பவள்[38] என இவ்வாறு தலைவியின் பிரிவாற்றாமையையும் அவளது அன்புடைமையையும் கூறிச் செலவழுங்குவித்தலும் வற்புறுத்தப்படுகிறது.[39]

1.1.6. தலைவன் நிலையும் தலைவி நிலையும் சில சமயம் முரண் நிலையிலும் காட்டப்படுகிறது. சுரத்துவழி செல்லல் தலைவனுக்கு மகிழ்ச்சியாக

இருக்கிறது. ஆனால் அது பகைவன் படையெடுத்து வர, அஞ்சாதே என்று கூறிய நண்பன் கைவிட, உடைந்த மதிலேயுடைய ஒரெயில் மன்னன் போன்று தலைவிக்குத் துயரமாகிறது.[40] தலைவன் வில்லின் நாணைத் தடவும்போதும், அம்பினைக் கையால் ஆராயும்போதும்,சக்கரத்தினைத் தூசிபோகத் துடைக்கும் போதும் அவனது பிரிவு நினைந்த தலைவியின் அவல நிலையைத் தலைவனுக்கு உணர்த்துகிறாள் தோழி.[41] இவ்வாறு தலைவன் புறப்படுவதற்கு முன்னமேயே தலைவி வருந்தும் நிலை காட்டி அவனைத் தடுக்க நினைக்கிறாள் தோழி.

1.1.7. பருவமும், சுற்றப்புறச் சூழலும் தலைவியை வருத்தும் நிலை கூறிச் செலவழுங்குவிக்கிறாள் தோழி. கதிர்ப்பருவம்,[42] கார்ப்பருவம்,[43] என்னும் பெரும்பொழுதுகளும், மாலை என்னும் சிறுபொழுதும்,[44] வாடை,[45] வாடை[46] என்னும் காற்றுகளும் தலைவியை வருத்துகின்றன. வண்ணப்புறவின் செங்கால் சேவல் தன் துணையை அழைக்கும் குரலும் தலைவியை வருத்துகிறது.[47]

1.1.8. எதைக் கூறினால் தலைவனின் உள்ளம் நெகிழும் என்பதை அறிந்த தோழி தலைவனின் பிரிவில் தலைவி இறந்துபடுவாள் என்றும் முடிவாகக் கூறிச் செலவழுங்குவிக்கிறாள். இதில் வெவ்வேறு உத்திகள் கையாளப்படுகின்றன. 'நீர்நீத்த மலர்போல நீநீப்பத் தலைவி வாழ்வாளோ' எனத் தலைவனிடமே வினவித் தலைவி உயிர் வாழாமை குறிப்பாக உணர்த்தப்படுகிறது.[48] நீ பிரிந்தால் "நின்காதலம் புதல்வன் அழும் இனி முலைக்கே" என்பது போன்று தலைவியின் இறப்பு குறிப்பாகவும் கூறப்படுகிறது.[49] துணை பிரியின் வாழா அன்றில் பறவைபோலத் தலைவியும் உயிர் வாழாள் என நேராகவே தலைவி இறப்பாள் என உணர்த்தப்படுகிறது.[50] தலைவனைச்சார்ந்து வாழும் தலைவியின் நிலையை அவனது பிரிவுக்காலத் துயரினை உணர்த்தும் சான்றுகப் பயன்படுத்திக் கொள்கிறாள் தோழி.

1.2. களவுக்கால நிகழ்ச்சி

களவுக்கால நிகழ்ச்சிகளை நினைவூட்டித் தோழி செலவயரும் தலைவனைத் தடுக்க முயலுதல் இன்னொரு உத்தியாகும். தலைவன் முன்பு கூறிய அன்புச் சொற்கள், களவுக்கால உணர்வுகள், உடன்போக்கு நினைவுகள் என்னும் முறையில் இவ்வுத்தி அமைகிறது. தலைவன் முன்பு கூறிய அன்புக்கிளவி-களையும், பிரிவேன் என்று பின்பு கூறும் அருளில் சொற்களையும் முரண்படுத்திக் காட்டப்படுகிறது.[51] தலைவன் முன்பு கூடிய நிலையில் நலம் பாராட்டிய தன்மையுடன் பிரியும் நிலையில் நலம் பாராட்டும் பாங்கு உறழ்ந்து காட்டப் படுகிறது.[52] முன்பு பிரியேன் என்று அவன் செய்த சூளும் நினைவுறுத்தப்படுகிறது.[53]

1.3. களவுக்காலத்தில் தலைவியிடம் பெற்ற இன்பத்தை நினைவூட்டிப் பிரியுங்கால் அவன் அன்பிலனாகும் நிலையைச் சுட்டுதல் தோழியின் மற்றொரு உத்தியாகும்.[54] தலைவன் எழுதிய தொய்யில்,[55] அவளது முயக்கம்,[56] பல், கூந்தல், முலை[57] ஆகியவற்றை அவன் பாராட்டிய செயல் ஆகியவற்றைக் கூறி அவற்றைக் கற்பு வாழ்வில் முற்றும் துய்க்காத நிலையும் கடமையுணர்வும் உணர்த்தப்படுகிறது.

1.4. உடன்போக்கில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறி அவற்றின் மூலம் தலைவியின் துயரைக் குறிப்பாக உணர்த்துதல் இன்னொரு நிலை. காட்டில் களிற்றின் துன்பம் நினைந்து பிடி புலம்பியதைக் கூறித் தலைவியின் வருந்தும் நிலை சுட்டப்படுகிறது.[58]

1.5. நிலையாமை உணர்த்துதல்

மன்னுலகில் மன்னுதல் குறித்துப் புகழ் வாழ்வு நடத்துதற்கு இன்றி-யமையாத பொருளை நாடிச் செல்லும் தலைவனை வாழ்வின் இன்றியமையாமை கூறிச் செலவழுங்குவிக்க முயலும் திறன் அடுத்த உத்தியாகிறது. சங்க இலக்கியம் நிலையாமைத் தத்துவத்தைக் கூறிச் செலவழுங்குவிக்கும் உத்தியாக

அதனைப் பயன்படுத்தும் பாங்கு பாலைக்கலியிலேயே மிகுதி. ஏனைய சங்க இலக்கியங்களில் நற்றிணைப் பாடல் ஒன்றில் மட்டும் இவ்வுத்தி அமைகின்றது.[59]

1.5.1. தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வதற்குப் பொருளே அடிப்படையாதலை உணர்ந்த தோழி பொருளின் சிறப்பற்ற நிலையை உணர்த்த முயல்கின்றாள். மற்றுப் பொருள் பிணி,[60] நிலையரும் பொருட்பிணி[61] என்று பொருளின் நிலையற்ற தன்மை கூறப்படுகிறது. பிணி என்று அதன் தன்மை கூறுமுகத்தான் மகளிரின் வெறுப்பும் காட்டப்படுகிறது. அதைப் போக்க வேண்டிய தன்மையும் உணர்த்தப்படுகிறது. பொருள் தேடுதல் அருமையானது.[62] நாடு கடந்து சென்றும் அது உடனே கைவரப் பெறுவதன்று. மிகுந்த முயற்சியின் விளைவால் பெறப்படுவது.[63] கிழவோர் இன்னோர் என்னாது பழவினைக்கேற்ப அது மாறி அமைவது.[64] எந்த நேரத்திலும் விட்டுச் செல்லும் தகையது.[65] இசைக்கும்போது நரம்பு அறும் யாழினும் நிலையில்லாதது சேருங்கால் சேர்ந்து பிரியுங்கால் பிரியும் திருமகளை விட நிலையற்றது. நல்லோரையும் அழிக்குங்காலத்து, கண்ணோடாது அழிக்கும் அரசன் போன்றது.[66] இம்மையும் மறுமையும் பகையாகவும் மாறும் தன்மையது[67] எனப் பொருளின் நிலையாமையும், புன்மையும் அடுக்கிக் கூறப்படுகிறது. இப்புன்மையான பொருளிற்காக, சிறந்த தலைவியை நீங்குதல் தகாது என்னும் முறையில் செலவழுங்குவித்தல் அமைகிறது.

1.5.2. வண்டுகள் நுகரும் புதுமலர்கள் நிறைந்த நீர்நிலை, நாள் தோறும் குறைதலைப் போன்ற வாழ்நாள் நிலையாமையையும், எய்கணை நிழலைப் போன்ற இளமை நிலையாமையையும் சுட்டி[68] அவற்றை உடனே துய்த்தல் வேண்டும் என்று கூறும்போக்கில் செலவைநீக்குதல் அமைகிறது.

1.5.3. மலர்ந்த மலர் நாள்தோறும் அழிதல் போன்றும், நிறைமதி நாள்தோறும் தேய்தல் போன்றும், யாக்கை நிலையாமையைக் கூறித் தோழி செலவழுங்குவிக்கிறாள்.[69]

1.5.4. பொருள் நிலையாமை, இளமை நிலையாமை, வாழ்நாள் நிலையாமை இவற்றொடு முரண்படுத்திக் காட்டுதல் தோழி கையாளும் மற்றொரு உத்தியாகும். மன்னுப்பொருள் எக்காலத்திலும் சென்று ஈட்டுதற்குரியது. ஆனால் இளமையும் வாழ்நாளுமோ காலத்தால் கட்டுப்பட்டவை. நாடு கடந்து சென்று ஈட்டும் பொருள், கற்கும் கல்வி தலைவியின் நலன்[70] உயிர்,[71] இளமை,[72] காம இன்பம்,[73] குழந்தையின்பம்[74] ஆகியவற்றைத் தருமோ என முரணமைப்பில் நிலையாமைத் தத்துவத்தை வலியுறுத்துகிறாள் தோழி.

1.5.5. நிலையாமை பொருளைச் சுட்டிய தோழி நிலைத்த சிறந்த பொருள் இன்னது என்றும் கூறுகிறாள். தலைவியுடன் கூடி வாழும் வாழ்க்கையே - சிறப்பாக ஆற்றும் இல்வாழ்க்கையே - தலைவியின் தோள் பிரியாமையே - பொருளினும் சிறப்புடையது என நிலைநாட்டுகிறாள்.

1.6. தலைவனின் அன்புடைமை கூறிச் செலவு தடுத்தல்,[75] நேராகவே தலைவனைத் தடுத்தல்,[76] தங்களையும் அழைத்துச் செல்ல வேண்டுதல்,[77] செலவயரும் தலைவனிடம் தாய்மனை ஒழிய நின்னுடன் வந்ததால் இவளுடைய வளைகள் கழன்றன எனக் கடிதல்,[78]

"ஒரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை
ஒன்றன்கூ றுடை யுடுப்பவரே யாயினும்
ஒன்றினர் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற இளமை தரற்கு"

என்று அறிவுரை கூறுதல்[79] என இன்னோரன்ன உத்திகளைக் கையாண்டும் செலவழுங்குவிக்கிறாள் தோழி.

1.7. இவ்வாறு செலவழுங்குவிக்க முயன்றும் இயலாத நிலையில், தலைவன் செல்லும் வழியிலுள்ள வாடிய சுனைமலரும், வாடிய கொடியும், வாடிய தளிரும் தலைவனின் அளி நீங்கிய தலைவியை நினைவூட்டித் தலைவனின் செலவைத் தடுக்கும் என்று தோழி கூறும் அமைப்பு முறை கலித்தொகையில்

மட்டுமே காணப்படுகிறது.[80] தலைவன் செல்லும்போது 'நாளும் கோள்மீனும் தகைக்கட்டும்' என்றும் தோழி கூறிச் செலவழுங்குவிக்க முனைகிறாள்.[81] கலித்தொகையில் மட்டுமே காணப்படும் இவ்வமைப்பு, போகும்போது நாள், கோள் முதலிய சகுனங்களைப்பார்க்கும் சமுதாயத்தின் காலக் கட்டத்தைக் காட்டுவதாக உள்ளது.

1.7.1. தோழியின் சொல்வன்மையால் தலைவன் செலவழுங்குவதாகவே பாடல்கள் காணப்படுகின்றன. தான் கூறியதால் தலைவன் செலவழுங்கியதாகத் தலைவிக்குக் கூறி மகிழ்கிறாள் தோழி. தோழி தலைவனைச் செலவழுங்குவிக்கக் கூறிய சொற்கள், நல்வினையால் திருந்திய யாக்கையில் மருத்துவன் ஊகர்வித்த மருந்திற்கும்,[82] காழ்வரை நில்லாக் கடுங்களிற்றை அடக்கிய யாழிசைக்கும் ஒப்பிடப்படுகின்றன. இவ்வமைப்பும் கலித்தொகையில் மட்டுமே காணப்படுகிறது. இத்துறையில் புதுமைகளைச் செய்த பெருமை பாலை பாடிய பெருங்கடுங்கோவையே சாருகிறது.

1.7.2. ஆற்றுவித்தலுக்கு வித்து இத்துறையில் இடப்படுகிறது. தோழி தலைவனின் செலவைத் தவிர்க்க முயலும்போதே தலைவியிடமும் அவனது பிரிவைக்குறிப்பாக உணர்த்தி அவள் மனதையும் பக்குவமடையச் செய்கிறாள்.[83]

1.7.3. கலித்தொகைத் தோழி இளமை, செல்வ நிலையாமை ஆகியவற்றைத் தெளிவுற விளக்குவதில் நற்றிணைத் தோழியை விஞ்சி விட்டாள். அவள் செலவழுங்குதலை மட்டுமன்றித் தலைவன் பிரிந்து செல்லாமையையே குறித்து நிற்கிறாள் எனத் தோன்றுகிறது.

1.7.4. குறிஞ்சித் திணையில், வரைவதற்குப் பொருள் வேண்டும் என்றாலும் தலைவியின் துன்பம் அதிகமாயிருப்பதால், தலைவன் வரைவிடை வைத்துப் பிரிய விரும்பும்போதும்,[84] ஒருவழித் தணந்து வரைய நினைக்கும் போதும் தலைவனின் செலவைத் தோழி மறுக்கிறாள்.[85] இத்திணையில் வரைவதற்கு முன் தலைவன் பிரியவிருப்பதால் தலைவன் தலைவியை மறந்து

சென்ற இடத்திலேயே இருந்து விடுவானோ என்ற அச்சம் தோழியை அலைக்கழிக்கிறது.[86] அதனால் தலைவியின் பிரிவுத்துயரும்,[87] நட்புச் சிறப்பும்[88] இத்திணையில் வற்புறுத்தப்படுகிறது. நெய்தல் திணையிலும் தலைவன் வரைவிடை வைத்துப் பிரிய நினைக்கும்போது தலைவியை மறப்பானோ என்ற அச்சம் தோழியின் நெஞ்சினை அலைப்பது தெளிவாகிறது.[89] துன்பத்தை மிகுவிக்கும் நெய்தலுக்குரிய ஏற்பாடு கூறி, உரிப்பொருளாகிய தலைவியின் இரங்கலைக் கூறிச் செலவழுங்குவித்தல் இயல்பாகிறது.[90] தாய் அலைக்கும்போதும் அன்னாய் என்று அழும் குழவிபோலத் தலைவன் இன்னாசெயினும் அவனையே சார்ந்துள்ள தலைவியின் தன்மை கூறல் சிறக்கிறது.[91]

1.7.5. பொதுவாக முல்லைத்திணையில் பிரிந்த தலைவன் கார் காலத்தில் மீள்வான். தலைவன் துணைகளை நெகிழ்ச்சி செய்யும் கார்ப்பருவத்தே பிரிய நினைக்கும்போதுதான் தோழி தலைவியின் அழுகையையும், சாக்காட்டையும் குறிப்பாக உணர்த்திச் செலவு மறுக்கிறாள்.[92] இத்திணையில் பெருமிதத்துடன் தோழி செலவுடன்படும் பாடலும் அமைகிறது.[93]

1.7.6. பாலைத்திணையில் தலைவன் அருஞ்சுரத்து வழி செல்வதால் அவன் சென்ற வழி தலைவி தோழியைக் கவலைக்குள்ளாக்குகிறது. அதனால் தோழி அவன் செல்லவிருக்கும் அருஞ்சுரத்துக் காட்சிகளையே செலவழுங்குவிக்கும் கருவியாக்குகிறாள். அருஞ்சுரத்து வழி செல்வதால் தலைவியின் வருத்தமும் கூறப்படுகிறது.[94] தலைவனின் பிரிவால் தலைவி உறும் அக, புற நலனழிவும் கூறித் தலைவனின் உள்ளத்தை மாற்ற முயல்கிறாள் தோழி.[95] தலைவி வாழாள் என முடிவாகவும் கூறுகிறாள்.[96] பொருளின் புன்மை காட்டி இந்தப் பொருளுக்காகவா பிரிகிறாய் என வினவுதலும்,[97] கடுஞ்சுரத்தை உத்தியாகக் கூறுதலும் பாலைத் திணைக்கு மட்டுமே உரிய உத்திகள்.

1.8. ஆய்வு முடிவுகள்

(அ) பாலைத்திணையில்தான் அதிகமாகச் செலவழுங்குவித்தல் பாடல்கள் உள்ளன.

(ஆ) குறிஞ்சித் திணையில் களவிலும் மற்ற திணைகளில் கற்பிலும் இத்துறை வருகின்றது.

(இ) பாலைபாடிய பெருங்கடுங்கோ இத்துறையில் அதிகமாகப் பாடியிருக்கிறார். புதுமைகள் பல புகுத்தியுள்ளார்.

(ஈ) பாலைப்பாடல்களில் தலைவன் தேரின்றி, வறுமையுற்று நடந்து செல்வதாகவே காட்டப்படுகிறான்.

(உ) பாலைத்திணையில் மகளிரின் உள்ளத்தில் தலைவன் செல்லும் வழியின் ஏதமே மிகுதியான கவலை தருகிறது.

(ஊ) நிலையாமைத் தன்மையைச் சுட்டிச் செலவழுங்குவித்தல் முறையும் தலைவன் செல்லும் வழியிலுள்ள வாடியமலர் முதலிய இயற்கைக் காட்சிகள் செலவழுங்குவிக்கும் என்று கூறும் போக்கும் பாலைக்கலியில் மட்டுமே உள்ளன.

(எ) நாளும் தோளும் செலவைத் தடுக்க விழையும் தோழியின் கூற்றும் பாலைக்கலியில் மட்டுமே காணப்படுகிறது. இக்கருத்து கலித்தொகை காலத்தில் மாறிவிட்ட சமுதாய காலக் கட்டத்தையே காட்டுகிறது.

## 2. ஆற்றுவித்தல்

2.0. பொருள்வயிற் பிரிவு என்னும் இத்துறை சங்கப் புலவர்களின் நெஞ்சை அள்ளிய துறைகளுள் ஒன்று. இன்பமும் கடமையும் போராடும் இடமாக இது அமைந்திருக்கிறது. பிரிவு என்னும் துறை பாலைக்கு உரியது. மற்ற திணைகளில் காதலின் வெவ்வேறு நிலைகள் காணப்படுகின்றன. ஆனால் இப்பாலைத் திணையில் காதலோடு, வாழ்க்கையின் முன்னேற்றத்திற்குரிய முயற்சியும் காணப்படுகிறது.

2.0.1. பிரிவைத் தலைவனுக்கு உரித்தாக்கும்போது வாட்டும் கோடைக் காலம் பின்னணியாகக் காட்டப்படுகிறது. அதைத் தலைவிக்கு உரித்தாக்கும்போது நடுங்கும் கதிர்காலமோ, கொட்டும் மழைக்காலமோ, இன்ப இளவேனிலோ பின்னணியாகக் கூறப்படுகிறது.[98]

2.0.2. பிரிந்து சென்ற தலைவன் வினைமுடித்த பிறகே தலைவியைப் பற்றி நினைப்பான். அவன் குறித்த காலம் வரும்வரை தலைவி பொறுமையாகக் காத்திருப்பாள். ஆனால் அவளுடைய இந்தப் பொறுமையை எந்தப் பாடலும் எடுத்தியம்பவில்லை.[99]

2.0.3. தலைவியும் தோழியும் ஈருடல் போன்ற நட்பினர். ஒத்த பருவமுடைய தோழியால் தலைவியின் உள்ளத்துணர்ச்சியை இயல்பாகவே கௌளத் தெளிய உணர்ந்து கொள்ள முடியும். ஒருவரைத் தேற்றி உவ மகிழ்ச் செய்யும் ஆற்றல் உள்ளத்தோடு ஒன்றிய தூய அன்பினாலேதான் இயலும். அதனால் தலைவியின் மனத்துன்பத்தை அருகில் இருந்து தேற்றி ஆற்றுவிக்கும் பொறுப்பினைத் தோழியைத் தவிர வேறு எந்த அகப்பொருள் மாந்தராலும் அசை இயலாது. ஒருவரைத் தேற்றி உவமகிழச் செய்யும் ஆற்றல் உள்ளத்தோடு ஒன்றிய தூய அன்பினாலேதான் இயலும்.[100]

2.0.4. தலைவனுக்குத் தலைவியின் பிரிவால் வருந்தும் வருத்தம் இருப்பினும் வினையில் ஈடுபடுதலாலும், தோழி போன்றநெருக்கமானவர்கள் இல்லையாதலாலும், மற்றவர்களிடம் கூறுவதை ஆண்மைக் குறைவாகவும் நினைப்பதாலும், தலைவியின் பிரிவைத் தவிர வேறு காரணமில்லாமையாலும் அவனுடைய ஆற்றாமையுணர்ச்சி அதிகமாகக் கூறப்படுவதில்லை. அது தன் நெஞ்சுடன் கூறுவதாகவேஅமைகிறது. ஆனால் ஆறுதல் கூறுவார் எவருமிலர். தலைவிக்கோ, தலைவனின் அன்பேபெரிதாதலாலும், வேறு வினையில்லாததால் காமம் அதிகமாவதாலும் மென்மையானஉள்ளத்தினளாதலாலும், அலர், தமர் மறுத்தல், வரைவு நீட்டிப்பு, இற்செறிப்பு முதலிய காரணங்களிருப்பதாலும் தன் உயிரனைய

தோழியிடம் தன் ஆற்றாமையைக் கூறுகிறாள். காமம் மிக்க கழிபடர் கிளவியும் நெஞ்சுடன் கூறும் இடங்களும் மிகக் குறைவாகவே அமைகிறது.

2.0.5. களவின் கண் தோழி ஆற்றுவிக்கும்போது பொதுவாகத் தலைவன் வரைவான் என்றும் கற்பில் ஆற்றுவிக்கும்போது தலைவன் விரைவில் வருவான் என்றும் ஆற்றுவிக்கும் போக்குக் காணப்படுகிறது.

2.0.6. இன்பம் வரும்போது துணை வாய்த்தால், அந்த இன்பம் இரு மடங்காகும். துன்பம் வரும்போது துணை வாய்த்தால், அத்துன்பம் பாதியாய்க் குறையும்.[101] இவ்வாறு துன்பத்தைக் குறைக்கும் தோழியின் கூற்றுகள், சங்க இலக்கியத்தில் பொருள்வயிற் பிரிவில் விரிவாக இடம் பெற்றிருப்பவைபோலப் பிற்காலக் கோவை நூல்களில் இடம் பெறவில்லை.[102]

2.0.7. ஆற்றுவித்தல் நிலையில் தோழியின் கூற்று 159ஆக அமைகிறது. ஐந்திணையிலும் ஆற்றுவித்தாலும் பாலைத் திணையிலேயே உரிப் பொருளுக்கேற்ப அதிகமாகக் காணப்படுகிறது. களவை விடக் கற்பில் அதிகமாக ஆற்றுவிக்கப்படுகிறது.[103] 85 புலவர்கள் இத்துறையில் பாடி-யுள்ளனர். அதிகமாகப் பாடிய பெருமைக்குரியவர் பேயனாரேயாவர்.[104] தோழியின் செயல்திறன் இத்துறையில் 50 நிலைகளில் காணப்படுகிறது.[105] தோழியின் ஆற்றுவித்தல் செயலுக்கும் தொல்காப்பியர் இலக்கணம் கூறுவர்.[106] தலைவியை ஆற்றுவிப்பதற்காகவே தோழி அறிவுச்செல்வியாகப் படைக்கப் பட்டிருக்கிறாள். தலைவியை அவள் ஆற்றுவிக்கும் சொற்களிலிருந்தே அவளுடைய பேரறிவும், சொல்லாற்றலும் தெளிவாகிறது.[107] இனி, திணைதொறும் இத்துறை ஆயப்படுகிறது. [களவுக்குரிய ஆற்றுவிக்கும் பாடல்கள் குறைவாக இருப்பதால், அவற்றைத் தனியாகக் காணால் சேர்க்காமல் கற்பில் சேர்த்தே ஆயப்படுகின்றன]

2.1. குறிஞ்சி

களவின்பத்திலேயே ஈடுபட்டு வரைவு நீட்டிக்கும் தலைவனுக்குத் தலைவியின் துன்பம் அறிய வாய்ப்பில்லை. களவு இடையூறுகளால் தலைவனைக்

காணுதபோது வருந்தும் தலைவியைத் தலைவனின் குன்றம் கண்டு ஆற்றுமாறு கூறுகிறாள் தோழி.[108] பகற்குறியில் காணும் பொழுதினும் காணுப்பொழுது பெரிதாதலின் தலைவி வேறுபட, ஆயத்தோடாடியும் தலைவன் இல்லாமையால் வருந்தும் தலைவியை, தலைவந் வந்து ஆறுதல் கூற மாட்டாரா! என ஏங்கும் தன் ஏக்கத்தைக் கூறி ஆற்றுவிக்கிறாள்.[109]

2.1.1. வெந்த புண்ணில் வேலெறிவதைப்போல தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவியை ஊரவரின் அலர் மேலும் வருத்துகிறது. அந்நிலையில் நிலம் புடை பெயரினும், நீரும் தீயும் தத்தம் இயல்பு திரியினும், கடற்கெல்லை தோன்றினும் பிறழாத தலைவனின் நட்புச் சிறப்பு கூறி, அலர் தூற்றினும் கேடில்லை என்றும்[110] அலர்தூற்றும் பெண்டிரைப் பழித்தும்[111] ஆற்றுவிக்கிறாள்.

2.1.2. அலர் தூற்றலால் இற்செறிப்பரோ என அஞ்சும் தலைவியைத் தாய் தந்தையரே, திணைப்புனக் காவலுக்குச் செல்ல வற்புறுத்து-வதை எடுத்துக் கூறுகிறாள்.[112] மழையின்மையால் திணை கரிய இற்செறிப்பரோ எனத் தலைவி அஞ்சுமிடத்தும் 'முகில் சூழ்ந்தன; திணை கரியாது' என ஆற்று-விக்கிறாள்.[113]

2.1.3. தலைவன் வரைவிற்காகப் பொருளீட்ட எண்ணிப் பிரிய நினைக்கும்போது, 'தோழி, பெருநகை கேளாய், ஒரு நாள் பிரியினும் வேறு படும் நம்மை ஒழித்து காதலர் மட்டும் செல்ல நாம் நம் மனையில் தங்கி மழைக்குரல் கேட்டு உயிர் வாழ்வோமாம்' எனத் தலைவியைப் பிரிவிற்குப் பக்குவப்படுத்துகிறாள்.[114] நின் மழைக்கண் தூதாகி அவரை நிறுத்தியது எனவும் மகிழ்விக்கிறாள் தோழி.[115]

2.1.4. தலைவன் வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாத தலைவியைத் தோழி, 'தலைவன் நன்னர் நெஞ்சத்தன்; ஒன்றுதல் பசப்பு அறியாததால் தான் வரவில்லை என்று தலைவனின் அன்புடைமையையும்,[116] குடிச்சிறப்பையும், வாய்மையையும் புகழ்ந்து 'அவன் வருவான்' என்றும் கூறி ஆற்றுவிக்கிறாள்.[117]

தலைவன் குறித்த பருவங்கண்டு ஆற்றுதவிடத்து, மேகம் சூல் கொண்டு செல்வதைக் கண்டு துறப்பாரா என்றும்,[118] மழைபொழியும் தண்பனிநாளில் அவர் நம்மைவிட்டுப் பிரிந்து உறைவாரா[119] என்றும் வினையும் நாடனின் வரவிற்குத் தூதாக வந்த இம்மழைக்கு நாம் என்ன விருந்து செய்வோம் என வியந்தும்,[120] தலைவன் கூறிய பருவம் வந்தது; அவர் வருவார் எனக் கூறியும் ஆற்றுவிக்கிறாள் தோழி.

2.1.5. பெருமலை நாடனை வருஉம் என்று விரிச்சி கூறிய அயலில் ஆட்டியை அமுதம் உண்க என வாழ்த்துகிறாள்.[121] நன்னேர் புருவத்த கண்ணும் ஆடுகிறது; மயிர்வளர் முன்கை வளையுஞ் செறிவுறுகிறது. அதனால் தலைவன் வருவான் என வாழ்த்துகிறாள்.[122]

2.1.6. தலைவனுக்கும் தங்களுக்கும் இருக்கும் உறவைப் பழிப்பது போலவும் ஆற்றுவிக்கிறாள். தலைவனுடன் நகைத்து விளையாடிய விளையாட்டு பகையானதற்கு, யானைக் கன்று புதல்வரோடு ஓடி விளையாடிப் பின்னர் தினை மேய்ந்ததற்கு ஒப்பிடப்படுகிறது. தலைவனைமணந்தபோது இன்புற்ற நீ பிரிந்தபோது துன்புறுதல் தக்கதன்று எனவும்இடித்துரைக்கிறாள்.[123]

2.1.7. வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் குறித்த பருவத்திற்கு முன்னே வந்ததை மகிழ்ந்து கூறியும்,[124] வரைவிற்காக வருகின்ற நிலையை மகிழ்ச்சியோடு காட்டியும் ஆற்றுவிக்கிறாள் தோழி.[125]

2.1.8. தலைவன் வரைவுடன் வந்தும் தமர் ஏற்பரோ, மறுப்பரோ என்று தலைவி அஞ்சியவிடத்து, 'நம்மூரில் புணர்ந்தோரைப் பிரிப்போர் உள்ளரோ' என்று கூறும் முறையில் ஆறுதல் கூறுகிறாள்.[126]

2.1.9. பொருள் வயிற் பிரிவிற்கு முன்பே தலைவனைத் தடுத்து உடன்போக்கு மேற்கொள்வாள் என்று கூறுகிறாள் தோழி.[127]

2.2. <u>முல்லை</u>

தலைவன் வினைவயிற் பிரிகின்றான். கார்ப்பருவத் தொடக்கத்து வருவேன் என உறுதி கூறிச் செல்கிறான். இதுவரை வருவான் என்ற நம்பிக்கையோடிருந்த

தலைவி கார்ப்பருவத்தைக் கண்டதும் நிலை தளர்கிறாள். நம்பிக்கை இழக்கிறாள்.

2.2.1. காதலர் சென்றவிடத்துத் தங்கி விட்டாரோ, நம்மை மறந்தாரோ என்று நம்பிக்கையிழக்கும் தலைவிக்கு, 'தலைவர் நம்மை விட அன்புடையர், நீ கவின் அவரை மறக்கவிடாது' என்று தலைவனின் பேரன்பைச் சுட்டிக் காட்டுகிறாள் தோழி.[128] "உனக்காக நாடுபடு நன்கலம் தருவதற்காக நீடினர்; உறுதியாக வருவார்" எனக் காரணமும் காட்டுகிறாள்.[129]

2.2.2. கார்ப்பருவம் தொடங்கி விட்டதை அறிந்த தோழி, 'வரிமணல் கறங்குகிறது; தேரை தெவிட்டுகிறது; முல்லை, கோவலர் கண்ணியாக மாறியுள்ளது; இளையர் கொன்றையைச் சூடுகின்றனர்; அதனால் தலைவர் வரவைக்கார்ப்பருவ வரவுடன் இணைத்துக் காட்டுகிறாள்.[130] இக்காட்சிகளைக் காணத் தலைவியையும் அழைக்கிறாள்.[131]

2.2.3. மழையால் இயற்கை கோலம் கொள்கிறது. மயில் ஆடுகிறது. கொன்றையும், கோடலும், பிடவமும் பூக்கின்றன. இக்காட்சி தலைவியின் உள்ளத்தை வருத்துகின்றது. இயற்கை பொய்த்தாது என்பதை நன்கு அறிந்த தோழி தலைவிக்காக இயற்கையையும் பொய்யாக்குகிறாள். இது மழைக்காலத்தில் பெய்யும் மழை அல்ல. இனிவரும் கார்காலத்திற்கு வேண்டிய புதிய நீரை முகந்து கொள்ளும் பொருட்டுச் சென்ற கார் காலத்தில் எஞ்சிய மழை நீரைப் பெய்கிறது. அறிவில்லாது மழை பொழிகிறது; அதிர்குரலில் பொய்யிடி இடிக்கிறது; அவர் வாராமையால், இப்பருவ மழை வம்ப மழையே தவிர நம்பும் மழையல்ல என நிறுவுகிறாள் தோழி.[132] மழையென நினைத்து மகிழும் மயிலும், மலரும் பிடவு, கொன்றை, கோடல் ஆகிய மலர்களும் அறியாமையுடையன. அதனால்தான் வம்ப மாரியைக் காரென மதித்து விட்டன. அம்மலர்களைப் போன்று நாம் மடவரா ~~என்ன மலர்வதற்கு~~, என வினவித் தலைவனுக்காக - தலைவிக்காக இயற்கையே மடவதாகப்- பேதைமையுடையதாக மாற்றி விடுகிறாள் அன்புடைத் தோழி.[133]

2.2.4. தலைவன் சென்ற ஊரில் காணும் காட்சிகள் நின்னை நினைவூட்ட உடனே வருவர் என்றும் ஆற்றுவிக்கிறாள் தோழி. கருக்குல் மகளிர் போல நீர் கொண்டு அசைந்து அசைந்து செல்லும் மேகத்திரளைக் கண்டு நின்னை நினைந்து தலைவர் வருவர் என ஆற்றுவிக்கிறாள் தோழி.[134]

2.2.5. தலைவன் சென்ற சுரம் போதற்கரிதாயிற்றே எவ்வாறு சென்றாரோ எனக் கவலும் தலைவியை நோக்கி மழை பெய்தலினால் சுரம் இனியவாயுள்ளது. மணிநிறத் தோகைஆடியும், கொன்றை, பிடவம், குருந்து, முல்லை, தோன்றி முதலிய மலர்கள் மலர்ந்தும் மனத்திற்கும் பெருவிருந்தளிக்கும் எனத் தோழி தலைவியை ஆற்றுவிக்கிறாள்.[135]

2.2.6. வருந்தும் தலைவியிடத்து தூரத்தில் கேட்கும் மணியொலி ஆவின் மணியொலியா! தேர்பூண்ட மணியொலியா அறிகிலேன். அக்கல்லின் உச்சியில் நின்று பார்த்து வருவோம் வருக என அழைத்து தலைவியின் உள்ளத்தை மடை மாற்றுகிறாள் தோழி.[136]

2.2.7. தலைவன் வேந்துவிடு தொழிலில் பிரிந்தபோதும் வேந்தன் பகை தணிந்தனன்; போர் புரிதலை விட்டனன்; தலைவன்மேற்கொண்ட செயல் முடிந்து வருதல் பல்லாற்றானும் தெளிந்தேன் என்றெல்லாம் கூறி ஆற்றுவிக்கிறாள் தோழி.[137]

2.2.8. முல்லைத்திணையில் ஒரு பாடல் தவிர மற்றவை யாவும் கற்புப் பாடல்களே. முல்லைக்கலியில் இடம் பெற்றுள்ள இக்களவுப்பாட்டும் தலைவன் வரைவானோ எனத் தலைவி ஆற்றுதபோது தலைவன் ஏறுதழுவி வரைவான் என ஆற்றுவிக்கிறாள் தோழி.[138]

2.2.9. ஆற்றுவதைத் தோழி தன் கடமையாகவே கொள்கிறாள். மீண்ட தலைவன் நன்காற்றுவித்தாய் என்று நன்றி கூறும்போதும், நன்றி கூறுவது எனக்கல்ல விருந்து வரக் கரைந்த காக்கைக்குத்தான் என அடக்கத்துடன் மறுத்து விடுகிறாள் தன்னலங் கருதாத தோழி.[139]

2.3. மருதம்

தலைவன் பரத்தமை மேற்கொள்கையில் கவலும் தலைவியிடத்து, "ஆம்பலின் தண்டையறுத்துத் தனக்குரித்தாகிய அடைக்கரையின் கண்ணே உறைதல் போன்று தலைவனும் இவ் பரத்தையர் தொடர்பு விடுத்து இல்லின்கண் என்றும் நின்னைப் பிரியாதுறைவன்" என்று இயம்பி ஆற்றுவிக்கிறாள் தோழி.[140]

2.4. நெய்தல்

தலைவன் ஒருவழித் தணந்து வரும்போது ஆற்றாத தலைவியை நெடுமணல் ஏறி அவன் நாட்டைக் காணலாம் வா என அழைக்கிறாள் தோழி.[141]

2.4.1. குறியிடத்து தலைவன் வர நீட்டித்தவிடத்து, தலைவியின் நெஞ்சை வேறுவழியில் திருப்பி ஆற்றுவிக்கிறாள். குறியிடத்து வந்து நம்மைக் காணாது அவன் துன்புறுவதை மறைந்து பார்க்கலாம். அதனால் புன்னை மரத்தடியில் மறைவோம் விரைந்து வருவாயாக"[142] என அழைக்கிறாள் தோழி. இவ்வுத்தியை உளவியலாரு மடைமாற்று என்பர். தலைவியின் துன்பத்தினை மாற்ற, அவள் நினைவை வேறு திசையில் திருப்புகிறாள் தோழி. மணியொலியையும், தலைவனுடன் வரும்இளையரின் பேராரவாரத்தையும் காட்டிக் காரண காரியத்தோடு தலைவன் வருகையைத் தெரிவிக்கிறாள் தோழி.[143]

2.4.2. தலைவனின் வரவினால் ஊர் அலர் தூற்றத் தலைவி ஆற்றாதபோது "வரையும் நாள் அண்மையில் உள்ளது; அலரஞ்சற்க; அவ்வலர் நன்மையே விளைக்கும்" எனக் கூறி ஆற்றுவிக்கிறாள் தோழி.[144]

2.4.3. அலரால் தாயறிந்தனளோ இற்செறிப்பளோ என அஞ்சும் தலைவியிடம், வளை உடைந்ததற்காக வருந்துகிறாய் என்று ஊரவர் நினைப்பதால் இற்செறிக்க மாட்டார் என ஆற்றுவிக்கிறாள் தோழி.[145]

2.4.4. காப்பு மிகுதிக்கண் 'காவலர் மணி ஒலிக்கிறதே; இன்றுதானோ நான் அறியும் நாள்' என்று தோழி ஆற்றுதலைத்துத் தலைவியை ஆற்றுவிக்கிறாள்.[146]

2.4.5. வரைவிடை வைத்த பொருள்வயிற் பிரிவில் பொய்யான் என்று ஆற்றுவிக்கிறாள்.[147] சூள் பொய்த்தானோ தலைவனுக்கு ஏதம் வருமோ என்றஞ்சும்போது, 'கடவுட்கு உயிர்பலி தூவிப் பரவுவதற்குச் செல்வோமா என அழைத்து ஆற்றுவிக்கிறாள்.[148] விரிச்சி பெற்றுப் புக்க நிலையில் பெருங் கழிப்பாக்கம் கல்லென, தேர் வரும் என நம்பிக்கையூட்டுகிறாள்.[149] தலைவியின் நலனழிவிற்கு நொந்து, 'தலைவனுடன் இலங்கெயிறு நக்கதன் பயன் இவ்வாறுயிற்று'[150] எனத் தலைவனைப் பழிக்கிறாள். தலைவி நாம் ஆற்றுததால்தானே தோழி தலைவனைப் பழிக்கிறாள் என நினைந்து ஆற்றுவதற்கு வழி வகுக்கிறாள் தோழி.

2.4.6. பிரிந்த தலைவன் வருவதை உணர்ந்து கூறியும்,[151] வரைவு நீட்டித்தவிடத்து விரைந்து வரைவான்[152] என்றும் ஆற்றுவிக்கிறாள். வரைவு மேற்கொண்ட தலைவன் சான்றோரை விடுத்தபோது தமர் உடன்படுவரோ என அஞ்சும் தலைவியை 'துறைவற் மாயோள் பசலை நீக்கினள்' எனத் ~~தலைவியை~~ ஆற்றுவித்து இன்புறுத்துகிறாள் தோழி.[153]

## 2.5. பாலை

உரிப்பொருளுக்கேற்பப்பாலையில்தான் அதிகப் பாடல்கள்வருகின்றன. மிகுதியாகக் கற்புப் பாடல்களே அமைகின்றன.

2.5.1. பெண்ணின் இதயம் ஆணின் அன்பையே நம்பி வாழ்கிறது. ஆணின் இதயமும் தன் அன்பையே நம்பி வாழ வேண்டும் என்று விரும்புகிறது. இது உலகியல். தன்னையே சுற்றிவரும் கணவன் பொருளிற்காகப் பிரியும்போது தன்னை விட பொருள் முக்கியமா என்ற வினவினை எழுப்பி ஏங்குகிறது தலைவியுள்ளம். இவ்வுள்ளத்தினை நன்கறிந்தவள் தோழி. அவனை ஆற்ற முயலும் தோழி, தலைவியின் துன்பத்தைத் தீர்க்க, தலைவனின் அன்பையே முதல் கருவியாகக் கொள்கிறாள்.

2.5.2. பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாத தலைவியைத் தேற்றும் தோழி அவர் செல்ல மாட்டார்.[154] சென்றாலும் நாமம் பொறுக்க மாட்டார்.[155] ஏழிற்குன்றம் பெறினும் பொருளுக்காக நின்னைப் பிரியார்.[156] நின்னொடு செலவு மேற்கொள்வர்[167] என ஆற்றுவிக்கிறாள். தலைவன் இருக்கும்போதே நீ நலனழத்தல் பெரும் பேதைமைத்து என இடித்துக் கூறியும் ஆற்றுவிக்கிறாள் தோழி.[158] தலைவனைச் செலவழுங்குவிக்கத் தோழி கூறிய சொற்கள் திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய மருந்து போல மருந்தாகி மனம் உவக்கத் தலைவன் செலவு நீங்கினன் என மகிழ்ந்து கூறியும் ஆற்றுவிக்கிறாள் அன்புத் தோழி.[159]

2.5.3. நெடுந்தொலைவு செல்லும் தலைவன் தன்னை மறந்து அங்கேயே தங்கி விடுவானோ என்று அஞ்சும் தலைவியை, ஆற்றப்புகும் தோழி தலைவன் செல்லும் எல்லையைப் பொது நிலையாலும்,[160] திருவேங்கடம்,[161] அயிரியாறு,[162] தேம்முதிர் குன்றம்[163] எனச் சிறப்பெல்லையாலும் கூறுகிறாள். இந்நீண்ட பயணத்தைப் பொருளுக்காக மேற்கொண்டாலும் நின்னை நினைந்து உடனே வருவர் எனத் தலைவனின் பேரன்பைச் சுட்டிக் காட்டுகிறாள் தோழி.

2.5.4. நெடுந்தொலை செல்லும் தலைவன்பெரும்பொருளைக் கண்டவுடன் தன்னை மறந்திடுவானோ எனப் பேதலிக்கும் தலைவியை, வேங்கடம்,[164] ஆமூர்,[165] உறந்தை,[166] நல்நாடு,[167] குடநாடு[168] ஆகிய இடங்களையும் சேரலாதன்,[169] நந்தன்[170] ஆகியோர்களின் செல்வத்தையும் பெறுவதாயினும் நின்னை மறவார் என ஆற்றுவிக்கிறாள் தோழி. தலைவனுக்குப் பெருநிதியமும் தலைவிக்கு முன் துரும்பு என்று குறிக்குமாற்றால் தலைவனின் பேரன்பைப் புலப்படுத்துகிறாள் தோழி. இவ்வமைப்பு முறை அகநானூற்றில் மட்டுமே அமைந்துள்ளது.

2.5.5. தலைவன் பிரிந்து சென்ற போது பேசிய அன்புச் சொற்களையும், செய்த செயல்களையும் நினைவுறுத்துகிறாள். தலைவன் அளிசெய்ய வருவான் எனவும் கூறுகிறாள். காமன் விழவின்போது கலங்குவன் எனத் திண்டேர் கடவி வருவான் என்றும்,[171] கூந்தலில்

மலர் புனையவும் தொய்யில் புனையவும்[172] வருவான் எனத் தலைவியின் பேரன்பு கூறி ஆற்றுவிக்கிறாள் தோழி.

2.5.6. தலைவன் வழியில் காணும் அன்புக்காட்சி கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி. தலைவியை ஆற்றுவிக்க இயற்கையைப் பின்புலமாக்கும் தோழியின் அறிவு வியத்தற்குரியது.

2.5.7. "அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே"[173]

என இலக்கணம் வகுப்பார் தொல்காப்பியர். ஒருவேளை தலைவன் பொருள் வேட்கையால் நீட்டிக்க விரும்பினும் அவன் செல்லும் வழியில் வற்றிய பாலையில் வற்றுப்பேரன்புக் காட்சிகள் அவனை மறக்க விடாது. அவற்றைக் கண்ட பிறகும் அவன் அங்குத் தங்கமாட்டான். உன்னை நினைந்து வருவான் என ஆற்றுவிக்கிறாள் தோழி. அஃறிணை குடும்பங்களில் யானைக் குடும்பமே பெரும் பாலும் புலவர்களால் காட்டப்படுகிறது. தலைவன் செல்லும் வழிகளில் யானை தன் பிடியுடனும் கன்றுடனும் இயங்கும். பிடி பசி களைய யாமரத்தைப் பிளத்தல்,[174] முற்று மூங்கில் முனையூட்டுதல்,[175] வில்கடிந்து ஊட்டுதல்,[176] கயந்தலைக் கலக்கிய சின்னீரைப் பிடியூட்டிப் பின் உண்ணுதல்,[177] பிடியுடன் பாசிலைத் தின்று ஒடுங்கியிருத்தல்,[178] விறலோன் மார்பில் புன்றலைப் புதல்வன் ஏறி றெங்குதல்போல் கன்று ஏறி இறங்கப்பிடியுடன் தழுவிப் பள்ளி கொள்ளுதல்,[179] பிடி தழுவி இரும்புலி வாராவண்ணம் காத்தல்[180] என அன்பான யானைக் குடும்பம் காட்டப்படுகிறது. கலை தன் பிணையின் பசி போக்கி இன்னிழலின்மையால் வருந்திய மடப்பிணைக்குத் தன்நிழலைக் கொடுத்தளித்தல்,[181] நெல் உதிர்ந்தால் தன் பிணையை விளித்தல்,[182] புறவு தன் மடப்பெடையின் வருத்தத்தை மென்சிறகால் ஆற்றுதல்,[183] செங்காற்பல்லி தன் துணை பயிர்தல்,[184] என்றெல்லாம் வன்காட்டிலுள்ள அஃறிணை உயிர்களின் மென்மையான அன்புக் காட்சிகளை விவரித்துக் கூறி இக்காட்சிகளை அவர் காண்பர். கண்டதும் நின்னை நினைந்து விரைந்து வருவர் என ஆற்றுவிப்பதும் தோழி கையாளும் உத்திகளுள் ஒன்று.

2.5.8. அல்லலுறும் தலைவியைத் தோழி அவர் சென்ற வழியில் கொடிய மிருகங்கள் மட்டுமன்று; அருளுடை உயிர்களும் உள. அதனால் அவை நின் தலைவனுக்கு ஊறு செய்யா எனவும் கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி.

2.5.9. தலைவன் குன்றுபல கடந்து பொருளீட்டச் சென்றது எதற்காக? வினையே ஆடவர்க்குயிர் என்பதறிந்தவன் அவன். பொருள் இன்றியமையாதது என்பதுணர்ந்தவன் அவன். அத்தலைவன் உயர்ந்த குறிக்கோள்களுக்காகவே பிரிந்து சென்றிருப்பதால் நீ ஆற்றியிருத்தலும் சிறந்தது என வலியுறுத்திக் கூறுகிறாள் உயர் நோக்குத் தோழி.[185]

2.5.10. தலைவர் உயர் நோக்கத்தால் பொருளீட்டச் சென்றிருப்பினும் முன்பு, நின்பால் பெற்ற இன்பத்தை மறவார். பொருளீட்டியவுடன் அவ்வின்பம் நினைந்து வருவார். கூந்தலில் துயிலல்,[186] ஆகத்து முயக்கம்,[187] நறுநுதல், துவர்வாய்,[188] வாலெயில் ஊறிய நீர்,[189] கொல்லிப்பாவையன்ன மாணலம்,[190] விருந்துச் சோறு சமைத்தபோது எழுந்த நெற்றி[191] வியர்வைஆகியவற்றை நினையாது இருப்பாரோ என்று தலைவியால் அவன் பெற்ற இன்பத்தை நினைவூட்டி, அவ்வின்பம் பொருளால் பெற முடியாது; உன்னால்தான் முடியும் என்பதை அறிந்தவர். ஆகவே நின்னை நினைந்து வருவார் என ஆற்றுவிக்கிறாள் தோழி.

2.5.11. தோழி தலைவியை ஆற்றுவிக்கும்போது தலைவியின் துன்பமும் கூறி ஆற்றுவிக்கிறாள். மேனி பசத்தல்,[192] வளை கழலல்,[193] கண்கள் வண்ணம் இழத்தல்,[194] நுதல் ஒளி மழுங்கல்,[195] அழுதல்,[196] தொல்நலம் இழத்தல்[197] ஆகிய நிலைகளில் தலைவியின் துயரம் காட்டப்படுகிறது. தலைவியின் மேனி வேறுபாட்டை எடுத்துக்கூறி, நின்வருத்தம் தெரியாததால்தான் தலைவன் வரவில்லை. அவர் பல மலைகளைக் கடந்து சென்றனராயினும் நின் கண்ணீர் அவரைத் தங்க விடாது. கார்ப்பருவம் கண்டவுடன் அவர் வருவார்.[198] நம்மினும் சிறந்த அரும்பொருள் தருவதற்காகத்தான் அவர் சென்றுள்ளார்.[199]

அவர் திரும்பி வந்தால் வள்ளலையே பெரும்பொருள் போல உன் பசப்பு தங்காது[200] எனத் தலைவியின் துன்பத்தையும் எடுத்துக் கூறி ஆற்றுவிக்கிறாள் தோழி. நின் துன்பம் அவருக்குத் தெரிந்தால் நீடலர்[201] எனத் தலைவன் வராமைக்குக் காரணமும் காட்டுகிறாள்.

2.5.12. தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற பருவம் வருந்துவதையும் ஆற்றிருந்த தலைவி பருவங் கண்டதும் ஆற்றுளாகின்றாள். தலைவன் திரும்பி வருவதாகக் கூறிச் சென்ற பருவமாகக்கார்ப்பருவமும், இளவேனிற் பருவமும் கூறப்படுகின்றது. கலித்தொகையில் இளவேனிற் பருவம் மட்டுமே கூறப்படுகின்றது. கார்ப்பருவம் கூறப் பெறவில்லை. மற்ற நூல்களில் கார்ப்பருவம் மட்டுமே கூறப்படுகிறது. இப்பருவம் தலைவன் சென்ற நாட்டில் இல்லையோ என மறுகுகிறாள் தலைவி.[202] முகில் மழை பொழியும் காட்சி காட்டித் தலைவர் கூறிய பருவம் வந்து விட்டது. அவர் உடனே வருவர் என ஆற்றுவிக்கிறாள் தோழி.[203] மலரும் முல்லையைக் காட்டி இது பருவத்தின் தூதாக வந்துள்ளது. இதற்கு விருந்தயர்வோம் எனத் தலைவியை அழைக்கிறாள் தோழி.[204] அவர் சென்ற திசையில் பொழியும் மழையை நம் துன்பம் தீரக் காணலாம் வா என அழைக்கிறாள் தோழி.[205] மயில் தன்துணையகவும் காட்சியைக் கண்டு வருவர் என்றும் ஆற்றுவிக்கிறாள்.[206] தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற வாடை எப்போது வரும் என்று அறிவரை வினவுகிறாள்.[207] இளவேனிற் காலத்தில் தலைவியை எள்ளுவது போன்று கூவும் குயிலையும் தலைவனையும் புலக்கும் தலைவியைத் தலைவன் வந்தமை கூறி ஆற்றுவிக்கிறாள்.[208] இளவேனில் நிகழும் காம விழவினைக் காணத் தலைவன் வருவான் என ஆற்றுவிக்கிறாள்.[209] தலைவி தூது விட நினைக்கும்போது தடுத்தும்,[210] தலைவனிடத்திருந்து தூது வந்தமையைக் கூறியும் ஆற்றுவிக்கிறாள் தோழி.[211] தான் உயிர் வாழ வேண்டுமெனின் தலைவி ஆற்றுதல் வேண்டும் என வற்புறுத்துகிறாள்.[212] உலகியல்

எடுத்துக்காட்டி, தலைவி சிறப்புற இல்லறம் நடத்துவதற்காகவே சென்றுள்ளார் என ஆற்றுவிக்கிறாள் தோழி.[213] தலைவி தெய்வங்களைப் பரவ நினைத்தாள் தலைவன் வரவு கூறி ஆற்றுவிக்கிறாள்.[214] நல்ல மடவை மன்ற என உரிமையோடு கடிகிறாள்.[215] தலைவன் எங்குச் செல்ல முடியும். தேடினால் கிடைத்து விடுவார்[216] என்றும் ஆற்றுவிக்கிறாள்.

2.5.13. பல்லி பாங்கு ஒத்திசைத்தல்,[217] கண் இடம் ஆடல்,[218] குருகு விரும்பு இவர்தல், வரிவண்டுதல், தோள் செறிதல்[219] முதலிய நன்னிமித்தங்கள் உண்டாதலைச் சுட்டிக் காட்டி ஆற்றுவிக்கிறாள்.

2.5.14. தலைவனின் வருகையைக் கூறியும் தலைவியை மகிழ்விக்கிறாள் தோழி.[220] தலைவியின் மாமை கவின,[221] அருந்துயர் களைய,[222] கண்கவின் கொள,[223] வாடிய அல்குல் அழகுற,[224] பசலை மாயத்[225] தலைவன் வந்தனன் என்று ஆற்றுவிக்கிறாள். தலைவன் வருவதற்கு முன்பிருந்த தலைவியின் தோற்ற மெலிவு கூறியும், பின்னர் தோற்றம் பொலிவு பெற வருவார் எனத் தேற்றும் முறை காணப்படுகிறது.

## 2.6. பாலையில் கொடுங்காட்சி ஏன்?

தலைவி தலைவன் சென்ற வழியை நினைந்து அச்சமுறும் நிலையில் ஆற்று-விக்கும் தோழி சுரத்தின் கொடுமை கூறி ஆற்றுவிக்கிறாள். அச்சமுற்ற மனத்திற்கு, அச்சம் நீக்கும் நிலையில் குளிர்ந்த, மென்மையான காட்சிகளை அல்லவா காட்ட வேண்டும்? அறிவும், அன்புமுடைய உளவியல் அறிவு வாய்ந்த தோழி இவ்வாறு செய்யலாமா என்ற ஐயம் தோன்றலாம்.

2.6.1. பாலைநிலக் கொடுமை கூறும் பாடல்கள் முத்திறத்தனவாக அமைகின்றன. அவை, 1. தலைவியின் கூற்று, 2. தோழிக் கூற்று, 3. தலைவன் தலைவியிடம் கூறிய கூற்று என்பன. 1. இக்கொடிய சுரத்தில் சென்றுள்ளாரே என்ற தலைவியின் கூற்றைக்காட்டி ஆற்றுவிக்கும்போது தலைவியின் அஞ்சும் நிலையே

காட்டப்படுகிறது.[226] (2) தோழி கூற்றாக வரும் பாடல்கள் அனைத்திலும் இவ்வளவு கொடிய சுரத்தில்,—கானத்தில்—சென்றாலும் அவர் நின்பால் அன்புடையர்,[227] அருஞ்சுரமாயினும் தலைவியின் ஊக்கத்தால் சென்றுள்ளார்[228] துன்பத்தையும் இன்பமாகக் கொள்ளும் மனப்பக்குவம் உடையவர்[229] கூறத்தோர் எள்ளல் நெஞ்சத்து ஏச்சொல் நாணுபவர்[230] உயர்ந்த நோக்கத்தினர்[231] என இன்னோரன்ன தலைவனின் பண்புநிலை கூறி அவர் நிச்சயம் வருவார் என ஆற்றுவிக்கும் போக்கு அமைகிறது. தலைவன் சென்ற சுரம் கொடுமையுடையதாயினும் அங்கு அன்புக்குடும்பங்களும் உள்ளன; அவர் அன்புக் காட்சிகளைக் காண்பர். உடனே ~~உன்னை நினைந்து~~ வருவர் எனவும் அவள் ஆற்றுவிக்கிறாள்.[232] இவ்விருவழி சென்றவராயினும் வந்தனர் எனத் தலைவனின் வரவு கூறியும் ஆற்றுவித்தல்[233] போக்கு அமைகிறது. 3. தலைவன் தலைவியிடம் கூறியதைத் தோழி தலைவிக்குக் கூறியும் ஆற்றுவிக்கிறாள்.[234] இதனால் தோழி தவறு செய்யாள் என்பது பெறப்படுகிறது.

## 2.7. ஆய்வு முடிவுகள்

(அ) குறிஞ்சி, நெய்தல் திணைகளில் தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிகிறான்; தலைவன் வரைவு நீட்டிக்கிறான்; ஒருவழித் தணந்து வருகிறான்; அலரோ துன்புறுத்துகிறது; இற்செறிப்பு நிகழ்கிறது; பருவ வரவோ பிரிவுத் துன்பத்தை அதிகமாக்குகிறது. இந்நிலையில் ஆற்றாத தோழியைத் தலைவி ஆற்றுவிக்கிறாள்.

(ஆ) இற்செறிப்பு நிலையில் மழை பெய்யாததால் தினை கரிந்து இற்செறிப்பு நிகழுமோ என ஆற்றாதபோது மழை பெய்வது காட்டித் தினை கரியாது என ஆற்றுவிக்கிறாள் குறிஞ்சித்திணைத் தோழி.[235] அலர் காரணமாகத் தலைவன் வரவில்லையோ என வருந்தும் நெய்தல் தலைவியை புன்னைக்கு வளைகள் உடைந்ததால் தலைவி வருந்துவதாக மாறுபட நினைத்துள்ளனர். அதனால் இற்செறிப்பு நிகழாது என ஆற்றுவிக்கிறாள் நெய்தல் நிலத் தோழி.[236]

(இ) தலைவன் வரைவு நீட்டித்தவழி ஆற்றாத தலைவியைக் குறிஞ்சித் தோழி, தலைவன் குன்றம் காண்க[237] என்றும்இரவுக்குறி ஏதம் கூறின் வரைவான்

என்றும், [238] அன்பிலாளன் வந்தனன் [239] என்றும் கூறி ஆற்றுவிக்கிறாள். நெய்தல் திணையில் தலைமகளை இயற்பழித்தும், [240] ஊசலாட்டம் கூறியும் [241] தாய் அறிந்தமை கூறியும் [242] தேர்மணிக்குரல் ஒலிப்பதைச் சுட்டியும் [243] ஆற்றுவிக்கிறாள்.

(ஈ) ஊரவரின் அலரால் வருந்தும் தலைவியைக் குறிஞ்சித்திணைத் தோழி ஆற்றுவிப்பதோடு தன் வெறுப்பு கோபம் ஆகியவற்றையும் தெளிவுறுத்து-கிறாள். [244] நெய்தல் நிலத் தோழியோ 'வரையும் நாள் அணிமைத்து, அலரஞ்சற்க [245] என்று நம்பிக்கையூட்டுகிறாள்.

(உ) பகற்குறியின்கண் தலைவி வருந்த தோழி ஆற்றுதல் குறிஞ்சிக்கே உரியதாக உள்ளது. நெய்தல் திணையில் இல்லை. காப்பு மிகுந்தவிடத்தும், குறியிடத்தும் தலைவன் நீட்டித்தவிடத்தும் ஒருவழித் தணந்தழியும் தலைவி ஆற்றாத விடத்து தோழி ஆற்றுவித்தல் நெய்தல் திணைக்கே உரியது.

(ஊ) தலைவனின் பிரிவில் ஐந்திணைத் தலைவியரும் வருந்துகின்றனர். ~~தலைவனின்~~ அவன் பிரிவில் குறிஞ்சி நெய்தல் தலைவியர் களவு கற்பாகாத நிலையில் ~~தலைவனின்~~ பிரிவு வேதனை ஒருபுறமாக, மறுபுறம் தலைவன் மீண்டும்வந்து வரைவானோ என்று அஞ்சும் நிலையில் ~~இருக்க~~ வரைவான் என்று நம்பிக்கை உண்டாகும் வண்ணம் குறிஞ்சி, [246] நெய்தல் [247] நிலத் தோழியர் ஆற்றுவிக்கின்றனர்.

(எ) குறிஞ்சி நெய்தல் தலைவியரைப்போன்று முல்லைத் தலைவிக்கு வரைவானோ மாட்டானோ என்ற அச்சம் ~~முல்லையில்~~ கற்புநிலையில் எழும் நிலையில்லை. பாலைத் தலைவியைப்போன்று வழியருமை நினைந்து கவலும் நிலை இல்லை. தலைவன் செல்லும் வழி இனிதாகஅமைய வேண்டும் என்ற கவலை மிகுகிறது. கார்ப்பருவம் வரும்போது வருவேன் என்று கூறிச் சென்ற தலைவன் வரும்வரை அவன் சொல்லை நம்பி ஆற்றியிருந்தவள் கார்ப்பருவம் வந்தவுடன் ஆற்றாதவளாகிறாள். தலைவன் வரவில்லையே என்பதைவிடக்கார்ப்பருவம் வந்தும் தலைவன் வரவில்லையே என்ற ஆற்றாமையே பெரிதும் வாட்டுகிறது. மற்ற

நிலத் தலைவியரைவிட முல்லைத் தலைவி கார்ப்பருவ வரவில் வருந்துவதாகக் காட்டப்படுகிறது. அலுவலக நேரம் முடிந்தவுடன் குறித்த நேரத்தில் வரும் கணவன் நேரம் முடிந்தும் வராத நிலையில் இன்றைய மனைவியர் படும் வேதனையையே முல்லைத்தலைவியும் அனுபவித்திருக்கிறாள்.

(ஏ) அக்காலத்தில் இயற்கையே நாள்காட்டியாக இருந்ததால் தலைவன் குறித்துச் சென்ற கார்ப்பருவம் வந்தகாலை பிடவு, கொன்றை, கோடல், முல்லை முதலிய மலர்கள்மலர்கின்றன. மயில் ஆலுகின்றது. அதனால் தலைவியின் ஆற்றாமையும் பெருகுகிறது. அதனால் ஆற்றப்புகும் தோழி தலைவன் பொய்யார். இயற்கை பொய்க்கும் எனத் தன் நம்பிக்கையைக் கூறி இது தலைவன் குறித்துச் சென்ற பருவமன்று என ஆற்றுவிக்கிறாள்.[248] தலைவன் நின் மாண்நலம் படர்ந்து வருவான் எனவும் ஆற்றுவிக்கிறாள்.[249] சென்ற சுரம் இனிதாக உள்ளது என்றும் ஆற்றுவிக்கிறாள்.[250]

(ஐ) பாலைத்திணையில் தலைவன் குறித்த பருவங்களாக இளவேனிலும் இடம் பெறுகிறது. குறித்த பருவங்கண்டு நின் நினைவு வர அவர் இன்னே வருவர் எனவும் ஆற்றுவிக்கிறாள் பாலைத் தோழி.[251] பாலைத்திணையில் தலைவன் களவு வாழ்விலும் கற்பு வாழ்விலும் பிரிந்து செல்வதாகக் காட்டப்படுகிறான். பொருளீட்டச் செல்லும் தலைவன் பெரும் பொருள் ஈட்டியவுடன் தன்னை மறப்பாரோ என்ற அச்சமும் நெடுந்தொலைவுசெல்லும் தலைவன் அங்கேயே தங்கி விடுவாரோ என்ற அவலமும் தலைவியின் நெஞ்சில் நிழலாடுகிறது. அதனை உணர்ந்த தோழி தலைவனின் அன்பு அறியும்,[252] நெடுந்தொலைவு செல்லினும் வருவார் என்றும்,[253] பெரும்பொருள் பெற்றவுடன் வருவர் என்றும்,[254] வழியில் கண்ட அப்புக்காட்சி உடனே தலைவனை மீளத்தூண்டும்[255] என்றும், உன் இன்பம் நினைந்து வருவர்,[256] துய்த்த இன்பம் நினைந்து வருவர்[257] உயர் நோக்கத்திற்காகச் சென்றவர் உன்னை நினைந்து வருவர்[258] என்றும் கூறி இவ்வாறு ஆற்றுவிக்கிறாள். இப்படி ஆற்றுவிக்கும் முறை பாலைத்திணைக்கு உரியதாக உள்ளது.

(ஒ) தலைவன் வரவு அறிந்து ஆற்றுவிக்கும் நிலை குறிஞ்சி, முல்லை, பாலைத் திணைகளில் வருகிறது. குறிஞ்சித்திணையில் தண்பனி வடந்தை அச்சிரக் காலைக்குமுன் வருவதாகவும், கூதிர் வாடைக்கு முன் தலைவியின் துன்பம் தீர வருவதாகவும் கூறுகிறாள் தோழி.[259] முல்லைத்திணையில் மாலை நேரத்தில்,[260] கார்காலத்தில்[261] வருவதாகக் கூறுகிறாள் தோழி. பாலைத் தலைவன் வெஞ்சுரம் அரிய என்னாது, தலைவியின் துன்பம் நீங்க வருகிறான்.[262]

(ஓ) தலைவியை ஆற்றுவிக்கத் தோழி கையாளும் உத்திகளுள் ஒன்று விரிச்சி கேட்டல். இதுவும் திணைக்குத் திணை மாறுபடுகிறது. குறிஞ்சி நிலத் தோழி பெருமலை நாடனை வரூஉம் என்று அயலில் ஆட்டி கூறியதைத் தலைவன் வருகையின் அறிகுறியாகக்கூறி 'அவள்அமுதம் உண்க' எனத் தன் மகிழ்வையும் வெளிப்படுத்துகிறாள்.[263] நெய்தல் நிலத் தோழி 'தேர் கல்லென வரும்'[264] என விரிச்சி கேட்டதாகக்கூறி ஆற்றுவிக்கிறாள். பாலைநிலத் தோழி விரிச்சி கேட்டதைக் கூறாமல் பல்லி இசைத்தல், இடக்கண் துடித்தல், வரிவண்டூதல், தோள் செறிதல் முதலிய நன்னிமித்தங்களைக் காட்டி ஆற்றுவிக்கிறாள்.[265] முல்லைத்திணையில் தோழி விரிச்சி கேட்டு ஆற்றுவதாக இல்லை. மாறாகப் பெருமுது பெண்டிர் மாலையில் அருங்கடி மூதூர் மருங்கிற் போகி, நெல்லொடு முல்லை மலர் தூவிக் கைதொழுது விரிச்சிக்காக நிற்க அக்காலை, ஆய்மகள் ஒருத்தி இன்னே வருகுவர் நின்தாயர் என்ற நன்னர் நன்மொழியை (விரிச்சி) கேட்டு வந்து தலைவியை ஆற்றுவதாகக் கூறப்படுகிறது.[266] நரைவிராவுற்ற நறுமென் கூந்தல் செம்முகச் செவிலியர் இன்னே வருகுவர் இன்துணையோர் எனத் தலைவியை ஆற்றுவதாகக் காட்டப்படுகிறது.[267] ஆற்றுவிக்கும் பொறுப்பு தோழியிடத்திருந்து பெருமுது பெண்டிர், செம்முகச் செவிலியர் பொறுப்பில் மாற்றம் பெற்றதையே இது சுட்டுகிறது. நற்றிணையில் இயற்கையாகவே விரிச்சி கேட்டதாக அமைய, முல்லைப்பாட்டில் விரிச்சி கேட்டல் சடங்காகவே மாறுதல் பெறுகிறது. இந்நிலை சமுதாய மாற்றத்தையே காட்டுகிறது.

(ஔ) குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை என்னும் நான்கு திணைகளிலும் மருதத்திணையில் பிரிவு வேறுபடுகிறது. நான்கு திணைகளிலும் தலைவன் பொருள், வேந்தன், தூது, வினை ஆகியவற்றிற்காகப் பிரிகிறான். மருதத்தில் பரத்தையின் பொருட்டுப் பிரிகிறான். பிற திணைகளில் பிரிவு தலைவனின் உயர்வைக் குறிக்க, மருதத் திணையில் இழிவைச் சுட்டுகிறது. நான்கு திணைகளிலும்தலைவியை விட்டுப் பிரிந்து தலைவன் நெடுந்தொலைவு செல்கிறான். மருதத்தில் தலைவனின் பிரிவு மனையை மட்டும் நீங்கிய நிலையில் காணப்படுகிறது. மருதத்தில் உளப்பிரிவும், மற்றவற்றில் உடல் பிரிவும் அமைகிறது. மருதத்தில் தலைவனின் அன்பு மாறுகிறது. மற்றவற்றில் அன்பு மாறவில்லை. மற்ற திணைகளில், ஆற்றுவித்தலில் வெவ்வேறு நிலைகள் காணப்பட, மருதத்திணையில் தலைவன் பரத்தையைப் பிரிந்து தலைவியை அடைவான் என்ற ஆறுதல் மொழியே கூற வேண்டுவதாகிறது. பிற திணைகளில், தலைவி பிரிந்த தலைவனுக்காக இரங்க, மருதத்தில், தலைவன் நம்மை மறந்து மற்றொருத்தியை நாடினானே என்று ஏங்குகிறாள்.

இவ்வாறு சூழ்நிலைக்கேற்பவும் தலைவியின் மனநிலைக்கேற்பவும்ஆற்றுவிக்கும் தோழியின் உளவியல் அறிவு வியத்தற்குரியது.

### 3. பரத்தையிற் பிரிவு

3.0. அன்பு வாழ்வின் ஒரு குறையாகவே பரத்தையிற் பிரிவு அமைந்திருத்தலைச் சான்றோர் கூறியுள்ளனர்.[268] டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் அவர்கள், "பலவகையாலும் உயர்நெறியாகிய அன்புடைய வாழ்க்கை, புலிற்குப் புல்லிதழ் வாய்த்தாற் போலவும், மதிக்கு மறு வாய்த்தாற் போலவும், பரத்தையிற் பிரிவு என்னும் இழிந்த ஒழுக்கத்தினால் சிறிது கலக்கமடைகிறது" என்பார்.[269] தொல்காப்பியர் இவ்வொழுக்கத்தின் புன்மை குறித்தே, 'கொடுமை ஒழுக்கம்'[270] 'அடங்கா ஒழுக்கம்',[271] 'பேறு ஒழுக்கம்'[272] என்று சுட்டிச்

செல்வர். 'தங்கிய ஒழுக்கத்துக் கிழவன்'[273] 'பிழைத்து வந்திருந்த கிழவன்'[274] எனத் தலைவனின் ஒழுக்கச் சீர்கேடும் அவரால் குறிக்கப்படுகிறது.

3.0.1. சங்க இலக்கியத்தில் மருதம் தொடர்பான 26~~1~~3 பாடல்களில் 221 பாடல்கள் பரத்தையர் உறவு குறித்தனவேஎன்ற அறிஞரின் கூற்று பரத்தையரின் பெருக்கத்தையும் அக்காலச் சமுதாய நிலையையும் காட்டுவதாகவே அமைகிறது.[275]

3.1. சங்க இலக்கியத்தில் காதலுறவுச் செய்கைகள் மகிழ்வில் தொடங்குகிறது. மெல்ல மெல்ல அம்மகிழ்வு குறைகிறது. அது வாழ்க்கையில் போராட்டங்கள் நிகழ்வதை அடிப்படையாகக் கொண்டு முடிகின்றது. இப்போராட்ட முதிர்வே பரத்தையிற் பிரிவு எனலாம். இப்போராட்டத்தின் முடிவாகத் தலைவனை வாயில் நேர்தல் அமைகிறது. இப்பரத்தமைக்குரிய காரணங்கள் பின்வருவன:—

3.1.1. அரசியற் சூழ்நிலை, போர் நிகழ்ச்சி ஆகியவற்றால் ஆண்கள் மடிய மகளிரின் தொகைப் பெருக்கம் அதிகமாயிருந்தது.[276]

3.1.2. கலை உணர்வு கொண்ட ஆடவருக்குக் கலைப்பயிற்சி உடைய பரத்தையரே புகலிடமானார்கள். அவர்கள், பாணர் விறலியரைத் துணைக் கொண்டதால் தலைவியும் தோழியும் பாணர் போன்றோரைப் பழிப்பதும் இதனாலேயாம்.[277]

3.1.3. போர்க்காலப் பாசறைகளில் பிறமகளிர் தேவைப்பட்டனர்.[278]

3.1.4. மனிதனுடைய சொத்துடைமை, வெளியே செல்லக் கட்டுப் பாடற்ற தன்மை, குடும்ப வாழ்வில் ஏற்படும் உள்ளார்ந்த சலிப்பு நிலை, அறவியல் உணர்வு நெகிழ்ச்சி ஆகியனவையும் பரத்தமை நிலைக்குக் காரணமாகின்றன.[279]

3.1.5. ஆடவரின் அன்பில் நிலைத்த தன்மை இல்லாமையும் புதியவர்களை விரும்பும் மனப்போக்கும்இதற்குக் காரணமாகலாம்.[280] அதனால்தான் தலைவனுக்குப் புதிய புதிய மலர்களின் தேனை நுகரும் வண்டு ஒப்பிடப்படுகிறது.[281]

3.1.6. பரத்தமை, சமுதாயத்தில் ஒப்புதல் அளிக்கப்பட்ட வழக்கமாகவே இருந்தது.[282]

3.1.7. ஆடவர்கள் எதையும் செய்யலாம் என்று சமுதாயத்தில் இருந்த கட்டுப்பாடற்ற உரிமையும் நிலவியது.[283]

3.1.8. தன்குலக் கொழுந்தைத் தாங்கித் தலைவி அன்புறும் நிலையில் வேட்கையினால் பிற மகளிரை விரும்பும் தலைவனின் மனப்போக்கும் காரணமாகிறது. செவ்வணி காட்டி அவனை மீண்டும் தலைவியின் இல்லத்திற்கு அழைத்து வரும் போக்கு சமுதாயத்தின் ஒழுக்கக் கேட்டையே காட்டுகிறது.[284]

3.1.9. வல்லரசு உருவாகி ஆடம்பர வாழ்வு அமைந்தபோது ஆடவர் குடும்ப வாழ்வின் பொறுப்புகளை ஏற்க விரும்பவில்லை. மகளிர் குடும்பப் பொறுப்புகளை ஏற்றதால் ஆடவர் இன்பத் துறையில் நாட்டமுற்றனர்.[285]

3.1.10. செல்வ வளமும் உழைப்பின்மையும் பரத்தமைக்குக் காரணமாகலாம். சங்க இலக்கியத்தில் குறிஞ்சி முல்லை மருதம் பாலை நிலங்களை விட மருதத் திணையில் உழைப்பு குறைவு. வயிற்றுணவிற்காகப் போராடும் போராட்டம் மற்றத் திணைகளை விட மருதத் திணையில் குறைவே. இங்குச் செல்வ வளமும் மற்ற நிலங்களை விட அதிகம். அதனால்தான் பரத்தமைப் பாடல்கள் மற்றத் திணைகளை விட மருதத் திணையில் அதிகமாயுள்ளது.

3.1.11. களவுக் காலத்தில் அரியராயிருந்த மகளிர் கற்பு வாழ்வில் எளியராகின்றமையும் காரணமாகலாம்.[286]

3.1.12. தாய் தந்தையரே தங்கள் திருமகருக்கென்று யானை குதிரைகளோடு உரிமை மகளிரையும் வகுத்தனர்.[287]

3.1.13. தீம்பாலின் சுவை நுகர்ந்தவன் புளியங்காடி உண்பதுபோல தலைமகள் குணங்களைத் துய்த்து மகிழ்ந்தவன் இடையில் சிறுகுணத்தராகிய பரத்தையர் நலத்தைத் துய்ப்பான்.[288]

3.1.14. தலைவன் பரத்தமையால் தலைவி புலவி கொள்வாள்; அதை நீக்கிக் கூடிவிடத்துப் பெரியதோர் இன்பமாகும். அதற்காகவே பிரிவு நிகழ்கிறது.[289]

3.1.15. பல பெண்டிரைத் தன்னுடைமையாகப் பெற்றிருப்பது ஆண்மைச் சிறப்பு என்று ஆடவர் உலகம் கருதியிருக்கலாம்.

3.1.16. பகைவரால் கவரப்பட்ட கொண்டி மகளிரின் மிகுதி பொருளாதாரச் சூழ்நிலை ஆகியனவும் பரத்தமைக்குக் காரணமாகிறது.

3.2. களவு_கற்புக்காலப்_பிரிவு_வேறுபாடுகள்

சேர்ந்து வாழ்தல் என்ற கொள்கையால் தோன்றிய சமுதாயம் பிரிவை விரும்புவதில்லை. அதிலும் மகளிர் உலகம் கணவன் என்ற குறுகிய வட்டத்துள் அமைவதால் அவர்கள் பிரிவை விரும்புவதேயில்லை. பிரிவு களவிலும் உண்டு; கற்பிலும் உண்டு.

3.2.1. களவுக்காலப் பிரிவிற்கு எதிர்ப்பு கடுமையாக இருப்பதில்லை; அது குறுகிய கால எல்லைக்குள் அமைகிறது. தலைவன் திரும்பி வந்து மணப்பான் என்ற நம்பிக்கையில் இயல்கிறது. அவன் அன்பை நினைந்தே மகளிரின் வாழ்க்கை இயங்குகிறது. திருமணத்திற்குரிய பொருளீட்டும் நன்னோக்கத்துடன் அது தொடர்பு கொண்டிருக்கிறது. தலைவனுக்கும் விரைந்து மீள வேண்டும் என்ற நினைப்பை வலியுறுத்திக் கொண்டேயிருக்கிறது. அலர் வெறியாட்டு முதலான சமுதாயச் சூழல்களால் தலைவி பாதிக்கப்படுவது போல், தலைவனும் தனக்குள்ளாக வருந்தி நிற்கும் பாங்கில் அது நிகழ்கிறது. தலைவியின் மேல் மாறா அன்பு கொண்டு அவளது நலத்துடன் தனது நலத்தை இணைத்து வாழும் குறிக்கோளைப் பெற்றிருக்கிறது. களவு வாழ்வில் தலைவியும் தோழியும் தலைவனை எதிர்பார்த்தல், அவன் வருவானோ என ஏங்குதல், அவன் வரும் வழியேதம், இவற்றால் ஏற்படும் தடுமாற்றம் அவனைக் கடிய அஞ்சும் அச்சம் ஆகிய உணர்வுகளால் அலைக்கப்படுவதால் எதிர்ப்பு அதிகமாக இல்லை.

3.2.2. கற்பில் தலைவன் ஒரே ஊரில் இருக்கும்போது பரத்தையர் பிரிவு ஏற்படுகிறது. அது கால எல்லையைக் கடந்து நிகழ்கிறது. தலைவியின்பால் கொண்ட அன்பு பரத்தையிடம் திரும்பிய நிலையிலுள்ளது. அறத்தாறு அன்று என்று பிறர்கூறும் சொற்களோடு தொடர்பு கொண்டிருக்கிறது. தலைவன் விரும்பும்போது தன் மனைக்குத் திரும்பலாம் என்ற நிலையை மேற்கொண்டிருக்கிறது. தலைவியின் துயரைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், தலைவன் வேறு ஒருத்தியுடன் மகிழ்ந்து வாழும் போக்கு கொண்டிருக்கிறது. தலைவியின் நலத்தை மறந்து தன் நலத்தை மட்டும் பிரித்து எண்ணும் நிலை பெற்றிருக்கிறது. கற்பு வாழ்வில் தலைவிக்கு உரிமையும், நம்பிக்கையும் துணிவும் பிறக்கிறது. அவள் அதனால் உரிமைக்குரல் எழுப்புகிறாள். தலைவனையும் கடிகிறாள்.

3.2.3. ஐயங்கைக்குத் தலைக்கை வழங்கியவன்; புலவாட்டில் புனை தொட்டவன், நிலை இகந்தபோது பரத்தையோடு நயந்தும் உறைந்தான் எனப் பரத்தையிற் பிரிவில் தலைவன் நிலையைக்கூறுவார் குளோரியா சுந்தரமதி அவர்கள்.[29] மனம் தனது நிலையில் நரகத்தில் சுவர்க்கத்தையும் சுவர்க்கத்தில் நரகத்தையும் அமைத்துக் கொள்ள முடியும்[291] என்றும் மொழிக்கேற்பத் தலைவியின் உள்ளம் சினம் கொள்கிறது. இச்சினம் புலவி, துனி, ஊடல் எனப் பகுக்கப்படுகிறது.[292]

3.2.4. சங்க இலக்கியத்தில் தலைவியின் ஊடல், வாழ்க்கைப் போராட்டமாகவே அமைந்து விடுகிறது. தலைவன் பரத்தை ஒருபுறமாக, தலைவி தோழி மறுபுறமாக உள்ள இப்போராட்டத்தில் பெண்மையின் அவலமே தொனிக்கிறது. தலைவனின் பரத்தமையால் பரத்தைக்கும் தலைவி தோழிக்கும் உள்ள பகைமையும் புலப்படுகிறது.

3.3. <u>தோழி ஏன் எதிர்க்கிறாள்?</u>

தலைவியைப் பிரிந்த தலைவன் தலைவியின் உண்மையான அன்பை நினைந்தோ, துய்த்த பழைய இன்ப நலங்களை மீண்டும் பெறக் கருதியோ, தன் பிழையைத் தெரிந்து திருந்தியோ, தன் மனைக்குத் திரும்ப முயல்கிறான். அவனைத் திருத்தும் எண்ணத்தால் தோழி, தலைவியை விடப் பெரிதும் கடிகிறாள்.[293] அவளுடைய

நண்பர்களான பாணன்[294] விறலி[295] போன்றோரையும் கடிகிறாள். இதற்குப் பின் வருவன காரணங்களாகும். (க) தோழியால் தலைவன் தலைவி இருவரும் வாழ்வுத் துணைகளாயினர். தன்னால் உண்டாகிய அவ்வாழ்க்கை இனிது நடைபெறச் செய்தல் அவள் கடமையாகிறது. (ங) இரு மாடுகளைப் பூட்டி ஏரோட்டும் நிலையில் அவள் இருக்கிறாள். தலைவன் தலைவி இருவருக்கும் வாயிலாக இருந்த நடுநிலைமையும் நல்லறிவாண்மையும் கொண்டவள் ஆதலின் அவள் தலைவனின் போக்கை எதிர்க்க வேண்டிய நிலையிலிருக்கிறாள். (ச) அவள் தலைவியின் வாயிலாகத் தேவைப்படும்போது செயல்படுவதால் தலைவியின் உணர்ச்சியின் எதிரொலியாக இயங்குகிறாள். (ஞ) தான்வேறு தலைவிவேறு என்ற பிரிவு நிலையின்றித் தலைவியோடு தான் இளமை முதல் கொண்டிருக்கும் உரிமை காரணமாக அவள் செயல்படுகிறாள். (ட) இருவர்பாலும்கொண்ட தூய அன்பும் காரணமாக எதிர்ப்பு அமைகிறது. (ண) தலைவன் வரும்வரை சினமுடனிருக்கும் தலைவி தலைவனைக் கண்டவுடனே உணர்வு வயப்பட்டுக் கோல்காணு கண்ணே போல் பழி மறைந்து வாயில் நேர்கிறாள். ஆகவே தலைவன் திருந்த வாய்ப்பில்லை. அதனால் அறிவு நிலையில் தோழி நின்று வாயில் மறுக்கிறாள். (த) பாணன் விறலி வாயில் போன்றோரிடம் தலைவி எதிர்ப்பு தெரிவிப்பதை விடத் தோழி வாயில் மறுத்தலே இயல்புடையது. இன்னோரன்ன காரணங்களால் வாயில் மறுப்பில் தலைவி கூற்றினும் தோழி கூற்றே மிகுதியாகக் காணப்படுகிறது.

3.3.1. தோழியின் மறுப்புக்குத் தலைவியின் மறைமுக ஆதரவு இருக்கிறது. அவள் தலைவனின் பரத்தமை, பரத்தையின் புன்மை, பாணனின் பொய்ம்மை ஆகியவற்றை எடுத்துக் காட்டுகிறாள். அவள் தலைவன் மீதும் பாணன் மீதும் பெருஞ்சீற்றம் கொண்டவள் போன்றும் காணப்படுகிறாள். தலைவிக்கு அறிவுரை கூறியும், தலைவனைப் புகழ்ந்தும், உலகியல் ஓதியும், தலைவனை நொந்தும் தலைவியால் இரங்கியும் செயலாற்றுகிறாள். அவள் தலைவியின் முன்பாகத் தலைவனைக் கடிவதில்லை. தலைவியின் வன்சொற்கள் அவள் ஒருங்கிணையும்-போது இன்சொற்களாக மாறிவிடும் என்று தலைவனிடம் குறிப்பிடுகிறாள். அவள்

தலைவனை அடியோடு மறக்க மாட்டாள். பிழை செய்து திரும்பும் மகனைத் தாய் சிறிது நேரம் கடிந்து விட்டு, அணைத்துக் கொள்வது போல, தவறிழைத்துத் திரும்பிய தலைவனைக் கடிதோச்சி மெல்ல எறிந்து தலைவியோடு இணைத்து விடுகிறாள் தோழி. இப்பிரிவை வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என இரண்டாகப் பகுக்கலாம்.

3.4. வாயில் மறுத்தல்

வாயில் மறுத்தல் என்னும் இத்துறையில் குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய மூன்று திணைகளிலும் சேர்ந்த 52 பாடல்கள் காணப்படுகின்றன.[296] மருதப் பாடல்கள் தான் அதிகமாயுள்ளன. தலைவன்,[297] தலைவி,[298] பாணன்,[299] விறலி,[300] வாயில்,[301] குயவன்,[302] வையை[303] ஆகியோருடன் தோழி உரையாடுகிறாள். இத்துறையில் 25 புலவர்கள் பாடியுள்ளனர். அதிகமான பாடல்களைப் பாடியவர் ஓரம்போகியாரேயாவர்.[304] இத்துறையில் தோழி 13 நிலைகளில் செயலாற்றுகிறாள்.[305] கலித்தொகையில் இத்துறைப் பாடல்கள் இல்லை. இப்பகுதியில் தோழி எள்ளியும் கடிந்தும் வாயில் மறுக்கிறாள்.[306] தலைவனை மறைமுகமாகக் கடிந்துரைக்கவும் இடித்துரைக்கவும் உள்ளுறை இறைச்சி நிலைகளில் பெரும்பாலான பாடல்கள் அமைகின்றன. வரலாற்றுச் செய்திகளும் இத்துறையில் அதிகமாக வருகின்றன.

3.4.0.1. இத்துறையில் தலைவன் தன் பழைய நினைவுகளில் தோய்ந்த வனாகத் தன் முதலிரவுக் காட்சிகளைப் பெருமிதத்துடன் தோழியிடம் கூறுகிறான்.[307] தமிழரின் திருமணம் பற்றிய செய்திகள் இப்பாடலில்தான் இடம் பெறுகின்றன.

3.4.0.2. தலைவனிடமே, அவன் வீட்டிற்குள் வாரல்,[308] 'பெருதகன்மே' என்று கூறும் மறுப்பும்,[309] பெரிய 'நாணிலை மன்ற' என்று கடிந்துரைக்கும் போக்கும்[310] தோழியின் உரிமையைக் காட்டும். தன் தலைவிக்குத் தீங்கிழைப்பவர் யாவராயினும் அவர்களைத் தாக்கும் வன்மை தோழிக்கு அமைந்திருக்கிறது.

3.4.1. இத்துறை, தலைவனும் பரத்தையும் ஒருபுறமாகவும், தோழியும் தலைவியும் மறுபுறமாகவும் நின்று இழுக்கும் கயிறு இழுபோராட்டமாக உள்ளது. முன்பு தலைவிக்குரிய தலைவன் என்றிருந்தவன் பரத்தையின் தலைவனாக மாறுகிறான். அவன் மனையும்,[311] தெருவும்,[312] சேரியும்[313] தலைவிக்கும் தோழிக்கும் மட்டுமே உரியனவாகின்றன. அவனது மனைக்கும் தெருவிற்கும் சேரிக்கும் அவன் வரவு மறுக்கப்படுகிறது. தலைவியின் இல்லம் "எம்மனை",[314] "எம்மறுகு"[315] என்று குறிக்கும் நிலையில் தலைவனுக்கு அவை உரிமையில்லாதவையாகின்றன. 'நின் மாணிழை மகளிர்'[316] 'நின் காதலி'[317] 'நின் பரத்தை'[318] எனத் தலைவனின் உள்ளத்தில் தைக்குமாறும் தலைவனுக்கும் பரத்தைக்கும் உள்ள உறவை என்னுமுறையிலும் கூறப்படுகிறது. தூதாகி வந்த பாணனிடத்தும் 'நின் தண்டுறையூரன்'[319] என்றும் தலைவனிடம் 'நின்பாணன்'[320] என்றும் கூறித் தலைவனிடம் தங்கள் உறவின்மையையும் புலப்படுத்துகிறாள் தோழி. பரத்தையின் வீடுதான் தலைவனின் இல்லம் என்னுமுறையில் 'நும் மனைக்குச் செல்'[321] என்கிறாள். தலைவன் கூறும் சொற்கள் மாயப் பொய்ம்மொழியாக உருவெடுக்கிறது. 'உரையல்' எனத் தாங்கள் அவன் சொற்களைக் கேட்கவும் விரும்பாத நிலையைக் குறிப்பாக அறிவிக்கிறாள் அவள்.[322] 'இதுவோ மற்றுநின் செம்மல்'[323] எனத் தலைவனின் பரத்தமையை எள்ளுகிறாள். தலைவனின் துன்பம் தோழிக்கு உவப்பாகிறது.[324] 'நாங்கள் யார் நின்னைப் புலப்பதற்கு'[325] என்று கூறித் தலைவன் உறவு இழந்ததை நிலைநாட்டுகிறாள் தோழி. ஊடல் உணர்வு, அயன்மை பாராட்டுமளவிற்கு வளர்ந்ததும் தெரிய வருகிறது. இதிலிருந்து தலைவிக்கும் தோழிக்கும் உள்ள உறவின் நெருக்கத்தையும் தலைவனையே கடியும் உரிமையும் புலப்படுத்தப்படுகிறது.

3.4.1.1. இத்துறையில் தலைவனுக்கு வாயில் மறுத்தல், வாயில் நேர்ந்தபின் மீண்டும் புறத்தொழுகி வந்தபோது வாயில் மறுத்தல், உணர்ப்புவயின்

ஊடற்கண் புலந்த தலைவனுக்கு மறுத்தல், பாணன் கேட்பத் தலைவிக்கு உரைத்தல், பாணனுக்கு மறுத்தல், பாணன் கேட்பத் தலைவிக்கு மறுத்தல் எனத் தோழியின் செயல்கள் அமைகின்றன.

3.4.2. <u>தலைவனுக்குவாயில் மறுத்தல்</u>

3.4.2.1. வாயில் மறுத்தலுக்குக் காரணமான தலைவனின் பரத்தமை கூறப்படுகிறது. தலைவன் பரத்தையொருத்தியை வதுவை அயர்ந்ததையும், அதனால் தலைவி ஒண்டொடி நெகிழ்தலையும் கூறி உன்னைப் புலப்பதற்கு நாங்கள் யார்? என்று அயன்மை பாராட்டி, மீண்டும் 'சென்றீ பெரும' என்று கூறித் தலைவனின் பரத்தமை எள்ளப்படுகிறது.[326]

3.4.2.2. தலைவன் பரத்தையுடன் வையையாற்றில் நீராடியதைக் கூறி வாயில் மறுக்கப்படுகிறது.[327] இதைப் 'புறம் விளையாட்டுப் புல்லிய புகர்ச்சியும்'[328] எனத் தொல்காப்பியர் இலக்கணம் வகுப்பார். சங்கப் பாடல்களில் பரத்தமையினால் விளையும் ஊடல் தோன்றப் பல காரணங்கள் சுட்டப் படுகின்றன. புனலாடல், பொழில் நுகர்தல், வதுவை அயர்தல், விழவயர்தல் என்பன முதன்மைக் காரணங்கள். இவற்றில் புனலாட்டு ஒன்றனையே காரணமாகக் கொண்டு பரிபாடலின் வையைப்பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன.[329]

3.4.2.3. தைமாதத் தண்கயம் போலப் பலர் படிந்துண்ணும் பரத்தயின் மார்பும் கூறித் தலைவியின் வெகுளியும் சுட்டிக் கடியப்படுகிறது. மருதப்பாடல்கள் தலைவியின் துயர் கூறும் அளவிற்குத் தலைவியின் சினத்தைப் புலப்படுத்தவில்லை, என்று குளோறியா சுந்திரமதி அவர்களின் கூற்று நினைக்கத் தக்கது.[330]

3.4.2.4. தலைவன் உற்ற பழிக்குத் தாங்கள் மகிழ்வதாகக் கூறிப் புதிய பரத்தையர் நலன் நுகரச் செல்க; நீயும் நின் பரத்தையரும் வாழ்க எனத் தோழியின் சினமும் புலப்படுத்தப்படுகிறது.[331] களவில் கடும்பாம்பு வழங்கும் தந்தையின் தெருவில் தலைவியின் நடுங்கு துயர் களைந்தமையையும், கற்பு வாழ்வில் தலைவியை வெறுக்கும் நிலைமையையும் முரண் நிலையில் காட்டி வாயில்

3.4.2.5. தலைவன் பெருமையைச் சுட்டி அவன் பெருமைக்கே அடிப்படைக் காரணம் தலைவிதான் என்ற உண்மை புலப்படுத்தப்படுகிறது. உடுத்தும் தொடுத்தும் பூண்டும் விழவுடன் வரும் தலைவனின் இன்றைய நிலையையும், தலைவி வருவதற்கு முன்பு இருந்த ஊரான் வல்லிச் சீறில் வாழ்க்கையும் முரண் நிலையில் காட்டப்படுகிறது.[333] தலைவனின் நன்றி கொன்ற தன்மையும் புலப்படுத்தப்படுகிறது. 'சீருடைப் பெரும்பொருள் பெற்றவழி மறப்பினும்'[334] எனத் தொல்காப்பியம் இதற்கு இலக்கணம் வகுக்கும்.

3.4.2.6. பரத்தையர்க்குத் தலைவன் சொன்ன சூளுரை எள்ளி வாயில் மறுக்கப்படுகிறது.[335] தலைவன் புறத்தொழுக்கம் இல்லை எனத் தோழியிடம் சூள் கூறித் தெளிவிக்கப் புகும்போது 'தலைவியின் நலன் தந்து சூள் கொண்டு செல்க' எனக் கூறுகிறாள் தோழி.[336] தொல்காப்பியர் 'சூள்வயிற் றிறத்தால் சோர்வு கண்டழியினும்' என்று இலக்கணம் வகுப்பர்.[337]

3.4.2.7. பழையன் எப்பான் பகைவரை நோக்கி எய்யும் வேல் போன்ற கண்களையுடைய பரத்தையின் கண்ணாற்றல் கூறப்படுகிறது.[338]

3.4.2.8. கலங்கவிழ்ந்தபோது உடைந்த ஒரு பலகையைப் பற்றி அவரவர் இழுத்தலைப் போலத் தலைவனைப்பரத்தையர் பலர் இழுக்க அவன் துன்புற்ற நிலையைத் தான் கண்டதையும் ஆயின் என்ன செய்ய முடியும் என வினவும் தலைவனின் பரத்தமை புலப்படுத்தப்படுகிறது.[339] அக்காலச் சமுதாயத்தில் பரத்தையரின் பெருக்கத்தையும், குல மகளிரின் செயலற்ற நிலையையுமே இது குறிப்பதாகக் கொள்ளலாம்.

3.4.2.9. குறிஞ்சி நிலத்தில் தலைவன் புறத்தொழுகி யாரையும் அறியேன் என்று கூறும்போது, 'சாந்தம் நாறும் நின் மார்பில், கூந்தல் நாறும் நாற்றமே நின் பரத்தமையைக் கூறும்; நீ பொய் கூறி மருட்ட வேண்டாம்' என அவனது பரத்தமை சுடியப்படுகிறது.[340]

3.4.3. <u>தலைவியின் துயர் கூறி வாயில் மறுத்தல்</u>

இத்துறையில் அமையும் பாடல்கள் தலைவனின் பரத்தமையால் தலைவி

தெரிவளை நெகிழ்தல்,[341] நுதல் பசத்தல்,[342] கண் பசத்தல்,[343] கண் கலுழ்தல்[344] எனப் பொதுவாகத் தலைவி உறுப்பு நலனழிவு கூறி வாயில் மறுக்கப்படுகிறது. துயரால் மெலிந்த தலைவியைத் தலைவன் தேற்றும்போதும் அவன் சொற்களால் பயன் விளையாது என்றும், பரத்தமை நீக்கினாலல்லது அவன் துயர் களைய முடியாது என்றும் தெளிவாக்கப்படுகிறது.[345] தலைவியின் நோய்க்குக் காரணமும், மருந்தும் கூறும் மருத்துவராகத் தோழி விளங்குகிறாள்.

3.4.4. தலைவியின்_உயர்வும்_பரத்தையின்_இழிவும்_முரண்நிலையில்_காட்டி_மறுத்தல்

மருதத் திணையில் சிறுவர்ப் பயந்த கற்புடன் திகழும் தலைவியின் உயர்வும், பரத்தையின் புன்மையும் முரண்நிலையில் காட்டப்படுகிறது.[346] நெய்தல் திணையில் "தலைவன் தலைவியின் துயர் தீர்க்க வரவில்லை. பரத்தையின் ஊடல் தீர்க்க முடியாததால் வந்தான்" எனத் தலைவி துயரைச் சுட்டித் தலைவன் பரத்தமையை இகழ்ந்தும் கூறுகிறாள்.[347]

3.4.5. பரத்தையின்_செயல்_கூறி_மறுத்தல்

தலைவன் தலைவியின் இல்லத்திற்கு வந்ததால் பரத்தையின் மையுண்ட கண்கள் அழும் அழுகையையும்[348] மார்பில் அணிந்த மாலையை அறுத்துப் புலப்பதையும்[349] கூறுகிறாள் தோழி. தலைவன் பரத்தையின் வீட்டிலிருக்கும்போது பரத்தையின் உவகையும் தலைவியின் சினமும் கூறி வாயில் மறுக்கப்படுகிறது.[350] பாண்டிய மன்னனைக் கிள்ளி வளவன் வென்றபோது மகிழ்ந்த கோதை மார்பனை விட, பரத்தையின் மகிழ்ச்சி மிகுதி வரலாற்றுச் சான்றுடன் உவமிக்கப்படுகின்றது.

3.4.6. அலர்கூறி_மறுத்தல்

வரைவு கடாதல் துறையில் வரும் அலர்ச்செய்தி களவு வெளிப்பட்டதைக் குறிக்கவும் அதன் மூலம் தலைவனை வரைவு முடுக்கவும் பயன்படுகிறது. பரத்தையிற் பிரிவில் வரும் அலர் புறத்தொழுக்கம் மறைக்கும் தலைவின் பரத்தமை ஒழுக்கம் புலப்பட்டதைச் சுட்டவும், அவனை மறுக்கும் உத்தியாகவும் உருப் பெறுகின்றது.

3.4.6.1. நாலுடைய நங்கையர்க்குத் தலைவின் பரத்தமையால் உற்ற வருத்தம் ஒருபுறம் அலைக்கழிக்க, அயலார் தன் தலைவனைப் பரத்தனென் எனக் கூறும் அலர்ச்சொல் வேதனையையும் நாணத்தையும் சினத்தையும் உண்டாக்குகிறது. குற்றம் செய்யும் மகனைத் தான் அடித்தாலும் மற்றவர் அவனைக் குறை கூறின் பொறுக்காத தாயின் நிலையுடன் இதனை ஒப்பிடலாம். பரத்தனை தலைவனைத் தலைவியும் தோழியும் கடிவர். ஆனல் பிறர் அலர் தூற்றப் பொறார். தலைவனின் பரத்தமையால் உண்டான பிரிவுத்துயரை விட அலர்வாய்ப் பெண்டிரின் தூற்றலே வேதனையை மிகுவிக்கிறது. இவ்வலர் அடுத்தவரின் செயலை அசைபோடும் அக்காலச் சமுதாயப் போக்கையே காட்டுகிறது. பரத்தையுடன் தலைவன் நீராடுதல்,[351] தலைவியின் பழிதீர் மாணலம் தொலைதல்,[352] தலைமகன் ஒரு குறுமகளை நயத்தல்[353] ஆகியவை அலருக்குரிய காரணங்களாகக்கூறப்படுகின்றன. தலைவியும் தோழியும் அலரை மறைக்க விரும்பினும் அவர்களையும் மீறி அலர் பரவுவதும் சுட்டப்படுகிறது.[354]

3.4.6.2. அலர் மிகுதி கூறும் இடத்தில், புலவர்கள் தங்கள் காலத்தில் நடந்த போர்க்களக்காட்சிகளைத் தோழியின் வாயிலாகத் தெரிவிக்கின்றனர். அகத்தில் புறத்தைக் கலக்க அலரைப் பயன்படுத்திக் கொண்டனர். இரு மன்னர் செய்யும் போரில் வெற்றி பெற்றவனின் வெற்றி ஆரவாரம் பெரும்பாலும் அலர் மிகுதியுடன் ஒப்பிடப்படுகிறது. போர்ச் செய்தி விரைவில் பரவும்; பலராலும் அறியப்படும்; மக்களால் விரும்பிச் சுவையுடன் பேசப்படும்; அது விரைவில் மறைவதில்லை; அதில் ஒரு தலைவனைப் பற்றித் தாழ்த்திக் கூறும் வாய்ப்புண்டு; வெற்றி ஆரவாரம் அதிகமாயிருக்கும்; இக்காரணங்களால் தலைவனின் பரத்தமை பற்றிய அலர்ச்செய்தியுடன் போர்க்கள ஆரவாரம் ஒப்பிடப்படுகிறது.[355] கள்ளூரில் உள்ள குறுமகளைநயந்து, அணிநலம் கவர்ந்து, அறியேன் என்ற அறவிலாளனின் தலையில் சான்றோர்கள் நீறு பெய்த போது எழுந்த ஆரவாரமும் உவமிக்கப்படுகிறது.[356]

3.4.6.3. காதலித்துக் கைவிடுதலை அக்காலச் சமுதாயம் அறமன்று என நினைத்ததையும், அவர்களுக்குத் தண்டனை வழங்கியதையும் இக்குறிப்பு தெரிவிக்கிறது. வேலிக்கு அருகில் வெருகு வந்தபோது அஞ்சிய தாய்க் கோழியின் கவுதலுக்கும் அலர் ஒப்பிடப்படுகிறது.[357] இவ்வாறு நாட்டு ஆரவாரத்துடன் வீட்டுப் போராட்டம் உவமிக்கப்படுகிறது. இவ்வலர் தலைவனின் பரத்தமையைப் போக்க மறைமுகமாகப் பயன்படுகிறது.

3.4.6.4. ஒருமுறை வாயில் பெற்று மறுபடியும் புறத்தொழுகி மீண்டும் வாயில் வேண்டுகிறான் தலைவன். அவனை நோக்கித் தோழி, "முன்பெல்லாம் தலைவனின் மார்பு தலைவியின் வயாநோய்க்கு இனித்த புளியங்காய் போல் நினைத்த மாத்திரத்தானே இன்பம் தருவதாயிருந்தது. இப்போது இல்லை" எனத் தலைவியால் அவன் வெறுக்கப்பட்ட நிலையைக்கூறி வாயில் மறுக்கிறாள் தோழி.[358]

### 3.4.7. பாணனுக்கு வாயில் மறுத்தல்

தலைவனின் பரத்தமைக்குக் காரணமானவர்கள் பாணனும் விறலியுமாதலால் தலைவன் மேல் கொண்ட சினம் அவர்களைப் பார்க்கும்போது மிகுதியாகிறது. பாணன் விறலி ஆகியோரின் பொய்ம்மையே தோழியால் எடுத்துரைக்கப்படுகிறது. 'பாணர் கூத்தர் விறலிய ரென்றிவர், பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்'[359] எனத் தொல்காப்பியர் கூறுவர். 'பாணன் பொய்ம்மொழியை எல்லோர்க்கும் கூறுமாறு குயவனிடம் வேண்டப்படுகிறது.[360] தலைவனிடமே, அவனுடைய பாணனும், எல்லாப் பாணர்களுமே கள்வர்களாகக் காட்சியளிப்பதாகத் தோழி கூறுகிறாள்.[361] பாணன் கையிலுள்ள தண்ணுமை போல் உள்யாதும் இல்லாத பொய்ச்சொல்லாக விறலியின் சொல் உருவகிக்கப்படுகிறது.[362] பாணன், தலைவனை இனியன் எனப் புகழும்போது 'உனக்குத்தான் அவன் இனியன்; எங்களுக்கல்லன்' என வெறுப்புத் தோன்றக் கூறுகிறாள்.[363] பாணனை நோக்கி, "தலைவி ஈன்ற அணிமையால் முயங்குதற்குரியவளல்லள் ஊரனைப் பரத்தையர் சேரிக்கு

அழைத்துச் செல். எம்மைத் தொழாதே; பயனில கூறுதே" எனக் கடிகிறள்.[364]
தலைவன் சிறைப்புறத்தானாகப் பாணன் வாயிலாக வந்தவிடத்து, தலைவியிடம்
'ஊரன் துணிவையாடும் களவைக் கைப்படுக்கத் தோழி சென்றபோது தலைவன்
மகளிர் வடிவம் தாங்கிய நாணமற்ற செய்கையைக் கூறுகிறள்.[365]

3.4.7.1. நெய்தல் திணையிலும் தோழி, பாணனிடம் "எங்கள்
தலைவி அவனில்லாமலே வாழ முடியும்" என்ற எண்ணத்தையும், அவளுடைய
பசலையை நீக்க முடியா நிலையையும் கூறுகிறள்.[366]

3.4.8. விறலிக்கு வாயில் மறுத்தல்

தலைவனைப் பரத்தையிடம் கொண்டு சேர்த்த பெண்பாலாகிய விறலியைப்
பார்த்தவுடன் இன்னொரு பெண்பாலாகிய தோழிக்கு அளவு கடந்த வெறுப்பும்
சினமும் எழுகிறது. "தலைவனுக்கு இன்னுமொரு பரத்தையை நாளை கொணர்ந்து
கொடுக்க உடன்பட்டு வந்ததாக விறலியைக் குற்றம் சாட்டுகிறள்.[367]
முள்ளூர்ப் போர்க்களத்தில் மலையனின் ஒருவேற்கு எதிர்த்து வந்த ஆரியர்
ஓடியது போன்று பலராகஇருப்பினும் ஓடும் நிலை ஏற்படும். அதனால் எழுங்கள்
என்று கூறுவதுபோன்று தோழி விறலிக்கு வாயில் மறுக்கிறள்.

3.4.8.1. கலைவல்ல பாணரும் விறலியும் தலைவனைப் பரத்தையர்களிடம்
கொண்டு செல்லும் இழி தரகர்களாக மாறிய காலத்தில் அவர்கள் குலமகளிரால்
பழிப்புக்கும் வெறுப்புக்கும் ஆளாயினர். அதனால் குலமகளிர் நேரில் கண்டபோது
தங்கள் சினத்தைக் காட்டுகின்றனர். அவர்களை வாயிலாக விட்டதாலேயே
தலைவன் வாயில் மறுப்புக்குள்ளாகிறனே என்று கருதும் நிலையில் பாடல்கள்
அமைகின்றன. தலைவன் விடுக்கும் கலைஞர்களில் கூத்தர்களையும் தொல்காப்பியர்
கூறிரும் அவர்களைத் தலைவன் வாயிலாக விட்டதாகவோ, தோழி வாயில்
மறுத்ததாகவோ பாடல்கள் இல்லை. சமுதாயத்தில் பாணரும் விறலியும் பழிக்கப்
பட்டமையையே மேற்கூறிய பாடல்கள் காட்டுகின்றன.

3.4.9. வாயிலார்க்கு வாயில் மறுத்தல்

தலைவன் சார்பில் தோழி ஒழிந்த மற்ற வாயில்கள் வந்தபோதும், தோழி தலைவனின் பரத்தமையால் தலைவியும் பரத்தையும் உறுதுயரை எடுத்துக்கூறி வாயில் மறுக்கிறாள். வாயிலார் பட்டியலில் சேர்க்கப்பட்ட தோழி மற்ற வாயில்களை மறுத்தல் தோழியின் உரிமையையே காட்டுகிறது. தலைவனது பரத்தமைத் தொடர்பான செய்திகளைத் தருவதில் நுண்ணிய மாற்றம் காணப்படுகிறது. இத்துறையில் தலைவனது தன்டாப்பரத்தமை நிழலிடுகிறது. இதன் விளைவாகத் தலைவனால் கைவிடப்பட்ட பரத்தையர் அவலமும் பேசப்படுகிறது. தலைவன் பரத்தையரை முயங்கி அவர் நலம் கொண்டு துறத்தல்,[369] அவன் மார்பு பலர்க்கும் வருத்தத்தைக் கொடுத்தல்,[370] தான் விரும்பும் மகளிரின் துன்பத்தை அறியாதிருத்தல்[371] எனத் தலைவனின் பரத்தமை மிகுதியைத் தோழி தலைவிக்குக் கூறுகின்ற முறையில் வாயிலாக வந்தார் கேட்கக் கூறுகிறாள். தச்சன் செய்த சிறுமா வையத்தை ஊர்ந்தின்புற-வில் லையென்றாலும், கையில் ஈர்த்தின்புறும் இளையோர் போல தலைவனை உற்றின்புறவில் லையென்றாலும் தலைவன் கேண்மையைக் கேட்கும் அளவிலேயே வளைகள் செறிகின்றன,என்றும் தலைவியின் துயர் வாயில்களுக்கு கூறப்படுகின்றன.

3.4.9.1. மருதத் திணையில் தோழி தலைவனின் வரவை நினைந்து தலைவியின் கண்கள் பசந்தமை கூறி வாயில் மறுக்கப்படுகிறது.[372]

3.4.9.2. நெய்தல் திணையில் தோழி, துறைவன் கேண்மையைப் பரத்தையர் விரும்புவாரே அல்லாமல் தலைவி விரும்புவாளோ எனத் தலைவி தலைவனை வெறுப்பதைக் கூறுகிறாள்.[373] தலைவன் கழிபெருங் காதலன் என்று வாயிலார் கூறியதையே 'யாருக்கு? தலைவிக்கா, பரத்தையருக்கா' என்று அசதியாடி[374] வாயில் மறுக்கிறாள் தோழி.

3.4.10. ஆய்வு முடிவுகள்

(அ) பரத்தையர்களின் பெருக்கத்தை மருதத்திணை விளக்குகிறது.

(ஆ) பரத்தமைக்கான காரணங்கள்விரிவாகவேஆயப்படுகின்றன.

(இ) களவு, கற்புக்காலப் பரத்தமை பிரிவு வேறுபாடுகள் விளக்கப்படுகின்றன.

(ஈ) ஓரம்போகியாரே இத்துறையில் அதிகமான பாடல்களைப் பாடியவர்.

(உ) தமிழரின் அற்றை நாட் திருமணத்தை விவரிக்கும் பாடல் இப்பிரிவில் காணப்படுகிறது.

(ஊ) தோழி கையாளும் உத்திகள் விளக்கப்படுகின்றன.

(எ) அலர் மிகுதி போர்க்கள ஆரவாரத்துடன் உவமிக்கப்படுகிறது.

(ஏ) தொல்காப்பியர் கூறியபடி, கூத்தர் வாயிலாக வந்த பாடல் இல்லை.

(ஐ) மருதத்திணையிலும் நெய்தல் திணையிலும் வாயில் மறுக்கும் நிலை மாறுபடுகிறது.

3.5. வாயில் நேர்தல்

3.5.0. வாயில் நேர்தல் என்னும் இத்துறையில் குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் மூன்று திணைகளில் சேர்ந்து 33 பாடல்களிடம் பெறுகின்றன.[375] முல்லை, பாலைத்திணையில் மட்டும் பாடல்கள் காணப்படவில்லை. தலைவன்,[376] தலைவி,[377] பாணன்,[378] பாய்காயினர்,[379] நெஞ்சு[380] ஆகியவர்களிடம் தோழியின் கூற்று அமைகிறது.

13 புலவர்கள் இத்துறையில் பாடியுள்ளனர்.[381] ஓரம்போகியாரே அதிகமான பாடல்களைப் பாடிய பெருமைக்குரியவர். இத்துறையில் தோழியின் செயல் 13 நிலைகளில் வெளிப்படுகிறது.[382] தோழி தலைவனிடம் உரையாடு-வதாக, தொல்காப்பியர் இலக்கணம் வகுப்பர்.[383]

3.5.0.1. வாயில் மறுத்தலில் தலைவனை ஏற்காத புலந்தும் அகற்றியும் புலவி வெளிப்படுத்தியும் பாடல்கள் அமைகின்றன. வாயில் நேர்தலில் தலைவனை ஏற்கும் புலவி ஆறிய அமைதியைச் சுட்டும் பாடல்களாக வேறுபடுகின்றன. இத்துறையில் தலைவியும் தோழியுமே கூற்றிற்குரியர். வாயில் மறுப்பில் மாயப் பொய்ம்மொழி பயின்று வரும் தலைவன் இங்கு நாணியும் வருந்தியும் வருகிறான்.

பொதுவாக ஒரு துறையில் அமையும் தோழி கூற்றுகளில் தலைவி தோழியின் கூற்றுத் ஒத்து அமையும். வாயில் நேர்தல் துறையில் மட்டும்தான் தோழியின் கூற்று தலைவியின் கூற்றிலிருந்து மாறுபட்டு நிற்கிறது. ஏதேனும் ஒரு காரணம் காட்டித் தலைவனை வாயில் நேர்வதாகப்பாடல்கள் அமைகின்றன.

3.5.0.2. தோழி தலைவனுக்கு, தலைவியின் துயர், தலைவி தலைவனைச் சார்ந்திருக்கும் நிலை ஆகியவற்றைக் கூறி அவனை வாயில் நேர்கிறாள். தலைவனைக் கடிந்து அவன் மீண்டும் பரத்தமை மேற்கொள்ளாவாறு அறிவுரை கூறியும் வாயில் நேர்கிறாள் தோழி.

3.5.1. தோழியின் கூற்று தலைவியின் துயர் கூறும் பாடல்களாகவே அமைகின்றன. கண் பசத்தல்,[384] அழுதல்[385] என்னும் நிலையில் தலைவனின் பரத்தமையால் தலைவி உற்ற துயரையும் தான் தேற்ற முடியா நிலையும் கூறப்படுகிறது.[386] தலைவன் தலைவியைத் துறந்ததால் ஒரோ ஒருகால் உறங்கிய தலைவியின் கண்களைப் பரத்தையரின் வீட்டிலிருந்து வரும் மணமுழவு எழுப்பும்; பரத்தையருடன் ஆடும் துணங்கை அரவம் வந்தெழுப்பும், தேரின் மணி வந்தெழுப்பும் எனத் தலைவனின் பரத்தமையைத் தலைவியின் துயருடன் இணைத்துக் கூறி வாயில் நேர்தல் அமைகிறது.[387] தலைவன் தன் பரத்தமையால், தலைவிக்கு இழைத்த கொடுமை 'நன்னனின் கூந்தல் முரற்சியின்' கொடுமையாக உள்ளது.[388] அவன் செயல் மறைத்து அவனுக்காக இவள்நாணுகிறாள் எனத் தலைவியின் துயருடன் அவளுடைய உயர் பண்பையும் கூறி வாயில் நேர்தல் அமைகிறது.[389] வரப்பிலிருந்து பிடுங்கி எறியப்பட்டாலும் மாறுபடாது செறுவிற் பூக்கின்ற நெய்தலைப் போன்றும்,[390] யாமை இளம்பார்ப்புத் தாய்முகம் நோக்கி வளர்வது போன்றும்,[391] தலைவன் கொடுமை செய்தாலும் தலைவி தலைவனையே சார்ந்திருக்கும் சார்பு நிலை கூறப்படுகிறது. தேனூரன்ன தலைவி வருந்தும்படித் தலைவன் பிரியப் பரத்தை அவ்வளவு உயர்ந்தவளா என வினவும் நிலையில் தலைவியின் உயர்வும் பரத்தையின் புன்மையும் வேறுபடுத்தப்படுகிறது.[392]

தலைவி வருந்தும்படியாகப் பரத்தையின் மனையில் தலைவன் தங்குதல் கூறப்படுகிறது.[393]

3.5.1.1. களவுக்காலத்து, தலைவி வேம்பின் பைங்காய் தரினும் தேம்பூங்கட்டி என்ற தலைவனின் அன்பையும், கற்புக்காலத்துப் பாரியின் பனிச்சுனைத் தண்ணீர் தரினும் வெய்ய உவர்க்கும் அன்பின்மையையும்[394] களவில் விரும்பிய தலைவியின் தோளைக் கற்பில் வெறுக்கும் தலைவனின் மனப் போக்கையும் கூறித்[395] தலைவனின் அன்பும் அன்பின்மையையும் முரண்நிலையில் காட்டப்படுகிறது. குதிரை தேர் யானை முதலியவற்றை ஏறிச் செலுத்துதல் செல்வமன்று; அவை முற்பிறவியில் செய்யும் நல்வினைக் காரணமாக அமைவன. தம்மை அடைக்கலமாகக் கைப்பற்றியவர்க்கு உண்டாகிய துன்பத்தையஞ்சி, அத்துன்பத்தைப் போக்கி, அவரைக் கைவிடாமல் ஆளுகின்ற இயல்புடனே, இனியனாயிருத்தலே உயர்ந்த செல்வம் என்று தோழி தலைவியின் துயரத்தைக் கூறுவதோடு அறிவுரையும் கூறுகிறாள்.[396] தோழி தலைவனிடம் கூறும் கூற்றில் தலைவியின் துயரமே கூறப்படுகிறது. அவளின் துயர்மிகுதி நோக்கியே தலைவன் சேர்த்துக்கொள்ளப்படுவதாகப்பாடல்கள் காணப்படுகின்றன.

3.5.1.2. நெய்தல் திணையில் வாயிலாகப் புகுந்த பாணனிடம் தலைமகளின் நலனழிவை அவன் கண்டவாறு தலைவனிடம் கூறவில்லையே. கூறியிருந்தால் அவன் வந்திருப்பான் அல்லவா? என்ற குறிப்புத் தோன்ற பாணனை நொந்து கூறுகிறாள் தோழி.[397] மருதத்திணையில் தானே புக்குக் கூடிய தலைவன் பாயலிற் புதல்வனைத் தழுவ, புதல்வன் தாய் அவன் புறத்தைத் தழுவி நிற்கும் காட்சியைப் பாணனுக்குக் காட்டி மகிழ்கிறாள் தோழி.[398]

தலைவன் குறித்த பருவம் கடந்து வந்ததால் தலைவி புலப்பாள் என்று நினைத்து வந்த வாயில்களுக்குத் 'தலைவி துன்பம் நீங்கி விருந்தயர் விருப்பினளாக' இருப்பதைத் தெரிவிக்கிறாள் தோழி.[399]

3.5.1.3. தலைவனுக்குப் பாங்காயினரிடம் தோழி பேசுவதாக ஒரே ஒரு பாடல் உள்ளது. அவர்கள் வாயில் வேண்டியவழித் 'தலைவன் கொடுமை தன்னைத் துன்புறுத்தினும், அவன் உறவை விரும்பாவிடினும் அதனைப் பாராட்டாமல்,

உடம்படுதற்குரிய உயர்குடியில் பிறத்தல் மிகவும் கொடிது எனக் குறிப்பாகத் தலைவியின் உடன்பாட்டைத் தெரிவித்து வாயில் நேர்கிறாள் தோழி.[400]

3.5.2. தலைவியின் உடன்பாட்டைப் பெருமலை தோழி வாயில் நேர்ந்தும் விடுகிறாள். தலைவனை வாயில் நேர்ந்த பிறகும் தலைவி தலைவனை ஏற்றுக் கொள்ளாமல் ஊடல் உள்ளத்தளாய் இருக்கிறாள். இந்நிலையில் தோழியின் கூற்றுகள் வருந்தும் நிலையிலும் அறிவுரை கூறும் நிலையிலும் அமைகின்றன. பரத்தமை நீங்காத் தலைவனுக்கும் ஊடல் நீங்காத் தலைவிக்கும் இடையிலுள்ள தோழியின் நிலை இரங்கத்தக்கதாக உள்ளது. "இருபெரு வேந்தரான அன்னியும் திதியனும் போர் செய்தபோது, பூவுடன் கூடிய புன்னைமரம் வெட்டப்பட்டவுடன் இருவரின் பகையும் ஒழிந்ததுபோலத் தலைவனும் தலைவியும் நான் ஒழிந்தவுடன் பகை நீங்குவர் போலும்"[401] என்ற தோழியின் கூற்றிலிருந்து தோழியின் இடுக்கணுள நிலை தெரிய வருகிறது.

3.5.2.1. புலவி நீங்காத தலைவிக்கு உலகியல் கூறித் தோழி அறிவுரை கூறுகிறாள். "தலைவனுடன் ஊடும் மகளிர் தம்மிடத்திலன்றும் திருமகள் நீங்கச் சில்பதம் கொழித்துச் சுற்றத்தார் யாருமின்றித் தாமே தமியராய் உண்டுத் தேமொழிப் புதல்வர் பாலின்றி அழ வருந்தியிருப்பதை அறிந்தும், அப்பரத்தமையொழுக்கத்திற்காக அவரைப் பகைப்பவர் உண்மையில் அறிவில்லாதவரே யாவர் ஆதலின் ஊடலைக் கைவிடுக என்று தோழி அறிவுரை கூறுகிறாள்.[402] அக்காலச் சமுதாயக் குறைபாடும், பொருளாதார ஏற்றத் தாழ்வின் விளைவுகளும் ஆடவரின் பரத்தமையை மகளிர் வேறு வழியின்றி ஏற்றுக் கொண்டிருந்தமையையும் இப்பாடலிலிருந்து தெரிய வருகிறது. தலைவியையே கடியும் தோழியின் உரிமையும் தெரிய வருகிறது. இடித்துரைத்தாவது தலைவியை வாழவைக்க விரும்பும் தோழியின் உள்ளம் போற்றுதற்குரியது.

3.5.3. ஊடல் தீராத தலைவியிடத்துக் களவுக்காலத்து நிகழ்ச்சிகளை நினைவூட்டுகிறாள் தோழி. தலைவியின் உள்ளம் பழங்கால நிகழ்ச்சிகளில் மூழ்கிப்

போய்த் தலைவனிடம் அன்பு மயமாகி, நிகழ்காலத்திற்கு வரும்போது அவன்பால் கொண்ட சினம் தணிந்து விடுகிறது. வாயில் நேர்தலில் இவ்வுத்தியைக் கையாளும் தோழியின் அறிவு வியத்தற்குரியது.[403]

3.5.3.1. உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் புலந்த தலைவனிடம் தலைவியால் அன்புற்ற நீ பரத்தையராலும் அன்புறுவாய் போலும் எனத் தலைவனின் பரத்தைமையைப் பழிக்கிறாள் தோழி.[404] தலைவனை நோக்கி 'தாய் தந்தையர், தலைவியைப்போன்று இடித்துத் திருத்தும் அத்தனை உரிமையுடையரோ' என வினவித் தலைவியின் உரிமையை நிலை நாட்டுகிறாள் அவள்.[405]

3.5.4. தலைவன் வாயில் பெற்றுக்கூடியிருந்த போது, தலைவன் மகிழ்ந்திருக்கும் சமயம் பார்த்துச் 'சேயரி மழைக்கண் செவ்வாய்க் குறுமகள் இனைய' எனத் தலைவியின் அழகும் வருத்தமும் கூறுகிறாள். 'எவ்வாய் முன்னின்று மகிழ்ந நின்தேறே' என நல் நாகரிகத்துடன் தலைவனின் பரத்தைமையையும் கடிகிறாள். தலைவன் உள்ளம் கொள்ளும்படியாகச் சிரித்துக் கொண்டே கூறிடும் தோழியின் உளவியல் அறிவு பாராட்டற்குரியது.[406]

3.5.4.1. புறத்தொழுக்கத்திலே நெடுநாள் ஒழுகி இது தகாதெனத் தெளிந்து மீண்டும் தலைவியுடன் கூடி ஒழுகுபவன் தோழியுடன் சொல்லாடி, 'யான் அவ்வாறு ஒழுகிய காலத்தில் நீவிர் என் செய்தீர்' எனக் கேட்கிறான். அப்போது தோழி, 'வாழியாதன், வாழியவினி, நெல்பல பொலிக'[407] எனவும் 'வயல் விளைக, வருக இரவலர்'[408] எனவும், 'பால்பல ஊறுக, பகடு பலசிறக்க'[409] எனவும் 'பகைவர் புல்லாரிசி உண்க'', பார்ப்பார் ஓதுக[410] எனவும் 'பசியில்லாகுக பிணிசேண் நீங்குக'[411] எனவும் தலைவி பொதுநலம் விரும்பியமையைக் கூறி அவளின் உயர்பண்பைத் தலைவனுக்குக் கூறுகிறாள்.

3.5.4.2. தலைவி நாட்டு நலம் விரும்பத் தோழி தலைவி நலம் விரும்பியமையைத் தோழி கூறுகிறாள். 'யாணரூரன் வாழ்க பாணன் வாழ்க'[412] எனவும், 'தண்டுறை யூரன் கேண்மை வழிவழிச் சிறக்க'[413] எனவும் 'பூக்கஞ் ஊரன் தன்மனை வாழ்க்கை பொலிக'[414] எனவும் 'கழனியூரன் மார்பு பழனம் ஆகற்க'[415] எனவும் 'தண்டுறையூரன் தேர் முன்கடை நிற்க'[416] எனத் தான் வேண்டியமையைத் தலைவனுக்குக் கூறுவாள் தோழி. இதில் தோழி தலைவியின் வாழ்வு செம்மையாக அமையவும் தலைவன் பரத்தமை நீங்கவும் விழைந்ததைப்புலப்படுத்துகிறாள். அதே நேரத்தில் பரத்தமை கொண்ட தலைவனையும் பாணனையும் குறிப்பாக எள்ளவும் செய்கிறாள்.

3.5.5. குறிஞ்சி, நெய்தல், திணைகளில் பரத்தனை தலைவனைக் காணும்போது, தோழிக்கு அவன் களவுவாழ்வில் தலைவியிடம் காட்டிய அன்பே நினைவிற்கு வருகிறது. அதனால் முந்தைய அன்பு நிலையையும், கற்பில் அன்பு மாறிய தன்மையையும் முரண் நிலையில் காட்டல் குறிஞ்சி,[417] நெய்தல்[418] திணைகளில் அமைகிறது. களவுத் திணைகளுக்கேற்ப களவு வாழ்வை நினைவுறுத்தி வாயில் நேரும் போக்கு இயல்பாகவும், பொருத்தமாகவும் அமைகிறது. தோழியின் கூற்றில் கபிலரின் ஒரே நெய்தல் பாடல் இத்துறையில்தான் அமைந்துள்ளது.[419] பாணனிடம், தலைவியின் துன்பம் கூறுமாறு வேண்டுகிறாள் தோழி. நெய்தல் திணையில் தலைவனின் கொடுமை கூறி வாயில் நேரும் போக்கும் காணப்படுகிறது.[420] குறிஞ்சித்திணையில் 'பெரிய கூறி நீத்த தலைவனின் பொய்ம்மொழியும் அப்பொய்ம்மொழியில் உளம் மாறி வாயில் நேர்ந்த தலைவியின் கூறும் கூடியபபடுகிறது.[421]

3.5.5.1. மருதத் திணையில் இத்துறையில் தோழியின் கூற்றில் கடுமை காணப்படவில்லை. தோழி தலைவி விரும்புகின்ற வரைக்கும், துன்பம் பொறுக்கும் வரைக்கும் வாயில் மறுக்கும் நிலையும், தலைவியின் துன்பம் மிகும்போது வாயில் நேர்தலும் அமைகிறது. தலைவி புலவி நீங்காத நிலையில் வந்த

தலைவன் மீண்டும் பரத்தையிடம் சென்று விடுவானோ என்று அச்சம் தோன்றும் போதும் தோழி வாயில் நேர்ந்து பின் தலைவியிடம் காரணம் காட்டுதல் தோழியின் அறிவையே காட்டுகிறது.

3.5.6. ஆய்வு முடிவுகள்

(அ) வாயில் நேர்தல் அறையில் மட்டும்தான் தோழியின் கூற்று தலைவியின் கூற்றிலிருந்து மாறுபட்டிருக்கிறது.

(ஆ) இத்துறையில் தோழி தலைவனிடம் தலைவியின் நிலையைக் கூறுவதுடன் அடைக்கலப் பொருளைப் பற்றிய அறிவுரையையும் கூறுகிறாள்.

(இ) வாயில் நேராத தலைவியிடம் உலகியலையும் கூறி அவளை உடம்படுத்த முயல்கிறாள்.

(ஈ) குறிஞ்சி, நெய்தல் திணைகளில் தலைவன் களவில் தலைவியிடம் காட்டிய அன்பையும், கற்பில் அது மாறிய நிலையையும் முரண்நிலையில் காட்டித் தலைவனைத் திருத்த முயல்கிறாள் தோழி.

(உ) மருதத்திணையில் மட்டும், வாயில் நேர்தல் அறையில் தோழியின் சொற்களில் கடுமை காணப்படுவதில்லை.

3.6. செவ்வணி காட்டல்

பூப்பு நிகழ்ந்த நாளில் தலைவி சேடியின் மூலமாகப் பரத்தையிடத்துத் தங்கியிருக்கும் தலைவனுக்கு உணர்த்துவதாகத் தொல்காப்பியத்தில் குறிப்பு இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் "பூத்தமை சேடியிற் புலவலர்க் குணர்த்தலும் என நம்பியகப் பொருள் கூறும்.[422] "பூப்பு நிகழ்ந்த நாளில் சேடி செவ்வணி பூண்டு செம்பாலிகையும் செம்பூவும் நீரும் கொண்டு சென்று தலைமகளை வலம்வந்து பூவும் நீரும் அவனடி மேற் பெய்து போகல்" எனக் களவியலுரை கூறும்.[423] பாணர் சாதியினராக மலைநாட்டிலுள்ளார் அந்நாட்டு ஈழச்சாதிப் பெண்கள் பூப்பெய்திய செதியை அவர் கணவருக்கு அறிவிப்பதை இன்றுந் தங்குல-வொழுக்கமாக உடையர் எனப்படுகின்றது என்று மு. இராகவையங்கார் குறிப்பர்.[424]

"தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணிந் துவக்குஞ் சுணங்கறை யதுவே"[425]

எனப் பரிபாடலும் இவ்வழக்குண்மையைக் கூறுகிறது.

3.6.1. தொல்காப்பியம் தோழிக்குரிய செயலாகக் காட்டாத ஒன்றை நம்பியகப்பொருள் சேர்க்கிறது. இது சமுதாய மாற்றத்தால் தோழி ஏற்றுக்கொண்ட புதிய பொறுப்பையே சுட்டுகிறது.

3.6.2. இங்ஙனம் தோழி, தான் பொறுப்பேற்ற தலைவியின் காதல் வாழ்வு வெற்றி பெறக் கண்டு மகிழ்வதில் தாயாகிறாள். இம்புரி வலம்புரிகளான தலைவன் தலைவியை ஒழுங்குபடுத்தி வாழ்க்கை வண்டியை இனிது நடத்திச் செல்பவளும் அவளே. தலைவி பிரிவுத்துயரில் துன்புறும்போது ஆறுதல் மருந்துகளைக் கொடுத்து நோய் நீக்கும் மருத்துவராய், தலைவன் தவறு செய்யும்போது கடிந்து திருத்தும் அமைச்சராய் இருப்பவளும் அவளே. களவில் எவ்வாறு உடனுறையும் துணையாக இருந்தாளோ அதே போன்று கற்பிலும் கைம்மாறு கருதாது தன் கடமை ஆற்றுபவளாக இருக்கின்றாள் தோழி.

3.6.3. இவ்வாறு தோழி, தலைவியின் இல்வாழ்க்கை வெற்றியில் இறுதிவரை உறுதியுடன் தொண்டு புரிகிறாள். தொடக்கத்தில் உடனிருந்து இடையில் பிரியும் பலரைப் போலன்றி, முடிவு வரை அவள் தன் கடமையைச் செய்கிறாள். இன்பத்தில் முன்னே நின்று துன்பத்தில் ஒதுங்கும் மிகப் பலரைப் போல அல்லாமல், அந்த இரண்டு நிலையிலும் உடுக்கை இழந்தவன் கைபோல அவள் தலைமக்கள் இருவரின் நன்றிக்கு உரியவளாய் நிலையான நலப்பணி புரிகிறாள்.

***

# இயல் ஒன்பது

## சங்க இலக்கியத் தோழியும் பிறமொழி இலக்கியத் தோழியும்

"தோழி, நீ திறமை மிக்கவள்
இடமறிந்து காலமறிந்து
இன்சொல்லும் கடுஞ்சொல்லும் பேசும் கலையில் வல்லவள்.
தலைவியின் உள்ளம் வருந்தாத வகையில்
அறிவுரை கூறித் தெருட்டும் நின்பணி
சிறப்பதாக; நீ நெடிது வாழ்க"

—இரா. மதிவாணனார், ஆந்திரநாட்டு அகநானூறு, பக்.36

"பத்ரலேகை பத்தினியுமல்லள்; காதற் பரத்தையுமல்லள்; பணிப் பெண்ணும் அல்லள். ஆனால் அரசமகளின் அந்தரங்கத் தோழியாகவே இருந்தாள். இதுபோன்ற அபூர்வமான கேண்மை இருகடல்களுக்கிடையே தோன்றும் மணற்கரை போன்றது".

— காதம்பரி, தாகூர் ரவீந்திரர் கட்டுரைத்திரட்டு, பக்.439.

## தமிழ் இலக்கியத் தோழியும் பிறமொழி இலக்கியத் தோழியும்

0. தமிழ் இலக்கியத்தில் அகப்பொருள் தலைப்பாக்களில் தோழி செயல் படுவதாகக் காட்டப்படுகிறாள். ஆனால் வடமொழியில் நாடக இலக்கியத்தில்தான் தோழி தலைவிக்கு உதவும் நிலையில் அமைக்கப்பட்டிருக்கிறாள். தமிழ்மொழியில் தலைவியுடன் சமநிலையினள் தோழியைக் காணலாம். ஆனால் வடமொழியில் மூவகை நிலையில் தோழிகள் சுட்டப்படுகின்றனர். அவர்கள் உறண்டே (Hande) உறஞ்சே (Hanje), உறாலா (Hala) என்பவராவர். இவர்களில் உறண்டே என்பவள் பணிப்பெண். உறஞ்சே என்பவள் அணுக்கத் தொண்டு புரிபவள். உறாலா என்பவள் நட்புரிமைத் தோழி.

1.1. வடமொழி நாடக இலக்கியத்தில் சுடரொளியாகத் திகழ்பவர் காளிதாசர்தான். அவருடைய 'சாகுந்தலம்' உலகின் தலைசிறந்த இலக்கியங்களில் ஒன்றாகும். அதில் தலைவி சகுந்தலைக்குத் தோழியராக அனசூயையும் பிரியம்வதையும் வருகின்றனர். தமிழிலக்கியத்தில் தலைவியின் மிக நெருங்கிய தோழியாக ஒருத்தி வருவதே மரபு. ஆனால் சாகுந்தலத்திலும் குமாரசம்பவத்திலும் ஒரு தலைவிக்கு இருதோழிகள் காட்டப்படுகின்றனர். சாகுந்தலத்தில் தோழியர் தலைவியுடன் கணமும் இணைபிரியாமல் இருப்பதாகவே காட்டப்படுகின்றனர்.

1.1.1. பிரியம்வதை என்ற தோழி இன்சொல் பேசும் இயல்பினள். மாமரத்தின் அடியில் நிற்கும் சகுந்தலை இளங்கொடியோடு பிணைந்திருப்பது போலத் தோன்றுகிறது என்று அவள் குறிப்பிட்டபோது, அவள் சொற்களை நயந்த சகுந்தலை, பிரியம்வதை என்ற அவளுடைய பெயர், காரணப் பெயராகும் என்று மகிழ்வுடன் குறிப்பிடுகிறாள். அவள் நுண்ணறிவு பெற்றவள். அவர்கள் சகுந்தலையுடன் இருந்தபோது, தலைவன் துஷ்யந்தன் அங்கு வந்தான். அவனது பெருந்தன்மை, தோற்றம், இனிமையாகப் பேசும் நயம் இவற்றை நன்கு கவனித்த பிரியம்வதை அவன் உயர் குடிப்பிறப்பினன் என்று முடிவெடுக்கிறாள்.

1.1.2. தலைவனைக் கண்ட பிறகு தலைவியின் மாறுபட்ட தோற்றமும் ஒழுக்கமும் கண்டு, அவள் தலைவன்மேல் காதல் கொண்டிருப்பாள் என்று ஓர்ந்து, தன் கருத்தைத் தோழி அநுசூயாவிடம் கூறி ஆய்கிறாள்.[2] அதனைத் தலைவியிடமும் கூறுகிறாள்.[3] தலைவனின் அன்புப் பார்வையும், உடல் மெலிவையும் காரணமாகக் கொண்டு அவன் தலைவிமேல் கொண்ட காதலையும் முன்னுற உணர்கிறாள்.[4]

1.1.3. தோழி அநுசூயையும் சங்கத் தோழியைப் போலச் சொல்-வாற்றல் கொண்டவள். அவள் தலைவனின் மரபு, நாடு, காட்டுக்கு வந்த காரணம் ஆகியவற்றை மிகவும் நயமாக வினவுகின்றாள்.[5] அவளும் தலைவியின் உடல் வேறுபாட்டை முன்னுற உணர்ந்து காமநோயின் மூலகாரணத்தை ஆராய்கிறாள்.[6] தலைவியின் காதலை நிறைவேற்ற மற்றொரு தோழியான பிரியம்வதையுடன் ஆய்கிறாள்.[7] துஷ்யந்தன் சகுந்தலையைக் காந்தர்வர் முறைப்படி மணந்து கொண்டதனால் அவள் இன்புற்றாலும் அது கவலைக்கு இடம் தருகின்றது என்று மனங் கலங்கிறாள்.[8] இது வரைவு கடாதலில் தோழி தலைவனை 'இயற்பழித்தல்' என்றும் பகுதியை ஒத்திருக்கிறது.

1.1.4. சகுந்தலையின் மென்மை அழகினையும் கௌரவச் செம்மையையும் நன்கு புரிக்கச் செய்வதற்கே இவ்விரு எழிற்கொடிகள் தம் அன்பனைத்தையும் தந்து அவளைச் சுற்றிப் படர்கின்றன. சகுந்தலையின் பெரும்பகுதி பிரியம்வதை அநுசூயை இருவருமே ஆவர். சகுந்தலையின் அம்சம் மிகச் சிறிதே. காதலரின் உரையாடலில் இவர்கள் இருவரும் முக்கால்வாசி பங்கு எடுத்துக் கொண்டு நிறைவு படுத்தினர்.[9]

1.1.5. துருவாச முனிவரின் சாபத்தை அறிந்த – ஆனால் சகுந்தலையிடம் கூறாத – பொறுப்புணர்ந்த தோழியர் அநுசூயையும் பிரியம்வதையும் "தோழி! ஒருகால் அரசன் உன்னைத் தெரிந்து கொள்ளக் காலந்தாழ்த்தால் அவரது பெயர் பொறிக்கப்பட்ட இக்கணையாழியை அவருக்குக் காட்டு" என்று கூறிக் கணையாழியைக் கொடுக்கின்றனர்.[10] இது தலைவிக்குக் கூறும் ஓம்படைக் கிளவி போலத் தோன்றுகிறது.

1.1.6. சகுந்தலை கணவன் வீடு செல்லும்போது தன் தோழியரிடம் தான் வளர்த்த நவமல்லிகையை ஒப்படைக்கிறாள். "எங்களை யார் கையில் ஒப்படைக்கிறாய்" என்று தோழியர் இருவரும் மனமுருகிக் கேட்கின்றனர். சகுந்தலையும் தன்னைத் தோழியர் இருவரும் தழுவும்படி வேண்டுகிறாள்.[11] அவர்களும் தழுவுகின்றனர். சங்கத் தோழியும், "முயங்குகம் பலவே" எனத் தலைவியை அழைக்கிறாள். சாகுந்தலத்தில் தலைவி அழைக்கும் நிலையின்றும் தோழியின் இவ்வழைப்புக் குரல் மாறுபடுகிறது.

1.1.7. தலைவி (சகுந்தலை) தன் தலைவனிடம் அனுப்பப்பட்ட பின்னர் அடையும் துன்பங்களுக்கு அளவேயில்லை. ஆயினும், அத்துன்பங்களிலெல்லாம் தோழி உடன் உறைந்து உதவுபவளாகக் காட்சி அளிக்கவில்லை (அதாவது ஆற்றுவிக்கத் தோழியர் உடன் இல்லை). அரசனின் சபையில் துஷ்யந்தன் சகுந்தலையைத் தெரிந்து கொள்ளாமல் இருந்ததற்குக் காரணம் அவருடன் இவ்விரு பாங்கியரும் அங்கு இராததுதான்.[12]

1.2. காளிதாசரின் மாளவிகாக்னிமித்திரத்தில் தலைவி மாளவிகாவின் தோழியான பகுலவாலிக (Bakulavalika ) அகப்பொருள் தோழியுடன் ஒப்பிடும் நிலையிலிருக்கிறாள். அரசிகளில் ஒருத்தியான ஐராவதிக்கு 'நிபுணிகா' (Nipunika ) என்பவள் தோழியாகச் செயல்படுகிறாள். அரசி 'தாரிணி'யின் ( Dharini ) ஏவல்படி மாளவிகா பூக்காத அசோகமரம் பூப்பதற்காகத் தன் காலடியை வைக்கும் சடங்கை மேற்கொள்ளும்போது, அரசன் மீது ஏற்கெனவே காதல் கொண்டிருந்த தலைவியிடம், அரசனும் அவள் மீது கொண்டிருந்த காதலை அறிவிக்கிறாள்.[13] இது 'குறை நயத்தல்' துறையை ஒத்துள்ளது.

1.2.1. கடற்கரை அரங்கம் என்னுமிடத்தில் தலைவியையும் தோழியையும் விதூஷகனுடைய கௌதமன் அனுப்பிவிட்டு அச்செய்தியை அரசனிடம் கூறுகிறான். அங்கு உடனிருக்கும் தோழி தலைவியை அரசனிடம் சேர்ப்பிக்கிறாள்.[14] இது குறியிடத் துய்த்தல் எனும் துறையை ஒருவாறு ஒத்துள்ளது.

1.3. காளிதாசனின் மற்றொரு காவியமான 'குமாரசம்பவத்தி'ல் தலைவியான பார்வதிக்குத் தோழிகளாக 'ஜயா' 'விஜயா' என்னும் இருவரும் விளங்குகின்றனர்.[15]

2. காளிதாசருக்கு முன் தோன்றிய பாசமகா கவி 'சாருதத்தம்' என்ற நாடகத்தை எழுதினார். அதனை விரித்து விளக்கி, 'சூத்திரகர்' என்ற மன்னர் 'மிருச்சகடிகம்' என்ற நாடகத்தை வழங்கினார். இதில் 'வசந்தசேனை' தலைவியாவாள். இவள் விலைமகள். இவளுடைய தோழி 'மதனிகை' என்பவள்.

2.1. தலைவனை சாருதத்தன் மீது காதல் கொண்ட தலைவி வசந்தசேனை தன்னைப் பற்றியே தோழியிடம் கேட்டபோது, அவளது ஒழுக்கம் முதலியவற்றால் அவளுடைய காதலை முன்னறி உணர்ந்த அத்தோழி, அச்செய்தியினைத் தலைவியிடம் கூறி அவளது பாராட்டைப் பெறுகிறாள்.[16]

2.2. வசந்தசேனை தலைவன் சாருதத்தனை விரும்பியது உண்மையாதலின் அவன்பாற் செல்லத் தூண்டுகிறாள் தோழி.[17]

2.3. வசந்தசேனை, தலைவன் சாருதத்தனின் உருவப்படத்தை ஊன்றிக் கவனித்து மகிழ்ந்து கொண்டிருந்தபோது 'உள்ளக்கிடக்கையை மறைத்தல் தக்கதன்று. பெண்மக்கள் தோழிமார்களின் மனத்தைப் பின்பற்றி நடக்க வேண்டும்' என்று தெளிவுபடுத்துகிறாள்.[18] இது தோழி குறைநயத்தலின்போது, 'என்னை மறைப்பின் எவ்வனத் தமரல்' என்னும் துறையை நினைவுபடுத்துகிறது.

2.4. இந்நாடகத்தில் வரும் இத்தோழி தலைவியிடம் அடிமையாகவே இருக்கிறாள். அவளை விலைப்பொருள் தந்து விடுதலைபெற்று மணந்து கொள்ள முயல்கிறான் ஒருவன். ஆனால் பொருட்பெண்டாகிய தலைவி பொருள் ஏதும் பெற்றுக் கொள்ளாமலே அவளை விடுவித்து விடுகிறாள்.

3. காளிதாசனுக்கு இளையான மற்றொரு நாடக ஆசிரியர் 'பவபூதி' இவர் எழுதிய 'மாலதி மாதவம்' நாடகத்தின் தலைவி 'மாலதி'. இவள், தலைவன் மாதவனை மணக்க விரும்ப, அரசனோ அவளை நந்தனன் என்பவனுக்குத்

திருமணம் செய்ய விரும்புகிறான். நந்தனின் தங்கை 'மதயந்திகா' (Madayantika ) மாலதியின் தோழியாக வருகிறாள். அவள் தலைவியின் எண்ணத்திற்கு மாறாகவே முதலில் இயங்குகிறாள். மாலதி தன் அண்ணனை மணக்கப்போகும் செய்தி அறிந்து மகிழ்ந்து தலைவியையும் பாராட்டுகிறாள்.[19] மாலதியாக வேடம் பூண்ட மகரந்தனின் சொற்களால் வருந்திய நந்தனன் மேல் பரிவுகொண்டு 'மதயந்திகா' மாலதியைப் பற்றிக் குறை கூறுகிறாள்.[20] இவளுடைய போக்கு தமிழிலக்கியத்தோழிக்கு முரண்பட்டதாகஉள்ளது. ஆனால் மாலதி கபாலகுண்டல என்பவளால் கொல்வதற்காகக் கவரப்பட்டு ஒளித்து வைக்கப்பட்டபோது, அவளது மறைவைஅறிந்து, மதயந்திகா பெரிதும் அழுகிறாள். மலையுச்சியிலிருந்து விழுந்து தற்கொலை செய்து கொள்ளவும் முயல்கிறாள். அவள் மாலதியின் தோழியாக அமைந்து தலைவன் மாதவனின் உயிர்த் தோழனை மகரந்தனைக் காதலிக்கிறாள்.[21] இவ்வாறு தலைவனின் தோழனைத் தோழி காதலிப்பது தமிழிலக்கியத்தில் இல்லாப் புதுமையாம்.

4.1. ஹர்ஷன் எழுதிய நாடகங்களில்[22] சிறந்ததான ரத்னவளியில் சாகரிகா என்ற மாறுபெயர் கொண்ட ரத்னவளியே தலைவி. 'சுசாங்கதா' அவளுடைய உயிர்த்தோழி. தலைவி தலைவன் உதயனனின் உருவப்படத்தைத் தீட்டியபோது அதைப் பற்றிக்கேட்ட தோழியிடம், இது மன்மதனின் படம் என்று கூறுகிறாள். உடனே தோழி, சாகரிகாவின் உருவப்படத்தை அதனருகே தீட்டி, இது ரதியின் படம் என்று கூறுகிறாள்.[23] இச்செயலை முன்னுற உணர்தல் துறையில் அடக்கலாம். தலைவி மீது காதலுற்று வருந்திக் கொண்டிருந்த தலைவன் அவ்வுருவப்படத்தைக் கையில் வைத்துக் கொண்டிருந்தபோது, அவனைத் தலைவியிருக்குமிடத்திற்கு அழைத்து வந்து தலைவியின்கையைப் பற்றுமாறு செய்கிறாள்.[24] இது தலைவனைக் குறியிடத்து உய்த்தலாகிறது. தமிழிலக்கியத்தில் தோழி தலைவியைத்தான் குறியிடத்து உய்ப்பாள்.

4.2. ஹர்ஷரின் மற்றொரு நாடகமான 'பிரியதர்சிகா' காளிதாசரின் மாலவிகாக்னிமித்திரத்தை அடியொற்றி இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்நாடகத்தின் தலைவி 'ஆரண்யகா' என்ற மாறுபெயர் பூண்ட பிரியதர்சிகா

ஆவாள். இவளை தோழியாக 'மனோரமா' வருகிறாள். தலைவியின் தனிமொழி மூலம் அவள் அரசன் மேல் கொண்ட காதலை அறிகிறாள்.[25] தலைவியின் தோற்றத்தால் ஐயம் உற்று, ஓர்ந்து அவளது காதலை முன்னுற உணர்ந்த தோழி[26] தலைவனின் தோழனை வசந்தகன் என்ற விதூஷகனிடம் தலைவியின் காதல் மிகுதியைக் கூறுவது[27] அவளாகவே குறை நேர்வது போலாகிறது.

4.2.1. நாணம் மிக்க தலைவி தலைவனைச் சந்திப்பதற்கு வழி காணுகிறாள். அரசியின் முன் நடிக்க இருக்கும் நாடகத்தில் தனக்குப் பதிலாக அரசனையே பங்கு ஏற்கச் செய்கிறாள்.[28] இது குறியிடத்துய்க்கத் தோழி கையாளும் உத்தியாகிறது.

4.3. சங்க இலக்கியத்தில் தலைவியும் தோழியும் உயிர் ஓரன்ன நிலையினர். இந்நாடகத் தலைவியான ஆரண்யகா தன் தோழியான மனோரமாவைத் தனது இதயம் என்று குறிப்பிடுகிறாள்.[29]

4.4. இந்த நாடகத்தில் அரசி வாசவதத்தைக்குக் காஞ்சனமாலையும் இந்திவரிகாவும் பணிப்பெண்களாக வருகின்றனர்.

4.5. காதம்பரி என்ற இலக்கியத்தில் வரும் பத்ரலேகா என்ற தோழி சிறை பிடிக்கப்பட்டவள். அவள் அழகுமிக்கவளாகக் காட்டப்படுகிறாள். "அவள் அடைப்புடைய இளமை மிக்கவள். தம்பலப் பூச்சியைப் போன்ற சிவப்பு சீரைக்குள் உடலை மறைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் நுதலில் சந்தனத் திலகம்; அரையில் பொன் மேகலை; உடல் உறுப்பெங்கும் மென்மையுடன் கடிய வனப்பு. அரச மாளிகையையே தன் அழகொளியால் நிரப்பி, மஞ்சு சீறடிகளில் நூபுரச் சதங்கை கலீரென ஒலிக்கக் கஞ்சுகியின் பின்னாலேயே வருகிறாள்" என்று அவள் வருணிக்கப்படுகிறாள். அவள் பத்தினியுமல்லள், காதற் பரத்தையுமல்லள். பணிப்பெண்ணுமல்லள். ஆனால் அரச மகளின் அந்தரங்கத்

தோழியாக இருந்தாள் என்றும் காதம்பரி கூறுகிறது. அவள் சில நாட்கள் காதம்பரியுடன் இருந்து விட்டுத் தூதுடன் சந்திர பீடனிடமே திரும்பி வருகிறாள்.

5. தெலுங்கு மொழி

5.1. காதா சப்த சதி அல்லது சாலிவாகன சப்த சதி என்னும் நூல் ஆந்திரநாட்டின் இலக்கியக் கருவூலம். இதிலிருந்து 400 பாடல்கள் தமிழில் 'ஆந்திர நாட்டு அகநானூறு' என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இதில் 123 துறைகள் அமைக்கப்பட்டுள்ளன. இதில் தோழி கூற்றாக 86 பாடல்கள் அமைகின்றன.

5.1.1. தலைவி, தலைவனின் நட்புறவைத் தோழி குறிப்பாக உணர்வதாய் ஒரு பாடல் வருகிறது. வழிப்போக்கனைப் போல் வந்த தலைவனுக்குத் தலைவியும் வேண்டுமென்றே, மிகவும் மெல்லியதாரையாக நீர் ஊற்றுகிறாள். இதைத் தோழி கண்டு அவர்களுடைய ஊமை நாடகத்தின் உரையாடல்கள், உள்ளத்தில் உரக்கக் கேட்கின்றன என்று உரைக்கிறாள்.[31] இப்பாடல் முன்னுற உணர்தலின்பாற்படும்.

5.1.2. தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி உலகியல் உரைப்பது போலத் தலைவியின் நிலையைக் கூறுகிறாள். அவள் மாமியிடம் இதைக் கூறுகிறாள். காதல் மரம், தன்மானம் என்ற வேருன்றி, நிலைத்த அன்புக்கிளைகளால் தழைத்துச் செழித்து வளர்கிறது. அதனால்தான் போலும் அது விழுந்தபோது ஓசையே கேட்கவில்லை என்கிறாள் அவள்.[32] பிரிவுக்கு முன்பு தலைவி செழித்திருந்த நிலைமையைக் காதல்மரம் என்ற தொடர் சுட்டுகிறது. தன்மான வேர் எனும் தொடர் தலைமகளின் நற்குடிப் பிறப்பும் உயர் பண்புகளுமாகும். இந்தப் பாடலைப் பாடியவர் இந்நூலைத் தொகுப்பித்த சாதவாகன மன்னன் ஆலன் ஆவான்.

5.1.3. வரைவு கடாதல் துறையில் தோழி தலைவனிடம், 'தேன்க்கள் தாமரை மலரைச் சூழ்ந்துள்ள இக்காட்சி திருமகளின் கழுத்தில், வயிரமாலை

இட்டது போன்றிருக்கிறது என்று உரைக்கிறாள்.[33] தலைவியைக் காதலித்த தலைவன் அவளை மணந்து கொள்ளாமல் காலம் நீட்டிக்கிறான். தாமரை மலரைச் சூழ்ந்துள்ள வண்டுகளின் வரிசை திருமகளின் கழுத்திலிட்ட மங்கல நாணைப் போன்றிருக்கிறது. அதைக் கண்ட பிறகாவது தலைவியை மணந்து கொள்ளும் நினைவு தலைவனுக்குத் தோன்றவில்லை என்று உள்ளுறை மூலமாக வினவுகிறாள் தோழி. இவ்வாறு மங்கல நாணைப் பற்றித் தோழி எங்குமே குறிக்காதது ஆய்தற்குரியது. இவை போன்ற சுவை மிகுந்த பல பாடல்கள் இந்நூலில் காணப்படுகின்றன.

5.2. 'வசு சரித்திரம்' என்ற மற்றொரு இலக்கியம் அதிஉந்டாவைபுரியிலிருந்து அரசாண்ட உபரிசர வசு என்ற அரசனைப் பற்றிக் கூறும் சிறந்த தெலுங்கு நூலாகும். இந்நூலை ராமராஜ பூஷண கவி இயற்றினார். இந்த அரசனை வசுவைப்பற்றி மகாபாரதம் ஆதிபருவத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

5.2.1. இதனை, வாலிகண்டபுரத்தின் அருகிலிருந்த மருவை என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த திம்ம பூபதி என்ற தெலுங்கு மொழிச் சிற்றரசன் தமிழில் மொழி பெயர்க்கச் செய்தான். இதனை 'வசு சரித்திரம்' என்ற பெயரில் தொண்டை மாநகரை அம்பலத்தாடும் ஐயன் 16ம் நூற்றாண்டில் மொழி பெயர்த்தார்.[34] சிறந்த கற்பனையுடன் விளங்கும் இந்நூல் 1003 பாடல்களைக் கொண்டது. இது கம்ப ராமாயணம் வில்லி பாரதம் முதலிய காப்பியங்களுக்கு அடுத்ததாகக்கூறப்படும் தகுதி வாய்ந்தது.

5.2.2. இந்நூலின் தலைவன் வசுவேந்தன். தலைவி கிரிகை. மஞ்சுவாணி என்பவள்தோழி. வசு கிரிகையைக் கண்டு காமுற்றபோது அவனுடைய பாங்கன் யோகி வேடம் தாங்கிக்கிரிகை இருந்தவிடத்திற்குச் சென்று தலைவியின் வரலாற்றைக்கேட்டான். அந்நிலையில் தோழி தலைவியின் வரலாற்றைக் கூறினாள்.[35]

5.2.3. கிரிஜை வசுவின்மீது பெருங்காதல் கொண்டு வருந்துவதை அறிந்த தோழி மஞ்சுவாணி வசுவேந்தனிடம் தானே தூது சென்றாள். அவன் கொடுத்த ஆழியைக் கொண்டு வந்து தலைவியிடம் தந்து அவளது துயரை மாற்றுகிறாள்.[36]

5.2.4. தெலுங்கு மொழியில் ~~கலாபூர்ணோதயம் எனும் நூலில் வரும் சூர்ண எனும் தோழி தாதியாகவே தொண்டு புரிகிறாள். சிங்கார நைடதத்தில் உலவும் தோழியும் தூது செல்கிறாள்.~~ தெலுங்கு மொழியில், செலிகத்தே, செலி சகி, தாதி, தாதிகெ, ~~தௌத்யம்,~~ ~~ராயபாரம்~~ என்ற சொற்கள் தூதாக இயங்கும் தோழியைச் சுட்டுகின்றன.

5.2.5. வடமொழி தெலுங்கு இலக்கியங்களில் பெரும்பாலும் தோழியின் செயல் தூது செல்வதாகவோ, தலைவியின் வரலாறு கூறுவதாகவோ அமைகிறது. அதனால் அம்மொழி இலக்கியங்கள் தூதி என்றே தோழியைக் குறிக்கிறது. சங்க இலக்கியத்தில் தோழி தூது செல்வதாகக் காணப்படவில்லை. தோழியே அனைத்துமாகத் தலைவனையும் தலைவியையும் ஆட்டுவிப்பவளாக இருக்கிறாள். பிறமொழித் 'தூதி', தலைவனோ தலைவியோ என்ன கூறுகிறார்களோ அதை அப்படியே மற்றவரிடம் கூறும் செயலைத் தான் செய்கிறாள். ஆனால் சங்க இலக்கியத் தோழி அவ்வாறில்லை. பின்னால் பிறமொழித் தாக்கத்தின் விளைவாகத் தோழி பாத்திரப் படைப்பு மாற்றம் பெறுகிறது. தூது இலக்கியங்களில் தோழியின் வேலை தூது செல்வதாகமட்டுமே மாற்றம் பெறுகிறது. பொதுவாக, சமஸ்கிருத இலக்கியங்களில் தோழி தகுந்த ~~வேலைக்காரியாகவே இல்லை.~~ சம உரிமை இல்லை. தோழி தலைவியிடம் பிராகிருதத்தில்தான் பேச வேண்டும் என்ற அமைப்பு முறை இருக்கிறது.

6. ஆங்கில இலக்கியத்தில் துணைப் பாத்திரமாக வரும் தோழியின் நிலை பொதுவாகப் பெரிதும் மாறுபடுகிறது. சிலர் தலைவிக்கு இணையாக இருப்பர். சிலர் தாழ்ந்து நிற்பர். சிலர் குற்றேவல் மகளாய்க் கிடப்பர்.

கதை வளர்ச்சிக்குச் சக்கரம்போல் உதவுவோரும் உண்டு. கோபுரத்துப் பதுமை போல காட்சி அளவில் அமைபவரும் உண்டு.

6.1. ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் பத்தில் தோழி வருகிறாள். அப்படி வந்த தோழிகளின் எண்ணிக்கை பதினொன்று.[37] சங்கஇலக்கியத் தோழி, தலைவி தலைவனுடன் இணையப் பலவழிகளிலும் துணை புரிவாள். ஷேக்ஸ்பியரின் சில தோழிகள் இந்நிலையில் ஒத்திருக்கின்றனர். ஆனால் செயல் முறையில் மாறுபடுகின்றனர்.

6.2. 'காதற்சீரழிவு' (Love's labour's lost) எனும் நாடகத்தில், தலைவி, நாவார் நாட்டு அரசனை மணக்கும் முயற்சியில் ஈடுபடுகிறாள். ரோசலின் முதலான மூன்று தோழியர்களும் அவளுக்குத் துணை புரிகின்றனர். 'வெனிஸ் வணிகன்' (Merchant of Venice) தலைவி, போர்ஷியா வழக்கறிஞராக வேடம் புனைந்து செயல்படுகிறாள். தோழியும் எழுத்தராகவேடமிட்டு உடன் நிற்கிறாள்.

6.3. 'ஒன்றுமில்லாததற்குப் பெருங்கூப்பாடு' (Much Ado about nothing) எனும் நாடகத்தில் தோழி மார்கரெட், தலைவி ஹீரோவின் சூழ்ச்சிகளுக்குத் துணை நிற்கிறாள்.[38] தலைவி உடுக்கவேண்டிய உடை பற்றிய அறிவுரை கூறுகிறாள்.[39] திருமணம் பற்றித் தன் கருத்தரை வழங்குகிறாள்.[40]

6.4. 'குளிர்காலக் கட்டுக்கதை'யில் (Winter's Tale) தலைவி ஹெர்மியோனின் ஒழுக்கத்தில் ஐயமுற்ற தலைவன் அவளைச் சிறையிலிட, தோழி எமிலியாவும் தலைவியுடன் சிறையிலிருந்து உதவுகிறாள்.[41]

6.5. எட்டாம் ஹென்றியில், இராணி காதரைன் தன் தலைவனின் அன்பை இழந்து நோயுறுகிறாள். அவள் இறக்கும்வரை உடனிருந்து உதவுகிறாள் பேஷியன்ஸ் எனும் தோழி.[42]

6.6. சிம்பலைன் நாடகத்தின் தலைவி இமோஜன். அவளது தோழி ஹெலன், தன் தலைவியைக் கடவுள் காக்கும்படி வழிபடுகிறாள்.[43]

6.7. சந்தேகப் பேயால் பிடிக்கப்பட்ட ஒத்தெல்லோ தன் மனைவி டெஸ்டிமோனாவும் கேஷியோ என்ற கீழ்மட்டபடைத் தலைவனும் பழகிய முறை பற்றிக் கேட்டபோது, தோழி நிலையில் இருந்த எமிலியா, தன் தலைவியின் கற்பைப் பற்றித் தெளிவாக எடுத்துரைக்கிறாள்.[44] அவளை மனத்தில் சந்தேக விதையைத் தூவியவன் தன் கணவன் என்பதை அறியாமல் அக்கயவனை வன்மையாகக் கண்டிக்கிறாள்.[45] இவ்வாறு பலவேறு நிலைகளில் ஷேக்ஸ்பியரின் தோழிகள் சங்கத் தோழியைப் போலவே உசாத்துணையாகி ஆசாத்தணிவிக்கின்றனர்.

6.8. ஷேக்ஸ்பியரின் 'வெரோனா நகரின் இரு செல்வர்கள்.' (Two gentlemen of Verona ) என்னும் நாடகத்தில் புரோத்தியஸ் என்ற தலைவன் ஜூலியா எனும் தலைவியைக் காதலிக்கிறான். ஆனால் அவள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. இந்நிலையில் அவள் மனத்தை மாற்ற வருகிறாள் தோழி லூசெட்டா. தன்னைச் சந்திப்போருள் தனக்கு ஏற்றவன் யாவன் என்று தோழியிடம்உசாவுகிறாள் ஜூலியா. இருவரின் தகுதியின்மையை எடுத்துக் கூறிய அவள் புரோத்தியசைப்பற்றி, 'அவனே மிகச் சிறந்தவன்' என்று பரிந்துரைக்கிறாள்.[46] தோழியின் கருத்தைத் தலைவி மறுத்தபோதும் அவள் தளராது, தலைவனுக்குத் துணை நிற்கிறாள்.[47] அன்றியும் தலைவன் அனுப்பிய காதற்கடிதத்தைத் தலைவியிடம் தந்து, அவளை உடம்படுத்தவும் முயல்கிறாள். இது குறை நயத்தல் போன்றுள்ளது.

6.9. 'வெனிஸ் வணிகனில்' தலைவி போர்ஷியாவிடம் தோழி நெரிசா தலைவன் பெசானியாவைப் பற்றிக் குறை நயக்கிறாள்.[48] ஐந்தாம் ஹென்றியில் பிரெஞ்சு நாட்டு இளவரசி காதரைனுக்கும் இங்கிலாந்து அரசன் ஐந்தாம் ஹென்றிக்கும் திருமணம்நடைபெறுவதற்கு முன் ஆங்கிலமொழியில் வல்ல தோழியான அலைஸ், அடிப்படையான ஆங்கிலச்சொற்களைத் தலைவிக்குக் கற்றுத் தருகிறாள். ஐந்தாம் ஹென்றி, இளவரசியிடம் தன் காதலை

வெளிப்படுத்தியபோதும், மொழி பெயர்ப்பாளராக இருந்த பாண்டியற் கட்டத்தக் குறைநயப்பித்தலுக்கு ஒரு சான்று எடுத்துக்காட்டாக அமைகிறது.[49] 'அந்தோனியும் கிளியோபாத்ராவும்' எனும் நாடகத்தின் தலைவி உலகப் பேரழகி கிளியோபாத்ரா, அவளது தோழி சார்மியன், தலைவன் அந்தோணி சற்று விலகி இருந்தபோது, அவனை அதிகமாகச் சோதிக்க வேண்டாம் என்று கூறுகிறாள்.[50] இது வலிதாகச் சொல்லின் குறைநயத்தல் துறையில் 'தலைவியை முனிதல்' என்னும் துறையின்பாற்படும்.

6.10. ~~ஷேக்ஸ்பியரின் 'அந்தோனியும் கிளியோபாத்ராவும்' என்னும்~~ அந்நாடகத்தில் அந்தோணியின் பிரிவால் மனமுடைந்த தலைவியைச் சார்மியன் ஆற்றுவிக்கின்றாள்.[51] 'வெரோனா நகரின் இரு செல்வர்களில்' மிலான் நகருக்குப் போன தன் தலைவனைத் தொடர்ந்து செல்ல விரும்பும் தலைவியிடம் தலைவனைப் பழித்துத் தலைவியை ஆற்றுவிக்கிறாள். அவளிடம் 'உறுதிமொழியும் கண்ணீரும் ஆழ்காதலின் நடத்தைகளும் ஏமாற்றுமவிதனின் வேலையாட்கள்' என்கிறாள்.[52]

6.11. தமிழிலக்கியங்களில் தோழி, கற்பில் தலைவியின் மகவினை வளர்க்கும் செவிலியாக மாறுகிறாள். இவ்வாறே, ஷேக்ஸ்பியரின் 'குளிர் காலக் கட்டுக்கதை'யில் தன் தலைவி ஹெர்மியோனுக்குப் பிறந்த குழந்தைக்குத் தோழி எமிலியா செவிலியாக மாறுகிறாள்.

7. சங்கத் தோழி நுண்ணறிவு மிக்கவள். ஷேக்ஸ்பியரின் தோழியும் அப்படியே இருக்கிறாள். 'ஒன்றுமில்லாததற்குப் பெருங்கப்பாடு' எனும் நாடகத்தில் அன்டோனியோ என்ற பிரபுதன் பெயரைச் சொல்ல மறந்தபோது, அவனுடைய தலையாட்ட அடையாளம் கொண்டே அவனது பெயரைக் கூறிவிடுகிறாள் நுண்ணறிவுடைய தோழி உர்சுலா.[53]

7.1. தமிழிலக்கியத் தோழியும்ஷேக்ஸ்பியரின் தோழியும் சில நிலைகளில் வேறுபடுகின்றனர். தமிழிலக்கியத்தில் தோழியைப் பெறுக தலைவி

இல்லை. ஆங்கில இலக்கியத்தில் தோழி சுட்டப்பெறாத நிலையிலும் தலைவி இயங்குகிறாள்.

7.2. தமிழிலக்கியத்தில் ஒரு தலைவிக்கு ஓர் உயிர்த்தோழிதான் காட்டப்படுவாள். ஷேக்ஸ்பியரின் மூன்று நாடகங்களில், ஒரு தலைவிக்கே தோழிகள் பலர் உள்ளனர்.[54]

7.3. நாடகத்திற்கு ஏற்றமுறையில் ஷேக்ஸ்பியரின் தலைவியர்கள் மாறுவேடம் புனையும்போது தோழிகளும் உடன் புனைகின்றனர். 'காதற் சீரழிவில்' தலைவனைத் தேடி நாவார் நாட்டிற்குத் தலைவியோடு தோழிகளும் செல்கின்றனர். தலைவி தலைவனை மணக்க முயலும்போது தோழியர் மூவரும் தலைவனின் தோழர் மூவரையும் மணக்க ஒருப்படுகின்றனர். அதற்காக மாற்றுடை சூடித் தாமும் தம் காதலர்களை ஏமாற்றுகின்றனர். 'வெனிஸ் வணிகனில்' தலைவி வழக்கறிஞராக வேடம் பூண்டு விளையாற்றியபோது தோழி வழக்கறிஞரின் எழுத்தராக வேடம் புனைந்து துணை நிற்கிறாள்.

7.4. தமிழிலக்கியத்தில் தலைவனின் தோழனை, தோழி மணப்பதாகக் காட்டப் பெறுவதில்லை. 'வெனிஸ் வணிகனில்' போர்ஷியா பெசானியோவை விரும்பும்போது தோழி நெரிசாவும் தோழன் கிரேஷியானோவை விரும்புகிறாள். தலைவன் தலைவியைப் பெற்றால் தானும் தோழனை மணந்து கொள்வதாக உறுதி கூறுகிறாள்.[55]

7.5. தமிழில் தலைவியினுடைய வாழ்வின் மையப்பகுதியே பாடல்களாகப் புனையப்பட்டுள்ளன. தலைவியின் பிறப்பும், இறப்பும் குறிப்பிடப்படவில்லை. ஆனால் ஷேக்ஸ்பியரின் துன்பியல் நாடகங்களில் தலைவியும் மடிகிறாள். சில தோழியரும் உடன்மாய்கின்றனர். 'அந்தோனி கிளியோபாட்ரா'வில், கிளியோபாட்ரா, தோழி ஐரசுக்கு இறுதி முத்தம் தர, அதை ஏற்று அவள் வீழ்ந்து மடிகிறாள்.[56] அரசி இறந்தபிறகு வந்த காவலனிடம் "அரச

பரம்பரையில் வந்த தலைவிக்கு ஏற்ற வண்ணமே இனிதாக நடந்தது" என்று கூறிவிட்டுச் சார்மியனும் மடிகிறாள்.[57] 'ஒத்தெல்லோ'வில் தலைவி டெஸ்டிமோனா இறந்தபிறகு, கணவனால் குத்தப்பட்ட தோழி எமிலியா தன் தலைவியின் பிணத்தருகே, தானும் வில்லோ பாட்டைப் பாடிக்கொண்டே மடிகிறாள்.[58] இந்நிகழ்ச்சிகள்,

> "யாமே பிரிவின் றியைந்த துவரா நட்பின்
> இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே" (அகம்.12)

என்னும் கபிலரின் பாடல் அடிகளை நினைவூட்டுகின்றன.

8. உசாத்துணையாகி அசாத்தனிவித்தல், குறைநயத்தல், ஆற்றுவித்தல் ஆகிய முறைகள் தமிழகத் தோழிக்கும் ஆங்கில நாட்டுத் தோழிக்கும் பெரும்பாலும் ஒத்திருக்கின்றன. ஆனால், பிறவற்றில் பல மாறுபாடுகள் உள்ளன. அதற்குக் காரணம், அவர்களின் பண்பாடு, வாழ்முறை முதலியன ஆகும். உலகில் அடிப்படை உணர்வுகளில் மாறுபாடு இருப்பதில்லை. ஆனால், அவற்றைப் புலப்படுத்தும் முறையில் வேறுபாடுகள் இருக்கும்.

9. <u>ஆய்வு முடிவுகள்</u>

(அ) வடமொழி இலக்கியத்தில் நாடகங்களில் மட்டுமே தோழி வருகிறாள். சங்கஇலக்கியத்தில் தலைவியுடன் சமநிலையில் பழகும் தோழி உண்டு. வடமொழியிலக்கியத்தில் நிலை வேறுபடும் மூவகைத் தோழியர் உளர்.

(ஆ) தமிழிலக்கியத்தில் தலைவிக்கு ஒரே ஒரு உயர்த் தோழி மட்டும் இருந்திருள்; பிறமொழி இலக்கியங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட தோழியரும் உண்டு ~~இருந்தனர்~~.

(இ) வடமொழி, தெலுங்கு இலக்கியங்களில் தோழி பெரும்பாலும் ஏதியாகவே செயல்படுகிறாள். சங்க இலக்கியத் தோழி அவ்வாறு செய்யவில்லை.

(ஈ) தோழி தலைவியிடம் பிராகிருத மொழியில்தான் பேச வேண்டும் என்ற நியதி இருந்திருக்கிறது.

(உ) பிறமொழித் தோழியர், சிறுபான்மை தமிழ்த் தோழியருடன் ஒத்திருக்கின்றனர். பெரும்பான்மை மாறுபடுகின்றனர்.

(ஊ) தலைவியின் தோழி தலைவனுடையதோழனை மணப்பதாக நிகழ்ச்சிகள் அமைக்கப்பட்டுள்ளன.

(எ) தோழி சிறைபிடிக்கப்பட்டவளாயும், அடிமையாகவும் வடமொழி இலக்கியத்தில் காணப்படுகின்றாள். பத்ரலேகை என்பவள் தலைவனின் அந்தரங்கத் தோழியாகஇருக்கிறாள். தமிழில் இத்தகைய நிலைகள் இல்லை.

***

## இயல் பத்து

## புலவர்கள் கண்ட தோழி

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரனாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"

— கபிலர், குறுந்தொகை 18.

"அகவன் மகளே அகவன் மகளே
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே".

— ஔவையார், குறுந்தொகை 23.

## புலவர்கள் கண்ட தோழி

0. ஒவ்வொரு புலவரும் தோழி பாத்திரப் படைப்பில் எந்தெந்த நிலையில் சிறப்பு அம்சங்களைக் கையாண்டனர் என்பது இக்கட்டுரையில் திறனாயப்படுகிறது. அனைவரையும் திறனாய்வு செய்ய முடியா நிலையில் ஆண்பாற் புலவர்களில் பதின்மூவரையும் பெண்பாற் புலவர்களில் மூவரையும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றது. அவர்கள் பாடிய பாடல்களின் எண்ணிக்கையை ஒட்டி ஆயப்படுகின்றது. 384[1] அகப் புலவர்களில் 246[2] பேர் தோழியைப்பாடியுள்ளனர். அவர்களில் 16 பேர் பெண்பாற் புலவர்கள்.[3] 107 புலவர்கள் தோழியை மட்டுமே பாடியவர்கள்.[4]

### 1. கபிலர்

1.0. பிற புலவர்களால் பாராட்டப்படும் இவர் அகம், புறம் ஆகிய இரண்டிலும் 235 பாடல்களைப்பாடியுள்ளார். இவர் தோழி கூற்றாக மட்டும் 126 பாடல்கள் யாத்துள்ளார்.[5] இதிலிருந்து அவருக்குப் பிடித்த அகமாந்தர் தோழியே என்பது புலனாகும். இவர் நெய்தல் திணையில் கற்பொழுக்கத்தில் ஒரே ஒரு பாடலைத்[6] தவிர மற்றவை அனைத்தையும் குறிஞ்சித் திணையிலேயே பாடிக் 'குறிஞ்சிக் கபிலர்' என்ற பெருமைக்குரியவராகிறார்.

1.1. அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, செலவழுங்குவித்தல், வாயில் மறுத்தல் முதலிய பிற திணைத் துறைகளையும் குறிஞ்சித் திணையிலேயே இவர் பாடியுள்ளார். ஐந்தே கற்புப் பாடல்களைப் பாடியுள்ளதால் இவர் களவு விரும்பி என்பது புலனாகும்.[7] இவர் தொடாத துறை இல்லையெனலாம்.[8] களவுத் துறைகளில் இவரே அனைவரினும் அதிகமாகப் பாடியுள்ளார்.[9] இவருடைய தோழி தலைவன்,[10] தலைவி,[11] செவிலி,[12] பாணன்,[13] கழங்கு,[14] கிளி,[15] நெஞ்சு[16] ஆகியோரிடம் உரையாடுகிறாள். மற்றவர் கையாளாத உவமைகளை ஆளும் திறத்தினர். வரைவு கடாதல் துறையில்

இவருடைய தோழி அதிகமாகச் செயலாற்றுகிறாள்.[17] நேரிடையாகவே வரைவு கடாதலினும் குறிப்புப் பொருளால் வரைவு கடாவும் நனி நாகரிகத்தள்;[18] மற்றவர்களை விட பாரியிடம் நெருங்கிப் பழகிய கபிலர், வரலாற்று உவமைகளை அதிகமாக ஆளாமை குறிக்கத்தக்கது.[19] கபிலருடைய தலைவி கண்ணழகி. அதனால் தலைவியின் கண்ணழகில் ஈடுபட்ட தோழி பெரிதும் அவள் கண்களைப் போற்றுகிறாள். அவளுடைய கண்ணழகை வெவ்வேறு முறையில் ஆறும் முறையே அவருடைய சொல்லாற்றலுக்கும், உவமைகளை ஆளுந்திறனிற்கும் எடுத்துக்காட்டாகும்.[20]

"விலங்கோரார் மெய்யோர்ப்பின் இவள்வாழாள் இவளின்றிப்
புலம்புகழ் ஒருவ யானும் வாழேன்"[21]

"யாமே பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே"[22]

என்று கபிலரின் தோழி தலைவிக்கும் தனக்குமுள்ள உறவைத் தெளிவாக்குகிறாள்.

1.2. கபிலருடைய ஒரு பாடலில் மட்டுமே, இதுவரை தலைவனைப் பணிவித்த தோழி, தோழியிற் கூட்டத்தின் பின் தானே பணிந்து தொழுவதாகக் காட்டப்படுகிறாள்;[23] இவருடைய தோழி தலைவனை வரைவு கடாவத் தலைவியின் ஆற்றாமையையே கருவியாகக் கொள்கிறாள்.[24] தலைவனின் புதுவை போலும் வரவும், தலைவியின் வதுவை நாண் ஒடுக்கமும் காண்பதை விழைகின்றவள்.[25] கழங்கினிடம் உரையாடுவது போன்று அறத்தொடு நிற்கிறாள்.[26] இவள் தொல்காப்பியர் கூறிய அறத்தொடு நிற்கும் முறையை இலக்கியமாக்கியவள்;[27] உடன்போக்குமேற்கொண்டு திரும்பிவந்த தலைவனிடம் தான் தாய்க்குக் கூறியதை மகிழ்வோடு தெரிவிக்கிறாள்;[28] வரைவிடை வைத்த பொருள்வயிற் பிரிவில் மட்டுமே இவருடைய தோழி ஆற்றுவிக்கிறாள்; நல்விரிச்சி கூறியதால், 'அமுதம் உண்க நம் அயலிலாட்டி' என இவள் மட்டுமே வாழ்த்து-கிறாள்.[29] தலைவன் வரைவு மலிதலைக் கூறி அதிகமாக மகிழ்பவள் இவருடைய தோழிதான்.[30] தான் வரைவு கடாவியதால், அறத்தொடு நின்றதால், வள்ளைப்பாட்டில் தலைவனை இயற்பழித்ததால் தலைவன் வரைவு மேற்கொண்டான்

எனக் காரணமும் கூறி வரைவு மலிதலில் மகிழ்கிறள்.[31] இவ்வமைப்பைக் கபிலர் கலித்தொகையில் மட்டுமே கையாள்கிறார். மணவணி நாள் காட்சியைக் கற்பவேயில் கண்டு மகிழ்கிறள்.[32] வதுவைசெல்லா நின்றழி தலைவியின் கூந்தலில் மலரணிந்தோயே, இனிது செய்தனையால், நுந்தை வாழியர்' எனத் தலைவன் தந்தையைப் பற்றிய குறிப்பு இப்பாடலில் மட்டுமே வருகிறது.[33]

1.3. இவருடைய தோழியின் தனிச்சிறப்பிற்குக் குறிஞ்சிப்பாட்டு ஒன்றே சாலும். ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழறிவுறுத்த விரும்பிய கபிலர் தோழி படைப்பையே தெரிந்தெடுத்துள்ளார். தலைவி, செவிலி, நற்றாய் போன்றவர் அறத்தொடு நிற்கும் உரிமை இருந்தும் அவர்களைத் தெரிந்தெடுக்காமல் தோழியையே அவர் தேர்ந்தெடுத்துக் கொண்டது அவளது சிறப்பை விளக்கும். அறத்தொடு நிற்றலில் தான் தோழியின் பொறுப்பு சிறப்பாக விளக்கப்படுகிறது.[34] தமிழரின் விருந்தோம்பும் பெருமையும் விளக்கப்படுகிறது.[35] களவு கற்பு மணங்கள் விளக்கப் பெறுகின்றன.[36] களவின் முட்டுப்பாடுகளை நிரல்படக் கூறுபவளும் இத்தோழி-தான்.[37] 99 மலர்களை அடுக்கிக் கூறுபவளும் இவளேதான்.[38] இவ்வாறு குறிஞ்சிப்பாட்டில் கபிலர் தோழியைப் பல்கலைச் செல்வியாகப் படைத்து இலக்கிய விருந்து அளித்திருக்கிறார்.

## 2. ஓரம் போகியார்

2.1. அகப் புறப் புலவராகிய இவர் மருதத்திணை தவிர வேறு திணை பாடாதவர். 110 பாடல்களுக்குரிய இவர் தோழி கூற்றாக மட்டுமே 48 பாடல்களைப் பாடியுள்ளார்.[39] மருதத் திணையாதலால் அவற்றில் பரத்தையிற் பிரிவு பற்றிய பாடல்களே அதிகம். புறத்தொழுகி மீண்ட தலைவியின்திருந்தியபின், தான் இல்லாதபோது இவர்களுடைய நிலையைக் கேட்கிறான்; கற்புத் தலைவன் களவுக்கால நிலையை வினவுகிறான். விடையாகத் தோழி, தலைவியின் பொதுநலப் பாங்கும் தோழியின் தலைவி நலப்

பாங்கும்உரைப்பதும் ஓரம்போகியாரின் தோழிக்கே உரியது.[40] இவள் 'வாழி ஆதன் வாழி அவினி' என அகத்தில் புறத்தைக் கலக்கிறாள். தலைவனிடம் புலவி நீங்காத தலைவிக்குத் தோழி அறிவுரை கூறும் பாடல் உலகப் புகழ் பெறும் தகுதியுடையது.[41] மருதத்திணையில் தலைவனின் பரத்தமை நினைந்து வருந்தும் தலைவியைத் தேற்றுவதும்,[42] தாய்க்கு அறத்தொடு நிற்பதும்[43] இத்தோழிக்கே உரிய செயல்கள்.

3. அம்மூவனார்

3.0. அகம்மட்டுமே பாடிய அம்மூவனார் 127 கவிதைகளை இயற்றியுள்ளார். இவர் நெய்தல் திணையில் மட்டுமே தோழி கூற்றாக 45 பாடல்களைப் பாடியதால், இவரை நெய்தல் புலவர் எனலாம்.[44] களவு, கற்பு இரண்டையும் நெய்தல் திணையிலேயே பாடியவர். உடன்போக்கு, வாயில் மறுத்தல், நேர்தல், செலவழுங்குவித்தல் போன்ற பிறதிணைத் துறைகளையும் இவர் நெய்தல் திணையிலேயே பாடியுள்ளார். நெய்தல் திணையில் எல்லாத் துறைகளிலும் பாடமுடியும் என்பதற்கு இவரே சான்று.[45] இவர் தன் தோழியின் மூலமாக, தொண்டி,[46] மாந்தை[47] முதலிய ஊர்களையும், செங்குட்டுவனையும்[48] பற்றிக் குறித்துள்ளார்.

3.1. தோழி தலைவனிடம் கையுறை மறுக்கும் நிலையில் இரண்டே பாடல்கள் காணப்படுகின்றன.[49] தீப்புத்தோளாரின் குறிஞ்சித் தோழி தலைவன் கொடுத்த 'குருதிப்பூவின் குலைக்காந்தளை' மறுக்கிறாள்.[50] அம்மூவனாரின் நெய்தல் தோழி, தலைவன் கொடுத்த நெய்தல் தழையாடையைக் காரண காரியங்காட்டி நனி நாகரிகத்துடன் மறுக்கிறாள்.

3.2. நெய்தல் திணையில் இவருடைய தோழிதான் அதிகமாகச் செவிலியிடம் அறத்தொடு நிற்கிறாள்.[51] நொதுமலர் வரைவில் உள்ள நிலையில் இருப்பவள் இவருடைய தலைவிதான். அதனால் இவருடைய தோழியும் அஞ்சாதவளாய் செவிலியிடம் நேராகவே அறத்தொடு நிற்கிறாள்.[52] அறத்தொடு

நின்ற பிறகும் மறுபடியும் வற்புறுத்துகிறவரும் இவருடைய தோழிதான்.[53] அறத்தொடு நின்ற பிறகு தலைவன் வாராதவிடத்து ஐயுற்றுச் செவிலி வினவியபோது, இத்தோழி மட்டுமே தலைவனின் அன்பைக் கூறி, உறுதிப்படுத்துகிறாள்.[54] பொருளீட்டி வந்த தலைவனைக்காட்டிச் செவிலியிடம் மகிழ்வதும்[55] வதுவை நிகழுங்கால் செவிலியுடன் தன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்வதும்,[56] புதல்வற் பெற்றுழித் தலைமகன் மனைக்குச் சென்ற செவிலிக்கு அவன் ஊர் நன்மை காட்டி மகிழ்வதும்[57] அம்மூவனாரின் தோழிக்கே உரிய செயல்கள் ஆகும்.

3.3. உடன்போக்கும் நிலையில் தலைவியைப் பாயலுணர்த்த நலங்கவர் பசலையை நகுவோம் என அழுகையூடே சிரிப்பதும் அம்மூவனாரின் தோழிக்கே உரிய சிறப்பு.[58] சங்க இலக்கியத்திலேயே தலைவியை உய்ப்பதும், வாழ்த்துவதும் அம்மூவனாருடைய தோழியின் செயல்கள். தலைவியிடத்து, 'துறைவனை, இனிது முயங்குமதி காதலோயே' என்று மகிழ்ந்து வாழ்த்தியும்,[59] தலைவனிடத்து 'மடந்தைக்குஅங்கு வளர்த்து அகறல் வல்லாதீமோ'[60] என வாழ்த்தியும் செயலாற்றுகிறாள் தோழி.

3.4. மணமனைப் பிற்றைஞான்று புக்க தோழியிடத்துத் தலைவன் நன்றியோடு நன்காற்றுவித்தாய் என்று கூறும்போது மறுமொழி கூறுவதாகச் சங்கஇலக்கியத்தில் இரண்டே பாடல்கள் அமைகின்றன. அவற்றில் ஒன்று அம்மூவனாரின் தோழிக்கும்,[61] மற்றொன்று உலோச்சனாரின் தோழிக்கும் உரியது.[62] இரு பாடல்களிலும் தலைவியின் நலம் ஊருடன் ஒப்பிடப்படுகிறது. இருவரின் தோழிகளும் நெய்தல் தோழியர். அம்மூவனாரின் தோழி "பண்டும் இவ்வாறு நீ பிரியின் வருந்தும் தன்மையள்" என்று களவுக்கால வாழ்க்கையை நினைப்பூட்டுகிறாள். உலோச்சனாரின் தோழி 'எங்களை நினைத்த நீயே பெரியை" என அடக்கத்துடன் மகிழ்ந்து கூறுகிறாள்.

3.5. செலவழுங்குவித்தல் நிலையில் இவரது பாடலில் நுண்ணியதோர் மாற்றம் நிழலிடுகிறது. எல்லாத் தோழியரும்தலைவனைச் செலவழுங்குவிக்க

அம்மூவனாரின் தோழி மட்டும் இளங்கி, ஆனால் அவளைச்சார்ந்து நிற்கும் தலைவி நிலை கூறி விரைவில் வர வேண்டுகிறாள்.[63]

"தாயுடன் றலைக்கும் காலையும் வாய்விட்
டன்று வெண்ணுங் குழவி போல
இன்று செயிறும்இவிதுதலை யவிப்பிலும்
நின்வரைப் பினளென் தோழி"

என்பது அம்மூவனாரின் தோழி காட்டும் சொல்லோவியம்.[64] நெய்தல் திணையில் தோழி வாயிலாரிடம், வாயில் மறுப்பதாக அமையும் இரு பாடல்களும் அம்மூவனாரின் தோழிக்கே உரியன.[65] சுருங்கக் கூறின் அகப்பொருளில் மட்டுமே பாடிய அம்மூவனார் அக்காலத்தில் தன் தோழி மூலமாக இலக்கியத்தில் பல புதுமைகளைச் செய்த பெரியார் எனலாம்.

4. பாலை பாடிய பெருங்கடுங்கோ

4.0. அகப்புறப் புலவராகிய பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய 68 பாடல்களில் தோழியின் கூற்று 40 எனில் இவர் உள்ளங்கலந்த பாத்திரம் தோழியே எனலாம்.[66] பாலைபாடிய பெருங்கடுங்கோ என்பதற்கேற்ப இவர் பாலைத்திணை தவிர வேறு திணைப்பாடாப் புலமையாளர். களவு வாழ்வைவிடக் கற்பு வாழ்வையே பெரிதும் விரும்புபவராக இவர் காணப்படுகிறார். அதனால் இவர் தோழியும் பாலைத்திணைக்கேற்பத் தலைவியை ஆற்றுவிக்கிறாள்;[67] தலைவனைச் செலவழுங்குவிக்கிறாள்;[68] உடன்போக்கிற்கும்[69] தூண்டுகிறாள்.

4.1. அரசராகிய இவர் வரலாற்றுக் குறிப்புகளை மிகுதியாகச் சுட்டாமல் மிகச் சில இடங்களில் மட்டுமே அறுவது வியத்தற்குரியது. நாட்டு வளப்பத்தைக் கூற வரலாற்றுக்குறிப்பை ஆளவந்த இவர், தன் நாட்டைக் குறிக்காமல் நன்னனின் எழிற்குன்றத்தைக் குறித்தமை இவரது பரந்த மனப்பான்மையைக் காட்டுகிறது.[70] அரச வாழ்வில் திளைத்த இவர் மற்றவர்களை விடச்

செல்வ வாழ்வில் வெறுப்புக் கொண்டு செலவழுங்குவித்தலில் பொருளின் புன்மையைத் தன் தோழியின் மூலமாகவே வெளிப்படுத்துகிறாள்.[71]

4.2. அரசப் புலவராகிய இவர் இயற்கையில் மிகவும் ஈடுபாடு கொண்டவர். இளவேனிற் காலத்தை வருணிக்கையில் இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்கிறார்.[72] மற்ற புலவர்கள் தலைவனின் வரவுக்காலமாகக் கார்காலத்தைச் சுட்ட இவரோ, தலைவன் வேனிற்காலத்தில் வருவேன் என்றதாகவும், அதனால் தலைவி வேனில் கண்டு ஆற்றாது துடிப்பதாகவும் புதுமை செய்துள்ளார். அதனால் தலைவியை ஆற்றப்புகும் தோழி இளவேனில் தரும் இன்ப நுகர்ச்சிகளுக்காகவாவது வருவார் என்று கூறுவதை உத்தியாகக் கொள்கிறாள்.[73]

4.3. இவருடைய தோழி பாலைக்காட்சியைப் படம் பிடித்துக் காட்டும் அளவிற்கு வேறு யாரும் வருணிக்கவில்லை. செலவழுங்குவித்தலில் இவருடைய தோழி பாலைநிலக் கொடுமை சுட்டிச் செலவழுங்குவிக்கிறாள்.[74] பாலைநிலக் கொடுமை கூறி, ஆயினும் விரைந்து வருவர் என ஆற்றுவிக்கிறாள்.[75] ஆற்றுவித்தலுக்கேற்ப உளவியல் வல்ல தோழி பாலைநிலத்து அன்புக் காட்சி-களையும் காட்டுகிறாள்.[76] இவருடைய தோழிக்குப் பிடித்தமான விலங்கு யானைக் குடும்பமே.[77] இவ்வியானையே வருந்தும் சுரம் என்னும் முறையில் இவளால் உயங்கும் யானை காட்டப் பெறுகிறது.

4.3.1. தலைவன் தலைவியைப்பிரிய நினைக்கும் சொல் தோழிக்கு 'அருளில் சொல்'லாகிறது.[78] பிரியலன் என்பது 'நன்னர் மொழியாகிறது'.[79] இவருடைய கலித்தொகைத் தோழி தலைவனைச் செலவழுங்குவித்தலை விட செல்லாமையையே கருதுகிறாள். செலவழுங்குவிக்கும் தோழி 'மாதல் மகன்'[80] 'மகனல்லை மன்ற இனி'[81] எனத் தலைவனைக்கடுமையாகவே சாடுகிறாள். தலைவியின் கற்பைத் தலைவன் உளங்கொள்ளும் வண்ணம் கூறுபவளும் இவளே.[82] பெருங்கடுங்கோவின் தோழியும் உடன்போக்கில் தலைவியுடன் சென்றிருக்கிறாள். அதனால் உடன்போக்கில் நடந்த நிகழ்ச்சி கூறிச் செலவழுங்குவிக்க முனைகிறாள்.[83]

4.4. இவருடைய தோழி தலைவியின் துயர் கூறுபவளாகவே அமைகிறள். தலைவியின் துயரைச் செவவுறுங்குவித்தலுக்குக் கருவியாக்குகிறள்.[84] ஆற்றுவிக்கும்போதும் தலைவியின் துயர் கூறி வருந்தாதே தலைவர் வருவர் எனவும், இளவேனிற் பருவ வரவில் வருந்தும் தலைவியை ஓவியமாகக் காட்டி 'அவர் வந்தனர்' வருந்தாதே[85] எனவும் ஆற்றுவிக்கிறள்.

"கேள்வி யந்தணர் கடவும்
வேள்வி ஆவியின் உயிர்க்குமென் நெஞ்சு"

என்பது இத்தோழியின் துன்ப ஓவியம்.[86]

4.5. தோழியின் சொல்லாற்றலால் 'காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல் யாழ்வரைத் தங்கியாங்கு', தலைவன் இவள் சொல்லுக்குக் கட்டுப்படுகிறன்.[87] அவனுடைய பொருள்வயின் நிலைந்த சொல் 'திருந்திய யாக்கையின் மருத்துவ னூட்டிய மருந்துபோல் தலைவனுக்கு மருந்தாகிறது.[88] பெருங்கடுங்கோ தன் தோழி மூலம் புராண உவமைகளை ஆள்கிறர்.[89] தன் வாழ்வில் பெற்ற அநுபவங்களையும் உவமையாக்குகிறர்.[90] வறுமையில் வாடிய புலவர்கள் கூட அநுபவித்து எழுதாத வாழ்வின் உண்மைகளை இவர் ஆண்டுள்ளது வியத்தற்குரியது.[91] யாருமே எடுத்தாளாத சிறந்த உவமைகளும் இவரால் ஆளப்பட்டுள்ளன.[92] இவர் ஆங்காங்கே தன்னையும் இனங்காட்டிக் கொள்கிறர்.[93]

5. <u>பேயனர்</u>

5.0. இவர் அகப்பொருளில் மட்டுமே 105 பாடல்களைப் பாடிய இவர் தோழியின் கூற்றாக 31 பாடல்களைப் பாடியுள்ளார்.[94] பேயனரின் தோழி இலக்கியத்தில் புதுப்பாதை அமைத்த சிறப்பு உடையவள்.

5.1. பொதுவாகப் பாலைத்திணையில் கொடுங்காட்சி கண்டு தலைவி வருந்துவாள். தோழியும் அங்குக் கொடுங்காட்சிமட்டும் அன்று;

அன்புக்காட்சியும் உண்டு என்று ஆற்றுவிப்பாள். முல்லைத்திணையில் சுரம் நன்றே எனத் தலைவி வருந்தச் சுரம் நன்று எனப்பேயனாரின் தோழி மட்டுமே ஆற்றுவிக்கிறாள்.[95] நாடுபடு நன்கலம் தருவதற்காகத்தான் நீடினர் எனக் காரணம் காட்டி ஆற்றுவித்தல்[96] இவருடைய தோழிக்கே உரிய செயல். பாணனைக் கண்டவுடனேயே வெகுள்வது இயல்பு. ஆனால் இவருடைய முல்லைத் தோழியோ பாணனைக் கடியாமல் தலைவன், தலைவியின் வேதனையை உணராமைக்காக இரங்கியும் கார்ப்பருவத்தில் வருவேன் என்று கூறிய பொய்படு கிளவிக்காகக் கடிந்தும் அவனிடம் கூறுகிறாள்.[97] மருதத்திணையில் தலைவனின் அன்பைப் பாணனுக்குக் காட்டி மகிழ்கிறாள்.[98] இவ்வாறு பேயனாரின் தோழி இருதிணைகளில் மாற்றம் பெறுகிறாள்.

6. <u>உலோச்சனார்</u>

6.0. உலோச்சனார் அகம், புறம் பாடிய புலவராயினும் அகத்திணையே இவருடைய உள்ளங்கவர்ந்துள்ளது. புறத்தில் 3 பாடல்கள் பாடியுள்ள இவர் அகத்தில் 32 பாடல்கள் பாடியுள்ளார். அதில் 28 பாடல்கள் தோழி கூற்றாக அமைந்துள்ளதால் அவருக்குப் பிடித்த மாந்தர் தோழி என்பது புலனாகும்.[99] நெய்தல் தவிர வேறு திணை பாடாதவர் இவர். தோழியின் வரைவு கடாதல் செயலே இவர் உள்ளம் கவர்ந்துள்ளது. தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் பேசுவதாகவே பல பாடல்கள் அமைந்துள்ளன.[100] நெய்தல் திணையிலே வரைவு கடாதலை விரும்பிய இவர் குறை நயத்தல், குறை நேர்தல், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, வரைவு மலிதல், ஆற்றுவித்தல், வாயில் மறுத்தல் ஆகிய துறைகளையும் பாடியுள்ளார்.[101]

6.1. இவர் தன் தோழியின் மூலம் ஆய்[102] பெரியன்[103] போன்ற மன்னர்களையும் பொறையாறு, உறந்தை, முன்றுறை[104] முதலிய ஊர்களின் வரலாற்றுக் குறிப்புகளையும் தருகிறார். இவர் 'அலர்ப்புலவர்'

என்று அறிஞரால் சிறப்பிக்கப்பட்டவர்.[105] இவருடைய தோழி வரைவு கடாவ அலரைச் சிறந்த உத்தியாகக் கையாளுகிறாள்.

"சிலரும் பலரும் கடைக்கண் சேர்த்தி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்ற"

என்பது உலோச்சனாரின் தோழி காட்டும் அலர் ஓவியம்.[106]

6.2. இவருடைய பாடல்களில் தேரின் வரவும் செலவும் பயின்று வருகிறது.[107] "ஊர் வருணனையைப் பயின்றதம் பாடல்களில் படைக்கும் இந்நெய்தற் புலவர் அகப்பாட்டுச் செய்தியோடு ஊரின் இயற்கைப்படிமங்களையும் மக்களின் மனப்பாங்குகளையும் இணைக்கும் இலக்கிய உத்தித்திறன் வாய்ந்தவர்" என்று புகழ்வர்.[108] இவருடைய தோழி தலைவியின் ஆற்றுமை கண்டு தலைவனை இரவிலும் தங்க வேண்டும் நிலையில் தமிழர்களின் விருந்தோம்பற் சிறப்பைப் புலப்படுத்துகிறாள்.[109]

6.3. உலோச்சனாரின் தோழி மட்டுமே நெய்தல் திணையில் தலைவனைச் சேட்படுத்துகிறாள்.[110] குறிஞ்சித்திணையில் குடவாயிற் கீரத்தனாரும்,[111] மருதத் திணையில் ஓரம்போகியாரும்,[112] சேட்படுத்தும் தலைவனிடம் தலைவியின் இளமையையே கூறுகின்றனர். உலோச்சனாரின் தோழி மட்டுமே தலைவனின் உயர்வையும் தலைவியின் இழிவையும் கூறிச் சேட்படுத்துகிறாள். இதில் கலப்பு மணத்தையும் புகுத்துகிறாள்.

6.4. இவருடைய தோழி மட்டுமே நெய்தலில் தலைவனுக்குக் குறி நேர்கிறாள். 'பிறர் பிறர் அறியாச்சேரியிடத்து' என மறைவிடம் காட்டுகிறாள்.[113] 'உவர்விளை உப்பின் உழாஅ உழவர்' என்று உமணர்களைக் கூறுகிறாள் இத்தோழி.[114] நெய்தல் திணையில் தலைவியை உடன்போக்கு நயக்கத் தோழி கூறும் பாடல் உலோச்சனாருடையதே.[115] அம்பல் தூற்ற, தாய் அலைத்தலே உடன்போக்கிற்குக் காரணமாகிறது. ஊருக்கும் சாபமிடுகிறாள் தோழி.

6.5. அறத்தொடு நிற்றலிலும் உலோச்சனாரின் தோழி தனித்தன்மை வாய்ந்தவள். ஆலங்குடி வங்கனாரின் தோழி நொதுமலர் வரைவுழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும்போது, "கொலைவெஞ் சிறார் பட்டனன்" என முடிவாகக் கூறுகிறாள்.[116] போந்தம் பசலையாரின் தோழி 'நெடுந்தேர் கொடிஞ்சி பற்றிநின்றோன் போலும் இன்றுமென் மகட்கே' எனத் தெரியாதது போல் நடிக்கிறாள்.[117] உலோச்சனாரின் தோழி 'அலையல் வாழி வேண்டன்னை; ஒருதன் கொடுமையின் அலர் பாடும்; தேரில் வந்த அவன் வயச்சுறவால் மெலிந்த குதிரைகளை அவிழ்த்து விட்டு இவளைக் இளைப்பாறினன். மாலைப்போது கூடத் தங்கவில்லை. நிலாநும் அல்மரல் மழைக்கண் கூட அமர்ந்து நோக்காள். காதலர்க்கே வாய்ப்பில்லை' என உறுதியாகக் கூறுகிறாள்.[118]

6.6. வாயில் மறுத்தலில் சீத்தலைச் சாத்தனாரின் நெய்தல் தோழி 'பண்டுதான் ஆடிய சுறப்பாவையை வைத்து ஆடுவதால் அவன் வரவேண்டிய தேவையில்லை' என்று கடுமையாகத் தாக்குகிறாள்.[119] உலோச்சனாரின் நெய்தல் தோழி, "பயன்தெரி வலுவல் பாண" என நயமாக விளித்து, 'தலைவியின் துன்பம் நின் பன்மொழியால் தீராது' எனக்கூறி அவனை வாயில் மறுக்கிறாள்.[120]

7. ஓதலாந்தையார்

24 பாடல்களுரிய ஓதலாந்தையார் ஐங்குறுநூற்றில் பாலைத்திணை மட்டுமே பாடிய புலவர்.[121] இவர் அறத்தொடு நிற்றலையும் பாலையிலேயே பாடியுள்ளார். ஓதலாந்தையாரின் தோழி நிலத்திற்கேற்பக் கோங்கப் பூத்த புனைச்சியைத் தலைவியின் காதலுக்குக் கருவியாக்குகிறாள்;[122] தலைவன் உடன்போக்கு வேண்ட அவனை விரையாதே என்று கூறும் துணிவும்[123] குறிப்பாகப் பேசாமல் எதையும் நேராகவே கூறும் இயல்பும் உடையவள். தலைவி உடன்போய் மீண்டு வந்தவழி தன் நிலைமையும் ஊரவரின் நிலைமையும் கூறுபவளும் இவருடைய தோழியே.[124]

8. பரணர்

தோழியின் கூற்றாக 22 பாடல்களுக்குரிய பரணரை வரலாற்றுப் புலவர் எனலாம்.[125] முல்லைத்திணை தவிர மற்றத் திணைகளைப் பாடியவர். நன்னனைப் பற்றி மிகுதியாகக் கூறுபவர் இவர். இத்தோழியே.[126] இத்தோழி அறத்தொடு நிற்றலில் தொல்காப்பியர் கூறும் விதியையே மாற்றியவள்.[127] வாடையை நோக்கிப் பெருமிதத்துடன் கூறுபவள் இவள் மட்டுமே.[128] பெரும்பாலும் தலைவியின் அழகைத்தான் புலவர்கள் ஊருக்கு உவமிப்பர். இத்தோழி பரத்தையின் அழகிற்கு ஊரையும் வரலாற்றுக் குறிப்புக்களையும் பயன்படுத்துகிறாள்.[129] இத்தோழி மட்டுமே விறலியைக் கடுமையாகத் தாக்கி வாயில் மறுக்கிறாள்.[130]

9. மருதன் இள நாகனார்

தோழியின் கூற்றுகிய 17 பாடல்களுக்குரிய இவர், ஐந்திணை வல்லவர்.[131] துறை நயக்கும் இவருடைய தோழி, வெண்மணல் நெடுங்கோட்டு மறைகோ, அம்ம, தோழி கூறுமதி நீயே என நயமாக வினவும் திறத்தினள்.[132] இத்தோழி வினைமுற்றி மீளும் தலைவனிடம் 'எந்தை வாழிய'[133] சிறக்கநின் ஆயுள்[134] என வாழ்த்துகிறாள். மருதக்கலியில் வாயில் நேர்தல் துறையில் அமைந்த ஒரே பாடல் இத்தோழியின் சொல்லாற்றலுக்குச்சிறந்த எடுத்துக் காட்டு.[135]

10. நல்லந்துவனார்

15 பாடல்களுக்குரிய நல்லந்துவனாரின் தோழி வரைவு கடாதல் துறையில் அதிகமாகச் செயலாற்றுகிறாள். அறத்தில் நம்பிக்கை கொண்ட இவள், தலைவன் வரையாதிருப்பதற்குக்காரணம் 'தொல்வினைப் பயனே' என்கிறாள்.[136] தலைவியின் துயர்மிகுதி கூறி உடனே தேர்பூண்டு விரைக எனத் தலைவனின் அருளை வேண்டும் முறை இவருடையதோழி மட்டும் கையாளும்

உத்தி.[137] 'நீமனப்பதால் தலைவியின் துன்பத்திற்கு மருந்து கூறுபவரும் இவளே.[138] ஆதாட்டத்தை உவமை கூறும் ஒரே தோழி இவள்தான்.[139] தொடர் உவமைகளை கூறுபவரும் இவளே.[140] கன்னிப் பருவத்து வையையில் தைந்நீராடியதால்தான் வரைவு ஏற்பட்டதாக நல்லந்துவனாரின் தோழி மட்டுமே கூறுகிறாள்.[141]

11 நக்கீரர்

36 பாடல்கள் பாடிய அகப்புறப் புலவராகிய நக்கீரர் தோழி கூற்றாகப் 14 பாடல்களைப் பாடியுள்ளார். அவள் புன்னையைத் தமக்கையாக உறவு கொண்டாடுபவள்.[142] தலைவியின் மனையை 'எம்மனை' என்றும் பரத்தையின் மனையை 'நும்மனை' என்றும் கூறும் அஞ்சாமையினள்.[143]

12. மாமூலனார்

மாமூலனாரின் தோழி தலைவியிடம் வரையாடும் போக்கில் பாலைத் திணையில் மட்டுமே ஆற்றுவித்தல் தொழிலைச் செய்கிறாள். 13 பாடல்கள் தோழியின் கூற்றாக வருகின்றன.[144] தலைவியின் அன்பு காட்டியே ஆற்றுவிக்கும் இவள் நெடுந்தொலைவு செல்லினும், பெருஞ்செல்வம் பெறினும், விரைந்து வருவார் எனத் தேற்றுகின்றாள். இவள் வரலாற்றுக்குறிப்புக்களை அதிகமாக ஆள்பவள்.[145]

13. சோழன் நல்லுருத்திரனார்

சோழன் நல்லுருத்திரனார் கற்புத்திணையாகிய முல்லையில் தோழி கூற்றாகக் களவு பாடிய பெருமையர்.[146] ஏறுதழுவல் முறையில் மணமுறையை இவர் பாடலில்தான் காண முடிகிறது. இவருடைய தோழி புராண உவமைகளை அதிகமாகப் பயன்படுத்தியுள்ளாள். வரைவு நேரும் நிலையில் குரவையாடி 'வழுதி வாழ்க' எனத் தோழி தெய்வம் பரவும் நிலையில் சோழராகிய இவர் பாண்டியனைப் போற்றியுள்ளார்.[147]

14. பெண்பாற் புலவர்கள்

14.0. ஆண்பாற் புலவர்களைப் போல அத்தனை எண்ணிக்கையில் பெண்பாற் புலவர்கள் பாடவில்லை. 41 பெண்பாற் புலவர்களில் 16

புலவர்களே தோழியைப் பாடியுள்ளனர்.[148] இதற்குக் காரணம் அறிவுக் குறைபாடு என்பதன்று; புலமையைப் போற்றுவதுடன் குடும்பக் கடமையை ஆற்றும் பெரும் பொறுப்பை அவர்கள் மேற்கொண்டதும், தாம் பெறும் பெருமை நலத்திலும் தம்மைச்சேர்ந்தோரின் வாழ்வு நலனையே பேணும் தாய்மைப் பண்பை ஓம்பியதும் இதற்குக் காரணமாகலாம்.

14.1. இப்புலவர்கள் தோழியிலும் தலைவியையே அதிகமாகப் பாடியுள்ளனர். காதல் உணர்வுகளையும், ஆற்றாமை உணர்வுகளையுமே தலைவியின் உணர்வுகளாக அவர்கள் படைத்திருப்பது இயற்கையானதே. 16 புலவர்கள் தோழியின் கூற்றாக 30 பாடல்களை பாடியுள்ளனர்.

14.1.1. ஆடவர் தம்மைத் தலைவன், தலைவி என்றுகற்பனையாக நினைத்துப் பாடுவதிலும், பெண்டிர், தம்மைப் பெண்ணாகவே உணர்ந்து பாடுதல் எளிதாகும். பெண்பாற் புலவர்கள் கண்ட தோழியர் பல துறைகளிலும் செயலாற்றிலும் ஆற்றுவித்தல் நிலையில் அதிகமாகச் செயலாற்றுகின்றனர். இதற்குச் சில காரணங்களைக் கூறலாம். (1) பெண்பாற் புலவர்கள் கண்ட, கேட்ட, பழகிய பெண்களின் பிரிவுத்துயரை உணர்ந்த அநுதாப உணர்வு. (2) பெண்களின் பிரிவுத் அயரை உணராத ஆடவர் உலகத்திற்கு உணர்த்தும் நோக்கும். (3) மகளிரின் பிரிவுத்துயர் உணர்ந்த ஆடவர் இனி பிரிவைத் தவிர்க்க வேண்டும் என்ற எண்ணம். (4) இப்புலவர்களின் சொந்த வாழ்வி-லேயே உற்ற ஆற்றாமை உணர்வு பாடல்களாக மலர்ந்தமை எனச் சில காரணங்களைக் கூறலாம். அதிகமாகப் பாடல் பாடியோர் என்னும் வரிசையில் நல்வெள்ளியார், ஔவையார், வெள்ளி வீதியார் என்னும் மூவரின் தோழியர் ஆயப்படுகின்றனர்.

15. <u>நல்வெள்ளியார்</u>

15.1. பெண்பாற் புலவர்களில் தோழியின் கூற்றாக மிகுதியான பாடல்களைப் பாடியவர் இவரே.[149] தலைவியைக் குறை நயக்கும் தோழி, தலைவியின் செயல்களையெல்லாம் தன்னிடத்து நிகழ்ந்தனவாகப் படைத்து

மொழிகிறாள்.[150] கபிலரின் தோழியிலும் நல்வெள்ளியாரின் தோழி நாணுடையளாக அமைகிறாள். தலைவனை 'அங்கணாளன்' தலைவியை 'நோய்நொந்துறைவி' என்றும் சுட்டிப்புகழ் சொற்களை எடுத்தாளுகிறாள்.[151] தலைவனின் பொறுப்பற்ற தன்மையால் தலைவி படும் துயரையும், துயருக்குக் காரணம் அறியாத தாய் மயங்கி எடுக்கும் வெறியாட்டையும் அறிவுறுத்தித் தலைவனை வரைவு தூண்டுகிறாள்.[152] நொதுமலர் வரைவில் தன்னிடம் அறத்தொடு நிற்குமாறு கூறுகிறாள்.[153] தலைவியின் துயரைக் குறிப்பாகக் காட்டிச் செலவழுங்குவிக்கிறாள்.[154] தலைவியின் ஆற்றாத நெஞ்சிற்கு மருந்தாக அமைந்து ஆற்றுவிக்கிறாள்.[155]

## 16. வெள்ளி வீதியார்

16.1. வெள்ளி வீதியார் பாடிய பாக்கள் உண்மை உருக்கம்; அவர் வாழ்வுக் குரல் என்பர் தெ.பொ.மீ. அவர்கள்.[156] தோழியின் கூற்றாக 4 பாடல்கள் உள்ளன.[157] வரைவு கடாதல் நிலையில் தலைவியின் ஏக்கம் உணர்த்தப்படுகிறது.[158] வரைவு மலிதல் நிலையில் திருமணம் நடக்கும் என்று இவள் கூறும் காரணங்கள் தோழியின் அறிவுத்திறனைக் காட்டும்.[159] இவருடைய தோழி தன்னைத் தலைவியுடன் உடன்படுத்திப் பேசும் இயல்பினள்.[160]

## 17. ஔவையார்

17.0. 'எங்கெங்கு உருநலம் என்னும் பண்பு ஒலக்கம் கொள்கிறதோ அங்கெல்லாம் இப்பிராட்டியார் முன்னின்று போற்றிப் பாராட்டுவதை இவர்தம் சொல்லோவியங்களில் காணலாம்' என்பார் மு. வரதராசனார் இவரைப் பாராட்டும் புலமையர்.[161] அகப் புறப் புலவராகிய இவர் 56 பாடல்களைப் பாடியுள்ளார். அகத்துறையில் 26 பாடல்கள் பாடியிருப்பினும் தோழியின் கூற்றாக நான்கே பாடல்கள் பாடியுள்ளார்.[162]

17.1. தோழி தாயிடம் அறத்தொடு நிற்கும் முறையில் தாய் கேட்பக் கட்டுவிச்சியை நோக்கிக் கூறுவதாக இவ்வொரு பாடலே அமைகிறது.[163] மலைக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல், அகவன் மகள் என்று யாரும் பயன்படுத்தாத உவமையில் நரைமுடியைப் படம் பிடித்துக் காட்டுகிறாள். குன்றம் பாடும் கட்டுவிச்சியைத் தோழி, 'அவர் நன்னெடுங் குன்றம்' பாடும்படி வேண்டி, உண்மை அறிவிக்கிறாள் தோழி. செலவழுங்குவிக்கும் முறையில் ஔவையின் தோழி, தலைவிடம் நீரில் உள்ள குவளை கோடையிலும் வாடாத தன்மையைக் கருமுகமாக, குவளையன்ன மென்தலைவி தலைவனின் அன்பில் வாடாத தன்மையைக் குறிப்பாகக் கூறுகிறாள்.[164] தலைவனால் பிரிவுணர்த்தப்பட்ட தோழி அவன் பிரிவைத் தலைவிக்குக் கூறும் முறை உளவியல் அறிவையொட்டியது.[165] தலைமகளிடத்துப் பிரிவு பற்றிக் கூறுவதும், கேட்ட அவள் உள்ளத்து எழும் ஆற்றுமை உணர்ச்சி கண்டு, அப்பிரிவு பிறர் கூறும் பொய்யுரை எனத் தேற்றுவதும் ஔவையின் தோழி மட்டுமே கையாளும் உத்தி.

18. ஆய்வு முடிவுகள்

(அ) கபிலருக்குப் பிடித்தமான அகமாந்தர் தோழியே; இவர் குறிஞ்சித்திணையில் பிற திணைத்துறைகளைப் பாடியுள்ளார்; இவர் களவுப் பாடல்களே அதிகமாகப் பாடியுள்ளார்; இவர் பெண்ணின் கற்பழகில் ஈடுபாடுடையவர்; தோழியிற் கூட்டத்தின் பின் தலைவனைப் பணிபவள் கபிலரின் தோழியே; அயலிலாட்டியையும் தலைவியின் தந்தையையும் வாழ்த்துபவள் கபிலரின் தோழி மட்டுமே.

(ஆ) ஓரம்போகியாரின் தோழி மருதத்திணையில் தலைவியை ஆற்றுவித்தும், தாய்க்கு அறத்தொடு நின்றும் செயலாற்றுகிறாள்.

(இ) அம்மூவனாரை நெய்தல் புலவர் எனலாம்; நெய்தல் திணையில் அம்மூவனாரின் தோழிதான் மிகுதியாக அறத்தொடு நிற்கிறாள்; செவிலியுடன் சேர்ந்து மகிழும் போக்கு அம்மூவனாரின் தோழிக்கு உரியது; தலைவியைப்

பள்ளியிடத்துய்ப்பவளும் தலைவனை வாழ்த்துபவளும் இவளே; தலைவியின் பிரிவிற்காக இரங்கி, விரைவில் வரவேண்டுகிறாள் அம்மூவனாரின் தோழி.

(ஈ) பாலை பாடிய பெருங்கடுங்கோவின் தோழி கற்பு நிலையில் மிகுதியாகச் செயல்படுகிறாள்; இவர் தன் நாட்டு வளத்தைக் கூறாமல், நன்னனின் ஏழிற்குன்றம் கூறுகிறார்; அரசப் புலவராகிய இவர் பொருளின் புன்மையை விளக்குகிறார்; இவர் இயற்கையில் ஈடுபாடுடையவர்; இவருடைய தோழி பாலைக் காட்சியைப் படம் பிடித்துக் காட்டும் அளவிற்கு யாரும் காட்டவில்லை; தலைவனின் திரும்பி வரும் பருவமாக இளவேனிற்காலத்தைச் சுட்டுகிறாள் தோழி. பெருங்கடுங்கோவின் தோழி தலைவியுடன் சில நேரங்களில் உடன்போக்கிலும் சென்றுள்ளாள்; அவளுக்குப் பிடித்தமான விலங்கு யானைக்குடும்பமே; புராண உவமைகளையும் வாழ்வின் உண்மைகளையும் அதிகமாக கூறுபவள் இவளே.

(உ) முல்லைத்திணையில் வருந்தும் தலைவியைச் சுரம் நன்று என ஆற்றுபவள் பேயனாரின் தோழி மட்டுமே; இத்தோழி பாணனை வெகுளாமல் தலைவனை வெகுள்கிறாள்; மருதத்திணையில் தலைவியின் அன்பைக் காட்டி மகிழ்கிறாள்.

(ஊ) உலோச்சனாருக்கும் பிடித்த அக மாந்தர் தோழியே. நெய்தல் திணையிலேயே அவர் எல்லாத் துறைகளையும் பாடியுள்ளார்; இவருடைய தோழி வரைவு கடாவ அலரைச் சிறந்த உத்தியாகக் கையாளுகிறாள்; தலைவன் தேரின் வரவும் செலவும் இவரது பாடல்களில் பெருவரலாகக் காணப்படுகிறது; இவருடைய தோழி மட்டுமே தலைவியின் இழிவு கூறிச் சேட்படுத்துகிறாள்.

(எ) ஓதலாந்தையாரின் தோழி பாலைநிலத்திற்குரிய கோங்கம் பூத்தரு புணர்ச்சி கூறி அறத்தொடு நிற்கிறாள்; தலைவனுடன் சென்று மீண்டுவந்த தலைவிக்கு ஊரவரின் நிலை கூறுபவளும் இவள்தான்.

(ஏ) பரணரின் தோழிதான் வாடையிடமும் விறலியிடமும் பேசுகிறாள்; பரத்தையை வருடன் உவமிக்கிறாள்; அறத்தொடு நிற்றலில் தொல்காப்பியரின் விதியை மாற்றுகிறாள்; பரத்தையின் அழகிற்கு வாரினை உவமிக்கிறாள்.

(ஐ) மருதனிளநாகனாரின் தோழி கூற்றாக மருதக்கலியில் ஒரு பாடலே அமைகிறது.

(ஒ) நல்லந்துவனாரின் தோழி விலைப்பயலில் நம்பிக்கை கொண்டவள்; குதாட்டத்தை உவமித்தவள் இவளே.

(ஓ) நக்கீரரின் தோழி புன்னையைத் தமக்கையாகக் கூறுபவள்.

(ஔ) மாமூலனாரின் தோழி தலைவனின் அன்பு கூறியே தலைவியை ஆற்றுவிக்கிறாள்.

(அஅ) பெண்பாற் புலவர்கள் குறைந்திருப்பதற்குக் காரணம் விளக்கப்பட்டுள்ளது; பெண்பாற் புலவர்களின் தோழியர், ஆற்றுவித்தலில் அதிகமாகப் பாடுகின்றனர்.

(அஆ) நல்வெள்ளியாரே பெண்புலவர்களில் தோழியின் கூற்றாக மிகுதியாகப் பாடியுள்ளார்; இவரது தோழி கபிலரின் தோழியினும் நாணுடையவள்.

(அஇ) தலைவனின் பிரிவால் தலைவிக்கு ஏற்பட்ட ஆற்றாமையை உணர்ந்து, அப்பிரிவு பிறர் கூறும் பொய்யுரை எனத் தேற்றுவது ஔவையின் தோழி மட்டுமே ஆவாள்.

***

## இயல் பதினொன்று

## வழிவழித் தோழி

"தற்பயந்தாட் கில்லை தன்னைப் புறங்காத்த
எற்பயந் தாட்கும் எனக்குமோர் சொல்லில்லை
கற்புக் கடம்பூண்டு காதலன் பின்போந்த
பொற்றொடி நங்கைக்குத் தோழிநான் கண்டீர்"

— சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதை 4.

"மாசறு பொன்னே வலம்புரி முத்தென்பன்
காசறு நல்வைரமே கண்ணே — பேசுதேனே
ஆருயிர் நன்மருந்தே ஆற்றல்சால் பாவையே
ஒருயிர் நாமன்றோ ஒர்தோழி"

— புலவர் ஆ. வே. நரசிங்கப் பெருமாள்,
'தோழி விடு தூது' — பக் 26

## வழிவழித் தோழி

0. தோழியின் சிறப்புகள் இதுவரை கூறப்பட்டன. இக்கட்டுரையில் தோழி இல்லை என்றால் என்ற வினவினை எழுப்பி விடை காண முயலும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. சங்ககாலத்தில் உயர்ந்த நிலையில் இருந்த தோழி பின்னால், காலந்தொறும் பெற்ற மாற்றங்களையும் விளக்க முனைகிறது.

### தோழி இன்றேல்

1. சங்க இலக்கியத்தில் தோழி இல்லையேல், பாங்கற் கூட்டத்தின் பின் தலைவியின் காதலைப் புதுப்பிக்கும் நிலையில் ~~அன்பு~~ அன்பை ஆராய்பவர் இல்லை; அதைத் தலைவியிடமே கூறுவார் இல்லை; இணங்கிய தலைவியைத் பகல் இரவுக் குறியிடங்களில் உய்ப்போர் இல்லை; தலைவனை வரைவு தூண்டுவோர் இல்லை; தாய்க்கு உண்மை அறிவுறுத்துவோர் இல்லை; உடன்போக்கு மேற்கொண்டாவது தலைவனையும் தலைவியையும் கடிமணம் விழையத்தூண்டுவார் இல்லை; பொருள்வயிற் பிரிய விரும்பும் தலைவனைச்செலவழுங்குவிப்பார் இல்லை; இன்றியமையாமை கருதித் தலைவன் தலைவியைப் பிரிந்தவிடத்து ஆற்றுவிப்பார் இல்லை; தலைவன் பரத்தமை மேற்கொண்டபோது இடித்துரைப்பார் இல்லை. அவனைக் கடிந்து தலைவியுடன் இணைப்பார் இல்லை.

1.1. தோழி இல்லையேல் தலைவியின் காதல் பாங்கற்கூட்டத்துடன் முடிந்து விடும். தோழிதான் தலைவியின் காதல் அரும்பைமலர்வித்து, காயாக்கி, கனிவிக்கிறாள். தலைவி என்னும் வித்து செடியாகிச் குழந்தைக் கிளையுடைய குடும்பமாகத் தழைக்கச் செய்கிறாள். தோழி அம்மரத்தின் அடிமண்ணாக இருந்து ~~தன் கடமையைப்~~ பிறர் அறியாமல் செயல்படுகிறாள். தலைவியின் வாழ்வில் தோழியின் இடத்தை வேறு எந்தத் துணை மாந்தராலுமே நிரப்ப முடியாது. தோழி இல்லையேல் தலைமக்களின் காதல் இல்லை. காதல் இல்லையேல் சங்க அகப்பாடல்களே இல்லை. எனவே பழந்தமிழரின் இல்வாழ்வு முறையினை அறியும் வாய்ப்பே கிட்டாமல் போயிருக்கும்.

2. காப்பியக் காலத்தில்

சங்க இலக்கியத்தில் பெயர் சுட்டப்பெறு நிலையில் தோழி இயங்குகிறாள். காப்பியக் காலத்தில் அவள் பெயர் சுட்டப் பெறுகிறாள். சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் தோழியாகத் தேவந்தியும் மாதவியின் தோழியாக வயந்தமாலையும் மணிமேகலையின் தோழியாகச் சுதமதியும் இடம் பெறுகின்றனர்.

2.1. தலைவியின் வாழ்வில் பேரிடம் பெறும் தோழியைப் பற்றிய வரலாறு கிடைக்காததால் இலக்கிய ஆய்வாளருக்கு அவள் கேள்விக்குறியாகவே அமைகிறாள். கண்ணகியின் தோழி தேவந்தி, சாத்தனைக் கணவனாகக் கொண்டவள்; பின்பு கணவனால் கைவிடப்பட்டுச் சாத்தன் கோட்டத்தை வலம் வருபவள்.[1] சங்க இலக்கியத்தில் தோழி தலைவியின் துயர் நீங்க இறை வழிபடுவது போலத்[2] தேவந்தியும் கண்ணகி நல்லாருக்குற்ற இறையுண்டென்றுசாத்தனிடம் கணவனைப் பெற வேண்டுகிறாள்.[3] சங்க இலக்கியத்தில் தலைவி தன் தோழியிடம் தான் கண்ட கனவைக் கூறுதல்போல்[4] கண்ணகியும் தேவந்தியிடம் தன் கனவு கூறுகிறாள்.[5] துன்பம் கூறிய தலைவியைத் தோழி ஆற்றுவிப்பது போலத் தேவந்தியும் பழம்பிறப்பில் பிழைத்த நோன்பினால் கணவனைப் பிரியும் நிலை நேர்ந்தது என்றும், சோமகுண்டம் சூரியகுண்டம் மூழ்கிக் காமவேள் கோட்டம் தொழுதால் கணவரோடு என்றும் இன்புறுவர் என்றும் கூறுகிறாள். இது சிலப்பதிகாரக் காலத்தில் வைதீக நெறியின் வளர்ச்சியையும், சமுதாயத்தில் அதன் தாக்கத்தையுமே தெரிவிப்பதாக அமைகிறது. தேவந்தியும் சுதமதியும் பார்ப்பனத் தோழிகளாகவே காட்டப்படுவதும், வைதீக நெறியின் ஆதிக்கத்தையும் தெளிவாக்குகிறது. கடைச் சங்ககாலத்தே இருந்த தோழியர் தொழிலும் தமிழ்ப் பெண்டிர் கைமாறிய நிலையையுமே தெரிவிக்கிறது என்பார் புலவர் குழந்தை அவர்கள்.[6]

2.2. வரந்தரு காதையில் தேவந்தி மேல் ஆவேசித்த சாத்தன் மூலம், கண்ணகியின் நற்றாய், கோவலனின் நற்றாய், மாதரியின் அத்தியோளின் பிறப்பு ஆகியவை

பற்றித் தெரிவிக்கப்படுகின்றன. செங்குட்டுவன் கண்ணகிக்குப் பூசை செய்யும் உரிமையைத் தேவந்திக்கே கொடுக்கிறான். இதற்கு இரு காரணங்களைக் குறிக்கலாம். 1. கண்ணகி கற்புக்கடம் பூண்ட பெண்தெய்வமாதலால் பெண்ணையே வழிபாடு ஆற்றச் செய்தது, சாலப் பொருத்தமே. 2. ஆனால் இது வைதீகத்தின் ஆதிக்கத்தைக் காட்டுவதாகவும் அமையலாம். வாழ்த்துக் காதையில் தேவந்தி அரற்றும்போது கண்ணகி கூறிய தீக்கனவை உணராமல் போய் விட்டேனே என்று வருந்துகிறாள். அருகில் இருந்த ஐயையும் சுட்டி அரற்றுகிறாள்.[7] அவள் மாதவியையோ மணிமேகலையையோ குறிக்கவில்லை. அவர்களைப் பற்றி அடித்தோழிதான் கூறி அரற்றுகிறாள்.[8] ஆனால் செங்குட்டுவனோ மணிமேகலையின் துறவைப்பற்றி அடித்தோழியிடம் கேட்காமல் தேவந்தியிடமே கேட்கிறான்.

2.3. சிலம்பில் வாழ்த்துக்காதையில், காவற்பெண்டு, கண்ணகிக்குத் தன்னைத் தாயாகவும், அடித்தோழி தன்னைத் தோழியாகவும் கூறி அரற்றுகின்றனர்.

"தற்பயந் தாட்கில்லை தன்னைப் புறங்காத்த
எற்பயந் தாட்கும் எனக்குமோர் சொல்லில்லை"[9]

என்ற அடித்தோழியின் கூற்றிலிருந்து காவற்பெண்டுதான் செவிலியென்றும், அடித் தோழிதான் சங்க இலக்கியத் தோழி என்றும் தெளியலாம். சங்க இலக்கியத்தில் தன்னிகரில்லாதவளாக ஏற்றம் பெற்ற தோழி சிலப்பதிகாரத்தில் இருந்த இடம் தெரியாதவளாக, அரற்றும்போது தன்னை இனங்காட்டுபவளாக மாறுகிறாள்.

2.4. அடித்தோழியை 'அடித்தொழிலாட்டி' எனக் குறிப்பிட்டமையால், தோழி என்பவள் பொதுவாக வீட்டு வேலை செய்பவள் என்ற எண்ணம் தோன்றியதாதல் வேண்டும். இந்நோக்கில் அகப்பொருட் பாடல்களில் இடம் பெறும் தோழியைக் காணல் பிழையாகும் என்பார் கூற்று பொருத்த-முடையதே.[10]

2.5. மாதவியின் தோழியான வயந்தமாலை சிலம்பில் பெறும் இடம், கதையையொட்டிய அளவில் சிறிய பகுதியேயாகும். இவளைப் பற்றிய வரலாறு இல்லை. கணிகையின் தோழி என்பதால் இவள் ஏற்றம் பெறவில்லை போலும்.

மாதவி எழுதிய முதல் கடிதத்தைக் கோவலனிடம் கொண்டு சென்று, தன் நோக்கம் நிறைவேறாமல் வயந்தமாலை திரும்புகிறாள். பின் வனசாரணி என்னும் காடுறை தெய்வம் வயந்தமாலை வடிவில் கோவலனைத் தீய நோக்குடன் அணுகியது. இந்நிகழ்ச்சியைக் கொண்டு வயந்தமாலையின் மீது ஐயங்கொள்வதை விட கோவலன் காமத்தை வென்ற உண்மையை உணர்தலே சிறந்தது என்பார் கூற்று பொருத்தமானதே.[11] வயந்தமாலை மாதவி துறவி பூண்டதைக் கண்டு வாடுகிறாள்.[12] 'ஊரவரின் அலரையும் எடுத்துரைத்து' பண்பில் வாய்மொழி, பயம்பாடில்லை நாணுடைத்து' என்று தன் கருத்தையும் தெரிவிக்கிறாள்.[13] அவளுக்கு விடையிறுக்கும் மாதவி முதல், இடை, கடை கற்பு நிலைகளைக் கூறித் தன் நிலைக்கு நொந்து தானும் மணிமேகலையும் துறவு பூண்டதைத் தெரிவித்து அவள்மூலம் ஊரவர்க்குத் தெரிவிக்கிறாள். மாதவியின் உரைகேட்ட வயந்தமாலை மாமணி கடலில் வீழ்த்தியவர்களை ஒத்துத் துயருற்று மையல் நெஞ்சமொடு கையற்றுப் பெயர்கிறாள்.[14]

2.6. மணிமேகலையின் தோழி சுதமதி காப்பியத்தின் மலர் வனம் புக்க காதையில்தான் முதன்முதலாகக் காட்சி தருகிறாள். கோசிகன் என்ற அந்தணனின் மகளான அவளை மாருதவேகன் என்ற வித்தியாதரன் கவர்ந்து சென்று இன்புற்ற பின்னர், புகாரில் கொண்டு வந்து விட்டுச் சென்றான். இவ்வாறு சுதமதியே தன் வரலாற்றை உதயகுமரனுக்குக் கூறுகிறாள்.[15] சங்க இலக்கியத் தோழி ஊரில் உள்ள இடங்களைத் தலைவியும் அறிந்திருந்ததைப் போன்று சுதமதியும் புகாரில் உள்ள உவவனம் பளிக்கறை மண்டபம், தாமரைப் பீடிகை ஆகியவற்றின் சிறப்புகளை, நன்கு அறிந்திருக்கிறாள். மாதவியை, 'மாதவி கேளாய்' என்று விளிக்கும் நிலையில் உரிமையுயர்வு பெற்றவளாயுள்ளாள்.[16] உவவனம்தான், மணிமேகலை பூப்பறிக்க வாய்ப்பான இடம் என்று கூறும் உலகியல் அறிவு மிக்கவள்.[17] உதயகுமரன் வரும் தேரொலி கேட்டு மணிமேகலையைப் பளிக்கறையில் புகுத்துகிறாள்.[18] உதயகுமாரன் மணிமேகலையைப்

பற்றிக் கூறிய காதல் மொழிகளைச் செவியுற்ற சுதமதி பொதியறைப் பட்டோர் போன்று உளம் வருந்தி அரசிளங்குமரனுக்கு மக்கள் யாக்கையைப் பற்றி அறிவுரை கூறுகிறாள்.[19] சங்கப் பாடல்களில் இடம் பெறும் தோழி தலைவனுக்கு அறிவுறுத்ததலைப் போலவே சுதமதி உதயகுமாரனுக்கு அறிவுறுத்துகிறாள். வாழ்க்கையின் உண்மையே தலையாயச் செய்தியாதலால் சங்கப் பாடல்களில் தோழியின் கூற்று அந்நோக்கிலேயே அமைகிறது. சமயப் பின்னணியில் தோன்றிய மணிமேகலையில் 'சமயநோக்கி'லேயே சுதமதியின் கூற்று அமைகிறது. மணிமேகலை சுதமதியிடம் தன் உள்ளம் தன்னை இகழ்ந்த உதயகுமரன் பின் சென்றதாக அறத்தொடு நிற்கிறாள்.[20]

2.7. மாதவி, சுதமதி, மணிமேகலை ஆகிய மூவரும் முந்தைய பிறவியில் தாரை, வீரை, இலக்குமி என உடன்பிறப்புகளாக இருந்தமையை விளக்குதல் மூலம் பௌத்த மதக் கொள்கையே அறிவுறுத்தப்படுகிறது.[21]

2.8. சீவகசிந்தாமணியில் பதுமையார் சீவகனைப் பிரிந்ததால் வருந்திய பொழுது, தோழி ஆற்றுவிக்கிறாள். சங்க இலக்கியத்தில் தோழி உலகியல் நிலையில் தலைவன் வருவான் என்று காரணங்கள் பல கூறி ஆற்றுவிக்க, சிந்தாமணித் தோழியோ சமண மதக் கருத்துகளாகிய யாக்கை, இளமை நிலையாமை கூறி ஆற்றுவிக்கிறாள். சிந்தாமணி ஆசிரியர் தன் கொள்கையைப் பரப்ப இத்தோழியைக் கருவியாகக் கொள்கிறார்.[22]

2.9. பெருங்கதையில் வாசவதத்தையின் தோழியாக மானனீகை வருகிறாள். பேரழகு வாய்ந்த இவள் கோசல அரசன் மகள். சூழ்நிலையால் வாசவதத்தையிடம் பணிமகளாகிறாள். பந்தாட்டத்தில் சிறந்த இவளைக் கண்டு காமுற்ற உதயணன் இவளை வாசவதத்தையின் வண்ண மகளாக்குகிறான். வாசவ-தத்தையின் நெற்றியையே மானனீகையும் உதயணனும் யவன மொழியில் மடல் தீட்டும் களமாக்குகின்றனர். இரவுக்குறியிடம் கூறி மானனீகையே உதயணனைச் சேர்கிறாள். பின் கடிமணமும் கொள்கிறாள். இந்நிலை தமிழிலக்கியத்திற்கே புதியது. தலைவிக்குரிய தலைவனைத் தான் விரும்புவதுமல்லால் அவள் நெற்றியையே கருவியாக்கும் நிலை சங்க இலக்கியத் தோழி எண்ணாத ஒன்று.

வடமொழியிலிருந்து தழுவிய காப்பியமாதலால் இம்முறை அமைந்தது. அரசனின் மகளை ஓரரசிக்குத் தோழியாக அமைத்ததும் புதுமையே.

3. நீதி இலக்கியக்காலத்தில்

இக்காலக் கட்டத்தில் அகப்பாடல்கள் தோன்ற வாய்ப்பில்லை. இக்காலத்தில் தோன்றிய திருக்குறளில் காமத்துப்பால் இடம் பெறினும் தலைமக்களின் உணர்ச்சி வெளிப்பாடுகளுக்கே அது முதன்மையிடம் தருவதால் தோழியின் கூற்றுகள் பெரிதும் இடம் பெறவில்லை. தோழியின் கூற்றுகளாகக் கருதப்படுவனவும் அவை தோழியின் கூற்றுகளா என ஐயப்படும் நிலையிலுள்ளன.[23] பதினெண் கீழ்க்கணக்கில் அகத்திணைப் பற்றிக் கூறும் ஐந்திணையைம்பது, ஐந்திணை எழுபது, ஐந்திணை நூற்றைம்பது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது கைந்நிலை என்ற ஆறிலும் சங்க இலக்கிய வழியே தோழியின் செயல் நிகழ்கின்றது.

"சுனைவாய்ச் சிறுநீரை யெய்தா தென்றெண்ணிப்
பிணைமா னினிதுண்ண வேண்டிக் – கலைமாத்தன்
கள்ளத்தி னூச்சுஞ் சுரமென்பர் காதல
ருள்ளம் படர்ந்த நெறி"

என்னும் பாடல் சங்க இலக்கியத்தை நினைவூட்டும்.[24] தலைமகளை, ஆற்றுவிக்கும் தோழி 'அடுத்தடுத்து ஒளிர்ய தும்மல் வருதலைச்' சுட்டிக் காட்டி ஆற்றுவிக்கிறாள்.[25] இது சங்க இலக்கியத்தில் தோழி காட்டாத நிமித்தம்.

4. சமயக் காலத்தில்

சங்க இலக்கியங்களைப் பயின்ற மாணிக்கவாசகர் சைவ சமயக் கருத்துகளைப் பரப்பச் சங்க இலக்கியங்களில் வரும் கூற்று, துறை வகைகளைக் கருவியாகக் கொண்டு, நாயகன் நாயகி பாவத்தைக் கையாண்டார். அதனால் இக்காலத்தில் தலைவன் தலைவி காதல், உயிர் இறைவனை அடையும் காதலாக மாறுகிறது. உயிர் இறைவனை அடையத் துணைநிற்கும் கருவியாகிறாள் தோழி. களவுத் துறைகள் உயிர் இறைவனை அடையும் முயற்சியாக ~~அமைகிறது~~ தோன்ற அமைகின்றன. தலைவனின்

செயல்கள் இறைவனின் செயல்களாகின்றன. தலைவனின் ஊர், மலைச்சிறப்புகள் சிற்றம்பலத்தானின் சிறப்புகளாகின்றன. தோழி அமைக்கும் குறியிடங்கள் இறைவனின் திருத்தலங்களாக மாறுகின்றன.

4.1. சங்க இலக்கியத்தில் தோழி வரைவு கடாவும் உத்தியாக வேங்கை ஒள்வீ விரிந்ததைச் சுட்டி மணநிகழ்வுக் காலத்தைக் குறிப்பிடுகிறாள்.[26] அக்கருத்தை எடுத்தாளும் திருக்கோவையாசிரியர், 'அம்பலத்தானுக்குரிய மலையில் தோன்றிய வேங்கை மலர்கள்' என்று இறைவனையும் இணைத்துக் குறிக்கிறார்.[27]

4.2. தலைவன் பரத்தையரோடு புனலாடி மகிழ்ந்தபோது தனியே வருந்தும் தலைவியின் நிலை கூறும் சங்க இலக்கியத் தோழிபோல்[28] திருக்கோவையாரில் தோழி தலைவி நிலையைத் 'தீயாடி சிற்றம்பல மனையாள்' என்றும் 'தில்லையூரனுக்குத் தேயாப் பழியென நாண்' என்விடத்து மறைத்தாய்' என்றும் கூறுகிறாள்.[29] திருக்கோவையாரில் அறத்தொடு நிற்றலைத் தனித் துறையாகக் கொள்ளவில்லை. ஆனால் உடன்போக்கில் வருந்தும் செவிலியிடத்து அறத்தொடு நிற்கிறாள் தோழி.[30] வரைபொருட் பிரிவில் தோழி அறத்தொடு நிற்பதாகவும் திருக்கோவையாரில் கூறப்படுகிறது.[31] இது சங்க இலக்கியத் தோழி கையாளாத நிலை.

4.3. மற்ற நூல்களிலிருந்து வைணவ இலக்கியத்தில் வெறிவிலக்கு மாறுபடுகிறது. ஐங்குறுநூற்றில் அமைந்துள்ள வெறிப்பத்தைப் போன்று ஆறாம் திருமொழியில் நான்காம் திருப்பத்து அமைகிறது. சங்க இலக்கியத்தில் முருகனால் தான் தலைவியின் நோய் தீரும் என்று தாய் நம்புகிறாள். ஆனால் தோழியோ தலைவனால் தான் தீரும் என நிறுவுகிறாள். முருகனையும் 'மடவமன்ற' எனப் பழிக்கிறாள்.[32] திருவாய்மொழியில் தலைவியின் நோய்க்குக் காரணம் திருமாலே என்றும் அவனால்தான் அதைத் தீர்க்க முடியும் என்றும் கூறுகிறாள்,[33] தோழி.

சங்கு சக்கரத்தைத் தலைவி காதுபடக் கூறினாலே போதும். அவன் கழல் வாழ்த்தினாலே போதும்; தலைப்பொடி பூசினாலே போதும்; மாயப் பிரானின் அடியார்களை வணங்கினாலே போதும் என இவ்வாறு திருமால் பெருமையைக் கூற வெறிவிலக்கு கருவியாகப் பயன்படுத்தப்படுகிறது. இதுபோலவே முருகனைச் சிறுதெய்வம் என்று எண்ணும் நிலையும் காணப்படுகிறது. தலைவியின் நோய் தீர, உலகேழும் உண்டவனின் தண்ணந் துழாய் சூட்டச் சொல்கிறாள் மற்றுமோர் தோழி.[34]

4.4. சங்க இலக்கியத்தில் தலைவி 'நம்' என்று தோழியை உடன்படுத்திக் கூறுகிறாள்.[35] ஆனால் திருவாய்மொழியில் 'மடத்தோழி' என்பதற்கு 'ஆத்ம குணத்தையுடைய தோழி' என்று பொருள் கூறியிருத்தல் சமயச் சார்பையே குறிக்கிறது. 'உன்சொல் கேளாத நான் இனித் தாய்சொல்லோ கேட்கப் புகுகின்றேன்' எனத் தோழி தலைவி உறவுநிலை விளக்கப்படுகிறது.[36] மடல் ஏறவும் தோழியின் துணையை நாடுகிறாள், இத்தலைவி.[37] சங்க இலக்கியத் தோழி 'நம் காதலர்' என்று கூறுவது போன்று திருவாய்மொழியில் 'நம் கண்ணன்' என்றாளப்படுகிறது.[38]

பெருமாள் திருமொழியில் குலசேகரர்,

"ஆய்மிகு காதலொடு யானிலிருப்ப யான்விடவந்த
வென்தூதியோடே
நீமிகு போகத்தை நன்குகந்தாய் அதுவுமுன் சோரம்புக்
கேற்குமன்றே"

என்ற பாடலும் "தாயை விட்டுப் பேயைப் பற்றினதை போல் இதுவும் ஒரு அவிவேகமே" என்ற உரையும் தோழியின் தன்மை மாறியமையையே காட்டுகிறது.[39]

4.5. கலித்தொகையில் தலைவிதன் மணவினை காட்சியைத் தோழியிடம் பகிர்ந்து கொள்வதுபோல், 'வாரணமாயிரம்' என்னும் பகுதி நாச்சியார் தன் தோழியிடம் திருவரங்கப் பெருமான் தன்னைக் கனவில் மணந்த காட்சியைக் கூறுவதாக அமைகிறது. அக்காலத்தில் சமுதாயத்தில் நிலவிய தோரணம் நாட்டல், மணமகன் புகுதல், அந்தரி சூட்டல், காப்புநாண் கட்டுதல், அதிரப்புகுதல், கைத்தலம் பற்றல், தீவலம் செய்தல், அம்மி மிதித்தல், பொரிமுகம் தட்டுதல், மஞ்சன மாட்டல் முதலிய திருமணச் சடங்குகளும் தெரிய வருகின்றன.[40]

5. பிரபந்தக் காலத்தில்

தூதுவிடு பொருள்களில் தோழியும் ஒருத்தியாக இடம் பெறுகிறாள். வடமொழி இலக்கியத்தில் 'தூதி'யாகக் கருதப்படும் நிலையைப் பின்பற்றி தோழி இடைக்காலத்தில் 'தூதியாக' மாற்றம் பெறுகிறாள்.[41] ஆனால் 'தோழி விடு தூது' நூல் ஒன்று கூடக் கிடைக்கவில்லை. இக்குறையை நீக்க இருபதாம் நூற்றாண்டில் 'தோழி விடு தூது' என்னும் நூல் காதலுற்ற ஒருத்தி,

> "அன்னவனைப் போய்க்காண் அருந்தோழி என்நிலைமை
> மன்னவற்குச் சொல்வாய் மறக்காமல் — என்னுயிரைக்
> கண்டவள் நீயன்றே காமநோய் தீர்க்கவே
> கண்போல் விரைந்தேகு காவலன்பால்"[42]

என்ற ஓர் அரசியல் தலைவரிடம் தூது விடுவதாக அமைக்கப்பட்டுள்ளது.

6. ஆய்வு முடிவுகள்

(அ) சங்க இலக்கியத்தில் தோழி பெயர் சுட்டப்பெறு நிலையில் இயங்குகிறாள். காப்பியக் காலத்தில் பெயர் சுட்டப் பெறுகிறாள்.

(ஆ) இரட்டைக் காப்பியங்களில் தோழிகள் பார்ப்பன இனத்தவராகவே காட்டப்படுகின்றனர். இக்காலத் தோழி தலைவியை ஆற்றுவிப்பதில் வைதீகக் கருத்து இடம் பெறுகிறது.

(இ) தோழியும் செவிலியும் சிலம்பில் அடித்தோழியும் காவற்பெண்டாகவும் மாற்றம் பெறுகின்றனர்.

(ஈ) இரட்டைக் காப்பியத்தில் வரும் தோழிகள் மணந்த பிறகு கணவரால் துறக்கப்பட்டவராகவே காட்டப்படுகின்றனர்.

(உ) மணிமேகலையின் தோழி, நற்றுயைப் பெயர் சுறி விளிக்கும் நிலை பெற்றிருக்கிறாள்.

(ஊ) சங்க இலக்கியத் தோழி தலைவிக்கு வாழ்க்கையின் உண்மைகளை அறிவுறுத்த, மணிமேகலை, சிந்தாமணி காலத் தோழியர் சமயக் கொள்கைகளை அறிவுரையாக்குகின்றனர்.

(எ) சுதமதி எனும் தோழி, முற்பிறப்பில் தலைவி, நற்றாய் ஆகியோரின் உடன்பிறப்பாய் இருந்தவள் என்று மணிமேகலையில் மரபுநிலைத் தொடர்பு காட்டப்படுகிறது.

(ஏ) ஓர் அரசனின் மகளைத் தலைவிக்குத் தோழியாக்கி, அவளையும் தலைவன் மணந்து கொள்வதாகத் தமிழிலக்கியத்தில் காட்டுவது, வடமொழி மரபினது தாக்கத்தின் விளைவாகும்.

(ஐ) பதினெண் கீழ்க்கணக்கில் வரும் தோழி சங்க இலக்கியத்தில் இல்லாததாகிய நிமித்தம் காட்டித் தலைவியை ஆற்றுவிக்கிறாள்.

(ஒ) திருக்குறளில் தோழிக் கூற்றுகள் பெரிதும் இடம் பெறவில்லை.

(ஓ) திருக்கோவையாரில் அறத்தொடு நிற்றல் தனித் துறையாகக் கொள்ளப்படவில்லை. உடன்போக்கில் கூடுந்தும் செவிலியிடமும் உடன்போனபின் தேடும் செவிலியிடமும், வரைபொருட் பிரிவிலும் அறத்தொடு நிலை அமைகிறது.

(ஔ) சமயகால இலக்கியத்தில் உயிர் இறைவனை அடையத் துணை நிற்கும் கருவியாகத் தோழி மாற்றப்படுகிறாள்.

(அஅ) வைணவ இலக்கியங்களில், வெறிவிலக்குமுறை மாறுபடுகிறது. அது திருமாலின் பெருமையைச் சுட்டப் பயன்படுத்தப்படுகிறது.

(அஆ) பிரபந்தக் காலத்தில் தோழி தூதியாகவே மாற்றப்பட்டுச் செயல்படுகிறாள்.

***

## ஆய்வியல் அறிமுகம்

### குறிப்புகள்

1. பின்னிணைப்பு - 17; 1A - பின்னிணைப்பு 1.
1B தமிழ்க்காதல், பக்.58
2. பின்னிணைப்பு - 1
2A பின்னிணைப்பு - 13
3. விளக்கப்படம் பின்னிணைப்பு - 15
4. பின்னிணைப்பு - 1 ; விளக்கப்படம் - 1, 2.
5. ச.கோ. பாஸ்கரதாஸ், எட்டுத்தொகையில் தலைவி, வெளியிடப் பெறாத எம்.லிட். ஆய்வுக் கட்டுரை, 1973.
5A. பின்னிணைப்பு 3, 6, 7 வரைபடம் - 4
6. பின்னிணைப்பு - 17
7. பின்னிணைப்பு - 18
8. பின்னிணைப்பு - 17
9. பின்னிணைப்பு - 17
10. பின்னிணைப்பு - 10
11. பின்னிணைப்பு - அறிஞர் பார்வையால் தோழி
12. தொல். பொருள். இளம். 96.
13. வ.சுப. மாணிக்கம், பக்.373.
14. ச.கோ. பாஸ்கரதாஸ், அக இலக்கியத்தில் தோழி, பக்.116.
15. வ.சுப. மாணிக்கம், பக்.842.
16. Rm. Periakaruppan, The tradition and talent in Cankam Liteture, Appendix.
17. ச.கோ. பாஸ்கரதாஸ், அகப்பொருள் பாடல்களில் தோழி, பக்.117.
18. க. இரத்தினம், கற்று வெளியிடப்படாத பிஎச்.டி. ஆய்வுக்கட்டுரை,
19. பின்னிணைப்பு - 1
20. நற்.388; அகம்.22, 72, 98, 101, 293, 312, 329.
21. நற்.128, 332; அகம்.32, 37, 180.
22. நற்.310.

23. தோழியிற் புணர்ச்சி - மருதம். நற்.91; அகம்.356.
பகல் இரவுக்குறிகள் - மருதம். குறு.113.
வரைவு கடாதல் - மருதம். நற்.393; ஐங்.60, 93.
அறத்தொடு நிற்றல் - மருதம். 28, 29, 30; பாலை ஐங்.366, 367
உடன்போக்கு - குறிஞ்சி குறு.115, 124, 217, 297, 383;
ஐங்.235, 254; நெய்தல் - நற்.147; ஐங்.200.
வரைவு மலிதல் - முல்லை கலி.103, 104, 105, 107, 115;
மருதம். பரி.11.
செலவழுங்குவித்தல் - குறிஞ்சி ஐங்.239, 257, 273, 297,
முல்லை நற்.266; ஐங்.423, 424.
நெய்தல் நற்.124, 183; குறு.236, 397.
வாயில் மறுத்தல் - குறிஞ்சி ஐங்.240; நெய்தல் நற்.127, 167,
ஐங்.153, 156, 158, 159.
வாயில் நேர்தல் - குறிஞ்சி நற்.386; ஐங்.283; நெய்தல் நற்.270,
291; குறு.9; ஐங்.143, 198, அகம்.50.

***

இயல் - ஒன்று.

## தோழி -- ஓர் அறிமுகம்

### குறிப்புகள்

1. தொல்.பொருள், இளம்.123.
2. தொல். பொருள். குழந்தையுரை, பக்.57.
3. தொல்.பொருள். இளம். 42
4. தொல். அகத்திணையியல், நச். உரை. சூ.41.
5. மேற்படி, 39:40.
6. மேற்படி, 111 உரை.
7. அகநானூறு, மணிமிடைப் பவளம் - நித்திலக் கோவை, பொ.வே. சோமசுந்தரனார் உரை, கழகம், முதல் பதிப்பு (சென்னை 1970), 197:3.
8. அகநானூறு, களிற்றியா னைநிரை, பொ.வே. சோமசுந்தரனார் உரை, கழகம், முதல் பதிப்பு, சென்னை 1973, கலித்தொகை நச்சி. உரை. கழகம், முதல் பதிப்பு (சென்னை 1967), 57.
9. பின்னிணைப்பு - 4
10. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை, கழகம், ஐந்தாம் பதிப்பு (சென்னை 1956), 29:10:34, 17 பாட்டு 3, 6,9.
11. குறுந்தொகை, உ.வே. சாமிநாதையர் உரை, ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, நான்காம் பதிப்பு, (சென்னை 1962), 243, 316, 326, 401, அகம்.110, 330.
12. அகம்.219.
13. மேற்படி, 356.
14. மேற்படி 220.
15. குறுந்.144.
16. சிலம்பு. 27:111.
17. மேற்படி, 29:3, 6.
18. தொல்.சொல். பெயரியல், 1. உரியியல், 96.
19. கலி.103, நச்சினார்க்கினியர் உரை, பக்.319.

20. சுன்னாகம் ஆ. குமாரசாமிப் புலவர், பதப்பொருள் விளக்கம், சூடாமணி நிகண்டு, (சென்னை), பக்.50.

21. கைமான் தோணி கடுப்ப, அகம்.344:5.

22. இரா. இளங்குமரன், உரையாசிரியர்கள் கண்ட நுண்பொருள் விளக்கம், கழகம், முதற்பதிப்பு (சென்னை 1971), பக்.141.

23. இருங்கிளைத் தொகுதி நற்றிணை நானூறு, அ. நாராயணசாமி ஐயர் உரை, கழகம், முதற்பதிப்பு (சென்னை 1956), 267:2.

24. நெல்லரியும் இருந்தொழுவர், புறநானூறு, தியாகராச விலாச வெளியீடு, ஆறாம் பதிப்பு, (சென்னை 1963), 24:1.

25. பின்னிணைப்பு – 4

26. ஐங்குறுநூறு பொ.வே. சோமசுந்தரனார் உரை, கழகம், முதல் பதிப்பு (சென்னை 1966), 78:4.

27. மேற்படி, 496:4.

28. பவளம் – பவழம்; துளவம் – துழவம்.

29. ஞா. தேவநேயன், தமிழ் வரலாறு, கழகம் (சென்னை), பக்.75.

30. இருமணல் இழிதரும் – நற்.111, அ. நாராயணசாமி ஐயர் உரை, பக்.126.

31. நற்.64:9; குறுந்.251:4; ஐங்.437:2; கலி.42:8; 103:36, 46, அகம்.8:5; 138:1; 201:12; 359:5; 375:2.

32. பவணந்தி: நன்னூல், மாதவச் சிவஞான சுவாமிகள் விருத்தியுரை, பாரி நிலையம், இரண்டாம் பதிப்பு, (சென்னை 1971), பக்.348.

33. ஞா. தேவநேயன், மு.நூ., பக்.75.

34. ஈ.சோ. பாஸ்கரநாத், அகப்பொருள் பாடல்களில் தோழி, முதல் பதிப்பு, (கோவை 1979), பக்.1.

35. சுன்னாகம் ஆ. குமாரசாமிப் புலவர், மு.நூ., பக்.53.

36. சிலம்பு 15:51; 8-88; 14-132; 16-138, கொங்கு வேளிர் பெருங்கதை, வத்தவ காண்டம், மகாமகோபாத்யாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம் வெளியீடு, நான்காம் பதிப்பு (சென்னை 1968), 14-172.

37. பிங்கல முனிவர், பிங்கலந்தை முதற்பதிப்பு (சென்னை 1890), சூ.933, பக்.120,

38. மேற்படி, சூ.933, பக்.120.

39. மேற்படி சூ.939; பக்.120; நாற்கவிராச நம்பி அகப்பொருள் விளக்கம், பாடநூல்பதிப்பு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், திருப்பனந்தாள் திருமடநிதிய வெளியீடு (சிதம்பரம் 1977), நூ.9.

40. சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், மூன்றாம் பதிப்பு, பி.வி.எஸ்.மணி, ப.ஆ., வானவில் பிரசுரம் (சென்னை 1977), பக்.338.

41. நற்.128:6; அகம்.277.

42. கலி.24:12; 31:8; 76:19.

43. நற்.224:6; குறுந்.281:6.

44. கலி.31:12.

45. மேற்படி 11:5.

46. நற்.109:4.

47. கலி.16:9.

48. மேற்படி. 76:5.

49. மேற்படி 16:13.

50. மேற்படி 29:15.

51. மேற்படி 51:1.

52. மேற்படி 55:1-3.

53. மேற்படி 67:19.

54. நற்.226:3; குறுந்.96:4; கலி.55:5; அகம்.139:16.

55. நற்.273:6-8.

56. கலி.55:4-5.

57. மேற்படி 29:10.

58. மேற்படி 29:19.

59. மேற்படி 24:3.

60. மேற்படி 55:4.

61. நற்.33:9; குறுந்.368:1-2.

62. கலி.60:7.

63. மேற்படி 60:15.

64. மேற்படி 37:21.

65. மேற்படி 6:18.

66. ஐங்.175:1-2.
66 அ. மணிமேகலை [illegible]
67. அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
    கடிவரை இலபுறத் தென்மனார் புலவர் - தொல்.பொருள்.25.

68. சிலம்பு, 16:84-85.

69. தொல்.பொருள்.இளம்.112:46.

70. அகம்.316.

71. இவ்வாய்வேடு இயல் 3, பக். ௧௨

72. செவிலி மகள் என்றும் தலையாற் பொலிவு பெறுள் என்றும் தோழியாவாள் செவிலி மகளாதலேயன்றிச் சூழவும் உசாத்துணையாகவும் வல்லள் ஆதல் வேண்டும். - தொல்.பொருள்.இளம்.124, உரை.

73. தொல்.பொருள்.இளம்.242.

74. மேற்படி, 217.

75. மேற்படி, 222.

76. மேற்படி, 105:11-12.

77. இவ்வாய்வேடு இயல் 3, பக். 65

78. இவ்வாய்வேடு இயல் 3, பக். 64-65

79. இவ்வாய்வேடு இயல் 3, பக். 65-66

80. அகம்.268:10.

81. நற்.28:4; குறுந்.277:4; 367:1.

82. நற்.89:10.

83. ஐங்.229:2.

84. கலி.19:6.

85. நற்.50:8.

86. கலி.128:8; 127:131.

87. மேற்படி 21:9.

88. நற்.183:6.

89. அகம்.27:5-6.

90. நற்.63:145, 376; குறுந்.244, 262; ஐங்.385, அகம்.60, 302.

91. நற்.50, 127, 167, 291, 380, குறுந்.85, 359; நற்.170, 310.

92. இராம. பெரியகருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு, முதற்பதிப்பு (மதுரை 1975), பக்.98.

93. தி.ரா. செல்வராசன், தொல்காப்பிய அகத்திணையும் கலித்தொகையும், ஆய்வுக்கோவை 6., பக்.343.

94. ம.ரா.போ. குருசாமி, சங்க கால நாடகம், நாடக இசைவிழா மலர், பம்பாய்த் தமிழ்ச் சங்கம் (பம்பாய் 1971), பக்.37.

95. கி.வ. ஜகந்நாதன், குறிஞ்சித்தேன், முதற்பதிப்பு சென்னை 1952, பக்.77.

96. ம.ரா.போ. குருசாமி, புலநெறி வழக்கம், ப-ள்.21-22.

97. தெ.பொ. மீனாட்சிசுந்தரம், வள்ளுவர் கண்ட நாடும் காமமும், பக்.195.

98. மெ. சுந்தரம், அகத்திணை இலக்கியத்தின் சிறப்பியல்புகள் சில, ஆய்வுக்கோவை 5, மாநிலக் கல்லூரிச் சார்பு வெளியீடு (சென்னை 1973), பக்.187.

99. தமிழண்ணல், குறிஞ்சிப்பாட்டு, முதற்பதிப்பு (சென்னை 1961), பக்.90.

100. (i) "Even if the poet has a burning desire to express his own ideas, he can utter them through the characters".
 -Rm. Periakaruppan, The tradition and Talent in Sangam Poetry Literature, p.71.

 (ii) "We are intensely interested in men and women, their lives, motives, passions, relationships, hence the literature which deals with the great drama of human life and action".
 -W.H.Hudson, An introduction to the study of Literature,p.

101. பாரியைப் பற்றிக் கபிலர் பாடிய பாடல்கள் (புறம்.105-111)

102. அகம்.46.

103. கலித்தொகை, பரிபாடல் பாடல்கள்

104. அகம்.78:15-19.

105. (அ) "அன்பின் ஐந்திணை ஒழுகலாற்றில் புலவர் நிலையில் நின்று பேசும் வாயிலார் யாரேனும் உளரோ வென்றால் அத்தகைய அறிவு நிரம்பிய வாயில் தோழியே என்று கருத்துமாகக் கூறி விடலாம்".
 - க. வெள்ளைவாரணர், பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள், கழகம் (சென்னை 1952), பக்.252.

 (ஆ) "தோழி கூற்றாக வரும் இடங்களில்தான் அவர்கள் தம் கருத்தை மறைமுகமாக அறிவுறுத்துவது எளிதாயிற்று"
 தமிழண்ணல் குறிஞ்சிப்பாட்டு பக்.73.

 (இ) "புலவர்கள் தங்கள் கருத்துக்களைத் தோழி வாயிலாகவே புலப்படுத்துகின்றனர் என்பர். அம்முறையில் கபிலர் காட்டும் தோழி கபிலரின் மறுபதிப்பாகக் காணப்படுகிறாள் எனலாம்".
 - நா. செயராமன், கபிலர் தம் அக இலக்கிய மாந்தர் [illegible], பக்.25.

(ஈ) "தலைவனும் தலைவியும் இணைந்த மகிழ்ச்சியான சூழலைப் புகழ்ந்து பாட விரும்பிய புலவர் தானே தோழியாக நோக்குநிலை கற்பித்துக் கொண்டு பாடுகிறார் எனலாம்".
- நா. செயராமன், முல்லைப் பாடல்கள், பக்.56.

(உ) "கபிலர் தம் கற்பனையையோ உணர்ச்சியையோ கருத்தையோ நேராகக் கூறுமல் தாம் படைத்த கற்பனை மாந்தராகிய தலைவன் தலைவி தோழி ஆகியவர்களின் வாயிலாகவே வெளிப்படுத்துகிறார்".
-எஸ். விஜயபாரதி, கபிலர் கவிநயம், பக்.12.

(ஊ) "சங்ககால அகப்பாடல்கள் அனைத்திலும் இவ்வாறே பாத்திரங்கள் வாயிலாகப் புலவர்களின் உணர்ச்சிகளும் கருத்துகளும் உணர்த்தப் பெறுகின்றன".
-சுப்பையா பிள்ளை, பவளவிழா மலர், பக்.8.

106. குறுந்.255:7.

107. நற்.46:10-11; 71:1; குறுந்.350:8; கலி.29:24.

108. கலி.21:11-12.

109. கலி.7:19-20; 8:17.

110. மேற்படி, 8:10-11; 14; 17.

111. நற்.46:1-2; கலி.10:12; 12:14.

112. குறுந்.135:1-2; கலி.18:10-12.

113. அகம்.61:1-3; 173:1-3; 231:1-4; 286:8-13.

114. நற்.355:6; அகம்.112:11-12; 355:6-7; 382:1-2.

115. நற்.108:6; குறுந்.354:1-2.

116. கலி.22:1-3.

117. நற்.32:8-9.

118. குறி.பா.13-18.

119. மேற்படி 201-208.

120. புறம்.201:6; 275:9; கலி.71:18.

121. குறுந்.129:2.

122. 'தோழியிற் கூட்டம் போலப் பாங்கன் உரையாடி இடை நின்று கூட்டாமையின் பாங்கற் கூட்டம் என்றது தலைமகன் பாங்கனைக் கூடும் கூட்டம் என நச்சினார்க்கினியர் கூறுகிறார்'.
- தொல்.களவியல் 102, நச்.உரை7, பக்.21.

123. "தன்வயின் பாங்கன் அவன்வயிற் பாங்கு செய்யாளுகலின்" என்று பேராசிரியர் கூறுகிறார்.
- தொல்.செய்யுள் 498, பக்.396.

124. Rm. Periakarruppan, Literary conventions in Cankam Poetry, p131.

125. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.55.

126. மேற்படி, பக்.57.

127. மேற்படி, பக்.53.

128. நற்.100, 176.

129. ஐங்.37-40.

130. வ.சுப. மாணிக்கம், தொல்காப்பியப் புதுமை நோக்கு, பக்.148.

131. ச. சிதம்பரம், 'சங்க அகப்பாடல்களில் விறலி', பதினோராவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 1 பக்.294.

132. அகம்.75, 76, 79.

133. நற்.100.

134. அகம்.166.

135. மேற்படி., 166:13.

136. நற்.100:1.

137. ஐங்.79:4.

138. ஐங்.79:4.

139. நற்.170, 310; அகம்.206.

* * *

இயல் – 2

## இலக்கணத்தில் தோழி

### குறிப்புகள்

1. தொல். பொருள். கள. 35, நச்சி உரை, பக். 151, இளம். பக். 242.
2. தொல். பொருள். இளம். 206.
3. மேற்படி மு. நூ., பக். 235.
4. தொல். கள. 23 நச்சி. உரை, பக். 135.
5. தொல். பொருள். 25.
6. தொல். பொருள். கள. 36, இளம். உரை, பக். 242.
7. தொல். பொருள். 242.
8. தொல். பொருள். இளம். 217.
9. மேற்படி மு. நூ., 222.
10. நம்பி. 110; இறை. 30 உரை.
11. தொல். பொருள். இளம். 112: 42.
12. மு. நூ. 144: 44; மடம்–கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை – இறை. அகப். சூ. 2இன் உரைப்பகுதி.
13. நம்பியகப்பொருள், இறையனார் அகளவியல் உரை, இலக்கண விளக்கம்.
14. குறிஞ்சி நடையியல், நெய்தனடையியல், பாலை நடையியல், மருத நடையியல், முல்லை நடையியல்.
15. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக். 272.
16. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், வள்ளுவர் கண்ட நாடும் காமமும், பக். 196.
17. தமிழண்ணல், குறிஞ்சிப்பாட்டு, பக். 72.
18. மெ. சுந்தரம், அகத்திணை இலக்கியத்தின் சிறப்பியல்புகள், மாநிலக்கல்லூரித் தமிழ்த் துறைக் கருப்பு இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் கழகம் – ஐந்தாவது கருத்தரங்கு வெளியீடு ஆய்வுக் கோவை, பக். 185.
19. தா. ஏ. ஞானமூர்த்தி, மு. நூ., பக். 273.
20. தொல். பொருள். செய். 181–192.

21. தொல்.985 - 6
        1060 -32
        1096 -19
        1153 - 7
        1156 - 6     75 கற்றுகள்
        1157 - 1
        1183 - 4

22. டாக்டர் தமிழண்ணல், குறிஞ்சிப்பாட்டு, ப-வி.73-74.

23. இறை.சூ.5.

24. நம்பி, அகத்.43.

25. 'புத்தமை சேடியிற் புரவலற் குணர்த்தலும்' - நம்பி. அக.94.

26. 'இருவே வம்பெய்றலும் - நம்பி.கள.54.

27. தொல்.பொருள்.இளம்.125.

28. இறை.சூ.7; நம்பி.128.

29. தொல்.பொருள்.இளம்.112:1-6.

30. இறை. சூ.7 உரை.

31. நம்பி.139.

32. இல.வி. 507:6.

33. மாற.அகப்.31.

34. தொல்.114 நச்சி உரை, பக்.98.

35. களவியல், பக்.71.

36. திருக்கோவையார் 66, 72, உரை, பக்.

37. தொல்.பொருள்.99:11-13.

38. இறை.சூ.7 உரை.

39. நம்பி.140.

40. தொல்.பொருள்.112:14-15.

41. இறை.சூ.6.

42. நம்பி.141.

43. இல.வி.507:12-17.

44. மாறு.அகப்.33.

45. தொல்.பொருள்.112:7-13.

46. மேற்படி மு.நூ. 99, 100.

47. மேற்படி மு.நூ. 233.

48. நம்பி.143, 144, 146.

49. இல.வி.507:7-11; மாற.அகப்.33.

50. குறிஞ்சி நடையியல்: மடலேபோல வல்லவை மொழிதலும் - விருப்பம் பேசலும் வேண்டாவென்றலும் - பழத்தகவுணர்த்தலும், பார்த்துறவுரைத்தலும் - பொருந்த வென்றலும், பொய்யுரை புரிதலும் - வருந்துமென்றலும், வடிவிது வென்றலும் நின்குறை நீயே சென்றுரையென்றலும் - சீர்மலர்க் கோதைக்குச் செவ்வியன்- றென்றலும் - நீர்மையன்று நின்றலும் நீங்குமின் என்றலும் - முன் முறுவலோடு முகமலர்ந்துரைத்தலும் - இரங்கு மொழிதலுமேத்தி மொழிதலும் - கலங்கி மொழிதலும் கழறி மொழிதலும்" - ப 52

51. தொல்.பொருள்.99:19-20.

52. இறை.சூ.9.

53. தொல்.பொருள்.99:19-20.

54. இறை. சூ.9 உரை.

55. தொல்.பொருள் 112:17-19 உரை.

56. நம்பி.148.

57. "வன்சொல் தளர்ச்சியும் மடலேற்றுமொழிதலும்" - குறிஞ்சி நடையியல், பக்.

58. தொல்.பொருள்.233.

59. நம்பி.145.

60. தொல்.பொருள்.112:17.

61. இறை சூ.10 உரை; சூ.12.

62. நம்பி 144, 146, 147, 148.

63. இ.வி. 509.

64. மாற.அகப்.36.

65. "தையல் தளர்ச்சியை நோக்கித் தோழி - மையுறு நிலைமை யறிய வுரைத்தலும்" "வன்றளர்ச்சியு மடலேற்று மொழிதலும் - உள்ளங் குளிர்ப்பித் தொண்டழை யென்றலும் - நெஞ்சத்தடங்கிய ~~புகழ்தலும் மயங்கியுரைத்தலும்~~" நின்று குறை வேண்டலும் இன்சொல் இரக்கமும் உண்மையின் மயக்கமும், புகழ்தலும் மயங்கியுரைத்தலும் - ப.52

66. தொல்.பொருள்.112:16.

67. நம்பி.149.

68. தொல்.பொருள்.112:20-22; 119.

69. இறை.சூ.18.

70. நம்பி. 151, 152, 154, 157, 158.

71. இல.வி.510, 511, 513, 516, 517.

72. மாற. அகப்.43, 44, 46, 49, 50.

73. "பகற்குறி நேர்தல மக்குறியுரைத்தலும் - பகலிடன் காண்டிக் சொற்பலவுரைத்த
வரா" - குறிஞ்சிநடையியல், பக். 52

74. தொல்.பொருள்.107; 112:24.

75. இறை. சூ.17.

76. நம்பி.159, 160, 161.

77. இல.வி.509, 518, 519.

78. மாற.அகப்.41, 52, 53.

79. தொல்.பொருள்.207, 221; களவியல் 23:30-36; 43.

80. தொல்.பொருள்.105:11-12.

81. தொல்.பொருள்.112:29; 2057:1-3.

82. இறை.சூ.30.

83. நம்.பி.166.

84. இல.வி.523.

85. மாற.அகப்.58.

86. தொல்.பொருள்.112:30; 207:1; 221:5.

87. இறை.சூ.30.

88. நம்பி.166.

89. தொல்.பொருள்.207:31; 207:4-5.

90. நம்பி.156, 166.

91. இல.வி.515, மாற.அகப்.48.

92. தொல். பொருள். 112:32.

93. இறை. சூ. 30.

94. நம்பி. 166; இல. வி. 513; மாற. அகப். 58.

95. தொல். பொருள். 207:1, 3.

96. இறை. சூ. 30:6.

97. நம்பி. 164:13; மாற. அகப். 156, இல. வி. 521.

98. தொல். பொருள். 207:7.

99. நம்பி. 166.

100. தொல். பொருள். 112:37-38.

101. தொல். பொருள். 114 நச்சி உரை.

102. இறை. சூ. 18 உரை; நம்பி. 166.

103. தொல். பொருள் 112:21, 221:3-4.

104. இறை. சூ. 22, 23.

105. நம்பி. 166.

106. மாற. அகப். 58.

107. இல. வி. 523.

108. தொல். பொரு. இளம். 112:23.

109. நம்பி. 149:9-10.

110. "இற்செறி வுரைத்தலும் - வரைவு கடாவலும் -இரவா விசைத்தலும் வரவு விலக்கலும் - மற்ற வளர்ச்சியும் இரவுக்குறி நேர்தலும் - எய்துகுறி விளைவு மெந்திழை மகிழ்வுடன் - குறியுரைத்தலு மதுகேட்டுணர்தலும் - மெய்க்குறியுரைத்தலும் மிகுதியில் கொண்டலும் - ஏந்திழை செடுப்பது மிடப்புறத்தகற்றலும் - பூந்தன் சிலம்பன் புணர்ச்சியது குறியும் - செவிலியது சேறலும் - சென்றெதிர் கோடலும் - கவ்வை பெரிதிவட் கண்டறியென்றலும் - அம்பலுமலரு மாயின வென்றலும் - வம்பலர் கோதை வாட்டம் கூறலும்". - குறிஞ்சி நடையியல் ப 52

111. தொல். பொருள். இளம். 112:26-28.

112. தொல். பொருள். இளம். 235:1-2.

113. தொல். பொருள். இளம். 163:1-2.

114. முல்லை பா. 17-21

115. தொல்.பொருள்.இளம்.148:6-7.

116. இறை.சூ.25, உரை.

117. நம்பி.164; மாற. 156; இல.வி. 521.

118. நம்பி.153; மாற.அகப்.45; இல.வி.512.

119. நம்பி.154.

120. தொல்.பொருள்.இளம்.நூற்.203.

121. மேற்படி மு.நூ.204.

122. தொல்.பொருள்.இளம். 112; 39-42.

123. மேற்படி மு.நூ. நச்சி.114 உரை.

124. நம்பி 175, 177, மாற.71, 73; இல.வி.532, 533.

125. தொல்.பொருள்.இளம்.135, 136.

126. மேற்படி மு.நூ.42.

127. மேற்படி மு.நூ.44:1-2.

128. மேற்படி மு.நூ.112;25.

129. கலி.50.

130. நற்.10

131. இறை.23 உரை; நம்பி.181, 182; இல.வி.535, 536; மாறன்.79,8

132. தொல்.நூல்.42:6-8; 112;43-44.

133. நம்பி. சூ.174; இல.வி.531; மாற.அகப்.70.

134. தொல்.பொருள்.148:1-2.

135. நம்பி.202; இல.வி.551; மாற.98.

136. தொல்.பொருள்.148:3.

137. நம்பி.203; இல.வி.552; மாற.100.

138. தொல்.பொருள்.148;3-4.

139. தொல்.பொருள்.இளம்.148:5; 29-30; 31.

140. மு.நூ .42:6-10.

141. "மாலைமுயங்கன்னி வருந்தினள் பெரிதெனத் தோழி தவறல். உகவன்ற தோழிக் காற்றவனென்ற லவன்பயமுரைத்தல் வேற்றுமை கூறல் வெய்துயிர்த்திரங்கல். மின்மலி கார்கண்ட மெலிந்தவள் மொழிதல் தொன்மலி தோழி காலமறுத்தல் காதல் பெயர்பு காரன்றிருவெனத் தீதவிழ் கோதை தானே கூறல் பருவங் காட்டிப் பிரிவொழியென்றல் - வருவர் நமரென வாய்மொழி வலித்தல் அந்திமாமம்பல மாலையுமணியுந் தென்றலுந் திங்களும் பிறவு மன்னவை பகன்றவாற்று லகன்றவன் மொழிதல் என்குறையிலவென விரந்து குறையுறல் (இப்பகுதியில் இலக்கியத்திலிருந்து இலக்கணம் எழுந்தமை தெரிய வருகிறது)
- முல்லை நடையியல். — ப 55

142. தொல்.பொருள்.148:1-3.

143. நம்பி.202, 203; இல.வி.551, 552; மாறன்.98, 100.

144. தொல்.பொருள்.148; மாற.

145. நம்பி.சூ.205, இல.வி.554; மாறன்.102.

146. தொல்.பொருள்.148:13.

147. மு.நூ .148:14.

148. மு.நூ .148:15.

149. மு.நூ .148:16-17.

150. மு.நூ .148:23-24; 27-28 .

151. மு.நூ .156.

152. மு.நூ .148:25-26.

153. மு.நூ .148:17-22.

154. இறை.சூ.40 உரை; நம்பி.209:16; இல.வி.558. மாறன்:106.
"கருதற்சமைந்த கற்றோர் புண்ட மருதநடையது மான்புறக் கூறின் பாங்கன்றோழி பாணனென்றும் ஆங்கவர் முதலிய நிரந்து குறையுறுதல் சென்றிக் கோலச் சிறுமி புகுதல் பள்ளியுள் மகிழ்தல் பாங்குறப் புணர்தல், என்னருந் தோழி யேற்பக் கூறல்.
வீரசோழியம் - மருத நடையியல். — ப 54

***

இயல் மூன்று

## தோழி தலைவி உறவுநிலை

### குறிப்புகள்

1. பின்னிணைப்பு – 3 ; மணக்கட்டம் – 4
2. பின்னிணைப்பு – 3
3. ஈ.கோ. பாஸ்கரதாஸ், எட்டுத்தொகையில் தோழி, எம்.லிட். ஆய்வேடு, பின்னிணைப்பு
4. பின்னிணைப்பு 5, 15
5. பின்னிணைப்பு – 11
6. நற்.13.
7. கலி.63.
8. நற்.245.
9. நற்.220.
10. நற்.359; ஐங்.211.
11. நற்.347; குறுந்.74, 298; கலி.47.
12. நற்.32.
13. கலி.60.
14. நற்.25, 32, 128; குறுந்.176, 212; அகம்.32, 180, 250, 268, 330, 356, 380, 392; கலி.61.
15. பின்னிணைப்பு – 12
16. ஐங்.269.
17. ஐங்.227, 261; குறுந்.138.
18. நற்.334.
19. குறுந்.346.
20. அகம்.68.
21. அகம்.38.

22. பின்னிணைப்பு – 13

23. நற். 88; குறு. 332, அகம். 22ஆ, 278, 358.

24. நற். 23, குறு. 357; ஐங். 216.

25. நற். 88; குறு. 90; ஐங். 214.

26. நற். 399.

27. நற். 233.

28. அகம். 252, 312.

29. குறு. 55, ஐங். 269.

30. நற். 19; ஐங். 239; அகம். 238.

31. நற். 297; அகம். 28.

32. நற். 53, 276, 339, 373; அகம். 302.

33. நற். 68, 122, 147, 155, 182, 194, 222; அகம். 248.

34. நற். 61; குறு. 292, 353.

35. நற். 47, 173, 268, 273, 288, 322, குறு. 263, 375; ஐங். 246; அகம். 232, 272.

36. அகம். 242.

37. குறு. 111.

38. அகம். 98.

39. நற். 4, 11, 27, 63, 96, 123, 135, 145, 148, 175, 178, 203, 231, 239, 263, 267, 299, 372, 378; குறு. 109, 117, 166, 294; ஐங். 166; அகம். 20, 210.

40. நற். 36.

41. நற். 11, 135, 138, 203, 263, 378.

42. நற். 239.

43. குறு. 372.

44. குறு. 393; அகம். 368.

45. நற். 4, 27, 145, 175, 191.

46. நற். 63; குறு. 294; அகம். 20.

47. நற். 96, 123 178, 231, 267, 299, 372, குறு. 109, 117, 166; ஐங். 166.

48. நற்.85, 114, 151, 154, 158, 228, 261, 268, 344; அகம்.108.

49. அகம்.88.

50. அகம்.362.

51. அகம்.72.

52. நற்.119.

53. பின்னிணைப்பு – 14

54. குறுந்.333; ஐங்.242.

55. குறுந்.251.

56. குறுந்.374.

57. ஐங்.241, 244, 247, 249.

58. குறுந்.379.

59. நற்.149; குறுந்.217, 262, 297, 343, 369, 383; ஐங்.200, 235, 254, 398; அகம்.65, 221, 259, 285.

60. குறுந்.217.

61. அகம்.221.

62. நற்.149.

63. அகம்.65.

64. குறுந்.343.

65. குறுந்.369; ஐங்.254.

66. ஐங்.235; அகம்.259, 285.

67. ஐங்.398.

68. நற்.22, 78, 91, 163, 235, 278, 393; குறுந்.34, 51, 52, 83, 146, 247, 351, 374, 389; ஐங்.103, 145, 147, 189, 202, 229, 230, 300; கலி.38, 39, 40, 41, 45, 103, 104, 105, 107, 115; அகம்.42, 70, 160, 178, 400; பரி.11.

69. குறுந்.34, 389.

70. குறுந்.83.

71. நற்.22; அகம்.42.

72. குறுந்.51, 52, 59, 83, 389; கலி.38, 40, 41.

73. அகம்.352:11.

74. பின்னிணைப்பு – ப.5 சங்க இலக்கியத்தில்

75. க.இரத்தினம், கற்பு, பிஎச்.டி. பட்ட ஆய்வேடு, பின்னிணைப்பு, தலைவி கற்பு.

76. தொல்.பொருள். இளம்.235.

77. நற்.307.

78. குறுந்.373.

79. நற்.135.

80. ஐங்.225.

81. ஐங்.207.

82. குறுந்.48; 367; நற்.45, 125, 328; குறுந்.143, 265, 284, 308, 317, 339, 394; ஐங்.217, 219, 223, 229, 252, 270; கலி.45.

83. குறுந்.146; ஐங்.230.

84. ஐங்.218.

85. நற்.51.

86. கலி.101, 103, 104, 105.

87. கலி.115.

88. ஐங்.463, 464, 467.

89. ஐங்.431-440.

90. குறுந்.275, 287, 385; ஐங்.461, 468, 469.

91. நற்.99, 248; குறுந்.66, 382; ஐங்.462.

92. குறுந்.251.

93. நற்.89, 181, 367; ஐங்.49-499.

94. ஐங்.24, 27.

95. குறுந்.248.

96. ஐங்.199.

97. நற்.311; குறு.328.

98. நற்.132.

99. நற்.111, 358; குறு.177; கலி.150.

100. நற்.197.

101. நற்.7.

102. அகம்.201, 209, 253, 323.

103. நற்.171, 208, 252, 391; குறு.22, 135, 273, 331, 348; அகம்.27, 135, 137.

104. நற்.18, 41, 92, 148, 161, 246, 286, 333; குறு.16, 37, 59, 180, 215, 232, 253, 260; கலி.11; அகம்.59, 61, 91, 111, 127, 129, 159, 171, 173, 177, 197, 211, 213, 223, 231, 233, 237, 251, 295, 311, 313, 357, 393, 399.

105. நற்.274.

106. குறு.211, 213, 255.

107. அகம்.69.

108. நற்.115, 237, 316, 329, 387; அகம்.4, 25, 73, 85.

109. கலி.26, 27, 29, 31, 32, 33, 34, 35.

110. கலி.28.

111. கலி.15.

112. நற்.90; ஐங்.24, 25, 26.

113. ஐங்.24, 25, 26.

114. நற்.90.

115. நற்.386; ஐங்.198; அகம்.316.

116. நற்.386; ஐங்.198.

117. அகம்.316.

118. நற்.180.

119. அகம்.27:5-6.

120. குறு.367.

121. ஐங்.216, 229; கலி.45:21-24.

122. கலி.42:25-27.

123. நற்.128:5.

124. நற்.72:3-4.

125. அகம்.268:

126. கலி.51.

127. குறு.222.

128. குறு.322.

129. அகம்.298.

130. அகம்.110:25.

131. குறு.44.

132. கலி.46:23.

133. ஐங்.159:4-5.

134. கலி.51:23-25.

135. ஐங்.236, 239.

136. கலி.51:20-23.

137. ஐங்.269:3-5.

138. அகம்.71.

139. அகம்.74:12-14.

140. கலி.39:37-44.

141. அகம்.107:1-3.

142. அகம்.285:15.

143. ஐங்.398:1-4; அகம்.283:9-17.

144. ஐங்.6, 7, 8, 9, 10.

145. அகம்.282:15-18.

146. ஐங்.1, 2, 3, 4, 5.

147. அகம்.128, 268.

148. அகம்.386:3-15.

149. நற்.64, 309; குறுந்.4, 5, 12,13, 27, 28, 41, 45, 46, 66, 94, 102, 170, 172, 183, 186, 191, 194, 205, 216, 218, 226, 240, 245, 264, 283, 289, 302, 304, 325, 391; ஐங்.315, 316; அகம்.133, 141.

150. நற்.108; குறுந்.289; ஐங்.107, 205; அகம்.283.

151. நற்.108, 159, 273, 309; குறுந்.81, 377; ஐங்.159, 227, 392; அகம்.73, 107, 143, 370.

152. ஐங்.229, 232; அகம்.168, 227.

153. ஐங்.39.

154. நற்.158; அகம்.108, 202.

155. குறுந்.324.

156. அகம்.298.

157. நற்.149.

158. குறுந்.263.

159. கலி.36:25-26.

160. அகம்.72.

161. நற்.64, 309; குறுந்.36.

162. அகம்.107.

163. குறுந்.383.

164. ஐங்.398.

165. ஐங்.378; அகம்.4.

166. அகம்.107.

167. ஐங்.273.

168. நற்.134:1-6.

169. ஐங்.102:3-4; 202:1-4.

170. ஐங்.105:1-4; 223:4-5; 353:3-4; 357:4-5; 496:3-5; 497:5; 498:4-8; 500:1-5.

171. ஐங்.252:3; அகம்.104:13-17; 184:1-4; 314:17-18.

172. நற்.2:7-10; அகம்.42:5-12.

173. ஐங்.230:4-5; கலி.39:22-25; 41:42-44; 104:75-76.

174. ஐங்.30:3-4; கலி.39:51; அகம்.178:14-16.

175. ஐங்.101:3-5; 102:3-4.

176. ஐங்.104:3-4.

177. ஐங்.103:1-4.

178. ஐங்.294:3-5.

179. ஐங்.148:3.

180. ஐங்.149:3.

181. நம் காதலர்: நற்.208:5; குறுந்.130:5; ஐங்.223:5; 225:5; 240:5; 357:5; 463:5; 499:4
நம்மலை சிறுவோன்: கலி.41:44.
நமமமர் காதலர்: கலி.27:26.
நாம்வெம் காதலர்: குறுந்.255:8.
நமர்: குறுந்.282:8.
நம் இன்சாயல் மார்பன்: கலி.65:4-5.

182. நற்.235:4-5; குறுந்.74:5.

183. நம் இன்னுயிர்: ஐங்.228:4; கலி.32:14-15.

184. நம்பணைத்தோள்: அகம்.210:7.
நம்முலை:

185. நம்மனை: நற்.129:5; குறுந்.321:3
நம்படப்பை: அகம்.68:1,4.
நம் சேரி: கலி.65:7-8.
நம் ஊர்: ஐங்.398:5; கலி.65:26.

186. நம் கதவம்: குறுந்.321:8.
நம் மறை: குறுந்.333:6.
நம் கேண்மை: நற்.263:7; கலி.24:30-31.
நம் தொடர்பு: நற்.63:1; 282:9; குறுந்.373:8; அகம்.272:19.
நம்முறு துயரம்: ஐங்.241:1.
நம்மே போலும் மம்மர்: குறுந்.310:3.
நம் இல்லயில்: குறுந்.213:6-7.

187. நம்: நற்.158:1; 212:6; 224:6; 273:3; 228:4; 129:3; 189:1; குறுந்.245:9; 211:2; 284:5; 317:5; ஐங்.227:4; 268:5; கலி.41:40, 45:23-24; அகம்.68:12; 223:9; 317:2; 59:17-18.
நம்மினும்: நற்.208:9; குறுந்.331:8; ஐங்.467:4; கலி.28:22.
நம்மை: கலி.27:18.

நம்மொடு: நற்.125:8; 135:9; 138:5; 145:5-6; 231:9; ஐங்.230:1; அகம்.65:8-9; 70:5; 250:13.
நமக்கு: நற்.4:5-6; 285:8; குறுந்.135:3; கலி.42:5-6; அகம்.98:2-3; 129:17-18; 211:17.

188. நாம்: நற்.27:5; 78:6; 133:7; 194:8; குறுந்.88:5; 177:5; 263:8; 273:8; ஐங்.200:4; கலி.16:9; 13, 27:23; 34:21-22; 28:22; அகம்.27:3; 127:2.

189. நம் காதலர்: நற்.64:3; 118:5; 226:7; 281:11; குறுந்.103:5; 104:1; 118:5; 160:6; 281:6; ஐங்.319:3; 338:5; கலி.36:11; அகம்.103:15, 317:18.

190. நம் இன்னுயிர் - குறுந்.319:8; 349:7.

191. நம் கண்: குறுந்.82:2; கலி.33:8-9.
நம் கந்தல்: அகம்.155:4.
நம் தோள்: ஐங்.314:4-5.
நம் நகில்: குறுந்.39:9.

192. நம் படப்பை: ஐங்.203:1.

193. கலி.60:31; அகம்.122:2-3; 187:5; 243:11, 273:5; 294:13; 400:3.

194. குறுந்.349:3; அகம்.67:18.

195. நம்: நற்.75:5; குறுந்.174:4; 183:1-2; 228: ஐங்.23:3; 36:2; கலி.42:12; 17; அகம்.115:17; 185:3; 40:9-10; 290:9-10; 298:20.
நம்மினும்: அகம்.53:14-15; அகம்.265:23.
நம்மொடு: குறுந்.134:1-2; 149:1-2; 264:3; 340:2; ஐங்.164:4; அகம்.103:1-3; 187:1-2.
நம்வயின்: நற்.224:6; குறுந்.106:3; 218:6; ஐங்.135:1; 336: 337:1; அகம்.277:1.
நம்மை: ஐங்.340:3.
நம்மினும்: அகம்.53:14-15; 265:2.
நமக்கு: குறுந்.110:1-2; 181:7; 281:13; கலி.35:1.

196. நற்.194:8; 296:9; குறுந்.20:4; 360:3; ஐங்.111:4; 112:3; 116:1; கலி.35:4; அகம்.205:7.

197. ஐங்.39.

198. ஐங்.313.

199. அகம்.224.

200. குறுந்.369.

201. பின்னிணைப்பு — 4

202. ஐங்.205:1; 366:1; கலி.39:5; அகம்.48:25; குறிஞ்சிப்.2.

203. நற்.305:5; அகம்.48:6; 63:1.

204. நற்.37:1; 40:1; குறு.164:4.

205. நற்.100:1; ஐங்.30:1; 39:1; அகம்.106:9; 166:11; 176:4.

206. குறு.15:4.

207. நற்.38:16; 46:4; 227:14; 233:6; 247:7; கலி.4:8; 22; 44:9, 12, 15; 45:10, 14, 18, 21, 50:8, 24, 53:21; 126:20; 132:23; 133:15; 135:19; அகம்.18:10; 107:10; 112:9; 320:6.

208. அகம்.114:1; 244:5.

209. அகம்.298:20.

210. கலி.43:31.

211. கலி.60:16; 61:16.

212. தோழி - தலைவி- கலி.103:40
தலைவி - தோழி - கலி.104:69.

213. தோழி - தலைவி - குறு.251:4; ஐங்.467:2; கலி.42:8; 103:32; 36, 46; அகம்.201:12; 359:5;
தலைவி தோழி - நற்.64:9; அகம்.8:5; 138:1; 375:2.

214. தோழி - தலைவி- கலி.35:8; 42:5; 61:1; 7; 63:5;
தலைவி- தோழி - கலி.107:1.

215. தோழி - தலைவி- நற்.50:1; ஐங்.156:5; 206:1; 207:1;
தலைவி - தோழி - ஐங்.203:1; 204:1.

216. தோழி - தலைவி- ஐங்.21:4; 22:4; 23:4; 24:5; 25:4; 26:4; 27:4; 28:4; 29:4; 30:4; 156:5; 206:1; 207:1; 214:5; 211:3; 216:6; 217:4; 218:4; 219:4;
தலைவி - தோழி - ஐங்.203:1; 204:1; 209:1; 213:5; 215:6; குறு.33:1; 150:5.

217. நற்.61:1-3; 98:10-12; 124:2-3; 178:8-9; 292:8-9; ஐங்.232:3-4; 275:4-5.

218. நற்.131:7-9; 191:11-12; 251:5-6; 395:9-10; குறு.236:6; 238:4-5; ஐங்.45:4; 108:3-4; 109:3-4; கலி.18:4-5; அகம்.46:14-16.

219. நற்.353:7-8.

220. நற்.175:8-9.

221. நற்.61:1-3; 98:10-12; 124:2-3; 175:8-9; 178:8-9; 191:11-12; 251:5-6; 267:7-8; 292:8-9; 353:7-8; 395:9-10; ஐங்.232:3-4; 275:4-5.

222. ஐங்.108:3-4; 109:3-4.

223. குறுந்.236:6; கலி.18:4-5.

224. நற்.230:6; குறுந்.238:4-5; ஐங்.45:4; 156:5; அகம்.46:14-

225. கலி.70:7-18.

226. நற்.131, 230, 292, 353, 395; குறுந்.236, 238; ஐங்.45, 156, 232, 238, 275; கலி.18, 70; அகம்.46.

227. நற்.61, 98, 124, 175, 178, 191, 267.

228. ஐங்.108, 109.

229. தொல்.பொருள்.இளம்.217.

230. சோமசுந்தரனார், ஐங்.108 உரை, பக்.146.

231. நற்.170:5-6; 172:6; 292:9; 295:9; 395:9-10; குறுந்.42:3-4; 53:1; 69:5-6; 364:5; ஐங்.110:3; 190:3-4; 237:1-2; 239:5; 303:4; 368:4; அகம்.168:2; 202:9.

232. தொல்.பொருள்.இளம். 242.

233. பின்னத்தூர் நாராயணசாமி, நற்.28 உரை, பக்.34.

234. தொல். பொருள்.இளம்.214.
"தலைவன் குறையுற்று நிற்கின்றவற்றைத் தோழி தலைவிக்குக் கூறுங்கால் தன்னை அவன் நயந்தான் போலத் தலைவிக்குக் கூறுவனவும் 'வீழ்ந்தேன் அவன் மார்பின்' (கலி.37) எனப்படைத்து மொழிவனவும், 'தலைவி காமக் கிழவனுள்வழிப் படுதலும், தாவின்மொழி கிளத்தலும்' (தொல்.பொருள்.115) போல்வன பிறவும் அறக்கழிவுடையனவாம். தலைவி தனக்கு மறை புலப்படுத்தாது வருந்துகின்ற காலத்து அதனைத் தனக்குப் புலப்படுவித்துக் கொண்டே அவளை ஆற்றுவித்தற் பொருட்டு அறக்கழிவுடையன கூறலின் அவை பொருட்குப் பயன் தந்தனவாம்".
— நச்சி.உரை. பக்.306.

235. தொல்.பொருள்.இளம்.215.

236. அகம்.268:14.

237. நற்.25:12.

238. நற்.25:5-12; குறுந்.176:1-7; 230:1-6; அகம்.32:10-12; 18-19; 250:10-14; 330:7-10; 356:1-6.

***

இயல் நான்கு

## தோழி தலைவன் உறவுநிலை

### குறிப்புகள்

1. பின்னிணைப்பு – 6
2. பின்னிணைப்பு – 6
3. பின்னிணைப்பு – 13
4. குறுந்.1; ஐங்.177, 187, 196; அகம்.200, 310.
5. குறுந்.1, ஐங்.187.
6. ஐங்.177.
7. ஐங்.196.
8. அகம்.310.
9. நற்.77.
10. அகம்.200.
11. நற்.45, 379; ஐங்.91.
12. நற்.45.
13. நற்.379.
14. குறுந்.81, 113, 114, 198.
15. ஐங்.91.
16. குறுந்.114.
17. குறுந்.81.
18. குறுந்.198.
19. குறுந்.113.
20. நற்.323.
21. கலி.50.
22. பின்னிணைப்பு – 13

23. நற்.19:9; 55:1; 67:10; 93:6; 108:9; 156:6; 159:12; 168:6-7; 188:9; 195:1; 215:9; 223:6; 227:9; 232:6-7; 247:9; 253:9; 257:7; 10; 258:2; 276:8; 283:4-5; 292:9; 295:3; 317:6-7; ~~323:11;~~ 323:11; 326:5; 331:10; 336:8; 354:11; 355:11; 368:9- ~~336:8; 354:11; 355:11; 368:9-10;~~ 375:6; 395:10; 396:8-9; குறந்.42:3-4; 53:1-7; 69:5-6; 179:3; 244:6; 324:7; 336:1-3; 345:3; 353:5; ஐங்.60:4; 179:1; 180:1; 186:5; 231:1; 233:3-4; 236:4; 237:4; 238:4-5; 251:3-4; 260:4; 264:4; 266:4; 275:4-5; 276:4; 277:4; 279:4-5; 282:4-5; 285:4-5; 287:3-4; 289:4; 296:3-4; கலி.44:20-221; 48:23-24; 49:23; 49:25; 52:22-24; அகம்.10:8; 12:13-14; 18:7-8; 16; 30:12-15; 60:8; 15; 78:14; 90:8; 92:5; 100:4,110:15; 112:7-8; 13; 118:6; 9-10; 132:8; 148:12; 168:3-14; 172:14-15; 182:13; 192:3; 202:14-15; 218:12; 22, 220:22; 238:10-11, 240:15; 270:13; 288:7-8; 300:22; 308:7; 318:4; 318:8-9; 320:6-7; 14; 340:5; 14; 350:9; 360:15; 354:12.

24. கலி.42:8.

25. நற்.89:10.

26. நற்.28:4; குறந்.277:4.

27. கலி.43:11.

28. கலி.42:12; 61:20

29. கலி.40:25.

30. கலி.21:9.

31. ஐங்.226:5; அகம்.172:14.

32. கலி.41:19-20.

33. நற்.353:7, 11.

34. ஐங்.287:3-4.

35. நற்.395:1-2.

36. நற்.365:8-9.

37. ஐங்.226:3-5.

38. குறந்.394:1-6.

39. குறிஞ்சி: நற்.93, 108, 247, 266, 326, 355, 396; குறுந்.18, 365; ஐங்.231, 232, 233, 234, 236, 237, 238, 251, 264, 275, 277, 285, 287; கலி.46, 48, 53; அகம்.132, 172, 238; நெய்தல்: நற்.19, 195, 283, 395, 398; குறுந்.336; ஐங்.179, 193, கலி.121, 124, 125, 127, 129, 132, 133, 135; முல்லை: அகம்.156.

40. நற்.98, 156, 168, 257, 292, 336, 353, 383, குறுந்.69, 355, ஐங்.279, 282, 296; அகம்.112, 168; அகம்.318; கலி.49, 52.

41. அகம்.18, 92, 182, 218, 308.

42. நற்.232, 276; குறுந்.42, 176; அகம்.148, 188.

43. குறுந்.53.

44. நற்.67, 215, 223, 254, 323, 331; குறுந்.343; அகம்.120, 300, 340, 350, 360.

45. அகம்.394.

46. நற்.172; அகம்.30, 270, 320.

47. அகம்.10, 80, 220, 240.

48. நற்.55, 253, 317, 368; குறுந்.244, 335, அகம்.2, 12, 288.

49. நற்.57, ஐங்.260, 289, அகம்.192.

50. நற்.258; 295; குறுந்.303; ஐங்.186, 194; அகம்.60.

51. நற்.258.

52. கலி.44.

53. கலி.132, 136.

54. நற்.227; அகம்.100.

55. நற்.15.

56. நற்.10, 12; குறுந்.115, 124, 388; ஐங்.364; அகம்.107, 283.

57. குறுந்.388; அகம்.107; 283.

58. நற்.12.

59. ஐங்.364.

60. நற்.12; குறுந்.115.

